# பஞ்சபட்சி சாத்திரம்



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**
**மற்றும் ஆய்வு மையம்**

தஞ்சாவூர்

தஞ்சாவூர் சரசுவதி மகால் நூலக வெளியீட்டு எண்: 213

வாலையருள்
பதினெண் சித்தர்கள்

# பஞ்சபட்சி சாத்திரம்

## உரையும் விளக்கமும்

சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர் :
தெய்வக்ஞரத்னம், ஜோதிஷபானு, மந்திரமூர்த்தி
திருமலைநல்லான் சக்ரவர்த்தி
Dr. *புலிப்பாணி சுந்தரவரதாச்சாரியார்*




*தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்*
சரசுவதி மகால் நூலகம்
மற்றும்
ஆய்வு மையம்
தஞ்சாவூர்

2011

விலை: ரூ. 300-00

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | பஞ்சபட்சி சாத்திரம் |
| பதிப்பாசிரியர் | : | டாக்டர் புலிப்பாணி சுந்தரவரதாச்சாரியார் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர்,<br>சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர் |
| வெளியீட்டு எண் | : | 213 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | ஐந்தாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | செப்டம்பர், 2011 |
| தாள் | : | TNPL 11.5 kg. |
| நூல் அளவு | : | 25 x 19 c.m. |
| பக்கங்கள் | : | 572 |
| படிகள் | : | 1000 |
| எழுத்து | : | 10 புள்ளி |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர் |
| புத்தகக்கட்டு | : | அட்டை கட்டு |
| பொருள் | : | சோதிட நூல் |
| விலை | : | ரூ. 300-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

சரசுவதி மகால் நூலகம் தன்னிகரற்ற சுவடி நூலகமாகும். பன்மொழி வளர்ச்சிக்கும் பதிப்பியல் மேம்பாட்டிற்கும் இந்நூலகத்தின் பங்களிப்பு தனித்துக் குறிப்பிடத்தக்க நிலையில் அமைந்துள்ளது. சுவடிகளின் அடிப்படையில் இந்நூலகத்தால் பதிப்பிக்கப்பெறும் பல்துறை நூல்களும் பயனுறு படைப்புகளாகத் திகழ்ந்து வருகின்றது. அவ்வரிசையில் பஞ்சபட்சி சாத்திரம் என்னும் நூலும் ஒன்றாகும்.

இந்நூல் வல்லூறு, ஆந்தை, கோழி, காகம், மயில் என்னும் ஐந்து பறவைகள் நம் வாழ்வில் பின்னி பிணைந்து இருக்கும் தத்துவத்தை எடுத்துக் கூறுகிறது. பதிப்பாசிரியர் டாக்டர் புலிப்பாணி சுந்தரவரதாச்சாரியார் அவர்கள் விரிவான ஆங்கில முன்னுரையுடன் பதிப்பித்துள்ளார்.

1991ஆம் ஆண்டு முதல் பதிப்பாக வெளிவந்து பெரும் வரவேற்பை பெற்ற பஞ்ச பட்சி சாத்திரம் என்னும் இந்நூல் தற்பொழுது ஐந்தாம் பதிப்பாக வெளியிடப்படுகிறது. இந்நூல் சோதிடர்களுக்கும் ஆய்வாளர்களுக்கும் பெரிதும் பயன்படும் என நம்புகிறேன்.

இந்நூல் வெளிவர நிதியுதவி நல்கிய நடுவண் அரசுக்கும் மாவட்ட ஆட்சித்தலைவரின் நேர்முக உதவியாளர் (பொது) மற்றும் நூலக நிருவாக அலுவலர் (பொ.) திரு. செ. முகம்மது ஆரிப் சாகிப் அவர்களுக்கும், இந்நூலக பாதுகாப்பாளர் மற்றும் நூலகர் முனைவர் ப. பெருமாள் அவர்களுக்கும் இந்நூல் அச்சில் வெளிவர கணினிப் பிரிவில் பணிபுரிந்த அனைவருக்கும் எனது பாராட்டுதல் களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சாவூர்
12- 9-2011

***கா. பாஸ்கரன்***, இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.



# வெளியீட்டாளர் முகவுரை

ஒப்பிலாச் சுவடிக் களஞ்சியமாகவும் நூற்களஞ்சியமாகவும் விளங்கும் தனிப்பெரும் நிறுவனம், சரசுவதி மகால் நூலகமாகும். இந்நூலகம் கலை, இலக்கியம், மருத்துவம், சோதிடத்துறை சார்ந்த பல அரிய நூல்களைச் சுவடிகளிலிருந்து பதிப்பித்து வெளியிட்டு அரும்பணி ஆற்றி வருகின்றது.

"கணியம்" எனத் தமிழிலும் "சோதிடம்" என வடமொழியிலும் குறிப்பிடப்பெறும் துறை, வானவியலோடு தொடர்புடையதாகவும், மனித வாழ்வின் முக்கால நடப்புக்களை முன்னுணர்ந்து உரைப்பதாகவும் அமைந்துள்ளது.

வடமொழியில் வேதத்தின் ஆறு அங்கங்களுள் ஒன்றாக சோதிடம் வகைப்படுத்தப் பெற்றுள்ளது.

சரசுவதி மகால் நூலகத்தில், வடமொழியிலும் தமிழிலும் மிகப்பல சோதிடச் சுவடிகள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் அருமையும் பெருமையும் வாய்ந்த **பஞ்சபட்சி சாத்திரம்** எனும் தமிழ்ச் சுவடியின் நூல் வடிவமே இப்பதிப்பாகும்.

1991ஆம் ஆண்டு முதல் பதிப்பாக வெளிவந்து பெரும் வரவேற்பைப் பெற்ற "பஞ்சபட்சி சாத்திரம்" தற்பொழுது திருத்திய நான்காம் பதிப்பாக வெளியிடப்பெறுகின்றது.

பஞ்சபட்சி சாத்திரம் பற்றிய இந்நூல் "பஞ்சபட்சி நூற்கோவை" என்ற பெயரில் தஞ்சை சரபோஜி மஹாராஜா சரசுவதி மகால் நூல் நிலையத்தில் உள்ள ஏறக்குறைய 14 சுவடிகளின் ஏடுகள் எல்லாவற்றிலும் கூறப்பட்டவை. எல்லாவற்றையும் வரன்முறையாகத் தொகுத்து அவற்றின் புதிய உரை விளக்கம், பதங்கள், நூற்றுக்கணக்கான அட்டவணைகள், வரைபடங்கள், கணித விளக்கக் குறிப்புகள் முதலியவற்றுடன் முழுவதும் திருத்திய அழகிய செம்மையான பதிப்பாக வெளிவருகிறது.

பல சுவடிகளையும் நூல்களையும் ஒப்பிட்டும் ஆராய்ந்தும் இந்நூலின் முதற்பதிப்பை உருவாக்கியவர் நூலக சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர் புலிப்பாணி சுந்தரவரதாச்சாரியார் அவர்கள் ஆவார். அவர் இரண்டாம் பதிப்பு முதற்பதிப்பினும் மெருகு பெருமாறு புதிய விளக்கங்களுடன் பொலிவுற வளப்படுத்தித் தந்தும், இப்பதிப்பின் மெய்ப்பினைத் திருத்தித் தந்தும் உள்ளமை குறிப்பிடத்தக்கது. சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியருக்கு எனது பாராட்டுக்கள்.

இந்நூல் வெளிவர நிதியுதவி வழங்கிய நடுவண் அரசுக்கும், நூலக நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) வகிக்கும் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூல் கணினியில் வெளிவர, கணினிப் பிரிவில் பணிபுரியும் அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.


**சா. விஜயராஜ் குமார்,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.


*தஞ்சாவூர்*
*16-2-2007*

# பொருளடக்கம்



## நூல்

## 5. அமர பட்சப் படலம்

## 6. பொதுப்படலம்

## 7. ஜாதகப்படலம்

## 8. ரூப்புப் படலம்



## 9. நலம் தீங்கு வெற்றி தோல்வி படலம்



## 10. யாத்திரைப் படலம்

## 11. முடிசூட்டுப் படலம்



## 12. மனைப் படலம்



## 13. பிணிப்படலம்

## பிணி படலம் இரண்டாம் பகுதி(செய்யுள்)போகர் பஞ்சபட்சி நூலிலிருந்து

## 14. பீடை நிவாரணப் படலம்



## பீடை நிவாரணப் படலம் இரண்டாம் பகுதி

## 15. மூலிகைப் படலம்



## 16 அட்டகன்மப் படலம் (முதற்பகுதி)

## அட்டகன்மப் படலம் (இரண்டாம் பகுதி



## 17. அட்சரமாறல் படலம்



## குண்டலி வாசியோகம்

## 18. ஆருடப்படலம்

## 19 அமுதநிலைப்படலம்



## 20. சிந்தனைப்படலம்

## 21. ஜாதகப்பட்சி பொருத்தப் படலம்



## 22. ஞானசுருக்கப் படலம்

## உ. ஆசிரியர் முதற் பதிப்பின் முகவுரை

*சித்தர்கள் புள்ளியல சிந்தையில் நிற்றலால்*
*எத்திக்கும் வெற்றி எனது.*

உலகம் உய்ய வேண்டும் என்ற பெரு நோக்குடன் நம் தமிழ்ச் சித்தர்கள் சொல்லி வைத்த புள்ளியல் என்னும் 'பஞ்சபக்ஷி' சாத்திரம் சிந்தையில் செயல் பட்டுக் கொண்டே இருந்தால் எங்கும் எக்காலத்திலும் நமக்கு வெற்றி உறுதி என்பதில் ஐயமில்லை.

'பஞ்சபட்சி' சாத்திரம் பற்றிய இந்நூல் ''பஞ்சபட்சி நூற்கோவை'' என்ற பெயரில் தஞ்சை சரபோஜி மஹாராஜா சரஸ்வதி மஹால் நூல்நிலையத்தில் உள்ள ஏறக்குறைய 14 சுவடிகளின் ஏடுகள் எல்லாவற்றிலும் கூறப்பட்டவை. எல்லாவற்றையும் வரன் முறையாகத் தொகுத்து அவற்றின் அடிப்படையில் மேற்படி நூல் நிலையத்தின் வாயிலாக, இப்போது புதிய உரை விளக்கம், பதகங்கள், நூற்றுக் கணக்கான அட்டவணைகள், வரைபடங்கள், கணித விளக்கக் குறிப்புகள் முதலியவற்றுடன் முதன் முதலில் முழுவதும் திருந்திய அழகிய செம்மையான பதிப்பாக வெளிவருகிறது.

பெரும்பான்மையும் இவை தமிழ்ச்சான்றோர்களான சித்தர்கள் பெயரால் வழங்கி வருவதால் அவர்கள் மிகப்பலராயினும் அவர்களுள்ளும் பதினெண்மர்களே முதலாகக் கொள்ளப்படுவது பெரு வழக்காதலால் இந்நூல் ''பதினெண் சித்தர்கள் பஞ்சபட்சி நூற்கோவை'' என்று பெயரிடப்பட்டுள்ளது. மேலும் ஒன்றுக்கு மேற்பட்ட பல சுவடிகளின் அடிப்படையில் தொகுக்கப்பெற்றதால் பலரும் யாத்தது என்ற முறையில் இப்பெயர் பொருந்துவதாயிற்று. பஞ்சபட்சி நூல்களுக்கு யாரும் இதுவரை விளக்கம் கண்டதில்லை. சித்தர்களுக்கென அமைந்த மரபு மற்றும் குறியீட்டுச் சொற்கள், வழக்குகள் முதலியவை மலிந்துள்ளமையால் இத்தகைய நூல்களுக்கு உரைகாணும் ஊக்கம் யாருக்கும் வரவில்லை போலும், இருப்பினும் தமிழில் கற்றுத் துறைபோகிய புலமையும் சித்தர்கள் மரபை மேற்கொண்டு அவ்வழி ஒழுகி வாழும் வாய்ப்பும், ஆய்வும், அவ்வகைச் செயல்முறை அறிவும் வாய்ப்பாகப் பெற்ற எமக்கு இது ஒருவாறு இயல்வதாயிற்று.

இதுபற்றி உசாவிக்கொண்டிருந்தபோது மேற்படி நூல்நிலையப் பதிப்புத்துறை மேலாளர் திருமனச்செம்மல் அ. பஞ்சநாதன் அவர்கள இப்பதிப்புப்பணியை மேற்கொள்ளுமாறு அடியேனை அன்புடன் பணிந்தார். இதுவே தலைக்கீடாக அறிதோறும் அறியாமை மிகும் நிலையில் பஞ்சபட்சி'உண்மை நிலையை மேலும் சிக்கறத் தெரிந்து விளக்கம் பெறலாம் என்ற பேரார்வம் மிகவே, அது ஒன்றே பற்றுக்கோடாக இதனை அடியேன் மேற்கொளத் துணிந்தேன்.

இப்''பஞ்சபட்சி'' பற்றிய முழு அறிவியல் விளக்கச் செய்திகள் நாமே வரைந்த தமிழ், மற்றும் ஆங்கிலத்தில் அமைத்து அடுத்து உள்ள விரிவான ஆராய்ச்சி முன்னுரைகளால் அறியலாகும். ''பஞ்சபட்சியைச்'' சார்ந்த ''மூலிகைப் பிரயோகம்'' ''அட்ட கன்மம்'' முதலியவை அறஞ்சாராது ஒருதலைச் சார்ந்தொழுகுவாரும் மேற்கொள்ளக்கூடுமாகையால் இவை இதுவரை யாரும் வெளிப்படையாக விளக்கும் மன உறுதி பெறவில்லை. ஆனால் அவற்றை விளக்காமற்போனாலும் அடியோடு மறைந்து போய்விடு மாகையாலும். அனைவரும் தலைமுறையினரும் அறிந்து பயனடைய வேண்டும் என்பதற்காகவும் அவர்கள் எம்மினும் சிந்தை தெளிந்தோர்

இவற்றிற்கு மேலும் விளக்கம் காண வகையமையும் என்ற நோக்கத்துடனும் கூடியமட்டும் கட்டு முகத்தால் குறிப்பாகவேனும் அவற்றை விளக்கியுள்ளேன்.

இப்பணி தொடங்கியது முதல் அவ்வப்போது எனக்கு இவ்வகையில் ஏற்புடைக் கருத்துக்கள் உதவியும், எம் விளக்கத்தின் பேரில் சிறப்பாக இதன்கண் முதன்முதல் தெளிவுடன் இணைக்கப்பட்டுள்ள 2500 பஞ்சபட்சிகளின் சூக்கும காலகணிப்புகள் அமைத்தும் கொடுத்த எனதருமை நண்பரும் மாணவருமான சென்னை T.R. இராதாகிருட்டிணனுக்கு எனது நன்றியும் ஆசியும் உரித்தாகும்.

அன்றியும் பல்கலை வினோதரும் இன்னோரன்ன துறைகளில் ஆர்வம் உள்ளவரும் பன்மொழிப் புலவரும் தமிழ்ப் பேராசிரியரும் தற்போதைய சரஸ்வதி மஹால் இயக்குநருமான திரு சதாசிவம் M.A., M.Litt, அவர்கள் என்னை இந்நூல் அமைப்பு முறையில் அடிக்கடி ஊக்குவித்தார். அவருக்கும் எனது நன்றி உரித்தாகும்.

சுவடிகளில் காணாது அச்சிட்ட நூல்களில் உள்ளவற்றையும் மிகக்குறைவாக யாம் பயன்படுத்தி உள்ளோம். அதற்காக அந்நூல்களின் பதிப்பாளர்கள் ஆசிரியர்கள் முதலியவர்களுக்கும் எமது நன்றி.

இம்மியும் எதற்கும் தகுதியில்லாத் துரும்பானான அடியேனை இனம் கண்டு ஒரு பொருட்டாக்கி வைரத்தைத் தீட்டி ஒளிசுடரச் செய்யும் நூண்கலைஞன் போல் என்னுள் புதைந்து கிடந்தவற்றை வெளிக்கொணர்ந்து இந்நூல் எழுதும் பணியில் ஈடுபடுத்தி அவ்வப்போது ஊக்கம் கொடுத்து வந்து எம்மை ஒரு பதிப்பாளனாக உருவாக்கிய பெருமை தஞ்சை சரஸ்வதி மஹால் நூல் நிலையப் பதிப்புத் துறைத் தலைவர் திரு. பஞ்சநாதனையே சாரும் எனவே சிறப்பான முறையில் அவருக்கு என் நன்றியை உரிமையாக்குகின்றேன்.

''முதன் முதல் எனக்குத் தமிழில் ஆர்வம் ஊட்டியவர்கள் என் தாய்மாமன் அடுத்து இளமையில் எனது இரு தமிழாசிரியர்கள். திரு மே.வி. வேணுகோபாலபிள்ளை அவர்களும், அடுத்து திரு. சி. சொக்கலிங்கனார் என்பாரும் ஆவர். பின்னவர் எனக்களித்த நற்சான்றிதழில் ''இவர் தமிழ்ப் புலவர் ஆகல் நேரின் தமிழுலகுக்கு அருந்தொண்டாற்றுவார்'' என்று குறிப்பிட்டுள்ளார். இப்பொழுது இந்நூல் வெளியீட்டின் மூலம் இது உண்மையாகிறது. மேற்சொன்ன மூவரும் இன்றில்லை. அன்னோருக்கு என் நன்றியறிதலை நீர்மல்கிய கண்களுடன் செலுத்துகின்றேன்.

சோதிடம் மற்றும் அதனைச் சார்ந்த கலைகளிலும் எனக்குத் தெளிவு காட்டிச் சித்தர்கள் மரபுவழி வந்து அவ்வகை மந்திர, யந்திர யோக முறையை அடியேனுக்குக் கைகாட்டி ஆட்கொண்ட எனது ஞானாசிரியருமான மஹாவித்துவான் குப்புசாமி ஆச்சாரியாரின் திருவடி நிலைகளில் எனது சிரம் வைத்து வணங்குவதன்றி வேறு கைம்மாறறியேன்.

எல்லாவற்றிற்கும் மேலாக என்னை உய்யக் கொண்ட எனது வழிபடு தாய்க் கடவுள், சித்தர்கள் போற்றும் ''வாலை'' அன்னையின் திருவடிகளில் எனது வணக்கங்கள்.

அடுத்து இந்த நூலைப் பலர் அச்சிடத் தயங்கிய போதும் மகிழ்ச்சியுடன் ஏற்றுப் பல பல பிளாக்குகள் முதலியவை ஏற்பாடு செய்து அழகிய வடிவில் அச்சிட்டுக் கொடுத்த சிதம்பரம் அமுதா அச்சக உரிமையாவர் திரு அ. முத்துசாமி அவர்களுக்கு என் உளங்கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இம்முகவுரையை முடிக்கும் முன் ஒன்று சொல்லிக்கொள்ள ஆவலுள்ளவனாவேன். இதில் உள்ள செய்யுட்கள் மட்டும் தஞ்சை சரசுவதி மஹால் நூல் நிலைய ஏட்டுச் சுவடிகளைச் சார்ந்தவை. சிறுபான்மை அச்சான பிற நூல்களைச் சார்ந்தவை. இவை நீங்கலாக மற்ற விளக்கங்கள், அறிவியல் விரிவாக்கங்கள், கணிதக் குறிப்புகள், அட்டவணைகள் முதலியவை எமது பல்லாண்டு உழைப்பு, ஆய்வு இவற்றின் அடிப்படையில் பெரிதும் உழந்து கண்டவை. இவையே ஒரு முதல் வடிவமைப்பாக அமைந்துள்ளன. (ORIGINAL CONTRIBUTION) என்பது உற்று நோக்குவார்க்கு எளிதில் விளங்கும். எனவே இவை ஆசிரியரின் உரிமை பெற்றவை என்பதனைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கின்றேன். இந்நூலுரை முதலியவற்றின் மொழி பெயர்ப்புரிமையும் ஆசிரியருடையதே என்பதை அறியவும்.

இந்நூல் விளக்கத்தில் உள்ள நல்லவை என் ஆசானையும், சித்தர்களான முன்னோரையும் சேரும். மற்றபடி பிழைகள் முதலியவை அடியேனையே சேரும். அறிவியல் விளக்கம் காணும்போது நாம் சில பல கருத்துக்களைக் கூறியுள்ளோம். இவை மேலும் விளக்கம் பெற வாய்ப்புண்டு. அவ்வகையில் யாருக்கும் கருத்துக்கள் தோன்றுமாயினும் இதில் உள்ள பிழைகள் காண நேரினும் அவற்றை அடியேனுக்குத் தெரிவித்தால் அவை அடுத்த பதிப்பில் திருத்தம் செய்யப்படும்.

குற்றங்கள் நீக்கிக் குணம்கண்டு வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.


ஜோதிஷ பானு
திருமலைநல்லான் சக்ரவர்த்தி
DR புலிப்பாணி சுந்தரவரதாச்சாரியார்

6-5-1990 ப்ளாட் 'C'
க்ரௌண்ட் ப்ளோர்
32, ஹிந்தி பிரசார சபை, தெரு
தி. நகர், சென்னை-600 017
Ph: 4347702

# இரண்டாம் பதிப்பின் பதிப்பாசிரியர் முகவுரை

திருவருள் துணையால் எனது ''பதினெண் சித்தர் பஞ்சபட்சி சாத்திரம்'' முதற்பதிப்பு மிகக் குறுகிய கால அளவிலேயே எல்லாப் படிகளும் விற்றுவிட்டன. இதன் பெருமை சித்தர்களைச் சார்ந்ததே.

இப்பொழுது இரண்டாம் பதிபபு வெளிவருகிறது. முதற்பதிப்புக்குப் பின் ஏற்பட்ட அனுபவம், பலரிடம் கேட்டறிந்தவை, ''போகர் பஞ்சபட்சி, உரோமரிஷி, வினாடி பஞ்சபஷி''ஆகிய இரு நூல்கள் முதலியவற்றின் ஆய்வு முதலியவை காரண மாக இந்த பதிப்பில் பல புதிய செய்திகளைச் சேர்க்கும் வாய்ப்பு ஏற்பட்டது. அச் செய்திகள் வருமாறு:-

1) பட்சிகளின் தொழில்கள் ஒவ்வொன்றிலும் ஏற்படும் நோய்கள், தீரும் நாள், தன்மை முதலிய ஒவ்வொரு தொழிலில் அவ்வைந்து வினாடிகள் (உப தொழில்கள் ஐந்து) ஒவ்வொன்றிலும் ஏற்படும் நோய்கள் நன்மை, தீரும் காலம் முதலியவை இப்பொழுது போகர் பஞ்சபட்சி நூலிலிருந்து எடுத்து உரையுடன் இப் பதிப்பில் சேர்க்கப்பட்டுள்ளது.

2) நோய்கள் தோன்றின் அவை நிவாரணம் ஆகச் செய்ய வேண்டிய பரிகாரம் பூசை முறை முதலியவை தொழில் வாரியாக உரை நடையிலேயே முதல் பதிப்பில் கூறப்பட்டன.

இப்பொழுது ஒவ்வொரு தொழிலுக்கும், மற்றும் ஒவ்வொரு தொழிலின் உப தொழில்களுக்கும் (5-க்குர்) தனியாக பாடல்கள் போகர் பஞ்சபட்சி நூலிலிருந்து எடுத்து உரையுடன் சேர்க்கப்பட்டுள்ளன. சாந்தி பூசை செய்யும் முறை மந்திரங்கள் தேவதை, வழிபடுமுறை இவை விரிவாகவே கூறப்பட்டுள்ளன.

3) அட்ட கன்மம் செய்வது பற்றி மறைமுகமாகவே முதற் பதிப்பில் கூறப்பட்டன. இப்பதிப்பில் ஒவ்வொரு கிழமையிலும் எல்லா நக்ஷத்திரங்களிலும் (27 நக்ஷத்திரங்களிலும் என்னென்ன திதிகளில்) இக்கருமங்கள் செய்யலாம் என்ற விவரம் முழுப் பாடல்கள் உரையுடன் உரோமரிஷி வினாடி பஞ்சபட்சி நூலிலிருந்து எடுத்து ஆசிரியர் உரையுடன் சேர்க்கப்பட்டுள்ளது.

4) அட்டகன்மத்தை அடுத்து ''அட்சர மாறல் படலம்'' என்பது புதிதாக உரோம ரிஷி வினாடி பஞ்சபஷி நூலிலிருந்து சேர்க்கப்பட்டுள்ளது பஞ்சாட்சரத்தை 5 எழுத்துக்களையும் ஒவ்வொன்றாக முறையாகவும் கடை முதலாகவும் பல முறையிலும் மாற்றி ஒலித்து, அவைகளுக்கேற்ப யந்திர சக்கிரம் அமைத்து, ஒவ்வொரு தொழிலையும் செய்யும் முறையாகும் இது. இது பஞ்சபட்சி நூலில் பலவற்றுள்ளும் பேசப்படும். ''கருவூரார் அட்டமா சித்து'' ''திருமூலர் திருமந்திர மாலை'' போன்ற நூல்களிலும் இவை பேசப்படும். இவற்றில் இரண்டு வகை காணப்படும்.

ஒன்று: தொழிலை யார்மேல் செய்ய வேண்டுமோ அவரைப்போல பொம்மை ஒன்று செய்து (பாவை) அதன் உறுப்புகளில், தொழில்களுக்கு ஏற்றவாறு ஆணிகள் வைத்து, கெடுவினைகள் (உச்சாடனம், வித்வேஷணம், தம்பனம், பேதனம்) ஆகிய

கெடுவினைகள் செய்யும் முறை. இதுவும் ஐந்தெழுத்தைப் பயன்படுத்திச் செய்வதாகும் சிலவற்றில் பட்சிகளின் கரு இடுகாட்டு மண் முதலியவையும் இன்னும் இது போன்ற இழிவான பொருள்களையும் பயன்படுத்திச் செய்யும் முறையாகும். இது பாவை பிரயோகம் என்று தமிழிலும், புத்திலி பிரயோகம் என்று வடமொழியிலும் கூறப்படும். யாரும் இத்தகைய இழி செயல்களைச் செய்யக்கூடாது என்று சித்தர்கள் பன்முறை யாலும் எச்சரிக்கின்றனர். ஆனால் இம்முறை ஒன்றுண்டு என்பதைக் காட்டவே, பூடகமாக மறை முகமாக இந்தப் பதிப்பில் கூறியுள்ளேன்.

இரண்டு: பட்சாட்சரத்தை நமது சூக்கும உடலில் (தூல உடலின் மூலம்) இணைத்து குண்டலியோகம் பயின்று, அப்போது நமது ஆறாதாரச்சக்கரத்தின் ஒவ்வொரு ஆதாரச்சக்கரத்திலும் பஞ்சாட்சரத்தின் அந்தந்த ஆதாரத்திற்கும் உரிய எழுத்தை முதலாக வைத்து ஒலித்து அந்தந்த ஆதாரத்தைத் தட்டி எழுப்பி அதே சமயம் பஹிர் முகத்தில் சக்கரம் எழு வைத்து (செய்வோன் செய்து கொள்வோன் இருவருக்கேற்ப அவர் அவர் பட்சியின் தொழில் ஆக்கமாக அமையும்போது) அட்ட கன்மம் செய்யும் வகையைக் கூறுவது. இதையே நாம் எம் சிற்றறிவிற்கு எட்டிய வரை விளக்கியுள்ளோம். குண்டலியோகம் இணைந்தால் ஒருமுகத்தான் அதையும் விளக்கியுள்ளோம். இதனால் நமக்கு சித்தர் மரபு மந்திர வாசியோக முறை முழு மையும் தெரிந்ததாகக் கொள்ள வேண்டாம். எதிர்காலத்தில் நம்மிலும் சிறந்தவர்கள் சித்தராக, அறிஞராக வரலாம். இவ்வளவு நாம் செய்தால் மேற்கொண்டு அவர் களால் இவை மேற்கொண்டு விளக்கம் பெறலாம் என்ற எண்ணமுடனும் தெரிந்த அரைகுறை விவரமும் நம்முடன் மறைந்து போய்விடக் கூடாதே என்ற நினைவால் தான் வாசி, குண்டலி யோகத்தை விளக்க முற்பட்டிருக்கிறோம். கூடியவரை படம் அவற்றிற்கு விளக்கம் இவையும் தந்துள்ளோம். இவை எல்லாமே ஆசான் மாணவன் செவிவழி வரவேண்டியவை. எனவே பஞ்சபட்சி சாத்திரத்தின் அட்ட கன்மம், மந்திர பிரயோகங்கள் இவைபற்றி யாரும் நம்முடன் தொடர்பு கொள்ள வேண்டாம் என்று பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

5) இப்பகுதி ஆரூட காண்டத்தின் இரண்டாம் பகுதியாக உட்பிரிவு 5-6 எண்களில் சொல்லப்பட்டவை தொடர்பாக இவையும் போகர் பஞ்சபட்சி நூலிலிருந்து எடுத்து உரையுடன் எழுதப்பட்டுள்ளது. பழைய பதிப்பில் 5 பட்சிகளின் 5 தொழி லுக்கும் ஒவ்வொரு தொழில் காலம் நடந்தால் ஆரூட பலன் என்று மட்டும் சொல்லப்பட்டது.

இப்பதிப்பில் ஒவ்வொரு தொழிலின் 5 உப தொழில்களுக்கும் அவை நடக்கும் போது ஆரூடம் கேட்ட பலனைத் தனித்தனியாக ஆசிரியர் உரையுடன் எழுதப் பட்டுள்ளது.

6) இப்போதைய பதிப்பில் சிந்தனைப் படலத்தில் ஆரூடம் கேட்கும்போது உதயமாகும் நட்சத்திரத்தின் பட்சியின் நடக்கும் தொழிலின்படி பலன் 27 நட்சத் திரங்களுக்கும் இரு பக்ஷங்களுக்கும் பொதுவாகும் வகையில் உரை நடையில் கூறப் பட்டது. இப்பதிப்பில் 27 நட்சத்திரங்களுக்குரிய பாடல்களையும் அந்தந்த இடத்தில் உரைநடைக்குமுன் பதிப்பிக்கப்பட்டது.

7) இப்பகுதி பட்சி வித்தையின் அருமை பெருமைகளைக் கூறுகிறது. பட்சி வித்தை அறியத் தகுதி என்ன என்பதை வலியுறுத்துகிறது. தீய செயல்களைப் பட்சி வித்தை மூலம் செய்தால் கழுதை போன்ற இழிவான பிறவிகளை செய்தவன் அடை வான் என்பதை வலியுறுத்திக் கூறுகிறது. சித்தன் தன் மாணவனுக்குச் செய்யும் எச்சரிக்கை, அறிவுரை எல்லாம் கூறப்படுவதால் இது ''ஞானசுருக்கப்படலம்'' என்று பெயர் பெற்றது இதுவும் உரோம ரிஷியார் வினாடி பஞ்சபட்சியிலிருந்து எடுத்தெழு தப்பட்டது. உரை உரையாசிரியருடையதே.

இப்பொழுது பாடல்கள் தொகை ஏறக்குறைய இரட்டிப்பாகிவிட்டது. இதனால் இந்தப் பஞ்சபட்சி சாஸ்திரம்' முழுவடிவும் பெற்றுவிட்டது என்று நம்புகின்றேன்.

பட்சிகளின் தொழில் நடப்பு வரிசை முதலியவை அகத்தியர் போகர் ஒருபுறமும், உரோம ரிஷியார் மறுபுறமும் வேறுபடுவதாகத் தெரிகிறது இதுபற்றி பலர் எனக்கு எழுதுகிறார்கள். சிலர் சில தெளிவுகளைச் சுட்டிக் காட்டினார்கள். இந்த நூலில் பெரும் பகுதியும் ஏற்றுக் கொள்ளப்பட்ட போகர், அகத்தியர் முறையையே நாம் பின்பற்றியுள்ளோம். இதைப் பயன்படுத்திப்பார்ந்து அனுபவத்திற்கு ஒத்துவந்துள்ளது. தவிரவும் இதுவே நூற்றாண்டுகளாக வழக்கில் உள்ளது.

ஒருவர் பிறந்த நட்சத்திரம் அல்லது பெயர் முதல் எழுத்து இவற்றைக் கொண்டு பட்சி நிர்ணயம் செய்து அவற்றின் தொழில் வரன்முறைகளில் வரிசை கிழமை இவற்றிற்கேற்ப அட்டவணைகளாகப் பாடல்களில் சொன்னபடி பல காலம் அமைந்து கையாளப்பட்டுள்ளது.

ஒருவர் பிறந்த நேரம் நாழிகைப்படி லக்னம் அமைப்பதுபோல் பட்சியையும் தொழிலையும் அமைக்கும் முறையும் உள்ளது. இதை எனது நூலில் நூதலிப்புகு படலத்தில் விளக்கியுள்ளேன். அந்த அமைபில் தான் வரன்முறை வேறுபாடு நூல்களில் இருக்கிறது. அகத்தியர் போகர் பட்சியே பெரிதும் பயன்படுகிறது.

மற்றபடி மேல் சொல்லிய வகையில் பிறந்தவர்களுக்கு ஏற்படும் பலனை 'சாதகப்படலம்' என்று தனியாகக் கூறப்பட்டுள்ளது. இதற்கும் இன்னும் இது போன்ற (அட்ட கன்மம்) பலவற்றிற்கும் விளக்கம் உரோமரிஷி வினாடி பஞ்ச பட்சியில் நிறைய உள்ளது. எனவே உரிய வகையில் எல்லா நூல்களுமே சிறந்தவை என்று கொள்ள வேண்டும்.

இதுவரை சொன்னவை அல்லாமல் மூலிகைப் படலம் முதலியவை இன்னும் விளக்கம் பெறவேண்டும். அனால் ஒன்று ஆவை குருமுகமாக வரவேண்டும் அடுத்தது மருந்து நூல் அறிவு மிகவும் வேண்டும். எனவே இதற்கொரு காலம் வந்தால் இதுவும் விளக்கம் பெறும் என்று எண்ணுகிறேன்.

நட்சத்திர பட்சிப்படி தசாபுக்தி அமைக்கும் முறை இன்னும் தெளிவு பெற வேண்டும். அகத்தியர் பஞ்சபட்சி நூலில் ஒரே பாடல்தான் அதற்கு ஆதாரமாக உள்ளது. அதை வைத்துப் பின்பற்றி பட்சி தசா புத்தி கணிப்பு முறை ஒருவாறாகக் கூறியுள்ளோம். மேலும் விளக்கம் கிடைத்தால் அடுத்த பதிப்பில் சேர்க்கப்படும்.

முதற்பதிப்பு முழுவதும் அச்சாகி மிக விரைவில் தீர்த்து விட்டதை எண்ணி மனம் மகிழ்கிறேன். என் வாழ்நாள் பெரும்பகுதியையும் பட்சி வித்தையை ஆய்ந்து வந்துள்ளேன். முதற்பதிப்பைச் சித்தம் செய்வதற்கு ஏறக்குறைய 5 ஆண்டுகள் உழைக்க வேண்டி வந்தது. பட்சி நூலறிவில் அறிஞர்களிடையே நம்மால் ஒரு விழிப்புணர்வு ஏற்பட்டுள்ளது. இதை எண்ணும்போது என் உழைப்பு வீண் போகவில்லை என்று நினைக்கும்போது மிகவும் மன நிறைவாக உள்ளது.

இப்புதிய பதிப்பை விரைவில் கொண்டு வரவேண்டும், இன்னும் பல செய்திகள் சேர்க்கப்பட வேண்டும் என்றும் என்பால் தொடக்கம் முதல் ஆர்வமும் நட்பும் பூண்டு பழகி வரும் அருமை நண்பர் தஞ்சை சரசுவதி மகாலின் பதிப்புத் துறைத் தலைவர் திரு அ. பஞ்சநாதன் M.Lib. அவர்கள், என்னைப் பலகாலும் ஊக்கியும் உதவியும் வந்தார். இதனால் இரண்டாம் பதிப்பு ஒருவாறு உருவம் பெற்றுள்ளது. இதற்கு அன்னாருக்கு என் நன்றி உரித்தாகும்

சித்தர் மரபில் எனக்கு ஆசானாக விளங்கிய காலஞ்சென்ற மகாவித்வான் குப்புசாமி ஆச்சாரி அவர்களை மீண்டும் நினைவு கூர்கிறேன்.

நான் சோதிடம் கற்க ஆரம்பித்த நாள் முதல் நமக்கு அவ்வப்பொழுது சோதிட நூனுக்கங்கள் பலவற்றை இன்றளவும் அறிவுறுத்தி வருபவர் ஜோதிட அனுபவ ஞானி என் வேட்டகத்து அம்மான் கந்தர்வக்கோட்டை துவார் பாஷ்யம் கி.வே. ராமானுஜ ஐயங்கார் இப்பொழுது 86 வயதைக் கடந்து வாழ்ந்து வரும் பெரியவர் அவர்களுக்கு என் சிரம் தாழ்ந்து வணக்கத்தைச் செலுத்துகிறேன். "மேலும் ஜோதிடம் பஞ்சபட்சி தமிழ் ஆராய்ச்சி, இன்னும் இது போன்று அறிவுத் துறைகளில் நான் இடைவிடாமல் ஈடுபடும போது தான் உள்ளத்தாலும் உடலாலும் சோர்வடையா வண்ணமும், இல்லக் கவலைகள் என்னைச் சாரா வணணமும் தொடர்ந்து என்னைக் கவனித்துக்கொண்டு எனக்கு ஒரு உந்துதலாக இருந்து வருபவள் என் மனைவி திருமதி சு. கௌசல்யா. தொடர்ந்து இவள் இப்பணியில் உதவ அவளை நன்னிலையில் வைக்கவும் சித்தர்கள் வாலையை மன, மொழி, மெய்களால் வேண்டுகின்றேன்.

இந்நூலில் உள்ள நல்லவை எல்லாம் இதை உலகுக்குத் தந்த சித்தர்களைச் சார்ந்தவை. குறைகள் என்னுடையதே. புதிய செய்திகள்,குறைகள் இவை இருந்தால் அடியேனுக்குத் தெரியப்படுத்தினால் அடுத்த பதிப்பில் மீண்டும் செம்மைப்படுத்த வாய்ப்பாக இருக்கும்.

கடைசியாகத் தற்போதைய நிருவாக அலுவலர் அவர்களும் இப்பதிப்பை விரைவில் காண நமக்கு ஊக்கம் காட்டி வந்துள்ளனர், அவருக்கும் என் நன்றி.

" குற்றங்கள் நீக்கி குணம் கண்டு வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்"

இப்படிக்கு

ஜோதிஷ பானு திருமலை நல்லான் சக்ரவர்த்தி
**Dr. 'புலிப்பாணி' சுந்தரவரதாச்சாரியார்**

முகவரி
Plot 'C' Ground Floor
32, ஹிந்தி பிரசார சபை தெரு,
தி. நகர் சென்னை - 600 017.
போன் 4347702.
தேதி 14-12-1998

## 4. ஆராய்ச்சி முன்னுரை

### பஞ்சபட்சி சாத்திரம்

### (Elemental Astrology of Tamils)

### பதினெண் சித்தர்கள் வணக்கம்

நந்தியகத் தியர்மூலர் புண்ணாக் கீசர்
நற்றவத்துப் புலத்தியரும் பூனைக் கண்ணர்
கந்திடைக்கா டரும்போகர் புலிக்கை ஈசர்
கருவூரார் கொங்கணவர் மாகா லாங்கி
சிந்தியழு கண்ணரகப் பையர்பாம் பாட்டித்
தேரைய ருமதநம்மை ரச் சட்டச் சித்தர்
செந்தமிழ்சேர் சித்தர்பதி னெண்மர் பாதம்
சிந்தித்தே அணியாகச் சேர்ந்து வாழ்வாம்.

### 1. பட்சபட்சி நூல்களை வழங்கியவர்கள் தமிழ்நாட்டுச் சித்தர்களே. அவர்களைப் பற்றி

உலகில் யாவரும் விரும்புவது இன்பம் ஒன்றையே. துன்பத்தை யாரும் விரும்பி ஏற்றுக் கொள்வதில்லை. இருப்பினும் மனிதனால் துன்பத்தைத் தவிர்க்க முடிவதில்லை. உண்மையாகச் சொல்லப் போனால் வாழ்க்கையில் இன்பத்தைவிடத் துன்பம்தான் அதிகம் காணப்படுகிறது. ஏனென்றால் ஒரு துளி இன்பத்திற்காக, கடுகளவு இன்பத்திற்காக மனிதன் மலையளவு துன்பம் அனுபவிக்க வேண்டி வருகின்றது. இதனாலேயே ''இன்பம் அணுவாம் இடர் அதற்கோர் மாமலையாம்'' என்று துறைமங்கலம் சிவப்பிரகாச வள்ளலார் கூறுவாராயினார். துன்பத்தைப் போக்கி முழு இன்பம் பெறமுடியுமா ? என்ற கேள்வி, அதைப்பெறும் முயற்சி, ஆராய்ச்சி, ஆகியவை நாகரீகம் தோன்றிய காலம்தொட்டே மனிதனுக்கு இருந்து வருகின்றது. இந்த முயற்சியின் முடிவாக இறை உணர்வு ஒன்று தான் கலப்பற்ற முழுமை இன்பம் தரக்கூடியது என்று அன்று தொட்டு இன்றுவரை, உலக அறிஞர்கள் பல நாடுகளிலும் தனித்தனியாக முயன்று செயல் முறையில் உணர்ந்து கண்டனர். இவ்வகையில் நம்நாட்டுத் தமிழ்ச் சித்தர்கள் முன்னணியில் நிற்கிறார்கள்.

உயிரியல் வளர்ச்சியில் (ஆன்மீகத்துறையில்) உடலோடொட்டி அது முழு இறைநிலை அடையும்வரை மேற்கொள்ள வேண்டிய வழிமுறைகளை, அதுவரை துன்பம் இல்லாமல் செய்துவிடும் நெறிமுறைகளை இச்சித்தர்கள் கண்டனர். இவர்கள் ஒரே சமயத்தில் இறையுணர்வு வல்லுநர்களாகவும் (Spiritualists) அறிவியல் விஞ்ஞானிகளாகவும், இயற்கையைக் கூர்ந்து நோக்கும் தன்மையுள்ளவர்களாகவும் மருத்துவச் செம்மல்களாகவும், சிறந்த மனோதத்துவ மேதைகளாகவும் திகழ்ந்தனர். அவ்வகையில் வாழ்க்கையில் இயற்கையோடு ஒட்டி வாழ்ந்து உலகியல் உயிரியல் இரண்டிலும் இடரின்றி வெற்றியுடன் முன்செல்ல உதவும் நெறிமுறைகளில் ஒன்று தான் ''ஐம்புள் நூல்'' என்னும் பஞ்சபட்சி சாத்திரமாகும். இந்த ஐம்புள் நூலின் விஞ்ஞான அடிப்படையை விளக்குமுன் இதனைஆக்கி அளித்தப் பெருந்தகையாளர்களான இச்சித்தர்களைப் பற்றிச் சிறிது தெரிந்து கொள்வது நல்லது.

அறிவு வாழ்க்கை நெறிமுறை, உலகியற்கை இவற்றில் முதிர்ந்து எல்லோருக்கும் நன்னெறி கூறிவழிப்படுத்தும் செந்நெறியாளர்கள் சான்றோர்களாவர். இவரினும் வேறாகி இறைமைப் பண்புகளில் மேலோங்கி மேற்சொன்ன உடலியல் உயிரியல் இரண்டினும் இடரின்றி வாழும் வகையில் வாழ்வாங்கு வாழ்ந்து ஒரே வழி சாகாக் கல்வியில் முன்னிலை நின்று தன்னலம் கருதாது மற்றரும் அதில் உய்வு பெறும் வகையில் வேண்டியவை கொண்டு துறப்பவற்றைத் துறந்து எல்லாம் வல்லவர்களாக வாழ்பவர்கள் சித்தர்களாவர். சித்தத்தைத் தம்வசப்படுத்திப் பலவகைப் பேறுகளையும் பெற வல்லவர்கள் இவர்கள். இவர்களை இருடி, முனி என்றெல்லாம் குறிக்கின்றனர். இவர்களே ஞானியர்.

சித்தர் என்ற சொல் சித்தம் என்ற சொல்லிலிருந்து வந்தது. மனம், புத்தி, சித்தம் அகங்காரம் என்று உள்ளத்தின் நிலைகளை நான்கு வகைப்படுத்தியது, நமது உளநூல். மனம், வெளிமனம், அகமனம் என இரண்டு நிலையினை உடையது. புறத்தை நினைத்து உஜக நிலையை அறிவது புறமனம். அவற்றைப் பதியவைத்துக் கொள்வது அகமனம் (Sub Conscious Mind) ஆகும். மனம் நினைத்ததைத் தக்கது தகாதது என்று உறுதிப்படுத்துவது (Discriminate) நிர்சயிப்பது புத்தியாகும். நாம் இதை நினைக்கிறோம் நிச்சயிக்கிறோம் என்ற முனைப்பை நான் என்று எழுவாயாக இருப்பது அகங்காரம் சித்தம் இம்மூன்றுக்கும் ஏதுப்பொருளாகும். சித்தம் தம்வச மானால் மனம் செயலறும், மனம் செயலற்றால் மூச்சு நிற்கும் நின்றால் உயிர் தங்கும். இவ்வகையில் சாகாக்கலையைக் கற்றவரே சித்தர்கள்.

இப்படிப்பட்ட சான்றோர்கள் தம் அனுபவங்களை உலக வாழ்வு, உயிரியல் வாழ்வு இரண்டுக்குக்கும் பயன்படும் வகையில் குறியீட்டுச் சொற்களும் மறைபொருளும் உள்ளடக்கிய முடிச்சுகளும் புதிர்களும் நிறைந்த பாடல்களாக வரைந்தளித்துள்ளனர். மந்திரம், தந்திரம், மருத்துவம், ரசவாதம், சோதிடம், யோகவாசியோகம் பஞ்சபஷி. அறிவியல் வேதாந்தம் போன்ற தலைப்புகளில் இவர்கள் இலக்கியம் அமைந்துள்ளன இச்சித்தர்கள் எண்ணிலராயினும் அவர்களில் பதினெண்மரை முக்கியமாக வழங்கி வருகின்றனர். இவர்கள் அமைந்த பாடல்களைப் பெரிய ஞானக்கோவை எனத் திரட்டியுள்ளனர். மேற்சொன்ன பல சாத்திர நூல்களையும் இச்சித்தர்கள் யாத்துள்ளனர்.

நந்தி, அகத்தியர், புண்ணாக்கீசர், புலத்தியர், பூனைக்கண்ணர், இடைக்காடர், போகர், புலிக்கையீசர் அல்லது புலிப்பாணி, கருவூரார், கொங்கணவர், காலாங்கி, அழுகண்ணர், பாம்பாட்டி, அகப்பேய்ச் சித்தர், தேரையர். குதம்பைச் சித்தர், சட்டநாதர் என இவர்கள் வழங்கப்படுவர். இவர்களில் சிலருக்குப்பதில் உரோம ரிஷி, கும்பமுனி, மச்சமுனி, கோரக்கர் என்ற பலரையும் கூட்டித் தொகையைப் பதினெட்டாகப் பல பட்டியல்களையும் கொள்வர்.

நம்மைப்பொறுத்தவரை அகத்தியர், உரோமரிஷி, கும்பமுனி காக புசுண்டர் போகர் ஆகியவர் பெயரால் பஞ்சபட்சி நூல்கள் வழங்கி வருகின்றன. இவர்களில் அகத்தியரும் கும்பமுனி என்றவரும் ஒருவரே எனச் சொல்லலாம். அகத்தியர் என்ற பெயரில் பலர் வடநாடு, தென்னாடு இரண்டிலும் வழங்கி வந்துள்ளனர். இனி அவர்களைப் பற்றிச் சிறிது பார்ப்போம்.

1. அகத்தியர் இப்பெயரில் பலர் இருந்திருக்கிறார்கள். தமிழ்நாட்டைப் பொறுத்தவரை சங்க காலத்திற்கு முற்பட்ட தொல்காப்பியத்திற்கும் முதல் நூலான அகத்தியத்தை இயற்றிய சங்ககால முன்னோடியாக இருந்த சான்றோர் புலவராவர் இவர் சித்தரல்லர்.

2. இவருக்குப் பிற்பட்ட காலத்தில் மருத்துவம் மந்திர, தந்திரம் முதலியனவை உள்ளடக்கிய அகத்தியர் பரிபூரணம் 400, அகத்தியர் பரிபூரணம் 1200, அகத்தியர் 1200 என்ற பலவகை வேதாந்த மந்திர நூல்களையும், பற்பல மருத்துவ நூல்களையும் அளித்தவரே சித்தரான அகத்தியராவர். இவரும் இப்பெயரில் பலரிருந்திருக்கலாம் என்று ஏற்க வேண்டி உள்ளது இவர்களில் ஒருவர் செய்தது தான் ''அகத்தியர் பஞ்சபட்சி சாத்திர'' மாகும். செய்யுள் யாப்பு முதலியவற்றை நோக்க இவை பிற்காலத்ததாகக் கொண்டாலும் சித்தர்கள் காலங் கடந்த சாகாக் கல்வி கற்றவர்கள் எனக் கொள்ளப்படுவதால் இவர்கள் கால நிலையை அறுதி இடுதல் சாலாது. இவர்கள் காலங் கடந்தவர்கள் என்று கொள்ளலே முறையாகும். சித்தர்கள் என்று பேசப்படும் மற்றவர்களுக்கு இது பொருந்தும். அச்சான அகத்தியர் பஞ்சபட்சி நூல் முழுமையாயினும் இதுவரை யாரும் முழு விளக்கம் காணவில்லை. தஞ்சை மகாலில் உள்ள இந்தப் பதிப்புக்கு எடுத்துக் கொண்ட அகத்தியர் பெயரில் உள்ள சுவடியும் (சுவடி எண் 77) முழுமையானதன்று. இருப்பினும் அச்சான நூலில் இல்லாத சில கருத்துக்கள் இதில் காணக் கிடைக்கின்றன.

3. கும்பமுனி பஞ்சபக்ஷி நூலும் அகத்தியரையே குறிக்கும் என்று கொள்ளலாம். கும்பமுனி என்ற சொல் அகத்தியரைக் குறிப்பதால் இவர் மேலே சொன்ன அகத்தியரா அல்லது அவரினும் வேறா என்பது விளங்கவில்லை. நாம் சுவடி நூலையும் ஆதாரமாகக் கொண்டுள்ளோம். மற்ற நூல்களில் இல்லாதவை இவர் நூல் சில உள்ளன. சுவடி எண் 1015.

4. உரோமரிஷியார் இவர் பெரும் பகுதியும் வைத்திய நூல் வல்லுதர். இவர் உரோமரிஷி நூறு. உரோமரிஷி 500 முதலிய வைத்திய நூல்களுடன் ''உரோமரிஷி வினாடி பஞ்ச பட்சி'' என்ற நூலும் பாடியுள்ளார். இது முழுமையாக உள்ளது. பஞ்சபட்சி பற்றிய எல்லா விஷயங்களும் இதில் கூறப்பட்டுள்ளன. இதில் உள்ள பாடல்கள் பலவும் தஞ்சை சரஸ்வதி மஹாலில் உள்ள பிற பஞ்சபட்சி நூல்களிலும் விரவி வந்துள்ளன. இவை எவற்றிற்கும் இதுவரை உரை காணப்படவில்லை. போகர் புலிப்பாணி என்பவர்கள்; சீன நாட்டினர் என்ற வழக்குண்டு, அது போன்று இவர் உரோமானிய நாட்டில் இருந்து(யவனர் என்று தமிழ் இலக்கியம்கூறும்) இவண் வந்து சித்தரானதால் இப்பெயர் பெற்றார் என்பாரும் உண்டு. அபிதான சிந்தாமணியின் படி இவருடைய உடம்பெல்லாம் உரோமமாய் இருந்ததெனவும் ஒரு பிரமன் இறந்தால் இவர் உடலில் ஒரு உரோமம் உதிரும் எனவும் இப்படி மூன்றரைக் கோடி பிரமர்கள் இறந்தால் இவர் ஆயுள் முடியும் என்ற கதை குறிக்கப் பட்டுள்ளது. நம் மரபில் உள்ள புராண, யுக, காலக் கணிதப்படி ஒரு பிரமனின் ஆயுள் 31,10,40,00,00,00,000 மனித ஆண்டுகளாகும். இது போன்று 3½ கோடி மடங்கு உரோமரிஷியார் ஆயுளாகும். சித்தர்கள் சாகாக் கல்வி கற்றவர் என்பதற்கு இவை உயர்வுநவிற்சியாகக் கூறப்பட்டதாகும் என்று கொள்ளலாம். எப்படியாயினும் இவர் ஒரு அரும் பெரும் சித்தர், இவர்தம் பஞ்சபட்சி நூலும் நமக்கு முழுமையாகக் கிடைக்கின்றது என்பதில் ஐயமில்லை.

5· காக புசுண்டர். புசுண்டர் என்ற பெயரிலும் இவர் வழங்கப் பெறுகிறார். இவர் இயற்றியனவாகக் காக புசுண்டர் ஞானம், காக புசுண்டர் உபநிடதம், காவியம் போன்ற பல நூல்கள் இவர் பெயரில் காணப்பெறுகின்றன. ,'காக புசுண்டர் பஞ்ச பட்சி சாத்திரம்'' என்ற பெயரில் ஒரு நூல் பல்லாண்டுகட்கு முன் வெளி வந்துள்ளது இதன் செய்யுட்கள், பல பிற நூல்களிலும் உள்ளன. இவை பலவும் பிழைபட்டும் உள்ளன

இவர் காகம் போல் பார்க்கும் பார்வையைப் பெற்றிருந்தார் என்பது தெரிகிறது. அபிதான சிந்தாமணி ஞான வாசிட்டம் முதலியவற்றால் இவர் வரலாறு பலவாறாக அறியக் கிடைக்கின்றது. தம் ஆயுளில் பலமுறை கடல் கடையப்பட்டதை யும், விஷ்ணுமூர்த்தி பலமுறை அவதரித்ததையும், எட்டு வசிட்டர்களைக் கண்டதாயும் காக உருவாக விளங்குபவர் என்றும் இவர் கூறிக்கொள்வதாகப் பேசப்படுவதால் காலம் வென்ற சாகாக் கலையை இவர் தேர்ந்ததை உயர்வு நவிற்சி என்று நாம் கொள்ளவேண்டும். எப்படியாயினும் இவர் பெயரிலும் பஞ்சபட்சி நூலொன்று இருப்பதால் இவ்வளவும் எழுதப்பட்டன. இனி இப்பதிப்புக்கு ஆதாரமாக நாம் கொண்ட பஞ்சபட்சி நூற்சுவடிகள் தொகுப்பு நூல்களாகவும் ஆசிரியர் பெயர் தெரியாதவையாகவும் உள்ளன. எப்படியும் இப்பஞ்சபட்சி சாத்திரம சித்தர்களாலேயே உருவாக்கப்பட்டு விளங்கி வருகின்றன என்பதில் ஐயமில்லை.

சித்தர்கள் காலம் கி.பி.5,6ம் நூற்றாண்டுகளில் தொடங்குவதாகத் தமிழ் இலக்கிய வரலாற்றாசிரியர்கள் குறிக்கின்றர். காலங்கடத்து முன்னும் பின்னும் நூற்றுக்கணக்கான ஆண்டுகள் வாழும் சாகாக் கல்வியாளர் ஆகிய இவாகளைக் காலக் கணக்கிற்குள் அடக்கிப் பார்ப்பது பொருந்தாது என்பது தான் உண்மையாகும். இனி பஞ்சபட்சி சாத்திர அறிவியல் உண்மையை முறையே ஆராய்வோம்.

உடலும் உடல் மூலமாக உயிர் நின்றுணரும் உணர்வுகளும் பஞ்ச பூதமெனும் அடிப்படையான 5 பருப் பொருள்களின் (Five basic elements) வெவ்வேறு அளவை களின் கூட்டு வடிவமாகும். இதை ஆன்மீகத்தில் 'பஞ்சீகரணம்' என்பர். இந்த அளவைகளுடன் மாறுபடும் போது முரண்படும் போது, தான் 'துன்பம்' என்ற உணர்வு ஏற்படுகிறது. உலக முழுவதும் இப்படி ஒன்றுக்கொன்று இப்பஞ்ச பூதப் பிணைப்பு களால் இயங்குவதால் நாமும் அதனுடன் ஒத்துப்போகும் அல்லது அவற்றைவிட ஓங்கி நிற்கும் பூத அதிர்வுகள் (Elemental Vibration) உள்ளவர்களாக நம்மை ஆக்கிக் கொண்டால் தோல்வியே இல்லாத முழு வெற்றியும் துன்பமே இல்லாத இன்பமும் நமக்கு ஏற்படும்

நவக்கோள் இயக்கங்கள் சூரிய சந்திரர் சுழற்சியால் ஏற்படும் பாதிப்புகள், நவக் கோள்களும் 27 உடுக்களும் (நட்சத்திர மண்டலம்) அமைந்த இராசி மண்டலப் பாதையில் உலவுவதால் வெவ்வேறு கோண நிலைகளில் ஏற்படுகின்றனவும் ஆகிய பல்வேறு மேல்நிலைக் கதிரியக்கங்களும் (Cosmic Radiations) இவ்வைம்பூதப் பிணைப்பால் தனிப்பட்ட அதிர்வு நிலைகளைப் பெறுகின்றன. (Vibrational Situations) என்பதை அச்சித்தர்கள் கண்டனர்.

இந்த ஐம்பூத அதிர்வுகள் வளர்பிறை தேய்பிறை நாட்களில் வெவ்வேறு கிழமைகளில் அவை குறிக்கும் கோள்களின் தன்மைக்கேற்பவும் ஐந்தைந்து வெவ்வேறு வகையில் இயங்குவதையும் அவர்கள் அடையாளம் கண்டு கொண்டனர்.

ஒருவன் பிறக்கும் நேரத்தில் இந்தக் கோள்நிலைக் கதிரியக்கங்களும் (Cosmic Radiations resultant of emanations from the peculiar pattem of planets by virtue of their occupation of a particular angular position in the Zodiac). இவ்வைம்பூத நுண் அதிர்வுகளும் கூட்டாக ஒரு பதிவை (imprint) அவன் உள் மனதில் ஏற்படுத்து கின்றன. அதனால் உந்தப்பட்டு அதனால் வாழ்நாள் முழுவதும் அதற்கேற்ப ஒருவன் வாழ்வு அமைகிறது. இப்படி உள் மனதில் (Subconscious mind) ஏற்படும் பதிவின் குறியீடு (Symbolic representation of this imprint) தான் ஜாதகம் எனலாம். எனவே இவை இயங்கும் அடிப்படை விதிகளை நாம் அறிந்து கொண்டால் அதற்கேற்ப ஒட்டிப்போக அல்லது அவற்றையும் மீறி நம் ஐம்பூத இயக்கத் தன்மை இயங்கும் கால அளவைகளை நாம் இனங் கண்டு கொண்டால் நம்மால் வெற்றியுடன் இன்பமாய் வாழ முடியும். இந்த அடிப்படையில் தான் நம் குறிப்பிட்ட (Personal elemental vibration) ஐம்பூத அதிர்வுகள் ஓங்கி நிற்கும் கால வகையையும், மற்றவை தாழ்ந்து நிற்கும் தன்மையையும் படம் பிடித்துக் காட்டி நமக்கு உதவுவது தான் இந்தப் 'பஞ்சபட்சி' சாத்திரமாகும்.

நவக்கோள் இயக்கங்கள் சூரிய சந்திரர் சுழற்சியால் ஏற்படும் பாதிப்புகள், நவக்கோள்களும் 27 உடுக்களும் (நட்சத்திர மண்டலம்) அமைந்த இராசி மண்டலப் பாதையில் உலவுவதால் வெவ்வேறு கோண நிலைகளில் ஏற்படுகின்றனவும் ஆகிய பல்வேறு மேல்நிலைக் கதிரியக்கங்களும் (Cosmic Radiation) இவ்வைம்பூதப் பிணைப்பால் தனிப்பட்ட அதிர்வு நிலைகளைப் பெறுகின்றன. (Vibrational Situations) என்பதை அச்சித்தர்கள் கண்டனர்.

## 2 பஞ்சபட்சி செயல்படும் விதம்

மேலும் வளர்பிறைக் தேய்பிறை காலங்களில் தனித்தனி வாரக்கிழமைகளில் பகல் காலை முதல் மாலை வரையிலும், மாலை முதல் மறுநாட்காலை வரையும் கொண்ட 60 நாழிகை அல்லது 24 மணி நேரத்திலும் இவ்வைம்பூத இயக்கங்கள் ஒரு குறிப்பிட்ட வரன்முறையில் குறிப்பிட்ட கால அளவுகளுக்கு முறையாக தனித்தனி ஐந்து வகைச் செயல்திறன்(Capacity)பெற்று இயங்குவதை இச்சித்தர்கள் அறிந்தனர். ஒரு பூத தத்துவம் அல்லது அதிர்வு (Elemental vibration) ஓங்கி இருக்கும்போது மற்ற நான்கும் படிப்படியாகச் செயல்திறன் இறங்குமுகமாக இருப்பதையும் (Uniform diminishing pattern of other elemental vibrations) அடிமட்ட நிலையில் முற்றிலும் செயலிழந்த உயிர்ச்சத்தற்ற நிலையில் குறிப்பிட்ட பூத அதிர்வு(Dormant and inactive Dead elemental vibration) இருப்பதையும் இவர்கள் அறிந்து தெளிந்தனர்.

இவைகளின் வெவ்வேறு நிலைகளில் வெவ்வெறுகால நிலைகளில் ஏற்படும் அதிர்வுகளை இனங்கண்டு அறியவே (To identify the action and interactions of these elemental vibrations at various levels of time and space) இவற்றை ஐந்து பறவைகளாக உருவகித்து இதன் அடிப்படையில் வாழ்க்கையின் முழுமைத் தன்மையையும் இந்தச் சித்தர்கள் அமைத்தனர். இவ்வைம்பூத அதிர்வுகளின் வெவ்வேறு அளவை நிலைகளுக்கு (various gradations of capability of the elemental vibrations) தொழில்கள் என்று பெயர் வைத்தனர். எனவே இப்பறவைகள் பகல் இரவு, வாரக்கிழமை, வளர்பிறை, தேய்பிறை ஆகியகாலக் கூறுபாடுகளில் மாறி மாறி இயங்கிக் குறிப்பிட்ட வெவ்வேறு விதமான செயல்திறன் பெற்று இயங்குவதையும் இவர்கள் தெளிவாகக் கணித்தறிந்தனர். எனவே இவை எல்லாம் அடங்கியது தான் 'ஐம்புள் நூல்'அல்லது ''பஞ்சபட்சி சாத்திர'' மாகும். இதன்படி.

இந்த ஐம்பூதம் குறிக்கும் ஐம்பறவைகளின் மேற் சொல்லப்பட்ட ஐந்து வகையான செயல்திறன் நிலைகளுக்கு அதன் அதன் வலிமைக் கேற்பப் பெயரமைத்தனர் அதாவது.

1) முற்றிலும் செயலிழந்த உயிர்ச் சத்தற்ற நிலை - சாவு

2) அதைவிடக் சற்று வலிய உயிர் அசைவு மட்டும் இருந்து இயக்கமற்ற நிலை - தூக்கம் அல்லது துயில்.

3) அதைவிட உயிர்த்தன்மை அசையும் நிலை நகரும் நிலை - நடை

4) அதைவிட இன்னும் சற்று இயக்கம் ஓங்கிய நிலை. இயக்கி இயக்கி அழிபட்ட உயிர் அணுக்களை (Life cells) ஈடு செய்ய நிரப்பிக் கொள்ளும் நிலை- உணவு அல்லது ஊண்.

5) முழுச்செயல்திறன் பெற்று இயங்கும் நிலை எல்லாவற்றையும் ஆளும் நிலை அரசு.

இந்த ஐந்து பறவைகளையும் வல்லூறு, ஆந்தை காகம், கோழி, மயில் என்று பெயர் வைத்து ஐந்தும் மேற்படி 5 தொழில்களில் ஒவ்வொன்றை ஒருபகல்

அல்லது இரவின் 6 நாழிகைகள் கொண்ட அதாவது 2 மணி 24 நிமிடங்கள் கொண்ட ஒவ்வொரு சாமம் என்ற வரையறை செய்து பகல் அல்லது இரவின் மற்ற சாமப் பகுதிகளிலும் மற்ற தொழில்களைச் செய்து முடிக்கும். ஒரு பட்சி ஒரு தொழிலைச் செய்யும்போது அதே தொழிலை மற்ற எந்தப் பட்சியும் செய்வதில்லை. அதாவது ஒன்றின் செயல் திறன் ஒரு ஜாமத்தில் இருக்கும் அதே அளவுக்கு மற்றவற்றின் செயல்திறன் இருப்பதில்லை. அதாவது கூடுதலாகவோ, குறைந்தோ வரிசையில் இருக்கும். எனவே செயல்திறன் கூடுதலாக உள்ள பட்சி அதே நேரத்தில் அது குறைவாக உள்ளதை வெல்லும். இந்த வகையில் 'அரசு' மற்ற நான்கையும், 'உண்டு' அரசு நீங்கலான மற்ற மூன்றையும், நடை, உண்டு அரசு நீங்கலான மற்ற இரண்டையும், உறக்கம் சாவை மட்டும் வெல்லும், அதாவது சாவைவிடத் துயில் பட்சியும், துயில், பட்சியைவிட நடைபட்சியும். 'நடை' பட்சியைவிட ஊண் பட்சியும் 'ஊண்' பட்சியைவிட 'அரசு' பட்சியும் வலுவுள்ளவையாகும். இப்படிப்பட்ட முறையில் ஒவ்வொரு பகல் இரவிலும் 5 ஜாமங்களிலும் உண்டு, நடந்து, அரசாண்டு, துயின்று மடிதல் ஆகிய 5 தொழில்களையும் ஒரு குறிப்பிட்ட முறையில் செய்யும்.

இனி ஒருவன் பிறக்கும் நேரப்படி அமையும் ஓரைப் (லக்னம்) படி ஒருவன் பட்சி என்ன, அல்லது அவன் பிறக்கும் போது உள்ள நட்சத்திரப்படி அவன் பட்சி என்ன என்பதை அப்போது அமைந்த பஞ்சபூத இயக்க அதிர்வுகளின் அடிப்படையில் கண்டறிய முடியும் (விளக்கம் நூலினுள் காண்க) ராசி திதி, நட்சத்திரம் முதலிய வற்றிற்கு இன்னின்ன பட்சி என்றும் வரையறை செய்யப்பட்டுள்ளது.

இப்படி ஒருவன் லக்னப்பட்சியைக் கொண்டோ நட்சத்திரப்பட்சியைக் கொண்டோ அவன் 'பட்சி' இன்னதென முடிவு செய்யும்போது அவன் பட்சி அரசில் இருக்கும் போது மற்ற தொழில்களில் உள்ள மற்ற பட்சிகளையுடையவர்களை அவன் வெற்றி காண முடியும். இதுவே பஞ்சபட்சி சாத்திரத்தின் அடிப்படையாகும்.

ஒருவன் நட்சத்திரப்பட்சியையே அவன் பட்சியாகக் கொள்வதே பெரு வழக்கில் உள்ளது. ஆனால் ஒருவன் இலக்கினப் பட்சி நட்சத்திரப்பட்சி இரண்டும் ஒன்றாய் அமைந்து விட்டால் அது இன்னும் சிறப்பாகும்.

இதுவன்றி மேற்சொன்ன தன் பட்சியின் 'அரசு' நேரத்தில் ஒருவன் பிறப்பானாகில் அவன் சீரும் சிறப்புமாய் மேலோங்கி வாழ்வான். அல்லது ஒருவன் பிறக்கும் லக்னம், நட்சத்திரம், திதி இவற்றின் பட்சி ஒன்றாகவே அமைந்து அதுவும் அதன் அரசு காலமாய் அமைந்து விட்டால் அவன் வாழ்வு நிறைவான வெற்றியாக அமையும்.

இதுவன்றி உலகம் தழுவிய எல்லாவற்றையும் அதாவது ஒலி, ஒளி, இடம், பொருள், காலம், எண், வலிமை, நிறம், சாதி, உடை, ஊண் இன்னோரன்ன எல்லாவற்றையும் இந்த ஐந்து பறவைகளுள் வகைப்படுத்தியுள்ளனர் சித்தர்கள்.

இதுவும் இல்லாமல் ஒரு பட்சியின் செயலாகும் அரசு, நடை, ஊண், உறக்கம், சாவு ஆகிய ஒவ்வொன்றிலும் மற்ற நான்கின் இயல்பும் ஒவ்வொரு குறிப்பிட்ட கால அளவு நுண்மையாக இயங்கிவருவதும் உண்மையாகும். அதாவது அரசில் அரசு, அரசில் ஊண், அரசில் நடை அரசில் துயில், அரசில் சாவு, என்று 5 சூக்கும அளவைகளும் உண்டு இது போன்று மற்ற தொழில்களிலும் எல்லாப் பட்சிகளும் 5 நிலையில் தொழில் செய்யும். இந்த வகையில் சாவில் சாவே எல்லாவற்றிலும் தாழ்ந்த நிலையாகும்.

## 3. குறிப்பிட்ட பட்சிகளாக உருவகிக்கக் காரணம்

இவ்வைம்பூத இயக்கங்களை ஐந்து பட்சிகளாக ஏன் உருவகித்தனர்? இதற்கேதேனும் ஏது உண்டா? இதற்கு ஒருவாறு விடைகாண முயல்வோம் இந்துக்கடவுளர் வாகனங்களாகச் சில விலங்குகளையும் பறவைகளையும் கற்பனை செய்துள்ளமை நம்மரபில் ஒன்று. திருமாலின் பத்து அவதாரங்கள் தற்கால அறிவியலார் கோட்பாடு சொல்லுவது போல் ஓரறிவுயிர் நிலையிலிருந்து படிப்படியாகத் தோன்றி வளர்ந்து இன்றைய ஆறறிவுள்ள மனிதனாக ஓங்கி நிற்கும் தத்துவப்படியே (Theory of Evolution). திருமாலின் அவதாரங்கள் இந்த வகையில் முதலில் மீன், அடுத்து ஆமை, அடுத்து பன்றி, அடுத்து நரசிம்மன் (பாதிவிலங்கு பாதி மனிதன்) அடுத்து வாமனன் (Dwarf குள்ளன்) இப்படி அமைந்துள்ளமை காண்க. ஏறக்குறைய இதனைக் கருத்தில் கொண்டே பஞ்சபூத பரிணாம இயல் தத்துவத்தைப் பஞ்ச பட்சியைக் கொண்டு குறியீட்டாக்கினார்கள் சித்தர்கள் எனலாம்.

பொதுவாகப் பறவைகள், நிலம், நீர் இவற்றுடன் நில்லாமல் வானிலும் பறந்து ஆகாய தத்துவத்தையும் உள்ளிட்டு இயக்குவதைக் காண்க. இது மனிதனுக்கு ஐம்பூதமும் தழுவி அமையவில்லை. (கோழி வகையில் ஒன்று கனல் துண்டுகளையும் 'விழுங்கி நெருப்புக் கோழி' என வழங்கலும் காண்க). எனவே ஐம்பூதங்களையும் தழுவுவதால் இவற்றைப் பறவைகளாகக் கொண்டனர்.

இனிக் குறிப்பிட்ட பட்சிகளாக ஏன் கொண்டனர்? என்பதற்கு விடை காண்போம்.

1. வல்லூறு: இது வானில் உயர்ந்து பறந்தாலும் கீழே மண்மேல் உள்ள உயிரினங்களைக் கூர்ந்து பார்க்கும் நுண் நோக்கு உள்ளது. இதன் இனமான கருடன் மாலுக்கு வாகனம். சிறை விரிந்த நிலையில் பிரணவமான ஓங்கார வடிவம். இது எல்லாப் புட்களுக்கும் பொருந்தும். இவ்வகையைச் சேர்ந்த "கழுகு" ருஷ்யா போன்ற நாட்டில் தற்காலத்தில் தேசியப் பறவையாகவும் ஏற்கப் பெற்றுள்ளமையும் காண்க.

2. ஆந்தை: வட நாட்டினர் இதைத் திருமகள் இருப்பிடமாகக் கொள்வர் தமிழ், நிகண்டில் இதற்கு 'மறையவன் முனி' என்ற பெயர் உண்டு மற்ற உலகினர் தூங்கும் நேரத்தில் (இரவில்) தான் விழிப்புடன் இருப்பவன் யோகி என்று கீதையில் கண்ணன் கூறுவது போல் மற்றவர் துயிலுங்கால் தான் விழிப்புடன் இருக்கும் சிறப்பு இதற்கு உண்டு.

3. கோழி: இருள் நீங்கும் விடியலில் ஓங்காரமாக ஒலித்து உலகை (அஞ்ஞான) இருளிலிருந்து துயிலுணர்த்தி எழுப்புவது. பிரணவாகரப் பெருமானாகிய முருகனுக்குக் கொடியாய் அமைவது

4. மயில்: விரிந்த தோகை நிலையில் அலகுடன் பார்த்தால் ஓங்காரம் வடிவ முடையது. அதனாலே முருகனுக்கு வாகனம். இது தன் காலில் மிதித்துக்கொண்டி ருக்கும் பாம்பு மனிதன் உயிர்ச் சக்தியாகிய குண்டலியை உறங்க விடாமல் விழிப்பு நிலையில் வைப்பதைக் குறிக்கும் தற்காலத்தில் நம் நாட்டு தேசியப் பறவை.

5. காகம்: இதற்கும் ஒரு தனித்தன்மை உண்டு தன் உணவை தன் இனத்தை எல்லாம் கூப்பிட்டுக் கரைந்துண்ணும் நவக்கோளில் 'சனிக்கு' வாகனம். கண்ணை மூடிக்கொண்டு கையில் துலாக் கோலுடன் வினைப்பயனை எள்ளளவும், கோணாது உயிர்களுக்குத் துய்க்கச் செய்பவன் 'மந்தன்'. இவன் வாகனமாகையால் 'காகத்திற்கும் இக்குணம் முண்டு. இன்னோரன்ன பிற காரணங்களால் இவ்வைம்பூத இயக்கங்களை ஐந்து பட்சிகளாக உருவகம் செய்து இந்த 'பஞ்சபட்சி' சாத்திரத்தைச் சித்தர்கள் அமைத்தனர் எனக்கொள்ளலாம்.

## 4. காலப்பகுப்பு

நம் முன்னோர்கள் மாதத்தை வளர்பிறை, தேய்பிறை இரண்டு பட்சங்கள் கொண்டதாகவும் ஒரு பட்சம் இரண்டு வாரம் கொண்டதாகவும், ஒருநாள் பகல் இரவு இரண்டும் கொண்டதாகவும், இரண்டும் 30 நாழிகை கொண்டதான மொத்தம் அறுபது நாழிகை கொண்டதாகவும் நாளைக் கணக்கிட்டனர். ஒரு பகலை 5 ஜாமங்கள் கொண்டதாகவும் ஒவ்வொரு ஜாமமும் 6 நாழிகை கொண்டதாகவும் இப்பட்சி நூலில் கூறுபாடு கண்டனர். இப்படி 60 ஆகக்காணல் பண்டையகாலக் கணக்கியல் முறையாகும். 60 ஆண்டுகள் ஒரு காலச் சுற்றாக நாம் கொள்வதுபோல் இந்த 60 ஆண்டுச் சுற்று (Sexagenary Time Cycles) சீனர்களும் மற்றும் பிறரும் கொண்டு உள்ளனர். இனி இந்தப் பஞ்சபட்சியின் காலப்பகுப்பான ஜாமப் பாகுபாடு கீழ்க்கண்டபடி அமையும்.

காலை 6 மணி முதல் 8-24 நி. வரை முதல் சாமம்

8-25 மணி முதல் 10-48 நி. வரை இரண்டாம் சாமம்

முற்பகல் 10-49 மணி முதல் பிற்பகல் 1-12 வரை மூன்றாம் சாமம்

பிற்பகல் 1-13 முதல் பிற்பகல் 3-36 வரை மூன்றாம் சாமம்

இதே வகையில் மாலை 6 மணி முதல் இரவு 5 சாமங்களும் கணக்கிடப்பெறும்.

தற்கால மணிக்கணக்கில் ஒரு நாழிகை 24 மணித்துளிகள் கொண்டதாகும். நிமிடம்) இருப்பினும் 24 மணி நேரம் கொண்ட நாளின் உட்பகுதியான மணியைத் தற்காலத்தினரும் நம் பண்டைய அடிப்படையில் 60, 60 ஆக பகுத்துள்ளமை நம் வரன் முறையை ஒட்டியேயாகும்.

# 5. பஞ்சபக்ஷி நூலின் உட்பிரிவுகள்

1. ஒருவன் பிறப்பு லக்கனம் அல்லது நட்சத்திரப்படி பட்சியை நிர்ணயம் செய்து அவன் வெற்றி தோல்விகளைக் கண்டறிவதை முன்னமே கூறியுள்ளோம். இதன் விரிவை நூலின் உள்ளே காண்க. பூர்வபட்சப்படலம், அமரபட்சபடலம், பொதுவியற்படலம் முதலியவற்றில் காண்க.

2. ஒருவன் பட்சியின் தொழிலில் எதில் பிறந்தான், எந்த சூக்கும நேரத்தில் பிறந்தான் என்பதை நிர்ணயம் செய்து அதன்படி வாழ்க்கை எப்படி எப்படி அமையும் என்பதையும் கணித்தறிய முடியும் என்று முன்னர்க் கூறியுள்ளோம். இதன் விரிவை நூலினுள் "ஜாதகப் படலத்தில் காண்க.

3. ஒருவன் பிறப்பு நேரம் முதலியவை அறியப்படாதபோது, அவன் பெயரின் முதல் எழுதித்தில் உள்ள ஒலிக்குறிப்பின் அடிப்படையில் அவன் பட்சி இன்னதென நிர்ணயம் செய்து வெற்றி, தோல்வி நலந்தீங்கு முதலியவற்றையும் அறிய முடியும், இதுவும், "பூர்வபட்ச, அமரபட்ச,பொதுவியற்" படலங்களுள் விளக்கியுள்ளது காண்க.

4. ஒருவன் ஒரு கருத்து, செயல், முதலியவற்றின் வெற்றி தோல்வி நன்மை, தீமை அறிவான் வேண்டிப் பட்சி நூல் கற்றவனிடம் வரும்போது அவன் கூறும் முதற்சொல்லின் ஆருடம் எனப்படும். இதன் விளக்கத்தை 'ஆருடப்படலம்', சிந்தனைப்படலம்' முதலியவற்றில் காணலாம்.

5. ஒரு பெண் வயதுக்கு வரும் முதற் 'பூப்பு' நேரம் முக்கியமாகும். இது எந்தப் பட்சியின் எந்தத் தொழிலில் அமைகிறது. அதன்படி பெண்ணின் வாழ்க்கை எப்படி அமையும் என்பதை விளக்குவது "உருதுப் படலமாகும்"

6. ஒருவன் பயணம் மேற்கொள்ளும் நேரத்திற்கேற்ப அது வெற்றி, தோல்வி இன்ப, துன்பம் உடையதாக, அப்போதுள்ள பட்சியின் தொழிலுக்கேற்ப அமையும் இது "யாத்திரைப்படலத்தில்" விளக்கப்பட்டுள்ளது.

7. வீடு மனிதனின் அடிப்படைத் தேவைகளில் ஒன்றாகும் அது கட்ட ஆரம்பிக்கும் நேரத்தில் பட்சியின் தொழிலுக்கு ஏற்பப் பன்னெடுங்காலம் நோய் நொடி இன்றிச் செல்வம் சிறப்புமாய் அமையுமா அல்லது அதற்கு மாறாகுமா என்பவை எல்லாம் 'மனைப் படலத்தில்' விளக்கப்பட்டுள்ளன.

8. அட்ட கன்மப்படலம்: இனி தன் பட்சியின் தொழில் ஓங்கி அரசில் அல்லது ஊணில் இருக்கும்போது மாற்றான் பட்சி இறங்குமுகமாகத் துயில், சாவு, நடை முதலியவற்றில் இருக்கும்போது அவனை வெற்றி கொள்வது அவனிடம் தன் காரியங்களைச் சாதித்துக் கொள்வது, ஒத்தவயதுள்ள பெண் பாலர் தம்முள் ஒருவர் வசியம் செய்து கொண்டு காதல் முதலியவற்றில் வெற்றி கொள்வது. அவனிடம் தன் காரியங்களைச் சாதித்துக் கொள்வது, ஒத்தவயதுள்ள ஆண் பெண் பாலர் தம்முள் ஒருவரை வசியம் செய்து கொண்டு காதல் முதலியவற்றில் வெற்றி கொல்வது. மணமானவரும் கணவன், மனைவியிடம், ஒருநிறைவைச் சலுகையைப்

பெறுவது அடக்கி ஆள்வது, இதேபோல் தகப்பன் பிள்ளை, ஆண்டான், அடிமை (அதிகாரி, ஊழியன்) தலைவன், தொண்டன், உற்ற நண்பர்கள் இப்படிச் சமுகத்தில் பல நிலைகளில் உள்ளவர்கள் இப்பட்சிகளின் நிலைகளுக்கேற்பக் காரியங்களைச் சாதித்துக் கொள்வதில் இதற்கிணையானது வேறொன்றும் இல்லை எனலாம். இவை முதலான பலவகைச் செயல்களை வசியம் மோகனம், ஆக்ருடணம், தம்பனம், உச்சாடனம், வித்வேடணம், பேதனம், மாரணம் என்ற தொழில்களாகப் பிரித்து அவற்றிற்குப் பட்சித் தொழில்களையும் மந்திர இயலையும் கருவியாகக் கொள்வது ''அட்ட கன்ம''மாகும் இவற்றுள் முதல் மூன்றும் மேலே விளக்கிய ஆக்கவழிகளுக்குப் பயன்படுபவையாகும்.

இதுவன்றி மாற்றான் பட்சி தாழ்ந்திருக்கும்போது குறிப்பிட்ட வாரம் நட்சத்திரம், திதி, பட்சம் இவற்றில் தன்பட்சி அரசு, உண்டியில் ஓங்கி இருக்கும் காலத்தில் இவற்றின் அழிவுத்திறன் கொண்ட கூட்டு அதிர்வுகளின் வன்மையால் (Negative Vibrations) அவற்றைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு பட்சிகளுக்குரிய அட்சர மந்திர இயல் முறையைக் கடைத்தலை, இடைமுதல் முதலிய வகையில் மாற்றி மாற்றானை அழிக்கவும் துணிந்து வெற்றி கொள்வது மேற்சொன்ன மீதமான மாரணம் வரையிலுள்ள 5 தொழில்களாகும். இவை எல்லாம் சேர்ந்துதான் அட்டகன்மம் என்னும் மந்திரப் பிரயோக முறையாகும். இது ''அட்டகன்மப் படலத்தில்'' பொருளவில் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

9. இனி மேற்சொன்ன அட்ட கன்ம வகையிலோ அல்லது தன்பட்சியின் வெவ்வேறு தொழில் நோக்கில் பிணி ஏற்படும்போது அது நீடிக்கும் காலம கடுமை முதலியவை பிணிகாலப் படலம் என்ற தலைப்பிலும் அதனால் ஏற்படும் துன்பத்தைப் பீடையை தீர்த்துக் கொள்ளும் மந்திர இயல் வழி முறைகளைப் பீடை நிவாரணப் படலம் என்ற தலைப்பிலும் சுருக்கமாகக் கூறியுள்ளோம்.

10. மூலிகைகளின் மருத்துவக் குணங்கள் யாவரும் அறிந்தனவே, உலோகங் களைத் துகளாக்கும் தன்மை இன்னும் இன்னோரன்ன அருங்குணங்கள் கொண்ட மூலிகை மருத்துவத்தை நம்நாட்டுச் சித்தமருத்துவம் என்ற பெயரில் வளர்த்து உள்ளனர். சிற்சில மூலிகைகளில் இவ்வைம்பூத அதிர்வியக்கங்கள் அதிகமாக இருப்பதைக் கண்டு அவற்றின் வேர் முதலியவற்றை இன்ன பட்சிக்கு இன்ன மூலிகை என்று அறுதி செய்து, அவற்றைத் தன் பட்சி ஓங்கி இருக்கும் கால் மாற்றானைச் செயல் கொள்ள. மேற்சொன்ன அட்டகன்ம இயலில் மந்திர இயலுடன் பயன் படுத்துவது ''மூலிகைப் படலம்'' என்ற தலைப்பில் குறிப்பாகக் காட்டப்பட்டுள்ளது.

11. இனி இவற்றில அடங்காதவையும் சில உண்டு. ஒவ்வொரு பட்சிகளின் தன்மைக்கேற்ப இறையைக் குறிக்கும் ஐந்தெழுத்து மந்திர இயலை (பஞ்சாட்சரம்) தன்பக்குவத்திற்கேற்பத் தன் ஆசான் காட்டச் சாதித்துத் தன்னைத்தான் உணரும் ஆன்மீக இயலும் இதில் ஞானச் சுருக்கப்படலம் என்றவகையில் சுட்டிக்காட்டப்பட்டு உள்ளது.

12. இதுவன்றி நூலின் முகப்பில் பூர்வபட்சம், அமரபட்சம் இருபக்கங்களுக்கும் உரிய பட்சிகளின் எழுத்து தொழில் முதலியவை சக்கரங்களாக அமைத்து குறியிட்டு வகையில் காட்டப்பட்டுள்ளன. இதை 'நுதலிப்புகுதல்' என்ற தலைப்பிலும் காண்க.

# 6. அட்ட கன்மம் பற்றிய எச்சரிக்கை

மாற்றானை வெற்றி கொள்வது அல்லது அவனை அழிப்பது, ஆக்குவது போன்ற எட்டுவிதச் செயல்கள் அட்ட கன்மம் என்று முன்னர்க் கூறினோம் இவற்றை ஆக்கச் செயல்களுக்குப் பயன்படுத்துவது (For Positive Aims) வெள். ளைச்செயல் (White Magic) என்றும், அழிவுச் செயல்களுக்குப் பயன்படுத்துவது (Black Magic) இருட்செயல் என்றும் மேலை நாட்டினரும் கூறுவர். பின்னது தவிர்க்கற்பாலது என்று அதனை மேற்கொள்வோர் மாற்றான் ஊழ்வினை நிலை களுக்கேற்பத் தான் அவற்றை ஏற்று அதனால் தீய விளைவுகளுக்கு ஆளாக வேண்டிவரும் என்றும் நம் சித்தர்கள் பலவாறாக எச்சரித்துள்ளனர்.

இப்படிப்பட்டவற்றைச் செய்தால்தான் இயலுமா என்னின் ஒருவன் மனத் திண்மையால் முறுகிய சான்றாண்மை பெறும்போது அவன் எண்ண அலைகள் சூழ்நிலைகளில் கட்டாயம் பாதிப்பை ஏற்படுத்தும் என்று இஞ்ஞான்றைய மன நூல் வல்லுநரும் (Psychologist) கண்டறிந்த உண்மையாகும். இதனாலேயே

''ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின் தவத்தான் வரும''

என்பார் தெய்வப்புலவர் வள்ளுவப் பெருந்தகையார். அதாவது தனக்கு வேண்டாதவரை (ஒன்னாரைத்) (தெறல்) அழித்தலும். வேண்டியவரை உவந்தார் ஆக்கி உயர்த்தலும் புன்நூல் புலமையும் சான்றாண்மையும் பெற்ற புலவன் எண்ணின் (அதாவது மாற்றானின் தீய ஊழ் அவனை உறுத்து வந்து அதன் பயனை அவனுக்கு ஊட்டும் போது) அது புன்நூல் புலவன் முன் தன் வயமாக நடந்தால் அங்ஙனம் ஆக்கலும் அழித்தலும் கூடும் என்பது தெளி வாகிறது எதுவும் தன் விருப்பத்தை அல்லது வெறுப்பை முன்னிறுத்தாது இந்த இருவினையும் தன்வினைப்போக்கில் தன்னியல்பில் நடக்க வேண்டும் என்பதாம் இதை வலியுறுத்தவே வள்ளுவர் மீண்டும்.

''மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு''

என்று கூறுவதால் சான்றாண்மை உள்ளவன் மறந்தும் கூடப் பிறருக்குத் தீங்கு செய்யும்இத்தகைய அழிவுச் செயல்கள் செய்யக்கூடாது என்றும அப்படிச் செய்தால அறன் அவனையே தண்டிக்கும் என்று கூறுவதால் யாரும் இவற்றி னின்றும் தம்மைக் காத்துக் கொள்ளவேண்டும் என்பது திண்ணமாகும். ஆயின் சான்றோர்கள் இவற்றைக் கூறாமலேயே விட்டிருக்கலாமே என்னில் புன்நூல் புலவன் சான்றாண்மை மேல் ஓங்கி நிற்கும்போது உலகில் செயல்கள் நிகழும் அதன் போக்கில் மாற்றான் தன் ஊழால் உந்தப்பட்டு இயல்பாகவே புன்நூல் சீற்றம்கால் கொண்டு மாற்றான் அழிவுக்கு ஆளாவது ஒருவகையாக நிகழ்கிறது என்று கொள்ளவேண்டும்.

"குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது"

என்று கூறுவதும் காண்க. அதாவது சான்றாண்மை முதிர்ந்தோர் ஒரு கணமும் கூட வெகுளி, சீற்றம் கொள்வதிலர். அவர் தம் நிலைமீறி ஒருகால் சீற்றம் கொண்டால் அது தன் வினைப்பாதிப்பை ஏற்படுத்தாமல் விடாது என்பதே மேற்கண்ட குறளின் கருத்தாகும். எனவே இவற்றை எவ்வாற்றானும் தவிர்த்தல் வேண்டும். "இவ்வினைக் கவ்வினை" என்று நாவுக்கரசரும் கூறுவதால் எந்த வினைக்கும் எதிர்வினையை யாரும் ஏற்க வேண்டிவரும்.

"Every action has got an equal and opposite Reaction" என்ற தற்கால அறிவியலார் கோட்பாடும் இதையே வலியுறுத்துவதாகும் எனவே இவ்விதச் செயல்களைக் "கத்திமுனையில் நடப்பது" போன்றும் நெருப்பின் மேல் நடப்பது போன்றும் எண்ணிப் பொறுப்பாக நடப்பது சான்றோனின் கடமையாகும். ஆக எவ்வகையிலும் இவற்றைத் தவிர்ப்பதே சீரிய கடமையாம் என்று தெளிக இப்படியும் ஒருவகைச் செயல்வகை உண்டு என்பது தெரிய வேண்டும் என்பதற்காகவே இதனைக் குறிப்பாக எழுதினோமே அன்றிப் பயன்படுத்த அல்ல.

# 7. பஞ்சபட்சி வழக்கும் பண்டைத் தமிழரும்

இனி இப்பஞ்சபட்சி சாத்திரம் நம் தமிழருக்கே உரியதாய் நமக்குத் தெரிந்த வரையில் சங்க காலத்திலேயே இற்றைக்குச் சற்றேறக்குறைய 5000 ஆண்டுகட்கு முன்னரே நம் முன்னோர் கையாண்டு வந்துள்ளனர் என்பதை இப்போது காண்போம்.

1 முதன் முதலாகப் பஞ்சபட்சி என்ற இந்த ஐம்புள் நூலைப்பற்றிய செய்தி முழுமுதல் தமிழ் இலக்கண நூலான இடைச்சங்கம், கடைச்சங்கம் இரண்டும் தழுவிய நூலான தொல்காப்பியத்தில் நமக்குக் கிடைக்கிறது.

''நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்
காலம் கண்ணிய ஓம்படை உட்பட
ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பின்
காலம் மூன்றொடு கண்ணிய வருமே''

தொல்-பொரு புறத்-36

மேற்கண்ட நூற்பாவில் 'புள்ளும்' என்ற சொல் பஞ்சபட்சி சாத்திரத்தையே குறிக்கும் 'பிறவற்றின் நிமித்தமும்' என்றதில் பறவைகளைப் பற்றிய சகுனங்களும் அடங்கும். 'புள்ளும்' என்று விதந்து கூறியதால் இது பஞ்சபட்சி நூலையே குறிக்கும். இது தமிழ் நூல்களில் பிற இடங்களிலும் இந்த 'புள்' என்ற சொல்லாலேயே கூறப் படுவதாலும் இது தெளிவாகிறது.

2 'ஈயென இரத்தல் இழிந்தன்று' என்ற வல்வில் ஓரியைக் கழைதின் யானையார் என்ற புலவர் பெருமான் பாடிய புறப்பாடலில் (புறம்-204) தாம் பரிசில் வேண்டி வரும்போது கொடை வள்ளல் பரிசில் தராது மறுத்தால் அது வள்ளலின் பிழையன்று, பரிசில் வேண்டிச் சென்ற புலவன், வள்ளல் மறாது கொடுக்கும் வகையில் தன்பட்சி அரசு, உண்டி போன்ற வாய்ப்பான நேரத்தில் கிளம்பாததே புலவன் தவறாகும் என்ற கருத்தில்.

''புள்ளும் பொழுதும் பழித்தல் அல்லதை
உள்ளிச் சென்றோர் பழியிலர்''

என்று கூறுகிறார். இங்கே 'புள்ளும்' என்பது பஞ்சபட்சி சாத்திரமே ஆகும்.

3 அடுத்துச் சிலப்பதிகாரத்தில் வேட்டுவ வரியில் 13, 16-ம் பாடல்களில் பின் வரும் வரிகள் வருகின்றன.

''புள்ளும் வழிப்படரப் புல்லார்நிரை கருதிப் போகும் போலும்
புள்வாய்ப்பச் சொன்ன கணிமுன்றில்—நிறைந்தன''

என்பனவற்றில் பஞ்சபட்சி வாய்ப்பாக இருக்கும்போது மாற்றான் நிரைகவரச் செல்கின்றமையும், அப்படிச் செல்லத்தகுந்த பஞ்சபட்சியின் பாங்கான நேரத்தைக் கணித்துச் சொல்லும் 'கணியும்' அதாவது சோதிடனும் இருந்ததும் குறிக்கப் பெறுகின்றன.

4 அடுத்துச் சீவக சிந்தாமணியில் கோவிந்தையார் இலம்பகத்தில்

"பொழுதன்று போதுமெனப் புள் மொழிந்தான் கொழிந்தான்"

(சீவக-445)

என்ற வரியில் பகைவனை வெல்லச் செல்ல, சமயம் பஞ்சப்பட்சிப்படி தன்பட்சி வாய்ப்பாக அமையவில்லை என்று குறிக்கப் பெறுவது காண்க. இதனாலும் இன்னும் பலவற்றாலும் மிகப் பண்டைய காலத்திலிருந்தே இந்த 'பஞ்சபட்சி' சாத்திரம் தமிழர் கையாண்டு வந்தமை நன்கு புலனாகும்.

ஆனால் 'புள் நூல்' எதுவும் பண்டையது இன்று நமக்குக் கிடைக்கவில்லை. இவை வாய்மொழியாகவே இருந்து வந்ததை நம் சான்றோரான சித்தர்கள், சமூக சாதி வேறு பாட்டுக்கு அப்பால் நின்று மனநலம், உயிர்நலம், மக்கள் நலம் இவற்றையே குறிக்கோளாகக் கொண்டு மருத்துவ இயல், மன இயல், மந்திர இயல் மற்றும் இப்புள்ளியல் என்னும் 'பஞ்சபட்சி' பல்வகை வழக்குச் செய்யுட்களில் கூறிச் சென்றனர். இவற்றையெல்லாம் தொகுத்துப் பிற்காலத்துச் சான்றோர் சிலர் 'அகத்தியர் பஞ்சபட்சி சாத்திரம்' 'உரோமரிஷி வினாடி பஞ்சபட்சி' 'காக புசுண்டர் பஞ்சபட்சி சாத்திரம்' போன்ற நூல்களைச் செய்து வைத்தனர்.

## 8. தற்காலத்தில் அச்சான பட்சபட்சி நூல்கள்

தற்காலத்தில் முன்சொன்ன 3 நூல்களும் 50 ஆண்டுகளுக்கு முன் பொள்ளாச்சி சித்த வைத்தியப் பெருமகனார் இராமசாமி அவர்கள் 'பஞ்சபட்சி சூக்கும நூல்' என்று ஒன்றையுப் பதிப்பித்ததும், இதுவன்றி ஏறக்குறைய 20 ஆண்டுகளுக்கு முன் வந்த 'பஞ்சபட்சி சாத்திரம்' என்ற செய்யுளும் உரையும் விரவிய நூலொன்றும் நமக்குக் கிடைக்கின்றன.

கடைசியில் குறிப்பிட்ட நூல் சிறிதாயினும் ஏறக்குறையத் தெளிவாய் உள்ளது. முதலாவது அகஸ்தியர் பஞ்சபட்சி சாத்திரம் உரையற்றது. தெளிவாக அறியக் கூடாதது. இரண்டாவது 'உரோமர் பஞ்சபட்சி' முழுமையானது, உரையற்றது. பல இடங்களில் விளக்கம் தேவை. 3 ஆவதான 'காக புசுண்டர் பஞ்சபட்சி சாத்திரம்' பாடல்கள் மிகவும் பிழை மலிந்தும், சூக்கும கால அளவைகள் பல இடங்களில் தவறாகவும் உள்ளன. இந்நிலையில், இராமசாமி வைத்தியர் 'பஞ்சபட்சி சூக்கும நூல்' ஒன்றுதான் கொஞ்சம் தெளிவானது. இதுவும் திருத்தமும் விளக்கமும் பெற வேண்டும் என்பது உற்று நோக்குவார்க்குப் புலனாகும். இந்நூல்கள் அனைத்திலுமே ஒன்றில் உள்ள செய்யுட்கள் மற்றதில் மாறியும் பிறழ்ந்தும் அதே வடிவத்திலும் காணப்படுகின்றன. இந்த நிலையில் 'பஞ்சபட்சி' சாத்திரத்தின் முழு விளக்கமும் கொண்ட சிறந்த திருந்திய பதிப்பு ஒன்று தேவையே. அதை நிறைவு செய்வதுதான் இப்போது தஞ்சை சரஸ்வதி மஹால் வெளியிடுவதாகும். இப்பதிப்பின் விரிவான செய்திகளைத் தனித் தலைப்பில் கண்டு கொள்க.

மற்றுமொன்று, பஞ்சபட்சி சாத்திரம் என்ற இவ்வகைக் கருவி நூலின் சோதிடத்தின் அடிப்படைகள் பின்னணியில் ஆதாரமாக்கப்பட்டு ஐம்பூத இயக்கத்தின் விரிவாக்கமாக உருவாக்கப்பட்டுள்ளது. இது தமிழருக்கே உரியது. வேறு எந்த மொழியிலும் இந்த வகையில் 'பஞ்சபட்சி நூல்' அமையவில்லை. வழங்குவன சிலவும், மிகச்சிறு நூல்களாகவும் விளக்கமில்லாதனவாகவும் உள்ளன. வடநாட்டில் இந்த 5

பறவைகளைப்பற்றிய சகுனங்களையும் இவற்றைப்பிடித்து உயிருடனோ, இறக்கை கரு, முதலியவற்றையோ சிலபல மந்திர இயலுடன் இருளியல் முறையில் (Black Magic) பயன்படுத்தும் சாத்திரமே உள்ளது. வடமொழியில் அகத்தியர் பெயரில் பஞ்சபட்சி பற்றி ஒரு சிறு நூல் உள்ளது. அதுவும் முழுமையானதும் அன்று. விளக்க மானதும் அன்று. சிங்கள மொழியில் மட்டும் அந்நாட்டில் இது வழக்கில் உள்ளது. இது தமிழர் கூட்டுறவால் ஏற்பட்டது என்பதில் ஐயமில்லை. எனவே 'பஞ்சபட்சி சாத்திரம்' என்ற இந்த ''ஐம்புள் நூல்'' தமிழ்மொழி ஒன்றில்தான் நம் ஆன்றோர் களான சித்தர் பெருமக்களால் அமைக்கப்பட்டது என்று நாம் திண்ணமாகப் பெருமை கொள்ள முடியும்.

## 9. பஞ்சபக்ஷி நூலின் அருமை

இதுகாறும் கூறியவற்றிலிருந்து இப் 'பஞ்சபட்சி' நூலும் ஒரு அறிவியல் கருவி நூலே அன்றியும் ஆன்மீக மெய்யுணர்வு மற்றும் மனச் செம்மை அமைதி முதலியவை காக்கும் நூல் என்பதும் தெள்ளிதின் விளங்கும். இதுபற்றியே பஞ்சபட்சி கற்றோன் சான்றோன் என்றதும், யாதும் செய்யும் வல்லுநன் என்பதும் அவனைப் பகைத்துக் கொள்ளக் கூடாது என்று சுட்டும் பழமொழிகளும் தோன்றலாயின. 'பஞ்சபட்சிக் காரனைப் பகைக்காதே' 'சரம் கற்றவனோடு சவகாசம் பண்ணாதே' என்ற பழமொழிகள் இவ்வகையைச் சார்ந்தவையே.

''பட்சி அறிந்தவனைப் பன்னிப் பகைத்து நிதம்
கட்சி புரிவோர் கருத்தழிவர்-குட்சி
எறியக் குலைத்துக் கெடுவர்காண் மண்ணில்
வறியராய் நொந்தலைவர் மற்று''

என்ற பஞ்சபட்சி பலதிரட்டுப் பாடல் கூறுவது காண்க. எனவே 'பட்சி நூல் கற்றவனைப் பகைத்துக் கொள்பவர். கருத்தழிவர். வயிறு எரியக் குலைந்து கெட்டுப் போவர்,வறுமை மேலீட்டால் வாழ்வில் பெருந்துயர் கொண்டு அலைவர்'என்றாகிறது இதனை அறிந்து கொள்வதால் 'பஞ்சபட்சியை வழிபட்டுக் கற்றவர் திருமகளான செல்வத்தை மிக அடைவர். இவர்களுக்கு எந்தப் பகையும் இராது. உலகில் தான் இருக்குமிடத்தில் தானே தலைவனாய்ப் புகழும் ஏற்றமும் பெறுவார் என்று கீழ்க் கண்ட பாடல் கூறுவது காண்க.

''பஞ்சபட்சி தன்னைப் பரிவாகப் பூசைசெய்தால்
கஞ்சமலர் மாதுதனைக் காணலாம்—மிஞ்சிவரும்
சத்துருவும் இல்லை தானவனாம் இப்புவியில்
எத்திசையும் ஏற்றம் பெறும் ''

எனவே இதனைக் கற்குமுன் சான்றாண்மை பக்கம் பெற்றுக் கற்றுக் தேவைக் கேற்ப அளவுடன் பயன்படுத்தி ஆக்கப் பணிக்கே ஏற்று. இதனால் யாவரும் சிறந்து விளங்க எல்லாம் வல்ல இறையருளை வேண்டுகின்றேன்.

சரஸ்வதி மஹால் நூல் நிலைய நிர்வாக அதிகாரி திரு. பஞ்சநாதன் ஆர்வத்துடன் இட்ட பணி தலைக்கீடால் சுவடி எண் 368 கொண்ட 'பஞ்சபட்சி பலதிரட்டு' என்ற நூலையே பதிப்புக்கு எடுத்துக் கொள்ளலாம் என்று முடிவாயிற்று. காரியத்தில் இறங்கியபின்தான் அது அவ்வளவு எளிதல்ல என்று ஏற்பட்டது. மேற்கண்ட சுவடியில் சொல்லும் பொருளும் தொடர்பின்றியும் முன் பின்னாகவும் இடையிடையே மந்திர சாத்திரம் சரநூல் முதலியவையும் இணைந்தும், ஆற்றொழுக்காக அமையாமலும், சிதைந்தும் உருவழிந்தும் காணப்பட்டதை உணரும் போது உள்ளம் துணுக்குற்றது. இதை உணர்ந்த திரு. பஞ்சநாதன் அறிவுரையின் பேரில் மஹாலில் உள்ள ஏறக்குறைய 14 சுவடிகளை (பஞ்சபட்சி பற்றியவை) ஆய்ந்து தேவைப்பட்டவற்றை எடுத்துக் கொண்டு மேற்சொன்ன 'பஞ்சபட்சி பலதிரட்டை அடிப்படையாகக் கொண்டு அதில் இல்லாத சிலபல செய்திகளை மற்ற சுவடிகளிலிருந்து நிரப்பி முழு நூலாகப் 'பஞ்சபட்சி நூற்கோவை' என்ற பெயரில் வெளியிடுவது என்று முடிவு செய்யப்பட்டது. இந்தத் திட்டத்தின் கீழ் முதலில் குறிப்பிட்ட சுவடியோடு வேறு 7 சுவடிகளையும் சேர்த்துச் சற்று முழுமையாக உள்ளவை என்று தோன்றிய கீழ்க்கண்ட 8 சுவடிகள் இப்பதிப்புக்கு ஆதாரமாகக் கொள்ளப்பட்டன. விவரம் வருமாறு.

1. பஞ்சபட்சி பலதிரட்டு: சுவடி எண் 368 கிரந்தம் எண் 3000: ஏறக்குறைய பஞ்சபட்சியைப் பற்றிய முழுச்செய்திகளும் உள்ளன ஆனால் கோர்வை வரன்முறை இல்லை. செய்யுளும் உரை நடையும் விரவியது. கூந்தல் பனையில் எழுதப்பட்ட நூல். பட்சி நூலுடன் சோதிடம், சரநூல் முதலியவையும் இடையிடையே உள்ளன, அச்சிட்ட நூல்களில் உள்ள செய்யுட்கள் பல இதிலும், இதில் உள்ளவை மற்றவற்றிலும் உள்ளன மற்ற சுவடிகளிலும் இப்படியே உள்ளன. பஞ்சபட்சிக்கே உரிய யோனி வகைகளுக்குக் கிழமை வாரியாகத் திக்குகள் இதில் தரப்பட்டுள்ளன. பஞ்சாட்சரத்திற்கும் பஞ்சபட்சிக்கும் உள்ள தொடர்புகள் பலபடியாக இதன்கண் விளக்கப்பட்டுள்ளன, இச்சுவடியே இந்தப்பதிப்புக்கு முக்கிய நூலாகக் கொள்ளப்பட்டுள்ளது. இதன் ஆசிரியர் பெயர் காலம் முதலியவை அறியக்கூடவில்லை.

---

2. கும்பமுனி பட்சி சாத்திரம் சுவடி எண் 1015 கிரத்தம் 1500: பஞ்சபட்சிகளைப் பஞ்சகர்த்தாக்கள் என்ற தெய்வங்களின் பெயரால் வழங்கப்பட்டு பஞ்சபட்சி பற்றி கருத்துக்கள் ஏறக்குறைய முழுமையாக உள்ளன. பஞ்சபட்சி தொழிலுக்குரிய திக்குகள் ஒவ்வொரு தொழிலுக்கும் பூர்வ அமர பக்கங்களுக்குத் தரப்பட்டுள்ளன. இது மற்றவற்றில் இல்லாத ஒன்றாகும். இதுவும் உரைநடை பாடல் இரண்டும். வருவது கும்பமுனி அகத்தியரைக் குறிக்கும். அவர் பெயரில் மிகப் பிற்காலத்தவர் செய்தது. மற்ற செய்திகள் அறியக் கூடவில்லை. இதன் அரிய செய்திகள் யாவும் இப்பதிப்பில் இடம் பெறுகின்றன.

3. அகத்தியர் பஞ்சபட்சி சாத்திரம்: சுவடி எண் 777 இதே தலைப்பில் அச்சிட்ட நூலின் பெரும் பகுதிகள் இதிலும் உள்ளன. ''ரோமரிஷி வினாடி பஞ்சபட்சி'' என்ற நூலின் ஜாதகப் படலம், யாத்திரை, மனைப்படலம், ருது படலம், பிணிப்படலம் முதலியவை செய்யுட்கள் முழுமையாக இதன் கண் உள்ளன. தேய்பிறை, வளர்பிறைகளுக்கு உறுப்புப் பட்சிகள் விரிவாகத் தனியாக இதில் காணப்படும். மூலச் சுவடியில் இல்லாத சில விஷயங்கள் பதிப்புக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

4 ''பஞ்சபட்சி சாத்திரம்'' சுவடி எண் 966: இதுவும் ஆசிரியர் பெயர் முதலியவை தெரியக்கூடவில்லை. வேண்டியாங்கு இதிலிருந்தும் செய்யுட்கள் பதிப்புக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

5. ''பட்சி சாத்திரம்'' சுவடி எண் 940: இதுவும் முன்னது போன்றதே. இதிலிருந்தும் பாடல்கள் பதிப்புக்குக் கொள்ளப்பட்டுள்ளன. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியக்கூடவில்லை.

6. ''பட்சி சாத்திரம்'' சுவடி எண் 47/412: இதுவும் முன்னையது போன்றதே. சில பகுதிகள் பதிப்புக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன. ஆசிரியர் பெயர் முதலியவை அறிக்கூடவில்லை.

7. சுவடி எண் 797 ''சரவணபவன் சோதிடம்'' என்ற பெயரில் உள்ள சோதிடம் பற்றிய எல்லா விஷயங்களும் தன்னகத்துக்கொண்ட 6240 கிரந்தங்கள் கொண்ட பெரிய நூல். இதன் எழுத்துப் பிரதியில் 255 ம் பக்கம் முதல் 307-ம் பக்கம் வரை ''பஞ்சபட்சி சாத்திரம்'' முழுமையும் ஏறக்குறைய 100 செய்யுட்களில் ''அகத்தியர் மாமுனி அருளிய பஞ்சபட்சி நூல்'' என்ற தலைப்பில் உள்ளது. சரவண பவன் என்பவரால் தொகுக்கப்பட்டுள்ளது எனலாம். இதிலிருந்தும் பாடல்கள் பதிப்பில் சேர்க்கப்பட்டுள்ளன. ஆசிரியர்காலம் முதலியவை அறியக்கூடவில்லை.

8. ''பஞ்சபட்சி சாத்திரம்'' சுவடி எண் 1422 பூர்வபட்ச செய்யுட்கள் மட்டும் எல்லாம் பெரும் பகுதியும் வெண்பா யாப்பில் அமைந்துள்ளன. நல்ல நிலையில் உள்ளது. ஏறக்குறையச் செய்யுட்கள் முழுமையும் பதிப்பில் சேர்த்துக்கொள்ளப் பட்டுள்ளன.

மேற்கண்ட சுவடிகள் அனைத்துமே எழுத்து இலக்கண யாப்புப் பிழைகள் மலிந்தும் கண்ணழிந்தும் காணப்படுகின்றன. சிற்சில இடங்களில் செய்யுட்கள் அடிகள் குறைந்தும் உள்ளன. இவை எல்லாவற்றையும் இயற்றியவர் மிகவும் பிற்காலத்தினர் என்று தெரிகிறது. இலக்கண இலக்கியப் புலமையற்றோர் ஏற்படுத்தியதால் பிழைகள் மேற்சொன்னபடி மலிந்துள்ளன. எனவே பின்தலைமுறை யினருக்கு எதுவும் விட்டுப் போகாமல் இருக்க வேண்டும் என்ற எண்ணத்தால்

வழுக்களையெல்லாம் களைந்து பாடல்கள் குறைந்த அடி முதலியவற்றை இட்டு நிரப்பிச் செப்பம் செய்து இப்பதிப்பை உருவாக்கி உள்ளேன்.

**இப்பதிப்பின் அமைப்பு :** எம் சிற்றறிவிற்கு இயன்றவரை ஐம்புள் நூல் நுதலிய பொருள் முழுமையும் வரிசைப்படுத்திக் கொண்டு அவற்றிற்கான விஷயங்களை அங்கங்கே மேலே காட்டிய சுவடிகளிலிருந்து எடுத்துக்கொண்டு இவ்வேட்டுச் சுவடிகளில் இல்லாதவற்றை எமது கையேட்டுக் குறிப்புப் புத்தகம், அச்சிட்ட நூல்கள் முதலியவற்றிலிருந்து தொகுத்தும் அங்கங்கே உரையும் விளக்கக் குறிப்புகளும் கொடுத்துள்ளேன். தேவைப்பட்ட இடங்களில் கணிதக் குறிப்புகள் அட்டவணைகள் முதலியவை புதிதாக இணைத்துள்ளேன்.

பூர்வ அமர பட்சங்களுக்குக் கிழமை தோறும் ஒவ்வொரு பட்சியின் ஒவ்வொரு தொழிலுக்கும் உட்பிரிவான சூக்கும வினாடிகள் 5 வகைகளையும் காலை உதயம் முதல் மறுநாள் உதயம் வரை உள்ள 60 நாழிகைக்கும் உள்ள காலப்பகுதியை தற்காலக் கணக்கில் மணி நிமிடங்களில் அட்டவணைகள் முழுமையாக அமைத்துள் ளேன். இவ்வகையில் மொத்தம் 2500 கணிதங்கள் செய்யப்பட்டுத் திருத்திய வடிவில் கொடுத்துள்ளேன்

பட்சியின் தொழில்களுக்கேற்ற எழுத்துமுறை தொழில்முறை சக்கரங்கள், இரு பட்சங்களுக்கும் தனித்தனியாக இணைத்துள்ளேன். இதுவன்றி இரு பட்சங்களுக்கும் தொழில்களின் பதகங்கள் இணைக்கப்பட்டுள்ளன.

பஞ்சபட்சியின் அடிப்படையில் ஒருவன் பிறப்பு நட்சத்திரப் பட்சியின் தொழிலின் அடிப்படையில் மகாதசை வெறும் பாடலில் இதுவரை இருந்ததை அரிதின் ஆய்வு செய்து கணித முறையைப் புதிதாக விளக்கியுள்ளேன். அங்கங்கே செய்யுட்களில் இருந்து வரும் முடிச்சுகளுக்கு விளக்கம், குறிப்புகள் இவை உள்ளிட்ட எல்லாம் பெரிதும் உழைத்து எமது பல்லாண்டுகள் ஆய்வின் பயன் கொண்டு இணைத்துள்ளேன். எனவே இவற்றை வேறு யாரும் தம் நூலில் எடுத்தாளவோ, இதன் அடிப்படையில் புது விளக்கம் காணவோ இவ்வுரை ஆசிரியர் அனுமதியின்றி ஈடுபடக்கூடாது.

பதிக்கப்பட்ட செய்யுட்கள் எந்தச் சுவடிகளில் இருந்து எடுக்கப்பட்டன என்பதைக் குறிப்பெழுத்தால் இடஞ்சுட்டி விளக்கியுள்ளேன். ஏட்டின் செய்யுள் எண் இல்லாத இடத்தில் அதன் தற்கால கையெழுத்துப் புத்தகத்தின் பக்கத்தைக் காட்டி உள்ளேன். மற்றவை எல்லாம் இப்பதிப்புக்கு மூலமாகக் கொண்ட ''பஞ்சபட்சி பலதிரட்டு'' சுவடி எண் 868 என்றதிலிருந்து எடுக்கப்பட்டுள்ளவை. இதற்கும் பக்க எண் அல்லது சுவடி செய்யுள் எண் சுவடி அல்லது அதன் கையெழுத்துப் படியில் உள்ள பக்க எண் முதலியவை கொடுத்துள்ளேன்.

## 11. சுவடிகளின் விவரமும் குறிப்பெழுத்தும்

| | | | |
|---|---|---|---|
| 1. | பஞ்ச பட்சி பலதிரட்டு சுவடி எண் | 868 | அ |
| 2. | கும்பமுனி பட்சி சாத்திரம் | 1015 | ஆ |
| 3. | அகத்தியர் பட்சி சாத்திரம் | 777 | இ |
| 4. | பட்சி சாத்திரம் | 936 | ஈ |
| 5. | பஞ்சபட்சி சாத்திரம் | 940 | உ |
| 6. | பட்சி சாத்திரம் | 47/412 | ஊ |
| 7, | சரவண பவன் சோதிடம் (அகத்திய மாமுனி அருளிய பஞ்சபட்சி நூல்) | 797 | எ |
| 8. | பஞ்சபட்சி சாத்திரம் | 1422 | ஏ |

குறிப்பு: சுவடி எண் 936, மற்றும் 47/412 இங்கே எண் வரிசை 4 மற்றும் 9 இரண்டும் ஒன்றே, நூலினுள் இரண்டு எண்களும் குறிப்பிட்டுக் காட்டப்படுவதால் தனியாக இங்கும் காட்டப்பட்டுள்ளது.

### பஞ்சபட்சி

*(பஞ்சாக்ஷர யந்திரம் 7-ம் பக்கத்தில் உள்ளது)*

(விளக்கக் குறிப்பு)

'தன்னைத்' தான் அறிந்து சிந்தை தெளிவு பெற்றால் தான் பஞ்ச பூத இயல் அடிப்படையில் பிறர்வினை நம் உள்ளத்தில் தெள்ளிதின் உணர இப்பஞ்ச பட்சி நூல் ஏதுவாகும். ஆதலின் அத்தவநிலை சிந்தைத் தெளிவும் பெற மந்திர யந்திர வழிபாடு விளக்கத்தைப் பஞ்சபட்சியையும் பஞ்சாக்ஷரத்தையும் இணைத்து நம் ஆன்றோர்களான சித்தர்கள் தந்துள்ளார்கள். இம்மந்திர யந்திர வழிபாடு அறிவியல் அடிப்படையில் செயல் திறன் பெற்று அமைந்துள்ளதை இந்நூல் ''பீடை நிவாரணப் படலத்திலும்'' எம் ஆராய்ச்சி முன்னுரையிலும் விளக்கியுள்ளோம். இவ்விளக்கத்தின் அடிப்படையில் சுவடி 'அ' ''பஞ்சபட்சி பலதிரட்டு'' நூலின் (28 முதல் 38ம் பக்கம், 69 முதல் 81ம் பக்கம், 87,93ம் பக்கம் மற்றும் 94 முதல் 109ம் பக்கம் வரை) யுள்ள பகுதியில் கண்டுள்ள பற்பல குறிப்புக்களையே ஆதாரமாகக் கொண்டு, மற்றும் எம் ஆசான் வழிக்கேட்டன. சித்தர்கள் மரபு, பயிற்சி, ஆய்வு, எம் கைக்குறிப்புகள் இவற்றின் துணை கொண்டும், இந்த யந்திரம் அமைக்கப்பட்டுள்ளது. இதில் வழிபட்டுத் தெளிவு பெற்றால்தான் ஒருவன் சான்றோனாக முடியும். பஞ்சபட்சியும் பலிக்கும், பேசும். ஆகையால் இவையெல்லாம் தக்கார் பால் கேட்டுணர்ந்து தகுதி பெறுக.

## (பூசனை முறை சுருக்கம்)

ஒன்பது அங்குல சதுரமுள்ள வில்வப் பலகை அல்லது செம்புத் தகட்டில் இதைப்பொறித்துத் (Engrave) தூய முழுக்காட்டி எண்வகை மலர்கள் எண்திக்கும் வைத்து நறும்புகையும், 5 வகை எண்ணெய், 5 வகை நூலால் திரி இவை கொண்ட விளக்கேற்றி, ஐம்புள்ளுக்கும் உரித்தான திரு ஐந்தெழுத்து ஒவ்வொன்றையும் முதலாக உள்ள எழுத்து மாறல் முறையில் தலைமாற்றி உருவேற்றி முறைப்படி (தீக்கை பெற்ற முறையில்) 41 நாட்கள் பூசனை வழிபாடுகள் ஆற்றி ஐம்பூத இறைவன் உருவகத்தில் ஐம்புள்ளுக்கும் விளியாம் வகையில் (பஞ்சபட்சி நம:) (பஞ்சபாக்ஷர எழுத்து முறையுடன் இணைத்து) வழிபட்டு முடித்து தினமும் இதையே சுருக்கமான முறையில் வழிபட்டு வந்தால் பஞ்சபட்சி பலிக்கும். பேசும். மாற்றான் ஊழ்வினை நம் சிந்தையில் தெள்ளிதின் புரியும். இதன் விளக்கத்தையெல்லாம் மேலும் விரிவாக உணர்ந்த ஆன்றோர் பால் கேட்டுணர்ந்து தெளிக.

இதன் அறிவியல் அடிப்படை விளக்கம் 14-வது பீடை நிவாரணப்படலத்தின் முன் முகப்பில் யாம் கொடுத்துள்ள ஆராய்ச்சியுரையால் 309-ம் பக்கம் முதல் 343 பக்கம் வரை உள்ளவற்றால் தெளிந்துணர்க.

### நூலிற் புகுமுன் வாசகர்களுக்கு முக்கிய குறிப்பு

பஞ்சபட்சி நூல்களில் இதுவரை காலப்பகுப்பு தமிழ்முறை நாழிகை வினாடி கணக்கிலேயே விளக்கம் பெற்று வந்தது, இதன்படி இந்நூலில் வரும் முக்கிய காலப் பகுப்பான ஒரு சாமத்துக்கு 6 நாழிகையாகும். இதுபோல் 5 சாமம் கொண்டது பகல் மற்றும் 5 சாமம் கொண்டது இரவாகும். இரண்டும் சேர்ந்து 60 நாழிகை கொண்ட ஒரு நாளாகக் கணக்கிடப்படும்.

ஆனால் நாம் இந்நூலில் தற்கால முறைப்படி ஒரு நாழிகைக்கு 24 மணித் துளிகள் (நிமிடங்கள்) வீதம் கணக்கிட்டுக் காட்டியுள்ளோம்.

பூர்வபட்ச அமரபட்சங்களுக்குரிய தூல பஞ்சபட்சி கண்ணாடி 70 முதல் 1?2ம் பக்கம் வரையும் மற்றும் 143ம் பக்கம் முதல் 194ம் பக்கம் வரையும்) மற்றும் சூக்கும பஞ்சபட்சிக் கண்ணாடி சிறப்பு அட்டவணைகள் 102லும், மற்ற எல்லா இடங்களிலும் மணிக்கணக்கிலேயே மணி, நிமிடம் என்ற முறையில் கணக்கிடப்பட்டுக் காட்டப்பட்டு உள்ளன. அறியவும்.

அதேபோல் சூரிய உதயம் காலை 6 மணி என்று கொண்டு சாமங்கள், சூக்கும அந்தரங்கள் கணக்கிடப்பட்டுள்ளன. சூரிய உதயம் 6 மணிக்கு முன்போ பின்போ ஏற்படும் சந்தர்ப்பங்களில் இந்தக் கணக்கு இந்தந்த நிமிடங்கள் வித்யாசத்தில் முன்போ பின்போ ஏற்பட்டதாகக் கொண்டு அவற்றைக் கூட்டியும் குறைத்தும் கொள்ளவேண்டும்.

காலை 6 மணி முதல் மாலை 6 மணிவரை பகல் என்றும் மாலை 6 மணி முதல் மறுநாள் காலை 6 வரை இரவு என்றும் கொள்ள வேண்டும்.

# INTRODUCTION

## THE MYSTERIOUS PANCHA PAKSHI

## (The Elemental Astrology of the Tamils)

Prof. Dr. PULIPPANI SUNDARAVARADACHARY

### PART I - THEORY

### 1. THE SCIENTIFIC BASIS OF PANCHAPAKSHI

Every human being is after the pursuit of happiness in the world. Nobody intentionally accepts s rrow and misery. As a matter of fact life consists of more sorrow and grief than happiness. It is rightly said that "If the quantum o happiness is only an atom, the proportionate sorrow and misery to be endured for its sake amounts to a mountain".

Though this is not an exaggeration it is particularaly and partially true that a man suffers more in the life than to enjoy. Right from the dawn of Civilisation, great thinkers and saints were in the true pursuit to find out ways and means to get spotless happiness without any trace of sorrow whatsoever After continued research and penance for centuries together they have to come to the conclusion that only spiritualism leading to self realisation is the way to enjoy and experience spotless ever lasting bliss. In this effort and parh our ancient Tamil Siddhas stand in the forefront who have formulated a Golden Key to unlock the doors of the bosom of the Super intelligence and thus see face to face this everlasting bliss.

These Siddhas were not only great spiritualists to the core but were great scientists, physicians and psychologists who have analysed life in its full-ness both on mundane and abstract levels and have dictated scientific priciples leading man to success in both levels. On the gross plane, if one lives in accordance with the nature, life becomes blessing, which in the long run leads to spritual well being also. In this juncture, the mysterious PANCHAPAKSHI is also one of the sciences which helps man to progerss simultaneously on par and in accordance with the nature in both the planes and get enduring bliss.

In a nutshell, the following is the essence of this science, as enunciated by our ancient Siddha Saints. The soul, the body it dwells, the feelings etc., all are resultant of collective forms of the vibrations of five basic elements consisting in various proportions. In spiritual plane, this is called Panchikarana. When an individual's vibrations are repelling with those in Macrocosm, suffering begins. Conversely, when the elemental vibrations of an individual is in tune with those in Macrocosm, the individual gets satisfaction and happiness. In the former conditions there will always be failure and sufferings and in the latter there will be always success and comforts. Similary, when the individual tunes up his elemental vibrations in the abstract plane with those of the super intelligence he gets emancipation in the spiritual field. This is the basis of PANCHAPAKSHI.

These great Tamil Siddhas found out that the planetary movements, the waxing and waning periods of the Moon due to its relative cyclic distance from the Sun and due to the radiation of these planets progressing through the ecliptic consisting of 12 apartments called Rasis and 27 constellations evenly spread over these Rasis, all produce a specialised elemental vibrative force of the time situations.

They also found that these elemental Vibrations differentially function in 5 ways during the periods of waxing and waning cycles of the Moon in 5 different gradations. When an individual is ushered into this world the cosmic vibrations resultant of the emanations from the peculiar pattern of the Nine planets by virtue of occupation of their particular and angular positions in the ecliptic make a collective imprint in the sub conscious, unified along with the elemental vibrations occuring in the path of the compartments of the 27 constellations in the ecliptic. The horoscope can thus be defined the symbolic representation of this imprint. Being controlled and directed by the imprint the individual is helpless, but to live in a peculiar individual way accordingly. If we can identify the basic laws behind formation of this imprint and the functional pattern of our elemental vibrations. We can adjust ourselves and function in such a way so that our indulgence in any action during a time when our elemental vibrations are at highest ebb, we will be crowned with supreme success. This is the fundamental priniple of the Pancha Pakshi.

## II. HOW THE PANCHAPAKSHI FUNCTIONS:

These 5 elemental vibrations act in 5 gradations of faculties for stipulated time intervals called Yama consisting of 2 hours 24 minutes each (6 Gatikas each) over the 5 yamas in the day, and 5 yamas in the night, thus spread over in 24 hours. These functional pattern vary, during waxing and waning Moon cycles and also during week days. These elemental vibrations of 5 gradations function in such a way that when one elemental vibration is at the highest ebb, the other 4 function proportionately in diminishing order, thus the last vibrate at a dormant or death stage. These 5 elemental vibrations are personified as Pakshis or birds and the gradations of their faculties are named as 5 activites. The 5 birds are named as Eagle, (VULTURE), Owl, Crow, Cock and Peacock and the activities are called Eating, Walking, Ruling, Sleeping and Dying. Each bird performs these 5 activites each day and night over the week days and waxing and waning Moon cycles during the 5 yamas in day and 5 yamas in night in a stipulated order.

Now the features of the 5 gradations of these activities are as follows:-

1) The dormant state which is completely actionless and is called as dead.

2) The sleeping or numbed state being the next higher grade but stay incapable to react to anything.

3) The moving or walking state which has a little force now in it than the previous one.

4) The eating state, the next vibratory higher standard, wherein occurs renewal of exhausted energies/life cells and hence called eating state.

5) The next activity is called ruling, which Vibrates at the highest ebb surged with full energy which wins over all the other 4 vibratory gradations.

It is to be noted that the above activities are stronger than the previous one in the order given. Thus the dying and sleeping states are very weak and unsuitable for any action, the walking state is next stronger being of medium strength. The next stronger is the eating state and stronger still and the most powerful is the ruling state. Thus the eating and ruling activities periods will be suitable for all actions to consummate into success.

It is also to be noted that when one elemental bird is performing an activity the other 4 birds will be perofrming the other 4 activites and at no time the same activitiy will be performed by any other bird. Each bird performs these five activities spread over the 5 Yamas in day and 5 Yamas in Night in a stipulated cycle during the week days and waxing and waning Moon cycles as said earlier. The succession of the 5 activites performed is also arranged in a stipulated order covering the above cycles. In this way the bird performing the activitiy of ruling being strongest wins over the remainining four, the bird doing the activity of eating wins over the remaining three only namely those doing Moving, Sleeping, and Dying activites. The bird doing the activity of moving wins over the remaining two namely the bird doing the activites of sleeping and Dying. The bird doing the activity of sleeping wins over the bird that is dying. The bird Dying is defeated by the birds doing all other activities. Thus the activities of Dying, Sleeping, walking, Eating and Ruling are stronger in succession and gradation and wins over the remaining in the order shown.

## III HOW THE ELEMENTAL BIRD IS DECIDED:

This is done in 3 ways:

1) According to birth time of an individual that bird and its acitivity is decided just as ascendant is decided in the case of computing horoscope in astrology. This will be individual's birth bird. This is helpful only in determining the trend and nature of one's life, as is analysed in the case of horoscope from the rising sign and other features. The examples with regard to calculating of one's birth bird has to be worked out separately which is left out for want of space.

2) According to the birth star and as per the phase of either waxing or waning Moon cycles the Pakshi is decided. Thus groups of stars of five or six beginning from Aswini is allocated for each Pakshi differently in waxing and waning Moon cycles and 27 stars are thus allocated distributing them among the five pakshis in a stipulated way. When once the pakshi of an individual is decided according to his birth star either in waxing or waning phase of the Moon the same will be his permanent Nakshathra pakshi for both the phases of the Moon. Only this pakshi is taken into consideration for all practical purposes in day to day living.

3) Apart from these, pakshis are ascribed for Lagna [1] Thithi [2] Rasi [3] etc. from this angle if a person happens to be born under the same Pakshi for Rasi, Thithi, Lagna etc, particularly when it is in the highest ebb of activity namely Ruling or Eating, then the person will be highly elevated and his living will be of high standards.

4) The birth star and its Pakshi decided vide item No 2 is also made use in calculating directional periods or Dasa Bukthis. In the case of Astrology, the Dasa being of a particular Pakshi and the Bukthis being of the 5 activities in varying periods in a particular activity in a stipulated succession covering hundred years, comprising the 5 Bukthis pertaining to the 5 activities.

From the above, it could be seen that when an individual engages in any action or transaction with others when his own Nakshathra Pakshi is at its highest ebb of activity of ruling or eating he will succeed and win over others.

In addition to these, our ancient siddhas have formulated various abstract methods of using the 5 activities. Accordingly in each main activity, the remaining 4 activities function as sub abstract activities, such as, if a Pakshi is doing Ruling activity the sub-activities, will be ruling in ruling, walking in ruling, eating in ruling, sleeping in ruling and dying in ruling. These sub activities are given succession in stipulated order for day and night for waxing and waning phases of Moon periods. In addition the Siddhas have also found that in the main activity of each bird the other 4 birds perform the remaining 4 sub activities in a particular order and each sub activity being friendly or in enemity with the bird of the main activity. Thus a bird performs 25 sub activities spread over the period of 12 hours during the day and 25 sub activities spread over 12 hours of the night through the agency of the remaining 4 birds in each of the main activities.

---

1) Ascendant

2) Sign

3) Distance between Sun and Moon reckoned for each day.

Thus the permutation and combinations of these abstract timings amount to 2500 entries constructed into 100 tables spread over both the phases of Moon cycles which is included in the text of this book in proper context. The relative strength of a pakshi in each abstract time cycle can be definitely calculated to ascertain the strength of the bird during each abstract time period to assess its capability of overcoming the remaining 4 birds.

In addition to the above the ancient Siddhas have ascribed different significators (karakathvas) comprising complete animate and inanimate things of the entrie world spread over sound, light, form, place, things, number, metals strength, colour, caste, clothings, etc. allotting these significators for each of the 5 birds pertaining to the 5 elements.

## IV. REASONS FOR PERSONIFYING THE ELEMENTAL VIBRATIONS AS BIRDS

The ancient siddhas should have personified these 5 elemental vibrations a 5 birds based on some sane and scientific reason. We will try to find out this. In Hindu mythology our ancients have ascribed specific animals and birds as vehicles for specific God Heads The 10 incarnations of Lord Vishnu are found to be in the order of the theory of evolution of Darwin in stages, thus the first Mathsyavathara the fish a living being in water, the Kurmavathara, the Tortoise, living in water and land. Varahavathara, the pig living in land only, the Narasimhavathara, being half animal and half man, Vamanaavathara the Dwarf man, the Parasuramaavathara, the aggressive fierceful man, the Rama, the refined ordinary man, the Krishna, the superman and Kalki the Godly man. Somehow or other in the same basis the siddhas have personified these elemental vibrations as birds. Elements being 5 in number the birds live in earth, fly in air and either (Akasa) they also live in water and the fire element also involves them in the abstract form Some of the birds are said to swallow burning bits being called as fire birds (நெருப்புக்கோழி) thus the 5 birds naturally cover all the elements In addition, the Eagle variety Garuda is the vehicle of Lord Vishnu, the Crow is the vehicle of Saturn, the Owl mainly signify Goddess of wealth in the North India, the Cock is the flag of Lord Subramanya and the Peacock being his vehicle refers in a sense to the salient abstract qualities of these God heads (in Hindu mythology)

## V DIVISION OF TIME

Our ancients have always followed sexagenary time cyclrs, thus the day comprsising 60 ghatikas. each gatika consisting cf 60 vigatikas for each day. In the field of panchapakshi, each pakshi is allotted 5 yamas of 6 gatikas each for the day and 5 yamas of 6 gatikas in the night. Each yama works out to 2 hours and 24 minutes of our modern time. Thus the distribution of the 5 yamas gatikas will be as follows during day and night.

| | | |
|---|---|---|
| 6.00 a m. to | 8.24 a.m. | - first yama |
| 8 24 a.m. to | 10.48 a.m. | - second yama |
| 10.48 a m. to | 1.12 p.m. | - third yama |
| 1.12 p.m to | 3.36 p m. | - fourth yama |
| 3.36 p m. to | 6.00 p m. | - fifth yama |

the cycle repeats similarly for the night. It should be noted that the modern time cycle at its lower divison follows sexagenary tirre cycles, since the hour consists of 60 minutes and minute consists 60 seconds which is sufficient to explain the saneness of reason behind following sexagenary time cycles by our ancients.

## VI. PANCHAPAKSHI AND OCCULT POWERS:

It is well known that mental powers can be channelised and used in positive or negative ways for specific purposes (by occultists). The former being called White magic and the later as Black magic respectively. Our ancients have formulated ways and means to employ both black and white magic in the field of panchapakshi to yield definite results both on constructive and destructive ways. However, our ancients have always warned that black magic should never be employed for destructive purposes unless it happens spontaneously due to the destiny of the other beings which are aimed at.

The pancha pakshi occultism comprises of conjuring of various forces when the elemental vibration of the pakshi of an individual is at the highest ebb aimed at the objective persons when their elemental vibrations are at lower level. The ancients have formulared ways and means to employ this Manthric vibrations

and other cosmic mental powers within the purview of this field which produce definite results both positively and nagatively. The scientific background of this manthirc occultism and other aspect of this feature of pancha pakshi will be well explained in the appropriate context in the mainbody of this independent book. Since the subject is too vast, full explananation of the same cannot be presented here for want of space.

It suffices to know that the Siddhas have explained these occult powers under 8 main activites called Ashtakarama. Since the subject should not be lost once for ever the same has been dealt in brief outline even in the text since our Siddhas have warned against performance of black magic and incur sin and curse of others.

## VII. THE OTHER ASPECTS AND USES OF PANCHAPAKSHI

We have so far explained that the whole world for that matter the Universe is functioning due to actions and interactions of the five elements and that by birth time or star each being gets more vibrational force among the 5 elements and gets that element as its main element which are personified as birds, and the world is functioning with the influence of these 5 birds only. When an element is at its high vibrational force of ruling or eating,the other elements are subdued Based on this, the panchapakshi is used in the following ways in the life of an individual.

**1. Those which are not in one's control but happens according to destiny:**

i An individual is born in this world under the vibrational force of any one of the 5 elements with any one of gradations. Accordingly, if a man is born when a pakshi (element) is at its high vibrational force he lives better or if he is born under its lower gradations of vibrations the life proportionately falls down to misery and difficulties. Hence this is under the force of destiny similar to horoscope.

ii) The same way, if girls attain pubeity when their bird is at its higheshe vibrational eb , their life thereafter will be happy or otherwise if the occurrence happens during lower gradations. This also is under the control of destiny.

iii) Similarly when one falls ill, same will be light or detrimental according to the intensity of the higher gradation of elemental vibration vice versa performed by his bird during the start of the event which is also under the control of destiny.

## 2 THOSE WHICH ARE UNDER ONE'S OWN CONTROL

If one selects a time which has the highest gradation of vibrationary force of his pakshi either eating or ruling, if he engages in entering of various activities such as entering into new house, performing marriage, journey, courting his or her fancy, to start endeavour, to accept new ventures and positions, to go into activities, and to wear new clothings, to engage in speculations, to start to meet VIPs etc. he will be surmounted with success. Various such timings of high vibratory force of all the pakshis furnished into 2500 entries of 100 tables covering both the Moon cycles at the proper place. It is needless to say and beyond doubt to claim that this mysterious panchapakshi is thus a down ical process formulated by our ancestor Siddhas which have come to us as a book of divine Mother Nature.

There are many references in Tamil literature right from Sangam era to confirm that our ancestors have been using this panchapakshi since time immemorial.

As already said repeatedly readers are warned that this panchapakshi should be used only on the consturctive plane and not on the destructive side. According to eternal law of karma, every action has an equivalent opposite reaction which has been proved beyond doubt even by the modern science. Based on this cannon, if pancha pakshi is used for negative ends, the performer meets with the negative ends himself due to the repulsive reactions of his deed. Hence readers may avoid the same.

## VIII THE SUPREMACY OF THE PAKSHI SHATHRA [1] :

From what has been said so far it could be seen that this pancha pakshi shasthra is also a real and down to earth practical science as any other science will be and at the same time, if employed righteously and virtueously in stages, both in mundane and spiritual planes, the same will also turn out a homogeneous spiritual science leading to realisation of one's own self. Due to the certainty and definiteness of result yielding of this science there are maxims in Tamil which warn that one should not develop enmity with a man who knows this pancha pakshi and when employed for selfless ends the man lives comfortably and attains emancipation at the end.

---

1. Science

# THE MYSTERIOUS PANCHAPAKSHI

## (The Elemental Astrology of the Tamils)

### PART II—PRACTICAL ASPECT

### 1 PRELIMINRY INFORMATION

In the first part I have explained the basic and fundamental principles of this elemental Astrology or Panchapakshi as it is called. The readers will have to fully bear in mind and then apply them in day to day life. The following points are to be learnt necessarily for the same.

1. One should know his Birth Star or the longitude of the Moon at Birth and there by decide the Birth Pakshi or Bird which will be arrived at based on time of Birth of the individual.

2, In the absence of Birth time being not known the Pakshi or the Elemental Bird can be decided by recognising the first sound of the first letter of the name of the individual whose Bird we want to know. The Table to to this effect is also given,

3. The Tables giving the details or time gaps of all activities for all the five Birds or Pakshis both for day and for night as well as for both the periods of waxing and waning Moon cycles of time, should be studied well for practical application in day to day life.

Now all the above tables are explained one by one in the following order.

1. Table No. 1 shows the space occupied by each of the 27 Stars on the Ecliptic from 0° to 360° and their respective Pakshis or Birds

2, Table No. 2 shows space on the Ecliptic showing the range of longitude for each of Five Pakshis (Birds)

3. Table No. 3 shows the Vowels allocated for each of the Five Pakshis (Birds) to facilitate indentifying a person's Bird from his name.

4. Pancha Pakshi Mirror showing the main and sub activities of the Five pakshis (Birds) for day and for night for the Bright half period of Moon is shown in Table No. 4.

5 Table No. 5. Similar Table showing the details for the Dark half period of the Moon.

## TABLE No : 1

This shows the space of the Ecliptic occupied by each of the 27 Stars of Hindu Astrology and the Bird or Pakshi Pertaining to them. It is to be noted that these 27 stars are distributed over the Five Pakshis as shown in the table.

The space occupied by each of these 27 Stars on the Ecliptic from 0° to 360° is shown in the following Table. All Hindu (Indian) Almanacs show the duration of these Stars daily from Sun Rise from which the Birth Stars are dentified for a given Birth Time.

### TABLE No 1 THE 27 STARS THEIR PAKSHIS OR BIRDS ON THE ECLIPTIC

| S.No. | Name of Star | Space on The Ecliptic from 0° onwards to 360° | | Birds of Stars During Bright Half (Sukla Paksha) | Birds of Stars During Dark has (Krushna Paksha) |
|---|---|---|---|---|---|
| | | From | To | | |
| 1. | ASWINI | 0° | 13° -20° | VULTURE | PEACOCK |
| 2. | BARINI | 13° -21' | 26° -40' | VULTURE | PEACOCK |
| 3. | KRITTIKA | 26° -41' | 40° -00' | ,, | ,, |
| 4. | R HINI | 40° -01' | 53° -20' | ,, | ,, |
| 5. | MRUGASIRA | 53° -21' | 66° -40' | ,, | ,, |
| 6. | ARIDRA | 66° -41' | 80° -00' | OWL | COCK |
| 7. | PUNARVASU | 80° -01' | 93° -20' | ,, | ,, |
| 8. | PUSHYA | 93° -21' | 106° -40' | ,, | ,, |
| 9. | ASLESHA | 106° -41' | 120° -00' | ,, | ,, |
| 10. | MAKHA | 120° -01' | 123° -20' | ,, | ,, |
| 11. | PUBBA | 123° -21' | 146° -40°' | ,, | ,, |

| S. No. | Name of Star | Space on The Ecliptic from 0° onwards to 360° From | To | Birds of Stars During Bright half (Sukls Paksha) | Birds of Stars During Dark half (Krushna Pakska) |
|---|---|---|---|---|---|
| 12 | UTTIRA | 146°-41' | 160°-00 | CROW | CROW |
| 13 | HASTHA | 160°-01' | 173°-20' | CROW | CROW |
| 14 | CHITRA | 173°-21' | 186°-40' | CROW | CROW |
| 15 | SWATHI | 186°-41' | 200°-00' | CROW | CROW |
| 16 | VISHAKA | 200°-01' | 213°-20' | CROW | CROW |
| 17 | ANUARAHA | 213°-21' | 226°-40' | COCK | OWL |
| 18. | JYESTA | 226°-41" | 240°-00 | COCK | OWL |
| 19 | MOOLA | 240°-01' | 253°-20 | COCK | OWL |
| 20 | POORVA SHADA | 253°-21 | 266°-40 | COCK | OWK |
| 21 | UTHIRA SHADA | 266°-41' | 280°-00 | COCK | OWL |
| 22 | SRAVANA | 280°-00' | 293°-20, | PEACOCK | VULTURE (EAGLE) |
| 23 | DHANISHTA | 293°-21 | 306°-40' | ,, | ,, |
| 24 | SATHABISHA | 306°-41' | 320°-00 | ,, | ,, |
| 25 | POORVA BADRAPADA | 320°-01 | 333°-20 | ,, | ,, |
| 26 | UTHIRA BADRA PADHA | 333°-21 | 346°-40 | ,, | ,, |
| 27 | REVATHY | 3.60°-41' | 360°-00 | ,, | ,, |

It will be seen that Stars are common for the Bird "CROW" During both the Moon cycles. Those who do not want to fall in the confusion of Birth Stars can find out their Birth Bird by the longitude of the fixed Zodiac as given in the Table No. 11

## TABLE NO. II SPACE OF ECLIPTIC SHOWING THE LONGITUDES OF THE FIVE BIRDS

| Sl.No. | BIRDS FOR THOSE BORN DURING BRIGHT HALF OF THE MOON CYCLE. | SPACE IN ECLIPTIC FROM 0°TO 360° From | To | BIRDS FOR THOSE BORN DURING DARK HALF OF THE MOON CYCLE |
|---|---|---|---|---|
| 1. | VULTURE (EAGLE) | 0° | 66°-40' | PEACOCK |
| 2. | OWL | 66°-41' | 146°-40' | COCK |
| 3. | CROW | 146°-21 | 212°-01 | CROW |
| 4. | COCK | 212°-21' | 280°-01 | OWL |
| 5. | PEACOCK | 280°-01' | 360°-00 | VULTURE (EAGLE) |

**NOTE:**

Readers should always bear in mind that the Moon's longitude of one's Birth should be at in the Siderial Zodiac of the Indian Astrology of Nirayan Moon's position as it is called by deducting the procession of the Equinoxes or the Ayanamsa as is called, for the particular time of Birth from the Tropical Zodiac longitude of the Moon or the Sayana longitude of the westerner.

**EXPLANTIONS: (TABLE No.II)**

1. Suppose a man is born in the star Rohini during the Bright halt of the Moon, referring to the Table No. 1 we can find that his Birth Biad is Vulture (Eagle) and this will be his permanent Birth Bird for both Bright and Dark half periods of the Moon.

2. If the same man is born during Dark half period of the Moon with the Birth Star as Rohini his permanent Birth Bird will be Peacock for both Moon cycles as we can see from the Table No.1.

3. If we cannot find the Birth Star but however we can arrive at the longitude of the Moon during Birth. (i.e) If you are born during Bright half when the Moon's longitude is 145°-3'. Since this falls between the range of 66°-41' to 146°-40', wide item No. 2 in the Table No. II your Birth Bird will be Owl. If you are born with the same longitude of the Moon during the dark half then your Bird will be Peacock. At both instances the Birth Bird arrived at will be the permanent Birth Bird for both the Moon cycles as explained earlier:

## TABLE No. III

## IDENTIFICATION OF BIRDS FROM FIRST SOUND OF THE FIRST LETTER OF THE NAME OF A PERSON

| BIRD IN BRIGHT HALF OF THE MOON | FIRST LETTER PERTAINING TO THE FIRST SOUND OF THE NAME | BIRD IN DARK HALF OF THE MOON |
|---|---|---|
| VULTURE (EAGLE) | A, AA, I, OW | PEACOCK |
| OWL | E, EE | VULTURE (EAGLE) |
| CROW | VU, VUU | OWL |
| COCK | EA, EAA | PEACOCK |
| PEACOCK | O,OO | CROW |

**NOTE:**

In the middle column repetition of vowels show the long sound to indentify the long vowels of the Dravidian Language from its short vowel.

It can be understood that the Eleven Vowels of the Dravidian Tamill Language are distributed among the Five Birds. These vowels and the Consonants formed by them are to be identified from the first letter of name of a person to locate the Bird.

**EXPLANTION: (TABLE No. III)**

When the Birth Star or longitude of Moon of a person is not known we can arrive at the Birth Bird of the person by the first sound of his name. This is only secondary which can be used during emergencies and when we are not able to know the time of Birth of a person. The above Tables explains this. Suppose you are dealing with a person whose name is "Raman or Robert" his first sound of the name in both the cases pertains to the vowe "A" (R×A=RA) Hence the Bird will be Vulture (Eagle) during Bright half and for the same man it will be Peacock during Dark half In the case of names the Birds of the same person will be different in both the Moon cycles

Which is not in the case when he know the Birth time/Star/Longitude of Moon of a person.

Similarly the Bird should be located for all other names from five vowel sound of the names.

For a Second Example Suppose the name is Indra Kumar or Ingarsal this time the first vowel is 'E' Hence the Bird will be Owl during Bright half and Vulture(Eagle) during Dark half. This may be little confusing for westerners. However with experience and insight the first sound of the name can be easily identified. More explanations will be worked out in our forthcoming book.

**EXPLANATION : TABLE IV & V**

1 Activities and duration for each of the five yamas for each of Five Birds for day and night as well as for Bright and Dark half cycles of the Moon for all week days are shown separately in two tables one for Bright half and other for Dark half. The time gaps are shown horizontally against each Bird. (ReferTable No. IV & V). Hence comparison of the Activities among different Birds is made easy.

II Various significations of the Birds for both Moon periods such as Colour, Direction, Friend or Enemy of a person, the ruling day or immune day of a person etc., are shown to apply them with advantage in various fields of Astrology such as Natal, Horary, Medical, Mundane Astrology etc.

III Readers may note that there are five sub-activities in each main activity of a Bird embracing all the five main activites. By this, one can understand that the ruling sub-activity of ruling main activity will be strongest and the dying sub-activity in the dying main activity will be weakest. Thus if the strongest activity can be taken as one unit, the weakest activity will be 1/25th of that. The arriving at the comparative strength among Two Birds at the same time is possible. The duration of each sub activity is given separately for both the Moon cycles-

## I. APPLICATION (TABLE IV & V)

Suppose your Birth Bird is vulture(Eagle)and you want to meat a person whose Bird is Owl on a Sunday 8-45 a.m. during dark half period of the Moon. By looking at the Table you will find that your Bird Vulture (Eagle) is doing the activity eating and the Bird Owl is sleeping at the same time which is weaker. Hence you will win over the man with advantage. However during the next period namely from 10-48 a. m. to 1-12 p. m. Your Bird will be ruling which is strongest among the activities, during such periods all other Birds will be weaker and hence you will be crowned with supreme success.

2. As explained in the theory portion we can engage in various activitie such as Courtship in love, Travel, beginning of any activity, taking medicine, conducting marriage etc. for all electional Astrological purposes during strongest activity of your Bird in which case you will always succeed.

3 Similarly if you fall ill during the weakest ebb of your Bird you will not recovr easily or if you begin any activity during such conditions your activity will always fail. Hence dying and sleeping activities should alwa's be avoided. However these negative periods are made use of in black magic which is not supposed to be explained here.

4. There is a ruling day/night for each Bird, during day/night for both the Moon cycles. When your Bird is at the strongest ebb during your ruling day your actions will always be surmounted with success.

5. Similarly there is an immune day or dying day of your Bird for both day and night during both cycles of Moon which will result in failure and suffering if engaged.

6. Similary Caste, Colour Metal, Gem, Number, Directions, sex and other significations of the Birds during both the periods of the Moon are so given for all the Birds. Readers may use them according to the context of their day to day activity.

## ௩௨. வெள்ளி

| சாமம் | இ வல்லூறு | ஒ காகம் | எ மயில் | உ ஆந்தை | அ கோழி |
|---|---|---|---|---|---|
| 1 | ஊண் 2 | நடை 1½ | அரசு ¾ | துயில் ½ | சாவு 1¼ |
| 2 | சாவு 1¼ | ஊண் 2 | நடை 1½ | அரசு ¾ | துயில் ½ |
| 3 | துயில் ½ | சாவு 1¼ | ஊண் 2 | நடை 1½ | அரசு ¾ |
| 4 | அரசு ¾ | துயில் ½ | சாவு 1¼ | ஊண் 2 | நடை 1½ |
| 5 | நடை 1½ | அரசு ¾ | துயில் ½ | சாவு 1¼ | ஊண் 2 |

## ௩௩. புதன்

| சாமம் | ஒ காகம் | எ மயில் | உ ஆந்தை | அ கோழி | இ வல்லூறு |
|---|---|---|---|---|---|
| 1 | ஊண் 2 | நடை 1½ | அரசு ¾ | துயில் ½ | சாவு 1¼ |
| 2 | சாவு 1¼ | ஊண் 2 | நடை 1½ | அரசு ¾ | துயில் ½ |
| 3 | துயில் ½ | சாவு 1¼ | ஊண் 2 | நடை 1½ | அரசு ¾ |
| 4 | அரசு ¾ | துயில் ½ | சாவு 1¼ | ஊண் 2 | நடை 1½ |
| 5 | நடை 1½ | அரசு ¾ | துயில் ½ | சாவு 1¼ | ஊண் 2 |

குறிப்பு: கட்டங்களில் தொழில்களின் கீழ் சூக்கும அந்தர நாழிகை கொடுக்கப்பட்டுள்ளன.

## அமரபட்சம் இரவு எழுத்துமுறைச் சக்கரங்கள்

## 34. அமரபட்சம் இரவு தொழில் வாக்கியச் சக்கரம்

அமர பட்ச வாக்ய சக்கரம்

| வாரம் | ஊண் | நடை | அரசு | துயில் | சாவு |
|---|---|---|---|---|---|
| திங்கள் சனி | அ கோழி | உ ஆந்தை | எ மயில் | ஒ காகம் | இ வல்லூறு |
| வெள்ளி | எ மயில் | ஒ காகம் | இ வல்லூறு | அ கோழி | உ ஆந்தை |
| செவ்வாய் ஞாயிறு | இ வல்லூறு | அ கோழி | உ ஆந்தை | எ மயில் | ஒ காகம் |
| புதன் | உ ஆந்தை | எ மயில் | ஒ காகம் | இ வல்லூறு | அ கோழி |
| வியாழன் | ஒ காகம் | இ வல்லூறு | அ கோழி | உ ஆந்தை | எ மயில் |

## எழுத்துமுறைச் சக்கரங்கள்

### 35. திங்கள்—சனி

| சாமம் | ஊண் | அரசு | சாவு | நடை | துயில் |
|---|---|---|---|---|---|
| 1 | அ | உ | எ | ஒ | இ |
| 2 | எ | ஒ | இ | அ | உ |
| 3 | இ | அ | உ | எ | ஒ |
| 4 | உ | எ | ஒ | இ | அ |
| 5 | ஒ | இ | அ | உ | எ |

### 36. ஞாயிறு—செவ்வாய்

| சாமம் | ஊண் | அரசு | சாவு | நடை | துயில் |
|---|---|---|---|---|---|
| 1 | இ | அ | உ | எ | ஒ |
| 2 | உ | எ | ஒ | இ | அ |
| 3 | ஒ | இ | அ | உ | எ |
| 4 | அ | உ | எ | ஒ | இ |
| 5 | எ | ஒ | இ | அ | உ |

## ௩௭. புதன்

| சாமம் | ஊண் | அரசு | சாவு | நடை | துயில் |
|---|---|---|---|---|---|
| 1 | உ | எ | ஒ | இ | அ |
| 2 | ஒ | இ | அ | உ | எ |
| 3 | அ | உ | எ | ஒ | இ |
| 4 | எ | ஒ | இ | அ | உ |
| 5 | இ | அ | உ | எ | ஒ |

## ௩௮. வியாழன்

| சாமம் | ஊண் | அரசு | சாவு | நடை | துயில் |
|---|---|---|---|---|---|
| 1 | ஒ | இ | அ | உ | எ |
| 2 | அ | உ | எ | ஒ | இ |
| 3 | எ | ஒ | இ | அ | உ |
| 4 | இ | அ | உ | எ | ஒ |
| 5 | உ | எ | ஒ | இ | அ |

## 39. வெள்ளி

| சாமம் | ஊண் | அரசு | சாவு | நடை | துயில் |
|---|---|---|---|---|---|
| 1 | எ | ஒ | இ | அ | உ |
| 2 | இ | அ | உ | எ | எ |
| 3 | உ | எ | ஒ | இ | அ |
| 4 | ஒ | இ | அ | உ | எ |
| 5 | அ | உ | எ | ஒ | இ |

### அமர பட்ச இரவு தொழில் முறைச் சக்கரங்கள்

## 40. திங்கள்—சனி

| சாமம் | அ கோழி | உ ஆந்தை | எ மயில் | ஒ காகம் | இ வல்லூறு |
|---|---|---|---|---|---|
| 1 | ஊண் $1\frac{3}{4}$ | நடை $1\frac{3}{4}$ | அரசு $\frac{3}{4}$ | துயில் $\frac{3}{4}$ | சாவு 1 |
| 2 | துயில் $\frac{3}{4}$ | சாவு 1 | துயில் $1\frac{3}{4}$ | நடை $1\frac{3}{4}$ | அரசு $\frac{3}{4}$ |
| 3 | நடை $1\frac{3}{4}$ | அரசு $\frac{3}{4}$ | ஊண் $\frac{3}{4}$ | சாவு 1 | ஊண் $1\frac{3}{4}$ |
| 4 | சாவு 1 | ஊண் $1\frac{3}{4}$ | நடை $1\frac{3}{4}$ | அரசு $\frac{3}{4}$ | துயில் $\frac{3}{4}$ |
| 5 | அரசு $\frac{3}{4}$ | துயில் $\frac{3}{4}$ | சாவு 1 | ஊண் $\frac{3}{4}$ | நடை $1\frac{3}{4}$ |

## 41. வெள்ளி

| சாமம் | எ<br>மயில் | ஒ<br>காகம் | இ<br>வல்லூறு | அ<br>கோழி | உ<br>ஆந்தை |
|---|---|---|---|---|---|
| 1 | ஊண்<br>1 3/4 | நடை<br>1 3/4 | அரசு<br>3/4 | துயில்<br>3/4 | சாவு<br>1 |
| 2 | துயில்<br>3/4 | சாவு<br>1 | ஊண்<br>1 3/4 | நடை<br>1 3/4 | அரசு<br>3/4 |
| 3 | நடை<br>1 3/4 | அரசு<br>3/4 | துயில்<br>3,4 | சாவு<br>1 | ஊண்<br>1 3/4 |
| 4 | சாவு<br>1 | ஊண்<br>1 3/4 | நடை<br>1 3/4 | அரசு<br>3/4 | துயில்<br>3/4 |
| 5 | அரசு<br>3/4 | துயில்<br>3/4 | சாவு<br>1 | ஊண்<br>1 3/4 | நடை<br>1 3/4 |

## 42. செவ்வாய்-ஞாயிறு

| சாமம் | இ<br>வல்லூறு | அ<br>கோழி | உ<br>ஆந்தை | எ<br>மயில் | ஒ<br>காகம் |
|---|---|---|---|---|---|
| 1 | ஊண்<br>1 3/4 | நடை<br>1 3/4 | அரசு<br>3/4 | துயில்<br>3 4 | சாவு<br>1 |
| 2 | துயில்<br>3/4 | சாவு<br>1 | ஊண்<br>1 3/4 | நடை<br>1 3/4 | அரசு<br>3/4 |
| 3 | நடை<br>1 3/4 | அரசு<br>3/4 | துயில்<br>3/4 | சாவு<br>1 | ஊண்<br>1 3/4 |
| 4 | சாவு<br>1 | ஊண்<br>1 3/4 | நடை<br>1 3,4 | அரசு<br>3,4 | துயில்<br>3/4 |
| 5 | அரசு<br>3/4 | துயில்<br>3 4 | சாவு<br>1 | ஊண்<br>1 3 4 | நடை<br>1 3/4 |

## 43. புதன்

| சாமம் | உ ஆந்தை | எ மயில் | ஒ காகம் | இ வல்லூறு | அ கோழி |
|---|---|---|---|---|---|
| 1 | ஊண் 1$\frac{3}{4}$ | நடை 1 3/4 | அரசு 1 3/4 | துயில் $\frac{3}{4}$ | சாவு 1 |
| 2 | துயில் 3/4 | சாவு 1 | ஊண் 1 3/4 | நடை 1 3/4 | அரசு 3/4 |
| 3 | நடை 1 3/4 | அரசு $\frac{3}{4}$ | துயில் $\frac{3}{4}$ | சாவு 1 | ஊண் 1 3/4 |
| 4 | சாவு 1 | ஊண் 1 3/4 | நடை 1 3/4 | அரசு 3/4 | துயில் 3/4 |
| 5 | அரசு 3/4 | துயில் $\frac{3}{4}$ | சாவு 1 | ஊண் 1 3/4 | நடை 1 3/4 |

## 44. வியாழன்

| சாமம் | ஒ காகம் | இ வல்லூறு | அ கோழி | உ ஆந்தை | எ மயில் |
|---|---|---|---|---|---|
| 1 | ஊண் 1/4 | நடை 1 3/4 | அரசு 3/4 | துயில் $\frac{3}{4}$ | சாவு 1 |
| 2 | துயில் $\frac{3}{4}$ | சாவு 1 | ஊண் 1$\frac{3}{4}$ | நடை 1 3/4 | அரசு 3/4 |
| 3 | நடை 1 3/4 | அரசு $\frac{3}{4}$ | துயில் 1 3/4 | சாவு 1 | ஊண் 13/4 |
| 4 | சாவு 1 | ஊண் 1 3/4 | நடை 13/4 | அரசு 3/4 | துயில் 3/4 |
| 5 | அரசு 3/4 | துயில் 3/4 | சாவு 1 | ஊண் 1 3/4 | நடை 1 3/4 |

குறிப்பு: தொழில் முறைச் சக்கரங்களில் கட்டங்களில் தொழில்களின் கீழ் அவற்றின் சூக்கும நேரங்கள் (அந்தரங்கள்) நாழிகையில் கொடுக்கப்பட்டுள்ளன. இவைகளுக்கு விளக்கம் 1 முதல் 11வது சக்கரங்களின் கீழ் கொடுக்கப்பட்டுள்ளது அங்கு கண்டு கொள்க.

அடுத்து பூருவபட்சம் பகல் இரவு இரண்டிலும் தொழில்களின் சூக்கும அந்தர நாழிகை அளவு வேறுபடும்.

அதேபோல் அமர பட்சத்துப் பகல் இரவு இரண்டிலும் தொழில்களின் சூக்கும அந்தர நாழிகைகள் கால அளவும் வேறுபடும்.

இவை எல்லாம் அடுத்த படலத்துள் பாடலுடன் விளக்கப்படும்.

## பகுதி — நான்கு

## ௨௨. பூர்வபட்சம் அமரபட்சம் இரண்டுக்கும் நட்சத்திரப்பட்சி

### வெண்பா

அஞ்சாகும் வல்லூறு ஆந்தைதான்
அஞ்சாகும் காகமுடன் வாரணமாம்-கொஞ்சமயில்
அஞ்சொடொன்றாம் அசுவினிநேர் ஐம்புள் வளர்மதிப்புள்
அஞ்சுகீழ்மேல் ஆம்தேய் மதி

வளர்பிறை தேய்பிறைகளில் ஒருவன் பிறந்த நட்சத்திரங்களுக்கேற்ப என்ன பட்சி என்பதை இப்பாடல் கூறுகிறது.

(இ-ள்) அசுவனி முதல் ஐப்புள்ளான பஞ்சபட்சியும் முதல் 5 நட்சத்திரங்கள் அதாவது அசுவனி, பரணி, கார்த்திகை, ரோஹிணி, மிருகசீரிஷம் ஆகிய ஐந்து நட்சத்திரங்களும் ஆந்தையாகும். அடுத்த ஆறு நட்சத்திரங்களான திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயில்யம், மகம், பூரம் ஆகிய 6 நட்சத்திரங்களும் ஆந்தையாகும். அடுத்த 5 நட்சத்திரங்களான உத்திரம், ஹஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம், ஆகிய 5 நட்சத்திரங்களும் காகம் ஆகும். அடுத்த ஐந்து நட்சத்திரங்களான அனுஷம், கேட்டை, மூலம், பூராடம் உத்திராடம், ஆகிய 5 நட்சத்திரங்களும் கோழி ஆகும், கடைசி 6 நட்சத்திரங்கள் திருவோணம் அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி ஆகியவை மயிலாகும். இவை வளர் பிறையான பூர்வ பட்சத்துக்குரியவையாகும்.

தேய்பிறைக்கு இவை கீழ்மேலாக வரும். அதாவது கடைசி ஆறு வல்லூறு, அதிலிருந்து 5 நட்சத்திரங்கள் ஆந்தை, அதிலிருந்து மேல் 5 நட்சத்திரங்கள்ரிகாகம், அதற்குமேல் ஆறு நட்சத்திரங்கள் கோழியாகும், அதற்கு மேல் 5 நட்சத்திரங்கள் மயிலாகும் என்று கொள்ள வேண்டும்.

இப்படி வளர்பிறை தேய்பிறை இரண்டிற்கும் ஒரே பாடலில் சுருங்கச் சொல்லி விளங்க வைத்த அழகு போற்றத்தக்கது.

இதைக் கீழ்வரும் அட்டவணையால் தெளிவாகப் புரிந்து கொள்ளலாம்.

நக்ஷத்திரப்பக்ஷி சச்கரம்

| பக்ஷி வளர்பிறை பூருவம் | நக்ஷத்திரங்கள் | பக்ஷி தேய்பிறை அமரம் |
|---|---|---|
| வல்லூறு | அஸ்வினி, பரணி, கார்த்திகை, ரோஹிணி, மிருக சீர்ஷம் | மயில் |
| ஆந்தை | திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயில்யம், மகம், பூரம் | கோழி |
| காகம் | உத்திரம், ஹஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம் | காகம் |
| கோழி | அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம் | ஆந்தை |
| மயில் | திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி | வல்லூறு |

பாட்டில் சொன்னபடி இரண்டு பட்சங்களில் வளர்பிறைக்கு மேலிருந்து அசுவினி முதல் சொன்ன நட்சத்திரங்களின் பட்சிகள், தேய்பிறையில் கீழிருந்து மேலாகக் கடைசி நட்சத்திரம் முதலாக ரேவதியிலிருந்து அதே கணக்கில் மேலாகப் பட்சிகள் வந்துள்ளமை காண்க.

இவற்றிற்குத் தனித்தனிப்பாடல்களும் வேறு நூல் சுவடிகளில் உள்ளன. அவையும் பிறிதோர் இடத்தில் தரப்பட்டுள்ளன.

## தொடர்பு விளக்கம்

இனி இவற்றின் பயன் வருமாறு. ஒருவன் வளர்பிறையில் பரணியில் பிறந்தான் என்று கொண்டால் அவன் பட்சி வல்லூறு ஆகும். இதுவே அவன் வாழ்க்கை பூராவும் எல்லாக் காரியங்களுக்கும் எல்லா நாட்களிலும் பயன்படும். தேய்பிறை நாளிலும் தன் காரியத்திற்கு இந்தப் பட்சியே அவன் பட்சியாகும் தேய்பிறையில் மாறாது.

இதுவே தேய்பிறை பரணியில் ஒருவன் பிறந்தால் அவன் பட்சி மயிலாகும். வளர்பிறை நாட்களிலும் இவன் பயன்படுத்துவது மயிலே ஆகும். வளர்பிறையில் பட்சி மாறாது.

அதாவது எந்த பட்சத்தில் பிறந்தானோ அந்தப் பட்சத்தின் நட்சத்திரப்பட்சி தான் இரு பட்சங்களிலும் அவன் நிரந்தரப் பட்சியாகும்.

இனி இதைப் பயன்படுத்தும் விதம்.

ஒருவன் வளர்பிறை பரணி என்றதால் வல்லூறு பட்சியுடையவன். தேய்பிறையில் ஒருநாள் வியாழக்கிழமை தன்காரியம் கருதி மேலதிகாரியிடம் பேச எண்ணினான் என்று வைத்துக் கொள்வோம். அன்று பகலில் தேய்பிறை வியாழக் கிழமைக்குத் தரப்பட்ட 30வது தொழில் முறைச் சக்கரத்தில் பார்க்க. இவன் பட்சி வல்லூறு முதல் சாமம். அதாவது, காலை 6 மணிமுதல் 8-24 வரை அரசில் உள்ளது. இது எல்லாத் தொழில்களிலும் வலுவானது. அதே சமயம் வேறு யாருக்கும் அரசு இராது. ஆகையால் இந்தக் கால கட்டத்தை இவன் பயன்படுத்தித் தன் மேல் அதிகாரியைக் காணலாம். அடுத்த வலுவான ஊண் தொழிலை இவன் பட்சி 3ம் ஜாமத்தில் நடக்கிறது. (10.48 மணி முதல் 1.12 வரை) முதல் ஜாமத்தில் முடியாவிட்டால் இதைப்பயன்படுத்திக் கொள்ளலாம். எதிராளி பட்சி நட்சத்திரப்படியோ, பெயர் படியோ ஊணைவிடக் குறைந்த வலுவுள்ள தொழில் செய்யும்படி அதாவது மயில், வல்லூறு தவிர மற்ற பட்சிக்காரர்களாக இருந்தால்தான் இவன் காரியம் 3ம ஜாமத்தில் வெற்றிபெறும். திர்பந்தத்தால் இரு பட்சியும் ஒன்றாக அமைந்து விட்டால் நடந்து கொள்ள வேண்டிய முறைகளைப் பின்னால் விளக்கப்படும்.

மற்ற எல்லா வகைகளிலும் இப்படியே பயன்படுத்திக் கொள்ளவேண்டும். முகவுரையில் சொல்லியது போல் பிறருக்குத் தீங்கு நேராத நல்லவற்றிற்கே பயன் படுத்தவேண்டும் என்பதை மறக்கக்கூடாது.

மேற்சொன்ன அரசு, ஊண் நேரங்களிலும் அரசில் அரசு அந்தரமும், ஊணில் அரசு அந்தரமும் மிகவும் பயன் தரும் என்பதையும் கண்டு பயன்படுத்திக் கொள்ளலாம்.

## பகுதி - ஐந்து

### மண்டலபுருடன்

## 'சூடாமணி உள்ள முடையான்' என்ற நூலில் சொல்லப்பட்ட சந்திரன் பக்கம் 5 க்கும் 5 பட்சிகள் தொழில் வகை வருமாறு

இதுவரை வளர்பிறை, தேய்பிறைகளுக்கு எல்லாத் திதிகளுக்கும் எல்லா வாரக் கிழமைகளுக்கும் பட்சிகள் நடத்தும் தொழில் பொதுவான மரபின்படி (General Traditional aspect) நூல்களில் சொன்னபடி சொல்லப்பட்டுள்ளன.

இவற்றில் சிறப்பான பலன்முறைகளை (Special aspect) இன்னும் துல்லியமாக அறிதற்பொருட்டு ஒரு பட்சத்தின் திதிகளை ஐந்து விதமாகப் பிரித்து அவற்றிற்குத் தனித்தனி பெயரமைத்து அவற்றின் தன்மைக்கேற்ப வகைப்படுத்தும் செய்து பலன் அறியும் முறையை மண்டல புருடன் "சூடாமணி உள்ள முடையான்" என்ற நூலிலும் மற்றும் மண்டலபுருடன். 'சூடாமணி நிகண்டு'' என்ற நூலில் பல்பெயர் கூட்டத் தொகுதி பெயர்த் தொகுதி என்ற நூலிலும் கொடுக்கப்பட்டுள்ளது. பஞ்சபட்சி நூலின் முழுமை கருதி இங்கு எடுத்து எழுதப்படுகிறது. இதற்கு இதுவரை யாரும் விளக்கம் காணவில்லை என்பதும் குறிப்பிடத் தகுந்ததாகும்.

## 23. சந்திரன் பக்கம் 5க்கும் வாரம் 7க்கும் அட்சரப் புணர்ச்சி

### அறுசீர் ஆசிரியச் சந்த விருத்தம்

எளங்கொள் நந்தைகதிர் செவ்வாய்
அகார மோங்கும் பத்திரைமால்
தளங்கொள் மதியம் தானிகரம்
சயையும் பொன்னும் உகரமதாம்
விளங்கும் இருத்தைப் புகர்எகரம்
வெய்யசனி பூரணை ஒகரமதாம்
துளங்கு மிடையாய் பகர்கடிகை
அவ்வா றிவையூண் சொல்முறையே

(இ-ள்) ஒரு பட்சத்தின்:-

(1) பிரதமை, சஷ்டி, ஏகாதசி இம்மூன்றும் நந்தை எனப்படும். இவை ஞாயிறு, செவ்வாய்க்கிழமைகளில் கூடிவரும் போது எழுத்து 'அ' கரமாம், அதாவது வல்லூறு ஆகும். இதுவே இக்கிழமைகளில் முதலில் உண்ணும். இரவு தொழில் முறை வழக்கம் போலவே கொள்க. இது பூருவ பக்கத்துக்காகும்.

(2) துதியை, சப்தமி, துவாதசி இம்மூன்றும் பத்திரை எனப்படும் இவை திங்கள், புதன் கிழமைகளில் கூடிவரும் போது எழுத்து 'உ' கரமாகும். அதாவது ஆந்தையாகும்.

(3) திரிதியை, அட்டமி, திரியோதசி இம்மூன்றும் 'ஜயை' எனப்படும். இவை வியாழக்கிழமையில் கூடி வரும்போது எழுத்து 'உ' கரமாகும். அதாவது பட்சி காகமாகும்.

(4) சதுர்த்தி, நவமி, சதுர்த்தசி இம்மூன்றும் இருத்தை எனப்படும் இவை வெள்ளிக்கிழமையில் கூடிவரும்போது எழுத்து 'எ' கரமாகும். இதற்குப் பட்சி கோழியாகும்.

(5) பஞ்சமி, தசமி, பௌர்ணமி (அல்லது) (அமாவாசை) பூரணை எனப்படும். இதற்கு வளர்பிறையில் எழுத்து 'ஒ' கரமாகும். அதாவது பட்சி மயிலாகும்.

அதாவது மேற்சொன்ன திதிகளில் சொல்லப்பட்ட கிழமைகள் சேரும்போது அந்தந்தக் கிழமைகளில் சொல்லப்பட்ட பட்சிகள் முதலில் முதல் ஜாமத்தில் ஊண் தொழிலை நடத்தும் என்று கொள்ளவேண்டும். மற்ற பட்சிகளுக்கும் இரவுக்கும் முன்னர் பொதுப்படையாகச் சொன்ன வரிசை முறையிலேயே தொழில் நடத்தும் என்று கொள்க.

## ௨௪. அட்சரம் ஐந்திற்கும் பட்சிப் புணர்ச்சி

### அறுசீர் ஆசிரியச் சந்த விருத்தம்

சொன்ன அகரம் வல்லூறூண்
துய்ய இகரம் ஆந்தை ஊண்
முன்னை உகாரம் வலியனூண்
மொழியில் ஏகாரம் கோழியின் ஊண்
பண்ணும் ஒகாரம் மயிலூணாம்
பண்டை அடைவே பறவைகளொன்று
உண்ணு மிரண்டு நடைமுடிமூன்
றுறக்கம் நாலு சாவைந்தே

(இ-ள்) இதன் விளக்கம் முற்பாடலிலிலேயே கொடுக்கப்பட்டுள்ளது. 'அகரம்' வல்லூறு. அதற்குச் சொல்லப்பட்ட கிழமையில் முதலில் உண்ணும். 'இ' கரம் ஆந்தை இதுவும் அதற்குச் சொல்லப்பட்ட கிழமையில் முதலில் உண்ணும். 'உ' கரம் காகம், 'எ'கரம் கோழி 'ஒ'கரம் மயில் இவை தொழில்களை ஊண், நடை, அரசு, உறக்கம் சாவு என்ற முறையில் நடத்தும். இது வளர்பிறைக்காகும்.

இவைகளுக்கு அட்டவணை விளக்கம் வருமாறு.

## 46. (பூர்வ பட்சத்திற்கு)

| திதி | வாரம் | ஊண் | நடை | அரசு | துயில் | சாவு |
|---|---|---|---|---|---|---|
| பிரதமை சஷ்டி ஏகாதசி | நந்தை ஞாயிறு செவ்வாய் | அ | இ | உ | எ | ஒ |
| துதியை சப்தமி துவாதசி | பத்திரை திங்கள் புதன் | இ | உ | எ | ஒ | அ |
| திருதியை அட்டமி திரியோதசி | சயை வியாழன் | உ | எ | ஒ | அ | இ |
| சதுர்த்தி நவமி சதுர்த்தசி | இருத்தை வெள்ளி | எ | ஒ | அ | இ | உ |
| பஞ்சமி தசமி பௌர்ணமி | பூரணை சனி | ஒ | அ | இ | உ | எ |

47. சாமம் 5க்கும் அட்சரம் 5க்கும் பட்சிப் புணர்ச்சி அட்டவணை

| சாமம் | ஞாயிறு செவ்வாய் நந்தை | திங்கள் புதன் பத்திரை | வியாழன் ஜயை | வெள்ளி இருத்தை | சனி பூரணை |
|---|---|---|---|---|---|
| 1 | அ. வல்லூறு உண்டி | ஆந்தை ண்டி | உ. காகம் உண்டி | எ. கோழி உண்டி | ஒ. மயில் உண்டி |
| 2 | நடை | நடை | நடை | நடை | டை |
| 3 | அரசு | அரசு | அரசு | அரசு | அரசு |
| 4 | துயில் | துயில் | துயில் | துயில் | துயில் |
| 5 | சாவு | சாவு | சாவு | சாவு | சாவு |

இவை இரவுக்குப் பொது வகையில் முன்னர் சொன்னபடியே கொள்க. இனி அமரபட்சத்திற்கு அட்டவணைகள் வருமாறு

# 48. அமரபட்சம்
## (சூடாமணி உள்ள முடையான் 30ஆம் பாடல்)

| திதி | வாரம் | ஊண் | சாவு | தூக்கம் | அரசு | நடை |
|---|---|---|---|---|---|---|
| பிரதமை<br>சஷ்டி<br>ஏகாதசி<br>மயில் | நந்தை<br>ஞாயிறு<br>செவ்வாய் | அ<br>கோழி | உ<br>ஆந்தை | எ<br>மயில் | ஒ<br>காகம் | இ<br>வல்லூறு |
| துதியை<br>சப்தமி<br>துவாதசி<br>கோழி | பத்திரை<br>திங்கள்<br>சனி | எ<br>மயில் | ஒ<br>காகம் | இ<br>வல்லூறு | அ<br>கோழி | உ<br>ஆந்தை |
| திரிதியை<br>அட்டமி<br>திரியோதசி<br>காகம் | ஜயை<br>வியாழன் | உ<br>ஆந்தை | எ<br>மயில் | ஒ<br>காகம் | இ<br>வல்லூறு | அ<br>கோழி |
| சதுர்த்தி<br>நவமி<br>சதுர்த்தி<br>ஆந்தை | இருத்தை<br>வெள்ளி | இ<br>வல்லூறு | அ<br>கோழி | உ<br>ஆந்தை | எ<br>மயில் | ஒ<br>காகம் |
| பஞ்சமி<br>தசமி<br>அமாவாசை<br>வல்லூறு | பூரணை<br>புதன் | ஒ<br>காகம் | இ<br>வல்லூறு | அ<br>கோழி | உ<br>ஆந்தை | எ<br>மயில் |

## 49. ஜாமம் 5க்கும் பட்சி தொழில் முறைச்சக்கரம்

| சாமம் | ஞாயிறு செவ்வாய் | திங்கள் சனி | வியாழன் | வெள்ளி | புதன் |
|---|---|---|---|---|---|
| 1 | அ கோழி ஊண் | உ ஆந்தை ஊண் | எ மயில் ஊண் | ஒ காகம் ஊண் | இ வல்லூறு ஊண் |
| 2 | சாவு | சாவு | சாவு | சாவு | சாவு |
| 3 | தூக்கம் | தூக்கம் | தூக்கம் | தூக்கம் | தூக்கம் |
| 4 | அரசு | அரசு | அரசு | அரசு | அரசு |
| 5 | நடை | நடை | நடை | நடை | நடை |

குறிப்பு:- அமர பட்சத்திற்கு இவ்விளக்கம் உரை நூல்களிலோ அச்சிட்ட நூல்களிலோ இல்லை. எம் ஆய்வு நலத்தால் இங்கு நுணுகி எழுதப்பட்டன.

மேலே சொன்னவை பகலுக்கு, இரவுக்கு வழக்கம்போல் பொதுமுறையில் கூறியபடி அறிந்து கொள்ளவும்.

### உடலில் பஞ்சாக்கரப் பஞ்ச பட்சித்தானங்கள்

ஐம்புள்ளும் ஐம்புள்ளுக்குரிய பூதஇயல் நுண் அதிர்வுகளும் அதற்கு ஆணி வேரான பஞ்சாக்கர எழுத்துக்களின் நுண் ஒலி அதிர்வுகளும் நம் உடலில் சந்திரனின் வளர்பிறை தேய்பிறைக் காலங்களுக்கு ஏற்பத் தனித்தனி குறிப்பிட்ட இடங்களில் இயங்குகின்றன. இதைச் சுட்டிக்காட்டி ஆன்றோர்களான சித்தர்கள் கூறிய வழியில் இந்த உடல் சக்கரம் அமைக்கப்பட்டுள்ளது. எதிர்ப் பக்கம் உள்ளது வளர்பிறை (பூர்வபட்சம்)க்கு உரியது. தேய்பிறைக்கு அமரபக்கப் படல முகப்பில் தனியாக உடற் சக்கரம் தரப்பட்டுள்ளது.

இவை நம் உள்முக தியானத்தில் ஆழ்நிலை வழிபாட்டின் மூலம் நம் தவ நிலை வன்மையை வளர்த்துக் கொள்ளவும் நோய்நீக்கம், தன்னைத்தான் உணரல் (ஆத்ம சாட்சாத்காரம்). மேல்நிலை உள்ளுணர்வு (E S P.) என்னும் (Extradinary Sensary Perception), மெய்யுணர்வு நிலை (சமாதிநிலை) இவற்றை எய்தவும் சாதனையில் பயன் படுபவையாகும். (இவை பொதுப்படலம் பாடல் 68, 69 ஆம் பாடல்களாகச் சுவடி எண் 868 பஞ்சபட்சி பலத்திரட்டு சுவடி 'அ' என்றவற்றின் உட்பொருள் அடிப்படையிலும் எம சித்தர்மரபு அறிமுகச் செயல் திறனாலும் இங்கு உடல் சக்கரமாக அமைத்துக் காட்டப்பட்டுள்ளன)

வழிபாட்டு உள்ளுணர்வு நெறிகளைத் தக்க — அறிந்த ஆன்றோர்பால் கேட்டுணர்க

# உடலில் பஞ்சாக்கரப் புஞ்சபுட்சித்தானங்கள்
## வளர்பிறை



# 2. பூருவபட்சப் படலம்

## பகுதி—ஒன்று

## பட்சிகள் பகல் இரவு

### 5. சாமங்கட்கும் 7 வாரங்கட்கும்

### தொழில் நடத்தும் விதம் கூறுகிறது

பூருவபட்சத்திற் பக்ஷிகளின் எழுத்துக்கள் நட்சத்திரப் பட்சிகள் இவை செய்யும் தொழில் வகை முன் படலத்தில் குறிப்பாகவும் அட்டவணைகள் மூலமாகவும் முதப்பட்டன. இங்கே பட்சிகளின் வாரம் 7க்கும் பகல் இரவுகளுக்கும் தொழில் முறை விரிவாகக் கூறப்படுகிறது.

### 25 பூருவபக்கம் பகல் 7க்கும் பட்சிகளின் செய்தொழில்

பதின்சீரின் மிக்க கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

இந்து அழற் பகலில் இயல்பான பஞ்சபட்சி
சேயிர விக்கு வல்லூறாந்தை காகம் கோழி மயில்
புந்திமதி இரண்டிற்கு ஆந்தை காகம்
கோழிமயில் வல்லூறாகும்
பொன்னனுக்குக் காகம் கோழி மயில் வல்லூறாந்தை
அந்தமுள்ள புகர்தனக்குக் கோழிமயில் வல்லூறாந்தை காகம்
அரிசனிக்கு மயில் வல்லூ றாந்தை காகம் கோழி என்றறிந்து
தந்தவகை உண்டுநடந் துலகாண் டுறங்கி இறந்திட
சாமம் தோறும்
ஒன்றோடொன்று நேர்வலமே வையே.

குறிப்பு: ஒரே பாட்டில் வாரம் 7க்கும் பகலில் பக்ஷித் தொழில் சொல்லும் முயற்சியில் சில இடங்களில் அசை மிகுந்தும் குறைந்தும் இயற்றப்பட்டுள்ளது. கடைசி அடியின் குறைப்பகுதியில் பக்ஷிகளுக்குரிய அட்ட கன்ம முறை குறிப்பாகச் சொல்லுவதால் தேவை இல்லை என்று கருதி விடப்பட்டு சுவடியில் மற்றவை இருந்தவாறே தரப்பட்டுள்ளது. சுவடியில் முதலடிக்கும்மட்டும் உரை தரப்பட்டுள்ளது.

(இ-ள்) இந்து வாகிய அழல் அதாவது ஒளியுள்ள சுக்ல பக்ஷ பகலில் தொழில் முறைபஞ்ச பட்சிகளுக்கு இயல்பாகப் பின்வருமாறு அமையும்.

#### ஒன்று

1. செவ்வாய், ஞாயிறு பகல் 1ம் சாமத்தில் வல்லூறு உண்டு, ஆந்தை நடந்து, காகம் அரசு செய்து, கோழி உறங்கி, மயில் இறந்திடு மெனக·

2. 2-ம் ஜாமத்தில் மயில் உண்டு, வல்லூறு நடந்து, ஆந்தை உலகாண்டு காகம் உறங்கி கோழி இறந்திடும் என்க.

3. 3-ம் ஜாமத்தில் வாரபட்சிகளாகிய கோழி உண்டு, மயில் நடந்து, வல்லூறு உலகாண்டு, ஆந்தை உறங்கி, காகம் இறந்திடும் என்க.

4. 4-ம் ஜாமத்தில் வாரப்பட்சிகளாகிய காகம் உண்டு, கோழி நடந்து. மயில் உலகாண்டு, வல்லூறு உறங்கி, ஆந்தை இறந்திடும் என்க.

5. 5-ம் ஜாமத்தில் வாரப்பட்சிகளாசிய ஆந்தை. உண்டு காகம் நடந்து, கோழி உலகாண்டு, மயில் உறங்கி, வல்லூறு இறந்திடும் என்க.

## இரண்டு

இந்த வகையே நேர் வலமாக மற்ற வாரங்களுக்கும் கொள்ளும் படி பாடலில் உரைத்துள்ளமை காண்க அது வருமாறு:

பூருவப் பட்சம் புதன், திங்கள் இரண்டு பகல் கிழமைகளுக்கும் தொழில் முறை வருமாறு.

1. 1-ம் ஜாமத்தில் ஆந்தை உண்டு, காகம் நடந்து, கோழி உலகாண்டு, மயில் உறங்கி, வல்லூறு இறந்திடுமென்க.

2. 2-ம் ஜாமத்தில் வல்லூறு உண்டு, ஆந்தை நடந்து, காகம் அரசாண்டு, கோழி துயின்று, மயில் இறந்திடுமெண்க.

3. 3-ம் ஜாமத்தில் மயில் உண்டு, வல்லூறு நடந்து, ஆந்தை அரசாண்டு ஆந்தை துயின்று, கோழி இறந்திடுமென்க.

4. 4-ம் ஜாமத்தில் கோழி உண்டு, மயில் நடந்து வல்லூறு அரசாண்டு, ஆந்தை துயின்று காகம் இறந்திடுமென்க,

5, 5-ம் ஜாமத்தில் காகம் உண்டு, கோழி நடந்து, மயில் அரசாண்டு, வல்லூறு துயின்று, ஆந்தை இறந்திடுமென்க.

## மூன்று

பூருவ பட்சம் பொன்னனுக்கு என்று சொல்லப்பட்ட வியாழக்கிழமை பகலில் பட்சிகளின் தொழில் வருமாறு:

1, 1-ம் ஜாமத்தில் காகம் உண்டு, கோழி நடந்து, மயில் அரசாண்டு வல்லூறு துயின்று ஆந்தை இறந்திடுமென்க,

2. 2-ம் ஜாமத்தில் ஆந்தை உண்டு, காகம் நடந்து, கோழி உலகாண்டு, மயில் துயின்று, வல்லூறு இறந்திடுமென்க.

3. 3-ம் ஜாமத்தில் வல்லூறு உண்டு, ஆந்தை நடந்து, காகம் அரசாண்டு கோழி துயின்று மயில் இறந்திடுமென்க.

4. 4-ம் ஜாமத்தில் மயில் உண்டு, வல்லூறு நடந்து, ஆந்தை அரசாண்டு, காகம் துயின்று, கோழி இறந்திடுமென்க.

5. 5-ம் ஜாமத்தில் கோழி உண்டு, மயில் நடந்து, வல்லூறு அரசாண்டு ஆந்தை துயின்று காகம் இறந்திடுமென்க.

### நான்கு

(பூருவபட்சம் பகல் வெள்ளிக்கிழமை அன்று அந்தமுள்ள புகர்தனக்கு-பாடலில் வெள்ளி குறிப்பிடப்பட்டுள்ளது)

1. 1ம் ஜாமத்தில் கோழி உண்டு, மயில் நடந்து, வல்லூறு அரசாண்டு, ஆந்தை துயின்று, காகம் இறந்திடுமென்க

2. 2-ம் ஜாமத்தில் காகம் உண்டு, கோழி நடந்து, மயில் அரசாண்டு, வல்லூறு துயின்று, ஆந்தை இறந்திடுமென்க.

3. 3-ம் ஜாமத்தில் ஆந்தை உண்டு, காகம் நடந்து கோழி உலகாண்டு, மயில் துயின்று, வல்லூறு இறந்திடுமென்க.

4. 4-ம் ஜாமத்தில் வல்லூறு உண்டு, ஆந்தை நடந்து, காகம் அரசாண்டு, கோழி துயின்று, மயில் இறந்திடுமென்க.

5. 5-ம் ஜாமத்தில் மயில் உண்டு, வல்லூறு நடந்து, ஆந்தை அரசாண்டு, காகம் துயின்று, கோழி இறந்திடுமென்க.

### ஐந்து

அரிசனிக்கு என்று பாடலில் குறிப்பிட்ட சனிக்கிழமைக்குப் பூர்வபட்சம் பகலில் தொழில் முறை வருமாறு:

1. 1-ம் ஜாமத்தில் மயில் உண்டு, வல்லூறு நடந்து, ஆந்தை அரசாண்டு, காகம் துயின்று, கோழி இறந்திடுமென்க.

2. 2-ம் ஜாமத்தில் கோழி உண்டு, மயில் நடந்து, மயில் அரசாண்டு, ஆந்தை துயின்று, காகம் இறந்திடுமென்க.

3. 3-ம் ஜாமத்தில் காகம் உண்டு, கோழி நடந்து, மயில் அரசாண்டு, வல்லூறு துயின்று, ஆந்தை இறந்திடுமென்க.

4. 4-ம் ஜாமத்தில் ஆந்தை உண்டு, காகம் நடந்து, கோழி அரசாண்டு, மயில் துயின்று வல்லூறு இறந்திடுமென்க.

5. 5-ம் ஜாமத்தில் வல்லூறு உண்டு, ஆந்தை வழிநடந்து, காகம் அரசாண்டு கோழி துயின்று, மயில் இறந்திடுமென்க.

குறிப்பு: ஒரு கிழமையில் முதல் ஜாமத்தில் உண்ணும் பட்சி கடைசி ஜாமத்தில் இறப்பது வரன்முறை காண்க. அதேபோல் 5ம் ஜாமம் இறக்கும் பட்சி முதல் ஜாமத்தில் உண்டு தொழிலைத் தொடங்குகிறது. முதல் ஜாமத்தில் இறக்கும் பட்சி அடுத்த ஜாமத்தில் உண்ணைத் தொடங்குகிறது. இதையே பாடலில் "உண்டு நடந்து உலகாண்டுறங்கி இறந்திட சாமம் தோறும் ஒன்றோடொன்று நேர்வலமே வையே" என்று கூறினார்.

## 26. பூர்வ பட்சம் இரவு வாரம் 7க்கும் தொழில் முறை

### பதின்சீர் மேலாகிவந்த கழிநெடிலடி விருத்தம்

இந்துநல் இரவில் இன்பமுள்ள பஞ்சபட்சிகள்
    சேய் இரவிக்குக் காகம் மயில் ஆந்தை
கோழி வல்லூறு
    புந்திமதி இரண்டிற்குக் கோழி வல்லூறு
காகம் மயிலாந்தை
    பொன்னவனுக்கு மயில் ஆந்தை கோழி
வல்லூறே காகம்
    அந்தமுள்ள புகர்தனக்கு வல்லூறு காகம்
மயிலாந்தை கோழி
    அரிசனிக்கு ஆந்தை கோழி வல்லூறு
    காகம் மயில் தானறிந்தே
இந்தவகை உண்டு நடந்து உலகாண்டு
   உறங்கி இறந்திடச் சாமம் தோறும்
ஒன்றொடொன்று நேர் இடமே வையே

இப்பாடலும் கடை அடி கடைசீர்கள் மந்திர வழக்கு பேசுவதால் விடப் பட்டுள்ளன. இப்பாடலில் பெருவழக்கில் உள்ள அகத்தியர் பஞ்சபட்சி தொழில் முறைக்குச் சிறு மாறுபாடு இருப்பதால் அதற்கேற்பத்திருத்தி அமைக்கப்பட்டது என்க.

### பூர்வ பட்சம் இரவு வாரம் 7க்கும் தொழில்

#### ஒன்று

ஞாயிறு, செவ்வாய்க்கிழமை இரவுகளில்

1. 1ம் ஜாமத்தில் காகம் உண்டு, மயில் நடந்து, ஆந்தை அரசாண்டு, கோழி துயின்று, வல்லூறு இறந்திடுமென்க.

2. 2ம் ஜாமத்தில் கோழி உண்டு, வல்லூறு நடந்து, காகம் அரசாண்டு மயில் துயின்று, ஆந்தை இறந்திடுமென்க.

3. 3ம் ஜாமத்தில் மயில் உண்டு, ஆந்தை நடந்து, கோழி அரசாண்டு வல்லூறு துயின்று, காகம் இறந்திடுமென்க.

4. 4ம் ஜாமத்தில் வல்லூறு உண்டு, காகம் நடந்து, மயில் அரசாண்டு, ஆந்தைதுயின்று, கோழி இறந்திடுமென்க.

5. 5ம் ஜாமத்தில் ஆந்தை உண்டு, கோழி நடந்து, வல்லூறு அரசாண்டு, ஆந்தை துயின்று, மயில் இறந்திடுமென்க.

## இரண்டு

புந்திமதி இரண்டிற்கு என்ற புதன், திங்கள் கிழமைகளுக்குப் பட்சிகளின் தொழில்

1. 1ம் ஜாமத்தில் கோழி உண்டு, வல்லூறு நடந்து, காகம் அரசாண்டு, மயில் துயின்று, ஆந்தை இறந்திடுமென்க.

2. 2ம் ஜாமத்தில் மயில் உண்டு, ஆந்தை நடந்து, கோழி அரசாண்டு, வல்லூறு, துயின்று, காகம் இறந்திடுமென்க.

3. 3ம் ஜாமத்தில் வல்லூறு உண்டு, காகம் நடந்து, மயில் அரசாண்டு, ஆந்தை துயின்று, கோழி இறந்திடுமென்க.

4. 4ம் ஜாமத்தில் ஆந்தை உண்டு, கோழி நடந்து, வல்லூறு அரசாண்டு, காகம் துயின்று, மயில் இறந்திடுமென்க.

5. 5ம் ஜாமத்தில் காகம் உண்டு, மயில் நடந்து, ஆந்தை அரசரண்டு, கோழி துயின்று, வல்லூறு இறந்திடுமென்க.

## மூன்று

பொன்னனுக்கு என்ற வியாழக்கிழமை இரவு தொழில் முறை

1. 1ம் ஜாமத்தில் மயில் உண்ண, ஆந்தை நடக்க, கோழி அரசாள, வல்லூறு உறங்க, காகம் இறந்திடுமென்க.

2. 2ம் ஜாமத்தில் வல்லூறு உண்ண, காகம் நடக்க, மயில் அரசாள, ஆந்தை துயில, கோழி இறந்திடுமென்க.

3. 3ம் ஜாமத்தில் ஆந்தை உண்ண, கோழி நடக்க, வல்லூறு அரசாள, காகம் துயில, மயில் இறந்திடுமென்க.

4. 4ம் ஜாமத்தில் -காகம் உண்ண, மயில் நடக்க, ஆந்தை அரசாள, கோழி துயில, வல்லூறு இறந்திடுமென்க.

5. 5ம் ஜாமத்தில் கோழி உண்ண, வல்லூறு நடக்க, காகம் அரசாள, மயில் துயில, ஆந்தை இறந்திடுமென்க.

## நான்கு

'அந்தமுள்ள புகர்தனக்கு' என்ற பூர்வபட்ச வெள்ளிக்கிழமை இரவுத்தொழில்

1. 1ம் ஜாமத்தில் வல்லூறு உண்ண, காகம் நடக்க, மயில் அரசாள, ஆந்தை துயில, கோழி இறந்திடுமென்க.

2. 2ம் ஜாமத்தில் ஆந்தை உண்ண, கோழி நடக்க, வல்லூறு அரசாள, காகம் துயில மயில் இறந்திடுமென்க.

3. 3ம் ஜாமத்தில் காகம் உண்ண, மயில் நடக்க, ஆந்தை அரசாள, கோழி துயில, வல்லூறு இறந்திடுமென்க.

4. 4ம் ஜாமத்தில் கோழி உண்ண, வல்லூறு நடக்க, காகம் அரசாள, மயில் துயில, ஆந்தை இறந்திடுமென்க.

5. 5ம் ஜாமத்தில் மயில் உண்ண, ஆந்தை நடக்க, கோழி அரசாள, வல்லூறு துயில, காகம் இறந்திடுமென்க.

## ஐந்து

அசுவினிக்கு என்ற பூர்வபட்ச சனிக்கிழமை இரவு பட்சிகளின் தொழில் வருமாறு

1 1ம் ஜாமத்தில் ஆந்தை உண்ண, கோழி நடக்க, வல்லூறு அரசாள, காகம் துயில, மயில் இறந்திடுமென்க.

2. 2ம் ஜாமத்தில் காகம் உண்ண, மயில் நடக்க, ஆந்தை அரசாள, கோழி துயில, வல்லூறு இறந்திடுமென்க.

3. 3ம் ஜாமத்தில் கோழி உண்ண, வல்லூறு நடக்க, காகம் அரசாள, மயில் துயில, ஆந்தை இறந்திடுமென்க.

4. 4ம் ஜாமத்தில் மயில் உண்ண, ஆந்தை நடக்க, கோழி அரசாள, வல்லூறு துயில, காகம் இறந்திடுமென்க.

5. 5ம் ஜாமத்தில் வல்லூறு உண்ண, காகம் நடக்க, மயில் அரசாள, ஆந்தை துயில, கோழி இறந்திடுமென்க.

குறிப்பு: ஒரு ஜாமத்தில் உறங்கும் பட்சி அடுத்த ஜாமத்தில் உண்ணுகிறது. முதல் ஜாமத்தில் உண்ண ஆரம்பித்த பட்சி கடைசி ஜாமத்தில் உறங்குகிறது. இந்த வரன்முறையில் பூர்வ பட்ச இரவுகளில் தொழில் அமைகிறது.

## பகுதி-௨

## 1. நட்சத்திரப்பட்சி வளர்பிறைக்கு நட்சத்திரப்பட்சி

முதற் படலத்தில் இரு பட்சத்திற்கும் ஒரே பாடலில் நட்சத்திரப்பட்சி தரப் பட்டுள்ளது. தெளிவு கருதி இரு பட்சங்களுக்கும் சுவடியில் உள்ள தனித்தனிப் பாடல்கள உரிய இடத்தில் இப்பொழுது இடம் பெறுகின்றன. முதலில் பூருவ பக்கத்திற்கு வருமாறு:

(தற்போது சில அச்சிட்ட நூல்களிலும் பஞ்சாங்கங்களிலும் இரு பட்சங்களுக்கும் ஒரே நட்சத்திரக் கணக்கு பட்சிகளுக்குத் தரப்பட்டுள்ளது இது தவறு. இரண்டு பட்சங் களிலும் ஒருவர் ஜென்ம நட்சத்திரப்படி பட்சிகள் வேறுபடும் என்பதைத் தெளிவாய் அறிந்து கொள்ள வேண்டும்.

### ௨7. பூர்வபட்ச நட்சத்திரப்பட்சி
### எண்சீர் ஆசிரிய விருத்தம்

ஆதிநாள் முதலைந்தும் வல்லூறாகும்
ஆதிரைதொட் டாறுநாள் ஆந்தையாகும்
கோதில்லா உத்திரமுத லைந்து நாளும்
கொடுங்காகம் அனுடமுதல் ஆறு நாளும்
தீதில்லாக் கோழியதாம் அவிட்டம் தொட்டு
திறமான நாளைந்தும் மயில தாகும்
சோதிவளர் வளர்பிறையாம் பக்கந்திற்கு
சொன்னதிந்த நட்சத்திரப் பட்சி தானே.

(இ-ள்) ஆதி நட்சத்திரமான அசுவினி முதல் எண்ணும்போது

| | | |
|---|---|---|
| 1. அசுவினி, பரணி, கார்த்திகை ரோஹிணி, மிருக சீர்ஷம் இவை ஐந்தும் | } | வல்லூறு |
| 2. திருவாதிரை, புனர்பூசம், பூசம் ஆயில்யம், மகம், பூரம் ஆகிய இவை ஐந்தும் | } | ஆந்தை |
| 3. உத்திரம், ஹஸ்தம், சித்திரை சுவாதி, விசாகம் ஆகிய இவை ஐந்தும் | } | காகம் |
| 4. அனுஷம், கேட்டை, மூலம் சுவாதி, விசாகம் ஆகிய ஐந்து நட்சத்திரங்களும் | } | கோழி |
| 5. அவிட்டம், சதயம் பூரட்டாதி உத்திரட்டாதி, ரேவதி ஆகிய இவை ஐந்தும் | } | மயில் |

## சூக்கும அந்தரம்

## பூர்வபட்சத்திற்குப் பட்சிகளின் ஒவ்வொரு தொழிலுக்கும் சூக்கும அந்தர நாழிகை அறியும்படி

ஊண், அரசு, நடை, துயில், சாவு ஆகிய பட்சிகள் தொழில்கள் ஒவ்வொன்றிற்கும் 5 சூக்குமத் தொழில்கள் உண்டு. அதாவது

ஊண் இதில் ஊணில் ஊண், ஊணில் நடை, ஊணில் அரசு, ஊணில் துயில், ஊணில் சாவு இவை சூக்குமத் தொழில்கள் குறிப்பிட்ட சிறு பொழுதளவு நடக்கும். இதேபோல் நடை, அரசு, துயில், சாவு ஆகிய தொழில்களிலும் நடையில் நடை, நடையில் அரசு, நடையில் துயில், நடையில் சாவு, நடையில் ஊண். என இப்படியே ஐந்தைந்து குறிப்பிட்ட சிறுபொழுதளவு நடக்கும்.

இவ்வகையில் தாழ்ந்த தொழில்களாகிய நடை, துயில், சாவு இவற்றிலும் ஊணும் அரசும் மேலே சொன்னவற்றை அடுத்து படிப்படியாய்க் குறைந்த வலுவில் நல்லவை

இதேபோல் சாவில் சாவு மிகத்தீமை, சாவில் சாவு, துயில்; துயிலில் சாவு, துயில் நடையில் துயில், சாவு, ஊணில் துயில், சாவு, அரசில் துயில், சாவு, ஆகிய சூக்கும நேரங்கள் சொல்லப்பட்ட வரிசையில் தீமையானவை. முதலில் அதிகத் தீமையும் அதன் அளவு சொல்லப்பட்ட முறையில் தீமை குறைந்தும் வரும் தேய்பிறை சூக்கும களுக்கும் இப்படியே கொள்ள வேண்டும். இனி வளர்பிறை பகல் இரவுகளில் சூக்குமத் தொழில் நேரங்கள் சொல்லப்படுகின்றன.

## ௨8. வளர்பிறை பகல் சூக்கும நாழிகை

### வெண்பா

ஊண் பட்சி ஒன்றேகால் ஒன்றரை யாம்நடைக்குந்
தாண்டி அரசாளும் காணிரண்டில — மூண்டதுயில்
முக்காலாம் சாதல் அரைநா ழிகையாகும்
பாங்கான பட்சிப்பலன்

(இ-) சூக்குமச் சிறுபொழுது அளவைகள் வருமாறு:-

| | | | | |
|---|---|---|---|---|
| ஊண் | $1\frac{1}{4}$ | நாழிகை | 30 | நிமிடம் |
| நடை | $1\frac{1}{2}$ | நாழிகை | 36 | நிமிடம் |
| அரசு | 2 | நாழிகை | 48 | நிமிடம் |
| துயில் | $\frac{3}{4}$ | நாழிகை | 18 | நிமிடம் |
| சாவு | $\frac{1}{2}$ | நாழிகை | 12 | நிமிடம் |

ஆக மொத்தம் 6 நாழிகை 2 மணி 24 நிமிடம்

## ௨9. வளர்பிறை இரவுக்குச் சூக்கும நாழிகை

### வெண்பா

ஊணொன்றே காலாகும் ஒன்றே அரசாகும்
காண வலதது ஞ்சல் ஒன்றரையாம் — தண்பா
நடத்தலொன் றேகாலாம் நாளும் உறங்கி
கிடத்தலொன் றாகும் இரா

(இ-ள்) வளர்பிறை இரவுக்குச் சூக்குமச் சிறுபொழுது நாழிகை வருமாறு.

| | | | | |
|---|---|---|---|---|
| ஊண் | $1\frac{1}{4}$ | நாழிகை | 30 | நிமிடம் |
| அரசு | 1 | நாழிகை | 24 | நிமிடம் |
| சாவு | $1\frac{1}{2}$ | நாழிகை | 36 | நிமிடம் |
| நடை | $1\frac{1}{4}$ | நாழிகை | 30 | நிமிடம் |
| துயில் | 1 | நாழிகை | 24 | நிமிடம் |

ஆக மொத்தம் 6 நாழிகை 2 மணி 24 நிமிடம்

பகல் இரவுகளில் இந்த சூக்குமத் தொழில்கள் மேமே சொல்லப்பட்ட வரிசை யிலேயே ஒன்றுக்குப்பின் மற்றது நடக்கும். இதில் பகல் இரவு சூக்குமக்கால அளவுகள் மாறுபடுவது காண்க. இதேபோலதத்தான் தேய்பிறைக்கும் தேய்பிறை கால அளவுகள் வளர்பிறை அளவுகளை விடவேறு. அவற்றுள்ளும் சிறுபொழுதுகள் பகல் இரவு அளவுகள் இப்படியே வேறுபடும். அவை அமரபட்சப்படலத்துள் காண்க.

## ௩. திதிப்பட்சி

ஒவ்வொரு பட்சத்தில் உள்ள 15 திதிகளில் என்ன என்ன திதிகள் எந்தெந்தப் பட்சிகளுக்குரியவை என்பதைச் சொல்லுவது. முதலில் பூருவபட்சத்துப் பட்சித் திதிகள்.

### ௩0 திதிப்பட்சி பூருவபட்சம்
#### எண்சீர் ஆசிரிய விருத்தம்

பரவுபிர தமைசட்டி ஏகாதேசி வல்லூறுபார்
துதிகைசத் தமிதுவா தசியு மாந்தை
கரவில்திரி திகையட் டமிதிர யோதசியும்
காகஞ்சதுர்த் திநவமி சதுர்த்தசியும் கோழி
உரவுபஞ் சமிதசமி பூரணையும் மயிலாமொளி
திகழும்முற் பக்கத்தில் இதுபா ரில்நம்
குருவருளால் உண்டுநடத் தாண்டுறங்கி இறக்கும்
கோலமுற ஏழ்வார பட்சிகளும் கூறுவாமே

குறிப்பு: முதற்படலத்தில் சொல்லப்பட்ட நந்தை, பத்திரை, சயை இருத்தை பூரணை ஆகிய திதிகளின் கூட்டத்தையே இங்கே பட்சிகளுக்குத்தரப்பட்டது காண்க.

(இ-ள்) 1. பிரதமை சஷ்டி, ஏகாதசி இத்திதிகள் (இவை நந்தை எனப்படும்) இவற்றிற்குப் பட்சி - வல்லூறு.

2. துதிகை, சப்தமி, துவாதசி, இத்திதிகள் (இவை பத்திரை எனப்படும்) இவற்றிற்குப் பட்சி - ஆந்தை.

3. திரிதிகை, அட்டமி, திரயோதசி,-இத்திதிகள் (இவை ஜயை எனப்படும்) இவற்றிற்குப் பட்சி - காகம்

4. சதுர்த்தி, நவமி, சதுர்த்தசி - இத்திதிகள் (இவை இருத்தை எனப்படும்) இவற்றிற்குப் பட்சி - கோழி

5. பஞ்சமி, தசமி, பூரணை - இத்திதிகள் (இவை பூரணை எனப்படும்) இவற்றிற்குப் பட்சி மயில்.

## 4. இராசிப்பட்சி

### பூருவபக்கத்தில் இன்னின்ன ராசிகள் இன்னின்ன பட்சிகள் என்பது

### எண் சீர் ஆசிரிய விருத்தம்

31, பட்சிதன திராசிதனைப் பகரக் கேளாய்
மேடமொடு தேளரியும் வல்லூறாச்சு
இச்சைமி துனங்கடகம் கன்னி ஆந்தை
இணைமீனம் தனுசிரண்டும் காகமாகும்
கட்சியறி துலாமிடபம் கோழி யாகும்
கருதுகும் பம்மகரம் மயில்தா னாகும்
செச்சைவாய் மொழிமதுரத் தேனே மாதே
சிந்தைமகிழ்ந்த திதுபார்முப் பக்கம் தானே

(இ-ள்) முற்றாத கொஞ்சும் மழலை மொழியாகும் இனிய தேனைப் போலப் பேசும் இனியமாதே [இது மகடூஉ முன்னிலை] பட்சிகளின் பூருவபக்கத்துக்குரிய இராசிகளைக்கேள் !

1. மேஷம், சிங்கம், விருச்சிகம், இம்மூன்றும் வல்லூறு
2. மிதுனம், கடகம், கன்னி இம்முன்றும் ஆந்தை
3. தனுசு, மீனம் இவை இரண்டும் காகம்
4. இடபம், துலாம் இவை இரண்டும் கோழி
5. மகரம், கும்பம் இரண்டும் மயிலாகும் என்பதாம்.

## 5. உறவுப்பகைப்பட்சிகள்

### பூர்வபட்சத்தில் ஒவ்வொரு பட்சிக்கும் நட்பு பகைபட்சிகள் இன்னதெனல்

### முதல் நட்புப்பட்சி

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

32. மயில்தனக்கு நெருங்குறவு வல்லூ றப்பா
மருவுமணி கோழிக்கே உறவே தென்றால்
மயிலாகும் வல்லூறு தனக்கும் ஆந்தை
வலுமையாம் காக்கையுமே வலுமை யாகும்
குயிலான காக்கைக்கும் ஆந்தைக் கும்தான்
குணமான வல்லூறுங் கோழி தானும்
பயில்போலப் பகையாகும் முற்பக் கத்தில்
படுபட்சி கண்டறிந்து பட்சம் பாரே

(இ-ள்) பூர்வபட்சத்தில் பட்சிகளுக்கு உறவுப் பட்சிகள் வருமாறு:-

மயிலுக்கு நட்பு - வல்லூறு
கோழிக்கு நட்பு - மயில்
வல்லூறுக்கு நட்பு - ஆந்தை
காக்கைக்கு நட்பு - கோழி
ஆந்தைக்கு நட்பு - வல்லூறு என்றவாறு

பரவலாக உள்ள பட்சி நூற்கொள்கைப்படி உறவுப் பட்சிகள் காக்கைக்கும் ஆந்தைக்கும் சொன்ன முறை மாறி கோழி வல்லூறு எனக் கொள்ளப்பட்டன. தவிரவும் பெரும்பாலான நூல்களில் ஒவ்வொரு பட்சிக்கும் இரண்டு நட்புப்பட்சிகள் தரப்பட்டுள்ளன. விவரம் வருமாறு:-

வல்லூறுக்கு நட்பு - மயில், ஆந்தை
ஆந்தைக்கு நட்பு - வல்லூறு, காகம்
காகத்திற்கு நட்பு - கோழி, ஆந்தை
கோழிக்கு நட்பு - ஆந்தை, மயில்
மயிலுக்கு நட்பு - வல்லூறு, கோழி

இதன் பயன் : தான் பிறந்த வினாடி அல்லது நட்சத்திரப் பட்சிகளின் நட்புப் பட்சி உள்ளவர்களுடன் நட்பு, திருமணம், கூட்டு வியாபாரம்" முதலிய இணைப்புகள் வெற்றிகரமாகவும் நல்லபடியாகவும் இருக்கும்.

தன்பட்சிக்கு அரசு ஊண் நடக்கும்போது நட்புப்பட்சியாளரைக் காணினும் அவர்களுடன் விவகாரம் செய்தாலும் எல்லாம் நலமாகும்.

## 6. சத்துரு அல்லது பகைபட்சி

மேலே சொன்னதுபோல் இப்பொழுது சத்ரு அல்லது பகைபட்சிகள் சொல்லப்படுகின்றன.

### அறுசீராசிரியச் சந்த விருத்தம்

33. வாக்காம் மயிலும் வாரணமும்
வளரும் பகைவல் லூறாந்தை
காக்கை தனக்குப் பகைமுனிவன்
கடுவல் லூறே பகையாம்
தாக்கும் வலியன் ஒழியஇதிற்
தளரும் சொல்லா தனவயெல்லாம
மோக்கும் உறவா கிடுமென்ன
முன்னூல் இயம்பும் வளர்பிறைக்கே.

(இ-ள்) மயிலுக்கும், கோழிக்கும்-பகை வல்லூறு, ஆந்தை காக்கைக்கு ஆந்தை, வல்லூறு மற்றவை வல்லூறு நீங்கலாக ஒன்றுக்கொன்று உறவாகி இருக்கும் என்க.

வல்லூறு மட்டும் தனக்கு நட்பு என்று சொல்லப்பட்டதை நீங்கலாக மற்ற ற்றிற்கு ஆந்தை தவிர மற்ற நான்கு பட்சிக்கும் பகை என்றறியவும், பொதுவாகக் க்கைக்கும் - ஆந்தைக்கும் பகை என்ற மரபு பற்றி இங்கு ஆந்தை காக்கைக்குப் பகை எனப்பட்டது. இருப்பினும் மேல் பாடலில் இது உறவு என்று சொல்லப்பட்டு அதுவும் பெருவழக்காய் இருப்பதால் காக்கைக்கு வல்லூறென்றுமே பகை என்று கொள்ளவும். பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்ட பகை முறை வருமாறு.

| | | |
|---|---|---|
| வல்லூறுக்கு பகை | — | காகம் கோழி |
| ஆந்தைக்குப் பகை | — | கோழி, மயில் |
| காகத்திற்குப் பகை | — | வல்லூறு, மயில் |
| கோழிக்குப் பகை | — | வல்லூறு, ஆந்தை |
| மயிலுக்குப் பகை | — | ஆந்தை, காகம் |

இவைகளின் பயன்: பகைபட்சியாளரொடு, கூட்டுறவு நட்பு திருமணம் முதலியவை ஆகா. பகை பட்சி தாழ்ந்திருக்கும்போது நன்பட்சி அரசு ஊணில் இருக்கும்போது விவகாரம் பண்ணினால் வெற்றி.

இனி அட்டகன்மத்தில் உறவுப்பட்சியை வசியம், மோகனம், ஆகர்ஷணம், போன்ற நல்ல செயல்களுக்கும், பகைபட்சியை பேதனம், வித்வேஷணம், ஸ்தம்பனம், மாரணம் போன்ற கொடுஞ்செயல்களுக்கும் பயன்படுத்தல் முறையாகும்.

## 7. சமப்பட்சி

இப்படி நட்புப்பகை இருக்கும்போது இருவர் பட்சியும் சமமானால் இருவர் ஒருசெயல் கருதிப் பழகுவாரேல் அவர்களில் யார் ஓங்கி நிற்பவர் என்று கூறுவது.

### அறுசீராசிரிய விருத்தம்

34. ஊணிய இருவர் பேரும் ஒருபட்சி யான போதில்
ஊணெனில் மூத்தோன் வெல்வன் உயர்நடை இளையோன்
ஆணரசு அழகன் வெல்வன் அசதியில் நெடியோன் வெல்வன்
வீணிலே சமான மாகில் பயனிலை இரண்டும் சாமே!

(இ-ள்) தம்முள் சந்திக்கும் அல்லது வேறுபடும் அல்லது சண்டை இடும் இருவர் பட்சியும் சமமாய் ஒன்றாய் இருந்தால் அவற்றில்.

ஊண் தொழில் நடக்கும் போது இருவரில் வயதில் மூத்தவன் வெல்வான்
நடை தொழில் நடந்தால் இருவரில் வயதில் இளையவன் வெல்வான்
அரசு தொழில் நடக்குமாகில்-இருவரில் அழகாய் இருப்பவன் வெல்வான்
துயில் தொழில் நடக்குமாகில்-இருவரில் உயரமானவன் வெல்வான்
சாவு தொழில் நடக்குமாகில்-இருவரும் பயனின்றி அழிவர்-அவர்காரியம் வீணாம், அதாவது இருவருக்கும் பயனில்லை என்பதாம்.

## 8. திசைப்பட்சி

பூருவ பட்சத்தில் இன்னின்ன பட்சிக்கு இன்னின்ன திசை என்பது கூறல்.

### அறுசீர் ஆசிரியச் சந்த விருத்தம்

35. இந்திரன் அங்கி வல்லூ றியமன் ஆந்தை அதுவாகும்
முந்து வாரணம் வாயுவதாம் உறுகொடி வடக்கோ ஈசானம்
அந்தக் கோழி தானாகும் அம்புவியோடு வானும்தான்
கந்தன் வேளின் மயிலாகும் கருதும் வளரும் பிறைதனக்கே.

(இ-ள்) இந்திரனாகிய கிழக்கு — வல்லூறு

இயமனாகும் தெற்கு — ஆந்தை

வருணனாம் மேற்கு
வாயுவாம் வடமேற்கு } காகமாம்

ஈசானமாம் வடகிழக்கு
வடக்கு } கோழியாம்

பூமியும் ஆகாயமும்
(நடு) } மயிலாகும்

(இதன் பயன்) தன் பட்சி தாழ்ந்துள்ள போது அரச பட்சியுள்ள திசையில் தானிருந்து கொண்டும் தாழ்ந்த துயில் சாவு தொழிலில் உள்ள திக்கில் மாற்றானை இருக்கச் செய்தும், விவகாரம் பண்ணினால் தனக்கு வெற்றி, அரச. ஊண் பட்சி திக்கில் பயணம் மேற்கொள்ள உயர்வு. இப்படிப் பல விதங்களில் பயன் கொள்ளலாம்.

(கொடி காகம்)

## 9. வெல்லும் பட்சி

வளர்பிறையில் தொழிலின் தன்மைக்கேற்ப எத்தொழிலுடைய பட்சி மற்ற

பட்சிகளை வெல்லும் விதம் கூறுவது

அறுசீர் ஆசிரியச் சந்த விருத்தம்

36. உண்ணு மவனை நடப்பானும்
உரமாய் வெல்வான் நடப்பானை
மண்ணில் அரசன் தாங்குபவன்
மறத்தும் அரசைத் தூங்குபவன்
எண்ணி வெல்வோன் துயில்வோனை
இயல்பாய்துஞ்சு பவன்வெல்வான்
நண்ணாத் துஞ்சு பவன்தனக்கு
நாடில் அவனே சரிதானே.

(இ-ள்) வளர்பிறையில் ஊண் தொழில் பட்சியுடையோனை நடைதொழில் பட்சியுடையான் வெல்வான். இதைப்போல் நடையை-அரசன் வெல்வான், அரசு தொழில் உடையவனை துயில்வோன் வெல்வான், துயில்வோனை சாவுத் தொழில் உடையவன் வெல்வான். சாவுத் தொழில் உடையோனுக்கு அவனே சமனாவான்.

இயல்பாக சாவைவிட துயிலும், துயிலைவிட நடையும், நடையை விட ஊணும் ஊணைவிட அரசும் ஒன்றுக்கொன்று வலுவுள்ளவை. வளர்பிறையில் இவற்றிற்குத் தலைகீழாய் முறை மாறி வலுவின் தராதரம் கூறப்பட்டது கவனிக்கத்தக்கது. பெரும் பாலும் இயல்பான பொது முறையே சரியாகும். சில தனிப்பட்ட சூழ்நிலைகளில் இப்பொழுது சொல்லும் தலைகீழ் முறையைப் பயன்படுத்திப் பார்க்கலாம் என்க.

## 10 பட்சியின் பலம்

இது பட்சிகளின் பலத்தை (Strength) வரிசைப்படுத்திக் கூறுவது

அறுசீர் ஆசிரியச் சந்த விருத்தம்

37. சரியாய் காகம் முழிப்பலமாம்
தனித்த வல்லூ றேமுக்கால்
பரிவா மாந்தை அரைப்பலமாம்
பகரும் கால்தான் கோழியதாம்
சொரிய தறைக்கரல் மயிலெனவே
சொன்ன முற்பக் கத்தடைவாக
அரிதா யுரைத்த பலாபலத்தை
அறிந்து பட்சி பலம்பாரே.

(இ-ள்) வளர்பிறையில் காகம் முழுப்பலமாம், வல்லூறு 3/4 பலமாகும் ஆந்தை அரைபலமாகும் கோழி, கால் பங்கு பலமாகும் மயில் அரைக்கால் பலமாகும். பட்சிகளின் பலாபலத்தையும் தொழிலின் பலாபலத்தையும் கொண்டு கூட்டி நிகர பலத்தை (Unit of Strength) அறிந்து கணக்கிட இது உதவும்.

விளக்கம் : வருமாறு கணிதம் செய்யலாம்.

1) இயல்பான பட்சிகளின் தொழில்களின் வலுப்படி பலத்தின் அளவு முழு அளவு ஒன்று என்று கொண்டால் :-

சாவு - 1/5 துயில் 2/5 - நடை 3/5
ஊண் 4/5 அரசு ஒன்று

2) இப்பொழுது காகத்தின் வெவ்வேறு தொழில்களின் பலம், தொழிற் பலத்துடன் இணைத்துப் பின்வருமாறு கணிதம் செய்யலாம்.

| | | |
|---|---|---|
| காகம் சாவு | 1/5 + 1 | = 1 1/5 |
| துயில் | 2/5 + 1 | = 1 2/5 |
| நடை | 3 5 + 1 | = 1 3/5 |
| ஊண் | 4 5 + 1 | = 1 4/5 |
| அரசு | 1 + 1 | = 2 |

இப்பொழுது இந்தப் பலனின் அளவை ஒற்றித்த அளவையில் காண (Unit Value) வந்த நிகர அளவையை இரண்டால் வகுக்கலாம்.

அதாவது காகம் - சாவு = 1/2 % 1//5/2 = 7/20
துயில் = 1/2 % 2 5/2 = 9/20
நடை = 1/2 % 3/5/2 = 11/20
ஊண் = 1/2 % 4/5/2 = 13 20
அரசு = 1/2 % 1/2 = முழு அளவு

இந்த அடிப்படையில் எல்லாப் பட்சிகளின் தொழில்களின் அடிப்படையில் கணிதம் செய்யப்பட்ட பலத்தின் அளவு அட்டவணை வருமாறு:-

## 50 நிகர பலம் தசம கணித பின்னத்தில்

| பட்சி தொழில் | மயில் | கோழி | ஆந்தை | வல்லூறு | காகம் |
|---|---|---|---|---|---|
| சாவு | 0.1624 | 0.225 | 0.350 | 0.475 | 0.600 |
| துயில் | 0.2625 | 0.325 | 0.450 | 0-575 | 0.700 |
| நடை | 0.3625 | 0.425 | 0.550 | 0.675 | 0.800 |
| ஊண் | 0.4625 | 0.525 | 0.625 | 0.775 | 0.900 |
| அரசு | 0.5625 | 0.625 | 0.750 | 0.875 | 1.000 |

பயன்: எடுத்துக்காட்டாக காகத்தைப் பட்சியாக உடைய ஒருவனுக்கு அதன் தொழில் சாவிலும், அவன் மோதப்போகும், விவகாரம் பண்ணபோகும் மற்றொரு வனுக்குப் பட்சி மயிலாக அரசில் இருப்பதாகவும் வைத்துக் கொள்வோம்.

இயல்பான முறையில் மயில் அரசு பட்சி ஆனதால் காகம் அதைவிட சாவில் இருப்பதால் தாழ்ந்ததால் காகத்தையுடையவன் தோற்க வேண்டும். ஆனால் பலப் பரிமாணத்தை (Uuti Value of Strength)ப் பார்க்கும்போது காகமே மேலோங்கி இருப்பதால் காகத்தை உடையவன் வென்றுவிடுவான் என்றுதான் கொள்ள வேண்டும். இப்படி எல்லாம் நுண்ணிதின் கணித்து அன்றாட வாழ்க்கையில் இப்பட்சி நூலை நாம் பயன்படுத்திக் கொள்ளலாம் என்க.

# 11. உடற்பட்சி

உடலின் பல்வேறு அங்கங்கள் இன்னின்ன பட்சியைக் குறிக்கும் (வளர் பிறையில்) என்று கூறுவது.

## எண்சீராசிரிய விருத்தம்

38. கூந்தல்நெற்றி மயில் கோழி காகம் மூக்கும்
கொன்னும்வாய் முனி கழுத்து வல்லூ றாகும்
சேர்ந்ததோள் மயில்கோழி காகம் மார்பு வயிறு
சீராந்தை கீழ்வயிறு வல்லூ றாகும்
காந்தசந்து மயில்கோழி தொடைமுழங்கால் காகம்
கெண்டைமுனிக் கரண்டை வல்லூறாகும்
பாந்தமாய் வலதுபுற முற்பக் கத்தில்
பார்த்துணர்வாய் சொன்னதைநீ பரிந்து தானே.

(இரண்டு மூன்றாம் அடிகள் சீர் அசை முதலியவை மிக்குவந்தன)

(இ-ள்) வளர் பிறையில் பட்சியில் அங்கங்கள் பின்வருமாறு அறிந்து கொள்ளவும்.

காகம் — மூக்கு, வயிறு

ஆந்தை — வாய், கீழ்வயிறு, கெண்டைக்கால் (கணுக்கால்)

வல்லூறு — கழுத்து, குறிக்கும் மேல் வயிற்றிற்கும் கீழ் இடைப்பட்ட முன் பின் பக்கம், கரடு அதாவது காலின் புறப்பகுதி, அல்லது பரடு என்றும் சொல்வர்

கோழி — நெற்றி, மார்பு

மயில் — கூந்தல், தோள், குறி உள்ள இடமும்

குறிப்பு: கெண்டை கணுக்கால் கரண்டை என்பது கரடு அல்லது பரடு. வளர்பிறையில் மனிதனின் வெவ்வேறு உறுப்புகளுக்குப் பட்சிப் பிரிவு கூறியது. அந்தந்த பட்சிகளின் தொழிலில் தாழ்ந்த நேரங்களில் அவை குறிக்கும் அங்கங்களில் அடி, விபத்து, காயம் முதலியவை நேரலாம். முன்னெச்சரிக்கையாக இருக்கவும் இவை உதவும். அன்றியும் மருத்துவர்களுக்கு நோய் முதல் நாடவும் இது பயன்படும் என்க.

## தூல பஞ்ச பட்சி கண்ணாடி பூர்வ பட்சம்

ஏறக்குறைய பஞ்ச பட்ச நூலின் சாரம் முழுவதும் இப் புத்தகத்துள் அடங்கியுள்ளது. வளர் பிறைக்குரியது வளர்பிறையில் இடது பக்கம் பட்சிகளும் அதற்குரிய நக்ஷத்திரங்களும் அதற்கு நேராகக் கொடுக்கப்பட்டுள்ளன.

(தேய்பிறைக்குத் தனியாக இப்புத்தகம் அமரபக்கப் புடலத்து இறுதியில் உள்ளது.)

இதன்கீழ் இடதுபக்கம் வாரங்களும் அதற்கு நேராக இடமிருந்துவலம் பட்சிகள் அவை செய்யும் தொழில் ஜாம வாரியாக பகல் இரவு இரண்டுக்கும் கொடுக்கப்பட்டுள்ளன.

இப்பதகத்தின் கீழ் பஞ்ச பட்சிக்குரிய வளர் பிறைக்கு மட்டும் உரிய வாரம் படுபட்சி, சாதி நிறம். திக்கு, சத்துரு, மித்துரு முதலிய விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

அதன் கீழ் இடது பக்கத்தில் வளர் பிறை பதலிரவுக்குரிய சூக்கும அந்தரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. வலது பக்கத்தில் பூர்வபட்ச பகலிரவு அதிகார பட்சிகள் கொடுக்கப்பட்டுள்ளன.

### முக்கியமாகக் கவனிக்க வேண்டியவை:-

1) சாவு, துயில், நடை, ஊண், அரசு இத்தொழில்கள் ஒன்றுக்கொன்று வலுவானவை, சாவும், துயிலும் கொடியவை. நடை காலம் மந்திமம். நடை காலம் தேய்பிறையில் நல்லது. ஊண் நல்லது அதைவிட அரசு மிக நல்லது. தன்பட்சி உயர்ந்திருக்க மாற்றான் பட்சி தாழ்ந்திருக்க விவகாரம் புண்ண தனக்கு வெற்றி மாற்றான் நட்சத்திரம் தெரியாதபோது அவன் பெயர் முதலெழுத்தின் உயிர் எழுத்தைக்கண்டு அதற்குரிய பட்சியை முடிவு செய்ய வேண்டியது.

உதாரணமாகக் கோவிந்தன் என்ற பெயர் முதலெழுத்து 'கோ' இதில் க்+ஒ-ஒ என்பது உயிரெழுத்து. எனவே வளர்பிறையில் இதற்கு உரிய பட்சி "மயில்" ஆகும் பதகம் காண்க. இவற்றைத் தேவைக்கேற்ப அறன்வழி நின்று பயன்படுத்தி வாழ்வில் வெற்றி பெறுக,

தேய்பிறை தூல பஞ்சபட்சி கண்ணாடிக்கும் விளக்கம் இதுவே பொருந்தும்.

# கால
# பஞ்ச பக்ஷி கண்ணாடி

## பூர்வ பக்ஷம்

| பூர்வ பக்ஷம் வளர்பிறை | நக்ஷத்திரங்கள் |
|---|---|
| வல்லூறு | அசுவனி, பரணி, கிருத்திகை, ரோகினி, மிருகசீரிசம் |
| ஆந்தை | திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயில்யம், மகம், பூரம் |
| காகம் | உத்திரம், ஹஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம் |
| கோழி | அனுசம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம் |
| மயில் | திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி,ரேவதி |

## பூர்வ பக்ஷம்

| | | பகல் தொழில் | | | | | இரவு தொழில் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| வாரம் | பக்ஷிகள் | 6-00 8-24 | 8-24 10-48 | 10-48 1-12 | 1-12 3-36 | 3-36 6-00 | 6-00 8-24 | 8-24 10-48 | 10-48 1-12 | 1-12 3-36 | 3-36 6-00 |
| ஞாயிறு செவ்வாய் | வல்லூறு | ஊண் | நடை | அரசு | துயில் | சாவு | சாவு | நடை | துயில் | ஊண் | அரசு |
| | ஆந்தை | நடை | அரசு | துயில் | சாவு | ஊண் | அரசு | சாவு | நடை | துயில் | ஊண் |
| | காகம் | அரசு | துயில் | சாவு | ஊண் | நடை | ஊண் | அரசு | சாவு | நடை | துயில் |
| | கோழி | துயில் | சாவ | ஊண் | நடை | அரசு | துயில் | ஊண் | அரசு | சாவு | நடை |
| | மயில் | சாவு | ஊண் | நடை | அரசு | துயில் | நடை | துயில் | ஊண் | அரசு | சாவு |
| வியாழன் | ஆந்தை | சாவு | ஊண் | நடை | அரசு | துயில் | நடை | துயில் | ஊண் | அரசு | சாவு |
| | காகம் | ஊண் | நடை | அரசு | துயில் | சாவு | சாவு | நடை | துயில் | ஊண் | அரசு |
| | கோழி | நடை | அரசு | துயில் | சாவு | ஊண் | அரசு | சாவு | நடை | துயில் | ஊண் |
| | மயில் | அரசு | துயில் | சாவு | ஊண் | நடை | ஊண் | அரசு | சாவு | நடை | துயில் |
| | வல்லூறு | துயில் | சாவு | ஊண் | நடை | அரசு | துயில் | ஊண் | அரசு | சாவு | நடை |
| சனி | காகம் | துயில் | சாவு | ஊண் | நடை | அரசு | துயில் | ஊண் | அரசு | சாவு | நடை |
| | கோழி | சாவு | ஊண் | நடை | அரசு | துயில் | நடை | துயில் | ஊண் | அரசு | சாவு |
| | மயில் | ஊண் | நடை | அரசு | துயில் | சாவு | சாவு | நடை | துயில் | ஊண் | அரசு |
| | வல்லூறு | நடை | அரசு | துயில் | சாவு | ஊண் | அரசு | சாவு | நடை | துயில் | ஊண் |
| | ஆந்தை | அரசு | துயில் | சாவு | ஊண் | நடை | ஊண் | அரசு | சாவு | நடை | துயில் |
| திங்கள் புதன் | கோழி | அரசு | துயில் | சாவு | ஊண் | நடை | ஊண் | அரசு | சாவு | நடை | துயில் |
| | மயில் | துயில் | சாவு | ஊண் | நடை | அரசு | துயில் | ஊண் | அரசு | சாவு | நடை |
| | வல்லூறு | சாவு | ஊண் | நடை | அரசு | துயில் | நடை | துயில் | ஊண் | அரசு | சாவு |
| | ஆந்தை | ஊண் | நடை | அரசு | துயில் | சாவு | சாவு | நடை | துயில் | ஊண் | அரசு |
| | காகம் | நடை | அரசு | துயில் | சாவு | ஊண் | அரசு | சாவு | நடை | துயில் | ஊண் |
| வெள்ளி | மயில் | நடை | அரசு | துயில் | சாவு | ஊண் | அரசு | சாவு | நடை | துயில் | ஊண் |
| | வல்லூறு | அரசு | துயில் | சாவு | ஊண் | நடை | ஊண் | அரசு | சாவு | நடை | துயில் |
| | ஆந்தை | துயில் | சாவு | ஊண் | நடை | அரசு | துயில் | ஊண் | அரசு | சாவு | நடை |
| | காகம் | சாவு | ஊண் | நடை | அரசு | துயில் | நடை | துயில் | ஊண் | அரசு | சாவு |
| | கோழி | ஊண் | நடை | அரசு | துயில் | சாவு | சாவு | நடை | துயில் | ஊண் | அரசு |

## பூர்வபக்ஷம் (வளர்பிறை)

| பக்ஷி | பெயர் முதல் அக்ஷரம் | படுபக்ஷி வாரம் | நிறம் | ஜாதி | திக்கு | சத்துரு | மித்ரு |
|---|---|---|---|---|---|---|---|
| வல்லூறு | அ, ஆ ஐ, ஔ | வியாழன், சனி | மஞ்சள் | அந்தணன் | கிழக்கு | காகம், கோழி | மயில், ஆந்தை |
| ஆந்தை | இ, ஈ | ஞாயிறு, வெள்ளி | வெள்ளை | அரசன் | தெற்கு | மயில், கோழி | வல்லூறு, காகம் |
| காகம் | உ, ஊ | திங்கள் | சிகப்பு | வணிகன் | மேற்கு | வல்லூறு, மயில் | ஆந்தை, கோழி |
| கோழி | எ, ஏ | செவ்வாய் | பச்சை | வேளாளன் | வடக்கு | வல்லூறு, ஆந்தை | மயில், காகம் |
| மயில் | ஒ, ஓ | புதன் | கருமை | நீசன் | நடு | ஆந்தை, காகம் | வல்லூறு, கோழி |

| சூக்குமத்தொழில் | |
|---|---|
| பூர்வபக்ஷம் | |
| பகல் | இரவு |
| ஊண் 30 | ஊண் 30 |
| நடை 36 | அரசு 24 |
| அரசு 48 | சாவு 36 |
| துயில் 18 | நடை 30 |
| சாவு 12 | துயில் 24 |

| அதிகார பக்ஷி | | |
|---|---|---|
| பூர்வபக்ஷம் | | |
| | பகல் | இரவு |
| வல்லூறு, | ஞாயிறு, செவ்வாய் | வெள்ளி |
| ஆந்தை | திங்க, புதன் | சனி |
| காகம் | வியாழன் | ஞாயி, செவ்வா |
| கோழி | வெள்ளி | திங், புதன் |
| மயில் | சனி | வியாழன் |

## பஞ்சபட்சி சூக்குமத் தொழிற் கண்ணாடி

### சாரமான விளக்கம்

1. பஞ்சபட்சி தொழில்களில் சூக்குமப் பொழுதுகள் தொடர்ந்து வரும் சிறப்பு அட்டைவணைகளில் தரப்பட்டுள்ளன.

2. இதற்றில் ''உத்தமம்'' என்பவை மிக நல்லவை, மத்திமம் என்பவை சாதாரணம். அதமம் உன்பவை - பயன்படா. தீயவிளைவுகளே நேரும்.

3. அரசு காலத்தில் வரும் "உத்தம" சூக்குமம் ஊண் காலத்தில் வரும் 'உத்தம' சூக்குமத்தைவிட நல்லதாகும்.

4. ஒரு பட்சிக்குப் பகையாகும் அரசு சூக்குமம், மற்றும் ஊண் சூக்குமம் மத்திம பலன்தான் தரும்.

5. நடை மத்திம பலனே தரும்.

6. துயில், சாவு காலங்களில் 'அரசு' மட்டும் மத்திமம் என்று காட்டப் பட்டுள்ளது. இது இரண்டாம்பட்சம் தான்.

7. எப்பொழுதும் அரசில் அரசு, ஊணில் அரசு, அரசில் ஊண், ஊணில் ஊண் இவையே உத்தமம். நட்பானால், அடுத்து ஊணில் அரசு ஊணைவிட அரசில் அரசு, ஊண் இவை உயர்ந்தவை. இந்த தாரதம்யத்தை நன்கு புரிந்துகொண்டு அறன்வழி நின்று பயன் பெறுக.

## பஞ்சபட்சி சூக்குமத் தொழிற் கண்ணாடி
## (விளக்கம்)

பூருவ பட்சப்படலம் 28, 29ம் பாடல்களில் கொடுத்துள்ளபடி பட்சிகளின் எல்லாத் தொழில்களின் சூக்கும அந்தரங்களுக்கும் இங்கு ஒவ்வொரு பட்சிக்கும் ஒவ்வொரு கிழமைக்கும் பகல் இரவுக்குக் கணக்கிடப்பட்டு மணி நிமிடத்தில் தரப்படுகிறது.

கும்பமுனி பட்சி சாத்திரம் சுவடி எண் 1015-ல் அரிதாகத் தரப்பட்டுள்ள, ஒவ்வொரு பட்சியின் ஒரு சாமத்தொழில் நேரத்தில், மற்ற 4 பட்சிகளும் பகை அல்லது நட்பாக இருந்து தங்கள் அந்தரத்தையும் நடத்தும் விதத்தை ''பொதுப்படலம்'' 'பட்சி முத்து பூரணபட்சி'' என்ற தலைப்பில் விளக்கியுள்ளோம். அதை அடிப்படையாகக் கொண்டு பட்சித்தொழிலின் அந்தரங்கள் சுபபலன் அல்லது அசுபபலன் தருவது தெளிவாகத் தெரியலாகும். அதையும் பின்வரும் அட்டவணைகளில் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

தங்கள்தங்கள் நட்சத்திரப்பட்சியை முதன்மையாகக்கொண்டு அதுசெய்யும் தொழில் நேரங்களில், மிக உயர்ந்த நேரத்தை அறிந்து அந்தந்தக் காலகட்டங்களை ''நட்சத்திரப்பட்சி காட்டும் நல்ல நேரத்தை'' அறிந்து செயல்பட்டால் எல்லாக் காரியங்களும் வெற்றியடையும். பயணம், மருத்துவம், தேர்வு எழுதல், தொழில் தொடக்கம், போட்டி பந்தய ஈடுபாடுகள், தன்காரியம் கைகூட, தன்னைவிட மேலோரைக் காணச் செல்லல், நண்பர், காதலன் காதலியரைக் காணல், பழகல், இன்னோரன்ன வாழ்க்கையின் அன்றாடத் தேவைகளுக்கேற்ப இவை எல்லாவற்றிற்கும் பயன்படும்.

உதாரணத்திற்கு வளர்பிறை வல்லூறுக்கு ஞாயிறு செவ்வாய் கிழமைகளில் பகல் தொழிலைக் கவனிக்கவும். அந்தரப்பட்சிகள் பகையாகவும் அல்லது தொழில் தாழ்ந்தும் இருப்பதால் முதல் ஜாமத்தில் மத்திமமான நேரமும், இரண்டாம் ஜாமத்தில் வல்லூறு நடையில் ஆந்தை நட்பு அரசு அந்தரமும், மூன்றாம் ஜாமத்தில் வல்லூறு அரசில் அரசு அந்தரமும், நான்காம் ஜாமத்தில் வல்லூறு துயிலில் மயில் நட்பு அரசு அந்தரமும் மட்டும் தான் நல்ல கால கட்டங்களாக அமைந்தன. இதில் நடை, துயில், சாவு ஜாமங்களில் வரும் உத்தம காலங்கள் அதே பட்சியின் அரசு, ஊண், ஜாமங்களின் உத்தம காலங்களைவிட தாழ்ந்தவையே. ஊண், அரசு ஜாமங்களில் ஊண், அரசு அந்தரங்கள் எப்பொழுதும் மிக நல்ல நேரம் என்பதைக் கவனத்தில் கொள்ளவும். மற்ற எல்லா இடங்களிலும் இப்படியே அறிந்து பயன் பெறுக.

முன்னர் பலகாலும் கூறியுள்ளது போல அறநெறிக்குட்பட்டு நல்லவற்றிற்கே இவற்றைப் பயன்படுத்தல் மிக முக்கியமாகும்.

அடுத்து பூருவ பட்சத்திற்கு ஒவ்வொரு பட்சி முக்கியத் தொழிலுக்கும் அந்தர வாரியாக அந்தரப்பட்சியுடன் அவை தொழிற்பட்சிக்குப் பகை நட்பு என்ற வகையில் அந்தந்த அந்தரங்களில் சுபம் அல்லது அசுப பலன் தரும் விதத்தையும் எல்லா நாட்களுக்கும் பகல் இரவுகளுக்குத் தனித்தனிப் பிரித்துக் கணிந்து முதன்முறையாகத் தொடர்ந்து எழுதியுள்ளோம். இவையும் இதுபோன்ற பிறவும் உரையாசிரியர் அரிதின் உழைத்துக்கண்டு எழுதியதால் ஆசிரியர் உரிமை பெற்றவை என்பதை அறியவும்.

பதகம் 59

## தொழில் நடக்கும் திக்குகள்

| தொழில் | தொழில் நடக்கும் திக்கு பூர்வ பட்சம் | | | | | தொழில் நடக்கும் திக்கு அமர பட்சம் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | வல்லூறு | ஆந்தை | காகம் | கோழி | மயில் | வல்லூறு | ஆந்தை | காகம் | கோழி | மயில் |
| ஊண் | கிழக்கு | தெற்கு | மேற்கு | வடக்கு | வடக்கு | வடக்கு | வட கிழக்கு | கிழக்கு | தெற்கு | மேற்கு |
| நடை | தெற்கு | மேற்கு | வடக்கு | கிழக்கு | தென் கிழக்கு | தென் கிழக்கு | தென் கிழக்கு | தெற்கு | தென் மேற்கு | வடக்கு |
| அரசு | மேற்கு | வடக்கு | கிழக்கு | தெற்கு | மேற்கு | தென் மேற்கு | தென் மேற்கு | மேற்கு | வடக்கு | கிழக்கு |
| துயில் | வடக்கு | கிழக்கு | தெற்கு | தென் மேற்கு | வட மேற்கு | வட மேற்கு | வட மேற்கு | வட மேற்கு | கிழக்கு | தெற்கு |
| சாவு | வட கிழக்கு | தென் கிழக்கு | தென் மேற்கு | வட மேற்கு | கிழக்கு | வட கிழக்கு | வடக்கு | வட கிழக்கு | தென் கிழக்கு | தென் மேற்கு |

குறிப்பு : தேய்பிறையில் வல்லூறு ஆந்தை இரண்டுக்கும் நடை, அரசு, துயில் மூன்றுதொழில் களுக்கும் ஒன்றாகவே காட்டப்பட்டுள்ளன. ஆனால் இதனால் பாதிப்பு இராது. ஏன் என்றால் இரண்டு ஒரே சாமயத்தில் ஒரே தொழிலைச் செய்யாது.

## 71. இதுவும் அது

(படுபட்சியின் தன்மையை எதிர் நிலையிலிருந்து பேசுவது)

இதில் வலுவான பக்ஷித்தொழிலுள்ளவனைக் கெடுதி செய்தல் முதலியவை எண்ணக் கூடாது என்று கூறப்படுகிறது.

## 18. படுபட்சி நாவின் கொடுமை

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

71. தானென்ற படுபட்சி நாளில் அப்பா
வலுவற்று விடும்நட்பு இல்லை இல்லை
தேனென்ற செய்கருமம் தவக்க மாகும்
செயமாக மாட்டாது ஒருநா ளும்தான்
கோனென்ற பக்ஷியது கொடிய பாம்பு
சூரியனைக் கவ்விமனம் புண்ணா தல்போல்
நானென்ற ஆணவங்கள் ஒன்றும் இல்லான்
நடுங்குவான் சத்துருநாள் கொடுமை யாமே.

(இ-ள்) படுபட்சி நாள் என்பது பட்சி இறந்ததினமாகும். தன் படுபட்சி நாளன்று எக்காரியமும் ஆகாது அதன் கொடுமையை விளக்குவது இப்பாடல்.

தன்பக்ஷி இறந்ததினமான படுபக்ஷி நாளில் தனக்கு வலுவு கொஞ்சமும் இராது. தனக்கு நட்பான பட்சியும் அதையுடையவரும் உதவமாட்டார். உதவமுடியாது. அன்று எக்கார்யம் செய்தாலும் தவக்கமாகும். வெற்றி பெறாது. படுபட்சி நாளன்று அரசு பக்ஷி உடையவன் கொடிய பாம்பு போல் படுபட்சிக்காரனுக்கு மிகவும் கொடுமையுள்ளவன் ஆவான். சுடுகின்ற சூரியனை வாயால் பற்றி அதனால் மனது புண்படுவது போல் அவன் கொடுமை இருக்கும். எனவே அவன் பகைமையை விலக்கிக் கொள்ள வேண்டும். அவன் பக்கம் நாடக் கூடாது என்பதாம். அதாவது அரசு பட்சிக்காரனிடம் படுபட்சிக்காரன் கொடுமைக் குள்ளாவான் என்பதாம்.

குறிப்பு: பூர்வபட்சம், அமரபட்சம், இரண்டுக்கும் படுபட்சி நாட்கள் 16 மற்றும் 21 ம் பாடல்களில் முறையே கூறப்பட்டுள்ளன.

## எண்சீர்

72\. கொடுமையுள்ள நாளதிலே பட்சி வன்மை
குறிப்பதுவும் செய்வதுவும் எளிதாம் பாரு
அடிமையென்ற நாளதிலே அதற்கும் அன்பாய்
கொடுமைகளை அனுசரிக்க வேண்டாம் வேண்டாம்
கெடுமதியும் கண்ணுக்குத் தோன்றி டாது
கேடுவரும் போதுமதி கெடுமாம் முன்னே
கடுகளவும் பாபமது மனதால் செய்தால்
கண்கெட்டுக் குலநாசம் ஆகும் பாரே.

(இ-ள்) பட்சிநூல் அட்டகன்மம் இவை முதலிய தேர்ந்த சான்றோன் தன் பட்சி வலுத்தபோது படுபட்சி உடைய பல ஈனன் மேல் எவ்வித தீய செயலும் செய்யக் கூடாது. ஏன் என்றால் அந்த சமயத்தில் அப்படிச் செய்வது மிகவும் எளிதே ஆகும். படுபட்சி உள்ளவன் வலுவிழந்து பட்சி வலு உள்ள இவனுக்கு அடிமை போல் ஆகிவிடுவான். அப்பொழுது அவன் மேல் அன்பு காட்ட வேண்டுமே அன்றி கொடுமைகள் செய்யக்கூடாது. ஒருவனுக்குப் பின்னால் விதி கெட்டு தீங்கு வர ஏதுவாரும் போதுதான் அவன் இப்படிப் படுபட்சிக்காரன் மீது தீமை செய்யத் தூண்டப்படுவான். ஆகையால் அது முற்றிலும் தவிர்க்கற்பாலதே. மனத்தாலும் இதுபோன்று பிறருக்குத் தீங்கு செய்யும் குறிக்கோள், எண்ணம் கூடாது. அப்படி மீறிச் செய்தால், அந்தக் கொடு வினையால் செய்தவன் கண்கெட்டு, அவன் குலமும் நாசமடையும் என்பதாகும்.

"அல்லற்பட் டாற்றா தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை."

என்று வள்ளுவர் தம் கெடுவினை செய்தவனால் பாதிக்கப்பட்டவன் துன்பத்தால் முதிர்ந்த மன உளைச்சலின் காழ்ப்புணர்ச்சியால் செய்தவன் செல்வம் அழிந்து விடும் என்று இது பற்றியே கூறியதும் காண்க. இத்தீமையும் கெடுவான் ஊழ்வினை வயமன்றி நடக்க மாட்டாது. ஆதலின் எந்தநிலையிலும் தானாக எக்கொடுமையும் செய்ய வேண்டாம் என்று எச்சரிக்கப்படுகிறது.

## 19. பட்சிகளின் வலு அறிதல்

படுபட்சி நாளன்றும் மற்ற நிலையிலும் வலுவான பக்ஷி (உடையவர்கள்) தன்னைப் பாதிக்காமல் இருக்க முறை சொல்வது. இது இயல்பான உத்தி அடுத்த பாடலில் வருவது மந்திர உத்தி.

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

73. பாரடா பட்சிவலு அறியவேண்டும்
பகையான எழுத்தைவிட்டு மாற வேண்டும்
நேரடா இவ்வேளை அவ்வேளை என்றுநீயே
நினைத்திட்டால் குடிகெடுத்த பகையும் போகும்
நேரடா பக்ஷிபகை யான - பேரை
நினைவில்வைத் தன்பாகப் பேச வேண்டும்
சேரடா மித்துருவை நீயும் சேர்க்கத்
தீவினைகள் விடுவதில்லை திண்ணம் தானே.

(இ ள்) ஒரு காரியத்தில் ஈடுபடும் போது தன்பட்சி பிறர்பட்சி இவைகளின் வலுவின் தராதரத்தை அறிய வேண்டும். (அட்டவணை 50, 51, 52ல் கண்டபடி) அதன்பின் தன் பட்சி வலு அதிகமிருந்தால் தைரியமாகக் காரியத்தில் இறங்கலாம். இல்லாவிட்டால் பகைபட்சியின் எழுத்து குறிக்கும் நபர்களை விட்டு மாற வேண்டும். (மந்திர வகையில் பகைபட்சிக்குரிய பஞ்சாக்ஷர முதலெழுத்தை நட்புப் பட்சிக்குரிய பஞ்சாக்ஷர முதலெழுத்துள்ள முறைப்படி மாற்றி உருவேற்றி வழிபட வேண்டும். ஆன்றோர்பால் அறிக) பட்சியின் துயில், சாவு மற்றும் படுபட்சி நாளின் வேலை முதலியவை நீக்கி நீ நடந்து கொண்டால் உன்குடி கெடுக்கும் பகை ஏற்படமாட்டாது. பகைப்பக்ஷி உள்ளவரைப் பகைத்துக் கொள்ளாமல் அன்பாக அவர்கள் போக்கில் நடந்து கொண்டால் நல்லது பெறலாம். அதுவன்றி தன் பக்ஷிக்கு உறவான பக்ஷி உள்ளவரைக் காரியத்தில் இணைத்துக் கொண்டால் நம் காரியம் வெற்றி பெறும். தீவினைகள், தீமைகள் எதுவும் வரமாட்டாது. இது திண்ணமாகும் என்பதாம்.

## 20. மந்திர முறையில் தன் பக்ஷியை சாதகமாக்கிக் கொள்வது எப்படி எனக்கூறல்

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

74. ஆகுமே பூருவத்தின் பகலுக் கப்பா
அனுசரிநீ கடைத்தலையைப் பிடித்து மாறு
போகுமே பூருவத்தின் இரவு தன்னில்
றொல்லாத நாலெழுத்தை மாறி ஓது
ஏகுமே அமரத்தின் பகலுக் கப்பா
என்ன சொல்வேன் இரண்டெழுத்து மாறி நில்லு
ஏகுமே அமரத்தின் இரவு தன்னில்
வெட்டவெளி நடுத்தலையாய் மாறிக் கொள்ளே.

(இ-ள்) தன் பக்ஷி எத்தொழிலைச் செய்தாலும் தான் வெற்றியடைய மந்திர முறையில் எப்படி என்ன செய்ய வேண்டும் என்பதை விளக்குவது. பொதுவாக நமசிவ்ய என்பது ஐந்தெழுத்து மந்திரமாகும். இது உபதேச முறையில் பலவகையில் அவரவர் மரபுக்கு ஏற்பத் தீக்கை செய்து வைக்கப்படும். அப்படி ஆன்றோர்பால் சிவதீக்கை அல்லது விஷ்ணு தீக்ஷை பெற்று சாதனை செய்தவர்களே இப்பாடலில் சொல்லும் முயற்சியை மேற்கொள்ளத் தகுதியுடையவர் ஆவார்கள். அதன் விவரம் வருமாறு.

1. பூருவ பக்ஷப்பகலில் தான் வெற்றிபெற இந்த பஞ்சாக்ஷரத்தினைக் கடைத்தலையாக்கி அதாவது கடை எழுத்து ய என்பதை தலையெழுத்தாக்கி அதாவது முதல் எழுத்தாக்கி நமசிவய என்றிருப்பதை ய நமசிவ என்று மாற்றி உரமேற்றி வழிபட்டால் வெற்றி உண்டு. இதற்கு உபதேசச் செம்மையும் மன உரமும் வேண்டும்.

2. பூர்வபட்சத்து இரவில் தன் பக்ஷி எப்படி இருந்தாலும் தான் வெற்றி அடைய இதே பஞ்சாக்ஷரத்தின் 4 'வது எழுத்தை முதலாக்கிக் கொண்டு ஓதி உருவேற்ற வேண்டும். அதாவது வயநமசி எனக் கொள்க.

3. அமர பட்சத்துப் பகலில் தன் பக்ஷி எப்படி இருந்தாலும் தான் வெற்றி அடைய அதே பஞ்சாக்ஷரத்தின் இரண்டாவது எழுத்தை முதலெழுத்தாகக் கொண்டு ஓத வேண்டும். அதாவது மசிவயந என்று கொள்க.

4. அமரபட்சத்து இரவில் தன்பட்சி எப்படி இருந்தாலும் தான் வெற்றி அடைய இதே பஞ்சாக்ஷரத்தின் நடு எழுத்தை முதலெழுத்தாகக் கொண்டு மாற்றி ஓத வேண்டும். 'சிவயநம' என்று கொள்க.

இவ் ஐந்தெழுத்தின் முன் பிரணவம் அல்லது சக்தி பிரணவம் இவற்றை இணைத்து ஓதல் முதலிய பலவகை மரபுகள் உண்டு. தத்தம் மரபுக்கேற்ப தக்க ஆசான் பால் தீக்கை பெற்று உய்த்துணர வேண்டும் என்க. விஷ்ணு பஞ்சாக்ஷரத் திற்கும் இம்முறையே கொள்க.

## 21. பட்சி முந்து பூரண பட்சி

மேற்கண்ட தலைப்பு சுவடி எண் 1015 கும்பமுனி பட்சி சாஸ்திரம் என்ற நூலில் 47 வது பத்தியாகக் காண்கிறது. ஊன்றிப் பார்த்ததில் பக்ஷிகளில் ஒவ்வொரு சாமத் தொழில் நாழிகையிலும் 5 பக்ஷிகளின் அந்தரமும் சூக்குமப்பக்ஷி அந்தரங்களாகக் கொடுக்கப்பட்டுள்ளது விளங்கிற்று. இம்முறை அபூர்வம். எந்நூலிலும் இல்லை. அரிதின் முயன்று ஆழ்ந்து சிந்தித்த பன்னாட்களுக்குப் பின் இது புலனாயிற்று. இந்த முறையின் அருமை கருதி இங்கே தரப்படுகிறது. சுவடியில் இச்செய்தி கீழ்க்கண்ட வடிவத்தில் தரப்பட்டுள்ளது.

செவ்வாய், ஞாயிறு, ஊண்பட்சி, வல்லூறு, படுப்பட்சி, செவ்வாய் எ- கோழி - ஞாயிறு படுபட்சி இ-ஆந்தை (பட்சிகள்) உண்டு நடந்து உலகாண்டு மரித்து.

முதல் சாமம் பகல் அ-வல்லூறு ஊண்-சுறா ஆந்தை நடை-கவ$_1$ - 2 - காகம் அரசு 2 எகாரம் கோழி-தூக்கம் ற$_1$ மயில் சாவு றா$_1$ ஆக சா".

இதில் ஞாயிறு செவ்வாய்க் கிழமைகளுக்கு ஊண்பட்சி, படுபட்சி மற்றும் முதல் சாமம் நாழிகையும் 5 பக்ஷிகளின் தொழிலால் பங்கிட்டுக் கணக்கிடப்பட்டுள்ளது. பின்ன அளவை தமிழ் இலக்கம் வடிவத்தில் உள்ளது.

ஒரு சாமத்தில் 5 பக்ஷிகள் வெவ்வேறு தொழிலைச் செய்கின்றன. ஒவ்வொரு தொழிலும் 5 தொழில்களின் சூக்குமப் பொழுதைக் கணக்கிட்டு அறிவது ஏற்றுக் கொள்ளப்பட்ட பொதுமரபு. இதை பூருவ அமரபட்ச படலங்களில் 28 29ம் பாடல் களின் முகவுரை உரை 42, 43ம் பாடல்களின் உரையையும் காண்க. அதன்படி ஒருபட்சி ஊண் தொழில் நடத்தினால் ஊணில் ஊண், ஊணில் - நடை ஊணில் அரசு, ஊணில் துயில் - ஊணில் சாவு என்று சூக்குமப் பொழுதுகள் அறியப்படும்.

இப்பொழுது சொல்லப்போகும் முறையில் ஒரு பட்சியில் ஒரு தொழில் நடத்தும் ஒரு ஜாமத்திலேயே மற்ற நான்கு பக்ஷிகளும் தங்கள் சூக்குமங்களை அந்தரப் பொழுதுகளை சொன்ன வரிசையிலேயே நடத்தி ஒரு ஜாமத்தின் 6 நாழிகையையும் சரிக்கட்டுகின்றன. இப்பொழுது பூர்வபக்ஷப் பகலில் செவ்வாய் - ஞாயிறை மேலே சுவடியில் கொடுத்ததைக் கீழே விளக்கியுள்ளது காண்க.

பூர்வபட்ச செவ்வாய் - ஞாயிறு பகலில் முதல் ஜாமத்தில் வல்லூறு ஊண் தொழில் நடத்தும். சுவடியில் கொடுத்துள்ளப்படி இதன் அந்தரங்கள் வருமாறு (பட்சியை குறிக்கும் உயிரெழுத்து முதலிலும், அடுத்து பட்சியின் பெயரும், அடுத்து அதன் தொழிலும் அடுத்து அதன் கால அளவு பின்னம் தமிழ் இலக்கத்திலும் தரப்பட்டுள்ளது.)

## பூர்வ பட்சம்

ஞாயிறு - செவ்வாய் - முதல் சாமம்

1. அ. வல்லூறு ஊண் அந்தரம் 1¼ நாழிகை

 2-வது இ-ஆந்தையின் நடை அந்தரம் 1½ நாழிகை

 3-வது 2. காகத்தின் அரசு அந்தரம் 2. நாழிகை

 4-வது எ. கோழியின் தூக்கம் அந்தரம் ¾ நாழிகை.

 5-வது மயில் சாவு அந்தரம் ½ நாழிகை ஆகமொத்த நாழிகை 6.

இதற்கு வல்லூறு தலைப்பட்சியாகும். முதல் ஜாமத்தில் மற்ற பட்சிகளும் தத்தம் தொழிலை முதல் அந்தரபாக நடத்தி, தலைப்பட்சியாக இருந்து மற்ற பட்சிகளின் அந்தரங்களையும் கணக்குப்படி நடத்துகின்றன. இப்பொழுது இந்தவகையில் பூர்வபட்சம்ஞாயிறு செவ்வாய் பகல் முதல் ஜாமத்தின் 5 பட்சிகளின் தொழிலும் பின்வருமாறு அமையும்.

முதல் ஜாமம்

(செவ்வாய் - ஞாயிறு பகல் பூர்வபட்சம்)

(1) அ - வல்லூறு ஊண்

| | |
|---|---|
| வல்லூறு-ஊண் | $1\frac{1}{4}$ |
| ஆந்தை நடை | $2\frac{1}{2}$ |
| காகம் அரசு | 2 |
| கோழி-துயில் | $\frac{3}{4}$ |
| மயில்-சாவு | $\frac{1}{2}$ |
| ஆக நாழிகை | 6 |

(2) இ - ஆந்தை நடை

| | |
|---|---|
| ஆந்தை-நடை | $1\frac{1}{2}$ |
| காகம்-அரசு | 2 |
| கோழி-துயில் | $\frac{3}{4}$ |
| மயில் சாவு | $\frac{1}{2}$ |
| வல்லூறு-ஊண் | $1\frac{1}{4}$ |
| | 6 |

(3) உ - காகம் அரசு

| | |
|---|---|
| காகம்-அரசு | 2 |
| கோழி துயில் | $\frac{3}{4}$ |
| மயில் சாவு | $\frac{1}{2}$ |
| வல்லூறு-ஊண் | $\frac{1}{4}$ |
| ஆந்தை நடை | $1\frac{1}{2}$ |
| | 6 |

(4) எ-கோழி துயில்

| | |
|---|---|
| கோழி-துயில் | $\frac{3}{4}$ |
| மயில் சாவு | $\frac{1}{2}$ |
| வல்லூறு-ஊண் | $1\frac{1}{4}$ |
| ஆந்தை-நடை | $1\frac{1}{2}$ |
| காகம்-அரசு | 2 |
| ஆக நாழிகை | 6 |

(5) ஒ-மயில் சாவு

| | |
|---|---|
| மயில்-சாவு | $\frac{1}{2}$ |
| வல்லூறு ஊண் | $1\frac{1}{4}$ |
| ஆந்தை-நடை | $1\frac{1}{2}$ |
| காகம்-அரசு | 2 |
| கோழி-துயில் | $\frac{3}{4}$ |
| ஆக நாழிகை | 6 |

எனவே முதல் ஜாமத்தில் அத்தந்த ஜாமத்தின் தலைப்பட்சியே முதற்தொழிலை ஏற்று மற்ற அனைத்துப் பட்சிகளும் முதல்மூன்று படலங்களுக்குள் சொன்ன வரிசை முறைவிலேயே சிறுதொழிலைத் தனித்தனியாக நடத்தியதைக் காண்க. இது போன்றே மற்ற எல்லா ஜாமங்கள் பகல், இரவு 7 வாரம், இரண்டு பட்சங்களுக்கும் பகுத்து அறிந்துகொள்ள வேண்டும். சுவடியில் பூர்வபட்சம் முழுமைக்கும் இவை பத்தி 47 முதல் 56வது பத்திகளில் குறிப்பாகவும் அந்தர நாழிகை பின்னங்களை தமிழ் இலக்கமுறையிலும் தரப்பட்டுள்ளன. எழுத்தின் கீழ் கோடிட்டுக்காட்டியவை தமிழ் பின்னங்களாகும்.

இதன் பயன்: ஒரு காரியத்தில் ஈடுபடும்போது தன்பட்சியின் முக்கியத் தொழில் அரசு - ஊண் நடக்கும்போது தன்பட்சிக்கு மித்ரு பட்சியின் அந்தர காலத்தில் ஈடுபட்டால் முழு வெற்றியும் தன்பட்சி முக்கியத்தொழில் துயில் - சாவாகி தாழ்ந்து நடக்கும் போது அதில் சத்ருபட்சியின் அந்தரத்தில் ஈடுபட்டால் தோல்வியும் துன்பமும் உண்டாம்.

எல்லா ஜாமங்களுக்கும் 60 நாழிகைக்கும் இருபட்சங்களுக்கும் எல்லா நாங்கள் இரவுபகலுக்கும் முக்கியப்பட்ச தொழிலில் உபபட்சிகளின் தொழிற்காலத்தைப் பிரித்து எழுதிக்கொண்டே போனால் விரியும். எனவே தாமே கணித்து அறிக. இவை முழுமையும் இருபட்சங்களுக்கும் தனித்தனிப் பதகங்களாகப் பூர்வபட்சபடலம் அமரபட்ச படலம் இரண்டின் இறுதியிலும் (மெத்தம் 2500 சூக்கும அந்தரங்கள்) தரப்பட்டுள்ளன. பக்கம் 73 முதல் 122 வரையும் மற்றும் பக்கம் 145 முதல் 194 வரையும் காண்க.

மற்ற சூழ்நிலைகளில் முதல் முறையிலேயே சூக்குமப் பொழுதுகளைப் பயன் படுத்திக்கொள்க. அதுவே பெருவழக்காகியுள்ளது. சுவடிகளில் எவ்வளவு நுணுகிய முறையில் பட்சிகளின் தொழில் முதலியவை ஆய்ந்து எழுதப்பட்டுள்ளது என்பதைக் காட்டுவதற்கும் இப்படி அந்தரம் பிரிக்கும் வகை ஒன்று உண்டு என்பதை தெரி விக்கவே இவை விளக்கப்பட்டுள்ளன. எனவே குழம்ப வேண்டிய அவசியம் இல்லை.

## 22. எட்டுதிசை யோனிகளும் பஞ்ச பட்சியும்

**நுழைமுகம்:**

புவிஈர்ப்பு சக்தி, மற்றும் உலகில் கோள்கள், சூரிய சந்திராகள் இவற்றால் பல்வேறு வகையாக இயங்கும் மின்காந்த அலைகள் எட்டுத் திசைகளிலும் வெவ்வேறு விதமாகச் செயல்படுகின்றன. இவை திசைஈர்ப்பு என்று கொள்ளலாம் (Directiona, Forces). இவற்றின் வலிமையும் தன்மையும் வெவ்வேறு வகையாக இருப்பதால் இவற்றை எட்டுத்திக்கு யோனியின் (பிறவி) என்று அவ்வத்தன்மையுடைய விலங்கினம் பறவை இனத்தால் சித்தர்கள் கணித்து அதன் விளைவுகளைச் சிக்கெனத்தெளிவு படுத்தித் தந்துள்ளனர் இவற்றிற்கும் ஐம்பூத இயக்கத்தால் செயல்படும் பஞ்சபட்சி, வெவ்வேறு நிலைகளுக்கும் தொடர்பு உள்ளதைக் கண்டு இன்னின்ன பட்சிக்கு யோனி, திக்கு இவை இவை என்றும் தெளிந்து சத்ரு மித்ரு எவை எவை என்ப தெல்லாம் அறிந்து அது வாழ்க்கைக்குப் பயன்படும் விதத்தையும் சித்தர்கள் கூறி யுள்ளனர். இதுவே அட்டதிக்குயோனியும் பஞ்சபட்சியும் என்ற தலைப்பில் இங்கு எழுதப்படுகிறது. இந்த செய்தி சுவடி எண் 868 "பஞ்சபட்சிபலத்திரட்டில்" பரக்கப் பேசப்படுகிறது. 46-ம் பக்கம் முதல் 59-ம் பக்கம் வரையில் குறிப்பாலும் வெளிப் படையாகவும் இது எழுதப்பட்டிருக்கிறது. இதன் விளக்கம் வருமாறு.

## எண்சீர் ஆசிரிய விருத்தம்

**சேனை திசை சுகைதிசை சீர தாக**
**சிங்கதிசை யானைதிசை பேசிசா ணாது**
**பூவைதிசை அரவுதிசை எலியி னோடு**
**பொருந்து முயற் திசையோடு பொருந்தும் பட்சி**
**மோனமொன்றுன் சூக்ஷதிசை தான் தாக**
**முன்தினமே பிராணதிசை யுண்மை யாக**
**பானல்மொழி மடமாதே பட்சி பாகம்**
**பார்த்திடுவர் ஐந்தொழிலின் பலன்கள் தாமே.**

(இ-ள்.) கிழக்கு முதலாக கிழக்கில் கருடன், தென்கிழக்கில் பூனை, தெற்கில் சிங்கம், தென்மேற்கில் நாய், மேற்கில் பாம்பு, வடமேற்று எலி, வடக்கு யானை, வட கிழக்கு முயல் திசை ஆக எட்டுத் திக்குகளிலும் நேருக்குநேர் பகை யோனிகளாக இயங்கும். இவற்றோடு 5 பட்சிகளையும் பொருத்தி, திசைகளில் யோனிகள் செயல்படும் சூக்குமத்தையும் ஒன்றுக்கு மற்றது இரையாகும். (பிராணன் விடும்) திசைகளையும் நன்கு ஆய்ந்து பெரியோர் கூறுவர். இன்சொல் பேசும் கருங்குவளை போன்ற வாயுடைய மாதே அறிவாயாக என்பதாம்.

இது பாட்டின் வெளிப்படையான தெளிந்த உரையாகும். மேலும் சுவடியில் மேற்படி பாட்டுக்கு உரையும் விளக்கமுகமாக யோனி, பட்சி, கோள்கள், வாரங்கள் இவற்றைத் தொடர்பாக்கிப் பல ஆற்றொழுக்கான அரிய செய்திகள் சொல்லப் படுகின்றன. அவற்றை ஒவ்வொன்றாக விளக்குவோம். முதலில் பஞ்சபட்சிக்குரிய அட்ட திக்கு யோனிகள் இவற்றின் எழுத்து, நட்சத்திரங்கள் முதலியவற்றைச் சூடாமணி உள்ளமுடையான் என்ற நூலிலும், இச்சுவடியிலும் உள்ளவற்றின் அடிப்படையில் பின்வரும் அட்டவணையில் காண்க.

### அட்டவணை - 60. யோனி - திக்கு பட்சி வகை

| யோனி பெயர் | யோனி எழுத்து | பட்சி எழுத்துடன் | | திக்கு | யோனிக்கு குபய கோளும் திசையாண்டும் |
|---|---|---|---|---|---|
| | | அமர பட்சம் | பூர்வ பட்சம் | | |
| கருடன்<br>பூனை | அ<br>க | மயில்<br>எ | வல்லூறு<br>அ | கிழக்கு<br>தென் கிழக்கு | செவ்வாய் 7<br>புதன் - 17 |
| சிங்கம் | ச | கோழி<br>அ | ஆந்தை<br>இ | தெற்கு | குரு - 16 |
| நாய்<br>பாம்பு | த<br>ந | காகம்<br>ஒ | காகம்<br>உ | தென் மேற்கு | சுக்கிரன் - 20<br>சனிதிசை - 19 |
| எலி | ப | ஆந்தை<br>உ | கோழி<br>எ | வடக்கு மேற்கு | சூரிய திசை 6 |
| யானை<br>முயல் | ம<br>வ | வல்லூறு<br>அ | மயில்<br>ஒ | வடக்கு<br>வடகிழக்கு | சந்திரன் - 19 |
| --- | -- | --- | --- | ஆகாயம் | இராகு - 18<br>கேதுதிசை - 7<br>(மோட்சதிசை) |

**குறிப்பு:** *பட்சிகளுக்குரிய யோனிகள் சூடாமணி உள்ளமுடையானில் கண்ட படியாகும். மற்றவை பஞ்சபட்சி பலதிரட்டு சுவடி 868ல் உள்ளது.*

*1) வளர்பிறையிலும் - தேய்பிறையிலும் ஒருவர் பிறந்த நட்சத்திரத்திற்கு ஏற்றவாறு அமையும் புரட்சி நட்சத்திரப் பட்சியாகும். (பூர்வ, அமரபட்ச படலங்களில் விளக்கம் காண்க.) இது இரு பட்சங்களிலும் வேறுபடும். இது தனி.*

2) அடுத்து அவர் அவர் பெயர் எழுத்துக்குரியயோனி நாமயோனியாகும். இப்படிப் பார்க்கும்போது நாமயோனிக்குரிய பட்சியும், நட்சத்திர பட்சியும் ஒன்றாக வந்தால் யோனிப்படி, தன்னுடன் மற்றவர் வலு தராதரம் அறிந்து, அந்த பட்சியின் வலுவையும் பட்சியின் தொழிலுக்குகேற்ப உயர்வு தாழ்வை நிர்ணயம் செய்ய வேண்டும்.

3) வல்லூறு, காகம், மயில் இவற்றிற்கு இரண்டு யோனிகள் வருவதால் பெயர் யோனிப்பட்சியும், நட்சத்திரப்பட்சியும் வேறாக வரலாம். அப்பொழுது நாம யோனிப்படி உள்ள பட்சியின் வலுவுப்படியே சீர்தூக்கிப் பார்த்து உயர்வு தாழ்வை நிர்ணயம் செய்ய வேணடும்.

4) யோனிகள் நடக்கும் வகை: பட்ச ஆரம்ப தினம் முதல் தினமும் கிழக்கில் கருடன், தென்கிழக்கில் பூனை, தெற்கில் சிங்கம். தென்மேற்கில் நாய், மேற்கில் பாம்பு, வடமேற்கில் எலி, வடக்கில் யானை, வடகிழக்கில் முயல், இவ்விடையில் ஒவ்வொன்றும் சாமம் ஒன்றுக்கு 3¾ நாழிகை வீதம் பகல் 8 சாமமும் இரவு 8 சாமமும் தினந்தோறும் சுற்றிவருவார். பூர்வத்தில் வலமாகவும் அமரத்தில் இடமாகவும் சுற்றி வருமென்க.

## யோனி எழுத்துக்கள்
### அறுசீராசிரிய சந்த விருத்தம்

76, அகரம் ககரம் சகரம் தான்
 தகரம் நகரம் பகரமொடு
மகரம் வகர மதுபருந்து
 முதலாக் கொண்டு உடனெண்ணி
நிகரம் எட்டும் தான்திறுத்தி
 நேராய் நடுவில் இவை ஐந்தும்
புகவே சேர வெற்றியது
 பொருந்தம் பட்சி இயம்புகவே.

(இ-ள்) 8 யோனிகளுக்கு எழுத்துக்களைக் கூறுவது அட்டவணை எண் 60 காண்க. அ, க, ச, த, ந, ப, ம, வ, முறையே இவ்வெட்டெழுத்தையும் கிழக்குமுதல் ஈசான்யம் வரை அடைத்து கருடன், பூனை, சிங்கம், நாய், பாம்பு, எலி, யானை, முயல் வரை எட்டையும் யோனிகளாக்கி, மேற்குறித்த எழுத்துக்களாலும் அவர் அவர் பட்சிகளாலும் (யோனிக்குரிய பெயர் பட்சி அல்லது நட்சத்திரப் பட்சி - விளக்கம் 60 வது அட்டவணை பிற்குறிப்பு காண்க) அவற்றின் லக்ன பலமும் உறவு பகை வெற்றி தோல்வி முதலிய பலாபலன்களை அறிந்து சொல்க.

மேற்கண்டவற்றின் விளக்கம் கீழ்க்கண்ட சக்கரங்களாலும் பதகத்தாலும் அறிக.




படம் — 4

**ஒன்பது கோள் எட்டு யோனியும் பஞ்ச பட்சியும்**
**வளர்பிறை**




படம் — 5

**ஒன்பது கோள் எட்டு யோனியும் பஞ்ச பட்சியும் தேய்பிறை**

## அமரபட்சம்

(விளக்கம்) மேலே 75 ம் பாடல் 76-ம் பாடல் இவற்றின் உரை சுவடியில் கண்டபடிக்கு மேலே இவ்வளவு விளக்கமும் இச்சக்கரங்களும் அமைக்கப்பட்டன.

வளர்பிறையில் தினமும் ஒவ்வொரு 3¾ நாழிகை கொண்ட முகூர்த்த காலமும் அதவாது 1½ மணி நேரம் வளர்பிறை அமாவாசை அடுத்த பிரதமை காலை சூரிய உதயம் முதல் 8 யோனிகள் 5 பக்ஷிகளும் 9 கோள்களும் படத்தில் காட்டிய வகையில் பகல் 8 முகூர்த்தம் அல்லது சாமமும், இரவில் 8 முகூர்த்தம் அல்லது சாமமும் ஒன்றுக்குப்பின் ஒன்றாகச் செயல்படுகின்றன, வளர்பிறையில் இவை படத்தில் அம்புக்குறி இட்டுக் காட்டியபடி வலமாகவும் தேய்பிறையில் அதே போல் தேய்பிறைப்படத்தில் அம்புக்குறி இட்டுக் காட்டியபடி இடமாகவும் ஒன்றுக்குப் பின் ஒன்றாகச் செயல்படுகின்றன.

ஒவ்வொரு 1½ மணி நேர முகூர்த்தத்திலும் யோனிபக்ஷி, கோள் இவற்றின் பாதிப்பு அந்தந்த திக்கில் இருக்கும்.

இந்த யோனிகளைப் பற்றி மற்றும் ஒரு விளக்கம் தேவைப்படுகின்றது. திக்குகளில் காட்டப்பட்ட யோனிகள் ஒன்றுக்கொன்று பகையாகும். அவற்றில் வலுத்த யோனிக்கு மெலிந்த யோனி இரையாகும். வலுத்த யோனியுடையவர் இளைத்த யோனியுடைய திக்கில் சென்றால், முயற்சித்தால், அந்த யோனியுடைய வருடன் மோதினால் நிச்சயம் வெற்றி பெறுவர்.

### இவ்வகையில்

1. கருடனுக்கு இளைத்த யோனி இரையாகும். யோனி-பாம்பு
2. பூனைக்கு இளைத்த யோனி இரையாகும். யோனி-எலி
3. சிங்கத்திற்கு இளைத்த யோனி இரையாகும். யோனி-யானை
4. நாய்க்கு இளைத்த யோனி இரையாகும். யோனி-முயல்

இவ்வகையில் மேலே சொன்னதற்கு மாறாக இரையாகும். இளைத்த யோனி யுடையவர் இரையெடுக்கும் வலுத்த யோனியுடைய திக்கில் சென்றாலும், முயற்சித் தாலும், அப்படிப்பட்ட வலுத்த யோனியுடையவருடன் மோதினாலும் தோல்வி, துன்பம், நட்டம் நிச்சயம் அடைவர்.

தன்பக்ஷி தொழிலால் வலுத்த அதற்குரிய யோனியும் வலுத்து, அதற்குரிய கோளின் கிழமை, நாள் அல்லது ஓரையும் அமைந்து காரியங்களில் நேர்எதிர் திக்கில் ஈடுபட்டால் நிச்சயம் வெற்றி. மாறானால் தோல்வி.

உதாரணமாக வளர்பிறை முதல் சாமத்தில் காலை 7½ மணிக்குள் கிழக்கில் உள்ள கருடன் யோனியுடையவர். அன்று அவர் பக்ஷி வல்லூறும் ஊண் அரசு

அதிலேயே ஊண் அரசு சூக்கும நேரமாக இருந்து செவ்வாய் ஓரை கிழமை அமைந்து நேர் எதிர் திக்கில் பாம்பு யோனியுடையவருடன் மோதினால் வெற்றி இதே நிலையில் பாம்பு யோனியுடையவர் மேற்கிலிருந்து கிழக்கில் கருடன் யோனியுடையவருடன் மோதினால் தோல்வி, துன்பம் இப்படியே எல்லாவற்றிற்கும் கொள்க.

இதேபோல் புதுமனை புகுதல், ஊர்ப்பயணம் செல்லல் இவற்றிற்கும் தமக்குச் சாதகமானவற்றையே கொள்ளவேண்டும்.

கேதுகிரஹத்திற்குத் திக்கு ஆகாயம் ஆனதால் அத்திக்கு வலு இழந்திருக்கும் போது அத்திக்கில் வான ஊர்தியில் (Aeroplane) செல்லத்தகாது. தவிரவும் செவ்வாயும் கேதுவும் ஒருத்தன்மையே (சனிவத்ராஹூ: குஜவத் கேது) என்ற வடமொழி மேற்கோள் காண்க. ஆகையால் செவ்வாயின் யோனியும் திக்கும் அதற்கு ஒதுக்கப் பட்டது.

இனி மற்றொரு முக்கியமான செய்தியும் தெரிந்து கொள்ள வேண்டும். மேலே குறிப்பிட்ட எட்டு யோனிகளும் குறிப்பிட்டத் தமிழ் மாதங்களில் தமக்கு நேர்எதிர் யோனியாகும். அ சுவடி எண் "777" அகத்தியர் பஞ்சபக்ஷி சாத்திரம் இதுபற்றி சுவடியின் கடைசிப் பக்கத்தில் கூறுகிறது.

## யோனி திசை மாறும் விதம்

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

77. சித்திரை மூன்று மாதம் சிறுபுலி பூனை யாகும்
மற்றொரு மூன்று மாதம் வருமுயல் நாய நாகும்
ஐப்பசி மூன்று மாதம் அரிஎதிர் யானை யாகும்
தையொரு மூன்று மாதம் சர்ப்பமும் கருட னாமே.

(இ-ள்)

1) சித்திரை, வைகாசி, ஆனி, மாதங்களில் எலி இருக்கும் திக்குக்குப் பூனை மாறும், அதாவது படத்தில் உள்ளபடி இந்த மாதங்களில் எலி பூனையை வெல்லும்.

2) ஆடி, ஆவணி, புரட்டாசி மாதங்களில் முயல் இருக்கும் திக்குக்கு நாய் செல்லும். அதாவது இம்மாதங்களில் நாயை முயல் வெல்லும்.

3) ஐப்பசி, கார்த்திகை மார்கழி இம்மூன்று மாதங்களில் யானை இருக்கும், இடத்திற்குச் சிங்கம் மாறும். அதாவது சிங்கத்தை இம்மாதங்களில் யானை வென்று விடும்.

4) | தை, மாசி, பங்குனி இம்மூன்று மாதங்களில் பாம்பு கருடனிருக்கும் திசைக்குச் செல்லும். அதாவது இம்மாதங்களில் பாம்பு கருடனை வென்றுவிடும் என்னலாம்.

பாட்டில் அரியெதிர் அதாவது சிங்கத்திற்கு எதிராக யானையாகும் என்றதால் சொன்ன மாதங்களில் யோனிகள் (இளைத்தவை) இடம் மாறும் என்பதற்கு மாறாக இளைத்த யோனிகள் அந்தந்த சொல்லப்பட்ட மாதங்களில் வலுவான யோனிகளை வென்றுவிடும் என்பதே சரியான பொருளாகும். எனவே தத்தம் யோனிகளின் இம் மாதங்களில் நிலையறிந்து இதுவரை சொன்ன விதிகளின்படி ஈடுபட்டால் எதிலும் வெற்றி என்பதில் ஐயமில்லை.

குறிப்பு; இங்கு சொல்லப்பட்டவை பஞ்சபட்சி மற்றும் மனையடி சாஸ்திரத்தில் பயன்படும் நாம யோனிகளாகும். நட்சத்திரத்திற்குத் தனியாக உள்ள தாம்பத்ய சுக வாழ்வுக்குப் பொருத்தம் பார்க்கும் யோனி அல்ல. அதுவேறு இதுவேறு என்றறியவும்).

## பெயரெழுத்தால் பகையோனி நட்பு யோனி அறியும் வகை

பெயரெழுத்தைக் கொண்டு (முதல் எழுத்து) ஒருவர் யோனியை நிச்சயம் செய்கின்றோம். இவற்றில் யாருக்கு யார் உறவு யோனி அல்லது பகை யோனி என்பதை அறிய வழியைக் கூறுகிறது. இது பலர் அச்சிட்ட வெவ்வேறு பஞ்சபட்சி சாத்திர நூல்களில் இருப்பதால் தொடர்புடைமை கருதி இங்கு அவற்றிலிருந்து எடுத்தெழுதி விளக்கப்படுகிறது.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

78. பேரெழுத் தெண்ணி எழிற் பெருக்கியே எட்டுக் கீந்து
பாரமாய் நின்ற சேடம் பருந்து முன்னாக எண்ணி
நேரதே யோனி என்றும் நின்றதே பகையு தாகும்
ஏரதாய் கரிமுன் எண்ணி இயல்புடன் யோனி காணே.

(இ-ள்) பெயர் முதலெழுத்துப்படி யோனிகளை முடிவு செய்து உறவு பகை யோனிகளை முடிவு செய்து இதுவரை முன்னாள் விளக்கப்பட்டது.

ஆனால் ஒருவர் தம் முழுப்பெயராலேயே குறிக்கப்படுவதால் முழுப்பெயரிலுள்ள எழுத்துக்களின் அடிப்படையிலேயே யோனியை முடிவு செய்வதுதான் முறையாகும். இதிலும் இயல்பான வழியில் இல்லாமல் பெயரின் எழுத்துக்களின் மொத்த இயல்பால் யார் உறவு, யார் பகை என்பதையும் இது விளக்குவதாகும்.

அதாவது ஒரு பெயர் எழுத்துக்களை (மெய்நீக்கி) எண்ணி அதனை ஏழால் பெருக்கி எட்டால் வகுத்து வந்த மீதியை எண்ணிக் கருடன் முதலாக முறையாக எண்ணி வருவது அப்பெயருடையவரின் யோனியாகும். இப்படி வரும்போது இருவரில் யார் ஜெயிப்பார் என்பதை விளக்கும் செய்யுள் வருமாறு.

## இரு யோனியரில் வெற்றி பெறுபவர்

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

79. ஒருவரை ஒருவர் வெல்லும் உபாயத்தை அறிய வேண்டின்
இருவர்தம் பெயரில் உள்ள இயலெழுத் ததனை எண்ணி
பெருகிய பத்தினாலே பெருக்கியே எட்டுக்கிய
சிறியவர் பெரியவர்க்குத் தோற்பது திண்ணம் தானே.

(இ-ள்) இரண்டு யோனியுடையவரில் எவர் ஜெயிப்பர் என்பதை அறிய இருவர் பெயரிலுள்ள (மெய்நீக்கிய மற்ற) எழுத்துக்களை எண்ணி தனித்தனியாக ஒவ்வொன் றையும் 10-ஆல் பெருக்குக. அவற்றைத் தனிதனி எட்டால் வகுக்கவும். அதில் வரும் சேடம், அதாவது மீதி எண் எது பெரியதோ அதனையுடையவர், சிறிய எண் மீதமாக வந்தவரை வெற்றி கொள்வார் என்பதாம்.

விளக்கம்: 78-ம் பாடல் உதாரணம். ஒருவர் பெயர் கணபதி என்று கொள்வோம். இந்தப் பெயரில் உள்ள எழுத்துக்கள் 4 (பெயரில் மெய்யெழுத்துக்கள் இருந்தால் அதைத்தள்ளி விடவேண்டும். இராமச்சந்திரன் இதில் 8 எழுத்துக்கள் மெய்யெழுத் துக்களை நீக்க 6 ஆகும்). இதற்கு யோனியும் பகையோனியும் வருமாறு.

| | | |
|---|---|---|
| கணபதி | = | $4 \times 7 = 28$ இதை |
| எட்டால் வகுக்க | | $28 / 8 = (28 - 24)$ |
| | | ஈவு = 3, மீதி 4 |

மீதி 4 இதை கருடன் முதலாக எண்ண யோனி நாய் ஆகும். எனவே கணபதி என்ற பெயருக்கு இந்த முறையில் நாய் யோனியாகும்.

ஈவு 3 இதை கருடன் முதலாக எண்ண சிங்கம் வரும். எனவே இக்கணித முறையில் கணபதி என்ற பெயருடைய இவருக்கு மட்டும் சிங்க யோனியுடைவர் பகை யாகும் (நாய் ≠ யோனிக்குப்பட்சி இருபட்சத்திற்கும் காகம் யோனி சக்கரங்கள் காண்க. சிங்க யோனிக்குப் பட்சி வளர்பிறையில் ஆந்தையும், தேய்பிறையில் கோழி யும் ஆகும். பட்சிப்படியும் பலாபலன் வலிமை நிச்சயம் செய்யவேணும்)

79-ம் பாடல் கணபதி, இராமச்சந்திரன் என்ற இரு பெயரைப் பார்ப்போம் இரு வரில் யார்வெல்வர் என்பதற்குக் கணிதம் (குறிப்பு பெருக்கு முதலில் வரும் குறியீட்டு எழுத்துக்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். (Initials) குறியீட்டு எழுத்து)

1) கணபதி பெயர் எழுத்து = 4 இதை 10ல் பெருக்க 40. 8ஆல் வகுக்க ஈவு5 மீதி இல்லை. எனவே மீதி எண் முழுமையாக 8 ஆகக் கொள்ள வேண்டும்.

2) ராமச்சந்திரன் இதில் மெய் எழுத்து நீக்கி எழுத்துக்கள் 6, 10ல் பெருக்க 60, இதை 8ல் வகுக்க 7 ஈவு மீதி 4 கணபதிக்கு 8 ஆகவும் ராமசந்திரனுக்கு 4 ஆகவும் வந்தால் பெரிய எண்ணையுடைய கணபதி சிறிய எண் உடைய ராமச்சந்திரனை ஜெயித்து விடுவார் என்று கொள்ளவேண்டும்.

குறிப்பு: பெயரின் முதலெழுத்தைக் கொண்டு யோனியை முடிவு செய்து, வலுவுள்ள யோனி இளைத்த யோனியை வெற்றி கொள்வதை அறிவது சாதாரண முறையாகும். இதுவே 75, 76, 77ம் பாடல்களில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

பெயரின் முதலெழுத்தால் இல்லாமல் பெயரில் உள்ள மொத்த எழுத்துக்களால் மேற்படி கணித முறைப்படி யோனி நிர்ணயம் செய்வதும், உறவு, பகை, வெற்றி இவற்றை உறுதி செய்வதும் சிறப்பு விதியாகும். முன்னது பெருவழக்காகவும் பின்னது இன்றியமையாதபோது கொள்வது.

அடுத்து சுவடி 868 பஞ்சபட்சி பலத்திரட்டில் பக்கம் 54 முதல் 59 வரையில் தனித்தனியாகக் கொடுத்துள்ள சாமம் தோறும் யோனிகள் நிற்கும் திசை கோள் முதலியவற்றைத் தொகுத்து பின்வரும் அட்டவணையில் காட்டியுள்ளோம் அறிந்து கொள்க.

## அட்டவணை 61 யோனிகள் சாமம் தோறும் நிற்கும் திசை கோள் முதலியன.

| திக்கு | கோள் | 1 ம் சாமம் | 2 ம் சாமம் | 3 ம் சாமம் | 4 ம் சாமம் | 5 ம் சாமம் | 6 ம் சாமம் | 7 ம் சாமம் | 8 ம் சாமம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| கிழக்கு | சூரியன் | கருடன் | முயல் | யசனை | எலி | பாம்பு | நாய் | சிங்கம் | பூனை |
| தென் கிழக்கு | செவ்வாய் | பூனை | கருடன் | முயல் | யானை | எலி | பாம்பு | நாய் | சிங்கம் |
| தெற்கு | வியாழன் குரு | சிங்கம் | பூனை | கருடன் | முயல் | யானை | எலி | பாம்பு | நாய் |
| தென் மேற்கு | புதன் | நாய் | சிங்கம் | பூனை | கருடன் | முயல் | யானை | எலி | நாகம் (பாம்பு) |
| மேற்கு | சுக்ரன் | பாம்பு | நாய் | சிங்கம் | பூனை | கருடன் | முயல் | யானை | எலி |
| வட மேற்கு | சனி | எலி | பாம்பு | நாய் | சிங்கம் | பூனை | கருடன் | முயல் | யானை |
| வடக்கு | சந்திரன் | யானை | எலி | பாம்பு | நாய் | சிங்கம் | பூனை | கருடன் | முயல் |
| வட கிழக்கு | இராகு | முயல் | யானை | எலி | பசம்பு | நாய் | சிங்கம் | பூனை | கருடன் |

## 23. எதிரிகளை மடக்கும் வகை வெல்லும் வகை)

இதுவரை முதல் மூன்று படலங்களில் பொதுவான பஞ்சபட்சி இயற்கை, தொழில் இன்னும் தொடர்பான பலவும் சொல்லப்பட்டன. இப்பொழுது பஞ்ச பட்சி யின் தொழிலைப் பயன்படுத்தி எதிரியை வெல்லும் வகை கூறப்படுகிறது.

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

80 வகைஎன்ன எதிரியைத்தான் தூக்கம் சாவில்
வைத்துநீ உணவரசில் இருந்து கொண்டு
நகைஎன்ன கேட்பவனை நடையில் வைத்து
நவிவே எதிரியுமே நழுவிப்போவான்
துகைஎன்ன சத்துருவின் பகையா காது
துடராமல் இருப்பதற்கு எழுத்து மாறு
பகைஎன்ற சொல்போச்சு உறவுண் டாச்சு
பார்த்தவர்கள் சமர்த்தனென்று பகருவாரே

(இ-ள்) எதிரியை வெல்ல வேண்டுமாயின் அவனுக்கு துயில் அல்லது சாவு தொழில் நடக்கும் போது நமக்கு அரசு, ஊண் சமமாக அமைத்துக் கொண்டு அல்லது எதிரியை நடைத்தொழில் சமயத்தில் நாம் அரசு, ஊண் தொழில் வரும் சமயமாகப் பார்த்து அவனுடன் விவகாரம் பண்ணினால் எதிர் நிற்க மாட்டான், நழுவிப்போய் விடுவான். அப்படி முடியாமல் நம் தொழில் சரியாக அமையாவிட்டால் பஞ்சாட்சர வழிபாட்டில் நம் தொழிலுக்கேற்ற எழுத்தை முதலில் மாற்றிவைத்துப் பூசித்து (உருவேற்றி) ஈடுபட்டால் (விளக்கம் 74ம் பாட்டுரையில் காண்க) பகை நீங்கும். அதே பகைவன் நண்பனாகி விடுவான். நம் காரியம் வெற்றியாகும். (இதன் உள் மர்மம் தெரியாததால்) எல்லாரும் நம்மைச் சமர்த்தன் என்று சொல்லுவார்கள்.

விளக்கம்: எதிரி தொழில் தாழ்ந்தும் நம் தொழில் ஓங்கியும் இருக்கும் சூழ்நிலையாகப் பார்த்து பூர்வபட்சப் படலத்தில் 28, 29ம் பாடல்களிலும், அமர பட்சப் படலத்தில் 42, 43ம் பாடல்களிலும் சொல்லப்பட்ட வகையிலாவது, இப் படலத்ம்ல் 21வது எண்ணுள்ள தலைப்பில் "பட்சி முத்து பூரணபட்சி" என்றதில் சொல்லப்பட்ட வகையிலாவது நமது பட்சியின் முக்கியத் தொழில் அல்லது சூக்குமத் தொழில் ஊண், அரசு இதில் முழு வலுவு பெற்றிருக்கும் சமயத்தில் இதே வகையில் எதிரி பக்ஷி வலு இழந்து நடை, துயில், மரணம் இவற்றில் இருக்கும் போது எதிரியுடன் விவகாரம் பண்ணினால் நமக்கு வெற்றி நிச்சயம் உண்டாகும் என்பதாம். இப்படி முடியாமல் எப்படியும் எதிரி பட்சி தம்மை விட ஓங்கும் நிர்ப்பந்தமான சூழ்நிலை வந்துவிட்டால் பஞ்சாக்ஷர எழுத்து மாற்றி வழிபடும் முறையில் அப்போது நமக்கு நடக்கும் தொழிலுக்கேற்ப இப்படலம் 74ம் பாட்டில் சொன்னபடி அமைத்து வழிபட்டு ஈடுபட்டு விவகாரம் பண்ணினால் நமக்கு வெற்றி நிச்சயம் என்று சொல்லப் படுகிறது. "பகை ஆகாது துடராமல் இருப்பதற்கு எழுத்து மாறு" என்று பாடலின் வரியின் பொருள் இதுவேயாகும். அடுத்த பாடலும் அதையே சொல்வதாகும்.

## எண்சீர் ஆசிரிய விருத்தம்

81. கருமமென்ன ஊணரசு நமக்கு நன்று
காரியங்கள் கைகூட வைக்கும் மூலம்
வருமளவும் பூசியாமல் நமக்குண் டான
வழக்குவெல்லும் படைபோனால் வரலாம் வெற்றி
திருமகளும் கைகூடும் பெண்ணும் கூடும்
நிதிசேரும் பிணிதீரும் நேமம் முற்றும்
தருமமது தலைகிட்டும் மூலத் தாலே
சகலத்தின் பொசிமூலம் கீரை தானே

(இ-ள்) ஊண், அரசு, இத்தொழில் சூக்குமங்களில் நமக்கு இருக்கும் போது (முன் பாடலில் சொல்லப்பட்ட விதத்தில்) ஈடுபட்டால் இதுவே நம் காரியங்கள் கைகூடுவதற்கு அடிப்படையான வழியாகும். இதனால் நம் வழக்கு வெல்லும், நம் படையெடுப்பு வெற்றியடையும், செல்வம் உண்டாகும். நாம் விரும்பியபடி பெண் கிடைத்துத் திருமணம் கூடும் பொருள் வரத்து பெருகும். நோய் நீங்கும். நம் குறிக்கோள் கைகூடும். தருமமான நியாயமான முறையில் காரியங்கள் கட்டாயம் நிறைவேறும். எல்லாவற்றிற்கும் ஆதாரமான அஷ்ட கன்ம வகையில் மூலிகையையும் இணைத்து வழிபட்டு பிரயோகமும் செய்தால் மேலும் பெருநன்மை உண்டாகும்.

குறிப்பு: கடைசி வரிசையில் நாம் முன்னர் சொல்லியுள்ள மந்திர அட்ட கன்மத்திற்கு பக்ஷிகளின் உரிய மூலிகை வேரை எடுத்துப் பயன்படுத்தும் அட்ட கன்மம் சொல்லப்படுகிறது. இது உபதேச கிரமத்தில் வரவேண்டும். ஆகையால் இவற்றை முழுமையாக விளக்கக்கூடவில்லை. ஆனால் இது இல்லாமலேயே நம் தொழில் வலுத்து ஈடுபட்டால் நம் காரியங்கள் வெற்றி அடையும் என்பதில் ஐயமில்லை. "தருமமது தலைகிட்டும்" என்பதால் நியாயமான காரியங்களுக்குத்தான் ஈடுபடுதல் நல்லது என்பதைச் சித்தர்கள் சுட்டிக்காட்டுகின்றார்கள் என்றறியவும்.

# 7. சாதகப் படலம்

## (பிறப்பு வகை அறியும்படி)

ஒருவன் பிறந்த நேரத்தைக் கொண்டு லக்னம் ராசி முதலியவை கணித்து ஜாதகம் அமைத்துப் பலன் காணுவது ஜோதிடத்தில் உள்ள முறையாகும். அதே போல் ஒருவன் பிறந்த பக்ஷியின் தொழில் அதில் எந்த சூக்குமத்தில் (வினாடியில்) பிறந்தானோ அதன்படி அவன் வாழ்நாள் அமையும். அவற்றை இங்குச் சொல்லுவதால் இதற்கு ஜாதகப் படலம் என்று பெயர் பஞ்சபட்சி நூல்களில் இடப்பட்டுள்ளது. "அகத்தியர் பஞ்சபட்சி சாத்திரம்" என்ற 777 என்ற எண்ணுள்ள சுவடியில் இதற்கு "பிறப்பு வகை அறியும்படி" என்ற தலைப்பு காணப்படுகிறது. அதில் உள்ள பாடல் களின்படி இப்படலம் விளக்கப்படுகிறது. இப்பாடல்கள் பெரும்பாலானவை இதே வடி வில் அச்சிட்ட "உ.ரோமரிக்ஷி வினாடி பஞ்ச பக்ஷி" என்ற நூலிலும் காணப்படுகிறது. எனவே சித்தர் மரபில் வந்தவர் ஒருவர் செய்த நூலிலுள்ள பாடல்களை மற்றவர்களும் தம் நூல்களுள் சேர்த்து எழுதினர் என்பது வெளிப்படை. இதுபோல் இந்தச் சுவடியில் உள்ள யாத்திரை, ருதுவாதல், மனைவீடுகட்டல், பற்றிய பாடல்கள் எல்லாம் அப் படியே மேற்கண்ட அச்சிட்ட நூலில் உள்ளன.

ஒருவன் பஞ்சபட்சியின் எந்தப்பட்சியின் எந்தத் தொழிலின் எத்தனையாவது வினாடியில் பிறந்தான் என்பதைக் கணித்தறியும் விஷயம் நுதலிப்புகு படலத்தில் 11-வது பதகத்தினைத் தொடர்ந்து விளக்கப்பட்டுள்ளது. இதை மேலும் தெளிவு படுத்த வேண்டியுள்ளது.

ஜோதிட சாத்திரப்படி ஜாதகத்தில் ஜென்ம லக்னம் என்பது ஒருவன் பிறக்கும் போது கிழக்கே தொடு வானத்தில் ராசி மண்டலத்தின் உதிக்கும் ராசியின் பாகை யாகும் (Rising Degree of the Zodiac at the eastern Horizan at the time of Birth). ஆனால் சந்திரன் அதே நேரத்தில் சஞ்சாரம் செய்யும் நட்சத்திரம் ஜென்ம நட்சத்திரமாகவும் அந்த நட்சத்திரம் இருக்கும் ராசியே ஜென்மராசியும் ஆகும். ஜன்ம லக்னத்தைக் கொண்டும் அப்போது அமைந்த கோள் நிலை ஜாதகத்தைக் கொண்டும் ஒருவன் வடிவம், குணம், வாழ்க்கை அமைப்பு முதலியவற்றை அறிகிறோம்.

ஜென்ம நக்ஷத்திரத்தை அடிப்படையாகக் கொண்டு வாழ்க்கையில் ஆரம்பித்து நடக்கப் போகும் தசா புத்திகள் மற்றும் ஜென்ம ராசியை மையமாகக் கொண்டு அன்றாட வாழ்க்கையில் அவ்வப்பொழுது அமையும் கோள்நிலைப் பலன்கள் (Directional results of planets and transitual effects of planets) இவற்றை அறிகிறோம்.

1) ஜாதகத்தின் ஜென்ம லக்னம் தொட்டு அறிவது பிறப்பின் நேர அடிப் படையில் அமையும் நிரந்தர வாழ்க்கையின் ஒட்டு மொத்தமான அமைப்பு.

2) ஜென்ம நக்ஷத்திரம் தொட்டு அதன் அதிபதி தொடங்கி கோள்கள் நடத்தும் தசாபுத்தி பலன்கள்.

3) ஜென்ம ராசியை மையமாகக் கொண்டு அன்றாட அமைப்பில் அவ்வப் பொழுதைய கோள்நிலையால் ஏற்படும் கோசர பலன்கள், இப்படி மூன்று விதமாக ஜோதிடத்தில் பலன்களை நாம் அறிகிறோம்.

இதேபோன்று பஞ்ச பக்ஷியிலும் நாம் பலன் அறியும் வழியைச் சித்தர்கள் கூறியுள்ளனர். அதன் வகையும் அமைப்பும் வருமாறு:

## 1. பிறப்புப் பக்ஷி அல்லது ஜன்ம பக்ஷி

பூர்வ அமர பக்ஷங்களில், பகல் இரவுகளில் காலை உதயம் தொடங்கி 6 நாழிகை வீதம் பஞ்ச பூத தத்துவங்களில் ஒவ்வொன்றும் உச்ச கட்டத்தில் ஆட்சி செய்கின்றன. அதே சமயம் மற்ற பூத தத்துவங்கள் வெவ்வேறு விகிதங்களில் இயங்கு கின்றன. இவையே பஞ்ச பக்ஷியின் இயக்கங்கள் என்று நாம் ஆராய்ச்சி முன்னுரை யிலும் நுதலிப்புகு படலத்திலும் விளக்கியுள்ளோம். இப்படி இருக்கும் போது ஒருவன் பிறக்கும் போது அவன் பிறந்த ஜாமத்தின் கணக்குப்படி எந்த பூததத்துவம் எந்த விகிதத்தில் இயங்குகிறது என்பதையும் காணமுடியும். அப்போது இயங்கும் பூதத்தத் துவம் பக்ஷி என்றும் அதன் இயக்கவிகிதம் அதில் அது நடத்தும் தொழிலின் சூக்கும சிறு பொழுது அல்லது வினாடி என்றும் பெயர். இதுவே ஜாதகத்தில் லக்னத்துக்குச் சமமான பிறப்புப் பக்ஷியும் அதன் தொழில் வினாடியும் ஆகும். இப்போது நுதலிப்புகு படலம் 11-வது அட்டவணை தொடரும் விளக்கத்தைப் பாருங்கள். அதில் உள்ள விளக்கப்படி , அதில் காட்டப்பட்ட உதாரணப்படி பிறந்தவன் ஆந்தையின் ஊண் காலத்தில் அதாவது 5-ம் ஜாமத்தின் ஊணின் முதல் வினாடியில் பிறந்துள்ளான், எனவே அவன் பிறப்புப்பக்ஷி (ஆந்தையில்) ஊண் பிறந்த வினாடி முதலாவது இதுவே ஜாதக காண்டத்தில் சொல்லப்போகும் பலன்களுக்குப் பொருத்தமான ஜன்ம லக்னத் திற்கு நிகரானதாகும்.

2. பஞ்சபக்ஷி மகா தசை விளக்கம்: ஜாதகதசா புத்தியைப்போல் ஒருவன் பிறந்த நக்ஷத்திரப்படி பக்ஷியை முடிவு செய்து அது பிறப்பு நேரத்தில் செய்யும் தொழில் களுக்கும் இவற்றில் அடிப்படையில் இன்ன பக்ஷியின் இனை தொழிலின் தசை ஆரம் பித்து எவ்வளவு நடக்கிறது அடுத்து ஆயுள் பூராவும் வரவேண்டிய பக்ஷியின் தொழில் தசை காலமும் நிர்ணயமும் செய்து பலன் அறிவது. இதுஜோதிடத்தில் தசாபுத்திக்குச் சமமானது. இது உதாரணத்துடன் இந்தப் படலம் கடைசியில் விளக்கப்படும்.

3. நக்ஷத்திரப் பக்ஷி : இது ஜென்ம நக்ஷத்திரத்திற்கு ஏற்ற பக்ஷியாகும். இதுவே அன்றாட வாழ்க்கைக்கு ஒருவன் பக்ஷியாகக் கொள்ள வேண்டும் உதாரண மாக ஒருவன் பிறந்த அன்று கிருஷ்ண பக்ஷத்துப் பூரம் என்று கொண்டால் அமர பக்ஷத்து நக்ஷத்திரப்பக்ஷி படி இவன் நக்ஷத்திரப் பக்ஷி கோழியாகும். இதையே இவன் வளர்பிறை தேய்பிறைஇரண்டிற்கும் தன்பக்ஷியாகக் கொண்டு அன்றாட வாழ்க் கைக்குப் பயன்படுத்த வேண்டும். இதுவே ஜோதிடத்தில் ஜென்ம நக்ஷத்திரத்திற்குச் சமமானதாகும்.

இந்த விளக்க அடிப்படையில் ஜாதகப்படலத்தைக் காண்போம்.

# முதல்-பகுதி

## 1. ஊண் முதல் வினாடியில் பிறந்த பலன்

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

82. சொல்லுகிறேன் ஊணதிலே முதல் வினாடி
துலங்குகின்ற குழந்தையது பிறந்ததானால்
அல்லல்என்ப தொன்றும் இல்லை சுகமாய் வாழும்
அப்பனே வயதவனுக் கறுபத் தஞ்சாம்
கல்லல்என்ற பிணியுமில்லை துன்பம் இல்லை
கவடில்லை வஞ்சகம்எக் காலும் இல்லை
நல்லபுகழ் உள்ளவனாய் ஆயுள் மட்டும்
நானிலத்தில் வாழ்ந்திருப்பன் நன்மை ஆமே.

(இ-ள்) மேற்காட்டிய கணித முறைப்படி ஒரு பக்ஷியின் ஊண் தொழிலில் முதல் வினாடியில் பிறந்தவனுக்குப் பலன் வருமாறு.

இவனுக்கு வயது 65 துன்பம் எதுவும் இராது. ஆயுள் பூராவும் சுகமாக வாழ்வான். வருத்தம் செய்யும் நோய் எதுவும் வராது. இவனுக்குக் கவடு, வஞ்சகம் ஆகிய குணங்கள் இராது. ஆயுள் வரை புகழுடன் வாழ்வான்.

## 2. ஊண் இரண்டாம் வினாடியின் பலன்

(எண்சீராசிரிய விருத்தம் - இனி இப்படலத்தில் வரும் அனைததுப் பாடல் களும் இவ்வகையைச் சார்ந்தனவே)

83. நன்மையென்ற இரண்டாகும் வினாடி தன்னில்
நன்றுமெத்த உற்பனத்தில் நலமே யாகும்
வன்மையென்ற பூமியும்கை வசமாய்ச் சேரும்
வாழ்ந்திருப்பார் அறுபதுவாம் வயது மட்டும்
செம்மையென்ற வசீகரமும் திறமும் மெத்த
தேகமுள்ள மட்டும்ஒரு பிணியே இல்லை
தன்மையென்ற தாய்தந்தை பிறப்பிற் சேதம்
சற்றுமில்லை சுகமாக வாழ்வார் பாரே.

---

82 * இப்படலத்தில் அனைத்துப் பாடல்களும் சுவடி 'இ' எண் 777 அகத்தியர் பஞ்சபட்சி சாத்திரம் என்ற நூலில் 73ம் பகுதியில் 96-ம் பக்கத்தில் பாடல் ஒன்று முதல் 22-ம் பாடல் வரையாகும். ஊண் நடை, அரசு, துயில், சாவு இவைகளுக்கு 5-ம் வினாடிக்கு எழுதப்பட்டது. அவை அந்தந்தப் பாடலின் குறிப்பில் காட்டப்பட்டுள்ளது. காண்க.

(இ-ள்) ஊண் இரண்டாம் வினாடியில் பிறந்தவனுக்கு வயது அறுபது. ஆயுள் பூராவும் இவனுக்கு நன்மையே நடக்கும். தனக்கென்று பூமி மனை கிடைக்கும். இவனுக்கு எல்லோரும் வசமாவர். நல்ல திறமை உண்டு. தேகமுள்ள மட்டும் நோய் எதுவும் அண்டாது இவனால் தாய்தந்தைக்கு நஷ்டம் சேதம் எதுவும் இராது. சுகமே எப்பொழுதும் கிட்டும் என்பதாம்.

## ௩. மூன்றாம் வினாடியில் பிறந்த பலன்

84. வாழுமே மூனறதுவாம் வினாடி தன்னில்
மக்கனே மதலையது உதித்த தானால்
கேளுமே வயததுதான் ஐம்ப தாகும்
கெற்பமுதல் வயதுபதி னைந்து மட்டும்
கேளுமே பிணிகளுண்டாம் சுகமோ கொஞ்சம்
குவலயத்தில் அதிகசுகம் இல்லைபாரு
தாளுமே கூட்டிவர மாட்டா தப்பா
சஞ்சலமும் சுகமதுவும் சரிதான் பாரே.

(இ-ள்) ஊண் தொழிலில் மூன்றாம் வினாடியில் பிறந்தவனுக்கு வயது 50. இவன் கற்பத்தில் இருந்த நாளில் இருந்து 15 வயது மட்டும் நோய்கள் பல உண்டாம். சுகமோ குறைவு தான். முயற்சிகள் இவனுக்குப் பெரும்பாலும் வெற்றி பெறாது. சஞ்சலமும் (துன்பமும்) சுகமும் இவனுக்குச் சம அளவாகவே கிடைக்கும் என்பதாம்.

## 4. ஊண் 4ம் வினாடியில் பிறந்த பலன்

85. சரியான வினாடி அங்கே நால தாகில்
தான்பிறந்தால் வயததுதான் நாற்பத் தொன்று
குறியான சடல்மது உள்ள மட்டும்
கொண்டிடும்ஓர் மணமுமில்லை வாழ்வும் கொஞ்சம்
விரிவான பொருளில்லை போக மில்லை
வேந்தனுற வொருநாளும் விரும்ப வில்லை
நரையான பசிவேன்ள பொசிப்பே இல்லை
நன்மைஇல்லை தீமைஇல்லை நாடிப் பாரே.

(இ-ள்) ஊண் நான்காம் வினாடியில் பிறந்தவனுக்கு வயது நாற்பத்தொன்று. உடல் மட்டும் இவனுக்கு மனநிம்மதி இல்லை. வாழ்வில் திருப்தி மிகக்குறைவே யாகும். செல்வம் சேராது. வறுமையே மிஞ்சும். பெரியோர், அரசினர், மேலிடத்தோர் உறவு, நட்பு எதுவும் கிட்டாது நன்மையும் இல்லை தீமையும் இல்லை என்பதாம்.

## 5. ஊண் 5ம் வினாடியில் பிறந்தபலன்

86 நாடிப்பார் ஐந்ததுவாம் வினாடி தன்னில்
நலமாகப் பிள்ளையது பிறக்கு மாகில்
தேடிப்பார் வயததற்கு முப்பத்தேழு
செம்மையுடன் வசிகரமாம் இருக்கும் பாரு
கூடிப்பார் சிநேகிதமோ உயர்ஒன் றாகும்
குணமதுதான் சற்குணமாய் இருக்கும் பாரு
வாடிப்போம் பொருளுடைமை இல்லா மல்தான்
மனத்துயரம் விதிவரைக்கும் வருத்தும் பாரே

(இ-ள்) ஊண் ஐந்தாம் வினாடியில் பிறந்தவனுக்கு வயது முப்பத்தேழு இவனுக்கு யாவரும் வசமாவர் இவனுக்கு உயிருக்குயிரான சிநேசிதன் ஒருவன் வாய்ப்பான். இவன் சற்குணவானாக இருப்பான். ஆனால் வறுமை இரும்கும். உயிருள்ளவரை இதனால் மனத்துயரம் இருந்து கொண்டிருக்கும் என்பதாம்.

## 6. நடை முதல் வினாடியின் பலன்

87 சொன்னேனே நடையதனில் முதல் வினாடி
தொல்புவியில் பிள்ளைகள்தான் தோன்றும் ஆகில்
அன்னதனுக் காயுசுதான் ஐம்ப தாகும்
அதுதரித்த நாள்முதலாய் சுகமோ இல்லை
பின்னதுகேள் வயசுமுப்பதுக்கு மேலே
பிரபலனாம் அதிகம் இல்லை வாழ்வு கொஞ்சம்
தன்னாலே வருவதல்லால் உதவி இல்லை
சடம்உள்ள வரைபொய்கோள் சொல்லு வானே.

(இ-ள்) ஒரு பக்ஷியின் நடை தொழிலின் முதல் வினாடியில் பிறந்தவனுக்கு வயது 50 ஆகும். இவன் பிறந்த நாள் முதலாய் இவனுக்குச் சுகம் என்பது கிடையாது. 37 வயதுக்கு மேலே கொஞ்சம் பிராபல்யம், புகழ் ஏற்படும், ஆனால் அதிகம் இராது. அப்படியும் சுகம் குறைவாகத்தான் இருக்கும். இவனுக்கு யார் உதவியும் கிடைக்காது. தன்னால் தான் இவன் எல்லாம் முயற்சி செய்து பெற வேண்டும். இவன் உயிர் உள்ள மட்டும் பொய் சொல்லல், கோள் சொல்லல் இவற்றில் ஈடுபட்டுக் கொண்டே இருப்பான்.

## 7. நடை இரண்டாம் வினாடியில் பிறந்த பலன்

88. சொல்லவே நடைரெண்டாம் வினாடி தன்னில்
தோன்றினோன் அவன்வயது ஒன்ப தைந்து
கொல்லுவான் சீவசத்தை அதிகமாகக்
கொடுமையுள்ள பொய்களவு வஞ்சம் மெத்த
தள்ளுவான் இனச்சேர்க்கை சற்றும் இல்லை
சண்டாளன் என்கிறபேர் வாய்க்கு மப்பா
துள்ளுவான் எனக்கெதிர்தான் இல்லை என்று
சொல்லுவேள் பிறர்அவன்சொல் தள்ளு வாரே.

(இ-ள்) நடை இரண்டாம் வினாடியில் பிறந்தவனுக்கு வயது நாற்பத்தைந்து. இவன் கொடியவன், உயிர்க்கொலை அதிகம் செய்வான். பொய், திருட்டுத்தொழில், வஞ்சனை செய்தல் முதலியவற்றில் தாராளமாக ஈடுபடுவான். இவனுக்கு இவன் இனத்தார் யாரும் சேரமாட்டார், உதவமாட்டார். கொடிய சண்டாளன் என்கிற பெயர்தான் ஏற்படும். இவன் தனக்கு எதிர் சமர்த்தன் வேறு யாருமில்லை என்று மார்தட்டிக்கொள்வான். இவன் பேச்சை யாரும் கேட்க மாட்டார்கள் என்பதாம்.

## 8 நடை மூன்றாம் வினாடியின் பலன்

89 தள்ளவே நடைமூன்றாம் வினாடி யாகில்
தான்பிறந்தான் வயதுகாண் முப்பத் தேழு
கொள்ளவே வயததுதான் உள்ள மட்டும்
கொலைகளவு பொய்சூது கொடுமை மெத்த
மல்லவே பிரமலிபி உள்ள மட்டும்
வருத்தும்வெகு நோயாலே வருந்து வான் பார்
பல்லவே நல்லருசி யுள்ள தெல்லாம்
பண்புடனே அவன்வாயில் படாது பாரே

(அ-ள்) நடை மூன்றாம் வினாடியில் பிறந்தவனுக்கு வயது முப்பத்தேழு. இவன் வயதுள்ள மட்டும் கொலை, களவு, பொய், சூது முதலியவற்றில் ஈடுபடுவான். மிகவும் கொடியன். பிரம்மலிபி உள்ள மட்டும், அதாவது ஆயுள் உள்ள வரை கொடிய நோய் ஒன்றால் வருத்தப்படுவான். நல்ல ருசியுள்ள சாப்பாடு இவனுக்கு என்றும் கிடைக்காது.

## 9. நடை நான்காம் வினாடி பலன்

90 படராதநடை நான்காம் வினாடி தன்னில்
பதிவாக உற்பத்தி ஆகும் ஆகில்
கடவாது வயததுதான் இருபத் தொன்று
கல்வியுமோ மெத்தஉண்டு களவு முண்டு
சலியாது பெரியோரைத் தூஷ ணிப்பான்
சண்டாளப் பிறவியிவன் ஒருவர்க் கஞ்சான்
தொடர்வான அன்னவஸ்த்ரம் அதுவும் இல்லை
துர்ச்சனன்காண் இவன்நல்ல வழியி லானே

(இ-ள்) நடை நான்காம் வினாடியில் பிறந்தவன் இவனுக்கு வயது 21 தான். ஆனால் நிறையக் கல்வி உண்டு திருடு. களவு செய்யும் குணமும் உண்டு. பெரியோரை இவன் எந் நேரமும் நிந்தனை தூஷணை, செய்து கொண்டிருப்பான். இவன் கொடூரமான சண்டாள குணமுடையவன். இவன் யாருக்கும் அஞ்சமாட்டான். உயிருள்ளவரை இவனுக்கு உடுத்த உடை, உண்ண உணவு கிடைப்பது மிகவும் கஷ்டம். துர்க்குணம் உள்ளவன். நல்ல வழியில் செல்லாதவன் என்பதாம்.

## 10. நடை ஐந்தாம் வினாடியில் பிறந்த பலன்

91 வழியதனில் ஐந்ததுவாம் வினாடி தன்னில்
மைந்தனாம் உற்பவித்து வந்தா னாகில்
நெளிவுள்ள வயததுதான் பதினெட்டாகும்
நினைவுதப்பிப் பித்தவெறி கொண்டு பேசும்
பழியுடையன் பிறர்க்குதவி சற்றும் இல்லை
பண்பில்லான் சனத்துடனே வாசம் செய்யான்
களிவுள்ள இடந்தனிலே இருந்து வாழான்
கசடனப்பா நற்குணங்கள் இல்லை தானே

(இ-ள்) நடையின் ஐந்தாம் வினாடியில் பிறந்தவனுக்கு வயது பதினெட்டாகும். இவன் எப்பொழுதும் நினைவுதப்பி பித்தம் கொண்டவன் போல் பேசுவான். பிறர் யாருக்கும் உதவி செய்யமாட்டான். பழிபாவம் மிகவும் உண்டு. பண்பு கிடையாது தன் சனத்துடன் கூடி வாழ வாழமாட்டான். மகிழ்ச்சியுடைய இடத்திலும் இருக்க மாட்டான். இவன் கசடன் (முட்டாள்). நற்குணங்கள் கொஞ்சமும் இல்லாதவன் என்பதாம்.

## 11. அரசு முதல் வினாடியில் பிறந்த பலன்

92. தானென்ற அரசினிலே முதல்வி னாடி
தான் பிறந்தால் தன்வயது நூற்றி ஏழு
பானென்ற பவிசுண்டு பாக்ய முண்டு
பால்உண்டு கிளையுண்டு பணியும் உண்டு
தேனென்ற சொல்உண்டு செகமெல் லாம்தான்
சென்றுவரத் தடைஇல்லை செகத்தி லுள்ள
மானென்ற விழிமடவார் மயங்கு வார்பார்
மக்களே அவன்வாழ்வை மதிக்கொ ணாதே.

(இ-ள்) அரசு முதல் வினாடியில் பிறந்தவனுக்கு வயது நூற்றி ஏழு. பசுவி, பவிசு, பாக்கியம் இவை நிறைய உண்டு. பால்பாக்யமுண்டு. உறவும் சுற்றமும் சூழவாழும். நகை, ஆடை முதலியவை அதிகம உண்டு. இனிமையாகப் பேசுவான். உலகநாடுகள் முழுவதும் பயணம் செய்ய வல்லான். அழகிய பெண்கள் பலர் இவனுக்கு வசமாவர். இவன் வாழ்வின் உயர்வு சிறப்பு இவ்வளவுதான் என்று யாராலும் மதிப்பிட முடியாது என்பதாம்.

## 12. அரசு 2ம் வினாடியில் பிறந்த பலன்

93. ஒண்ணாத அரசிரண்டாம் வினாடி தன்னில்
உற்பவித்தால் வயதுதான் தொண்ணூ ற்றைந்து
எண்ணாத சுகபோகம் சொல்லொ ணாது
இன்பமுள்ள வாழ்க்கைஇதை மதிக்கொ ணாது
தன்னாலே ஞானநிலை நிலைக்கும் அப்பா
தன்மையுள்ள புருஷர்என்பார் தரணி யோர்கள்
சொன்னதொரு அவனுடைய கீர்த்தி என்றால்
சொல்லுதற்கு நாவில்லை சொன்னோம் பாரே.

(இ-ள்) அரசு இரண்டாம் வினாடியில் பிறந்தவனுக்கு வயது தொண்ணூற்றைந்து (95 அவனுக்கு எண்ணமுடியாத சுகபோகமுண்டு. இவன் வாழ்க்கையில் இன்பம் என்றும் ததும்பி வழியும், இவன் இயல்பாகவே ஆத்மவிசாரம் பண்ணும் ஞானியாக இருப்பான். இதனை சத்புருஷன் கீர்த்திமான் என்று எல்லோரும் போற்றுவார்கள். இவன் உயர்வு இவ்வளவுதான் என்று யாராலும் சொல்ல முடியாது.

## 13. அரசு மூன்றாம் வினாடியில் பிறந்த பலன்

94. சொல்லுமொரு அரசுமூன்றாம் வினாடி தன்னில்
தோன்றுவனேல் அவன்வயது எண்பத் தாறு
வெல்லும் அவன் வாழ்வை என்னால் மதிக்கொணாது
வெகுபோகம் வெகுசுகங்கள் உண்டு பாரு
அல்லவே சரீத்திரத்தில் பிணி இல்லை
அவன்பவிசோ அளவிடக் கூடாது மைந்தா
சொல்லவே அஷ்டசித்தி அவர்க்கே சித்தி
சொல்லவுமே கூடாது சுகத்தைத் தானே.

(இ-ள்) அரசு மூன்றாம் வினாடியில் பிறந்தவனுக்கு வயது எண்பத்தாறு. வெகுபோக போக்கிய சுகங்கள் அவனுக்குண்டு. அவன் வாழ்வின் வைபவத்தை யாராலும் மதிப்பிட முடியாது. இவனுக்கு நோய் எதுவும் வராது. இவன் பவிசும் (Status) மிகவும் உயர்வானதாகும். அவனுக்கு அஷ்டமா சித்தியும் சித்திக்கும் யோக சித்தி. அவன் பூர்ண சுகவாழக்கை அனுபவிப்பான் என்பதாம்.

## 14. அரசு நான்காம் வினாடியில் பிறந்த பலன்

95 நானென்ற அரசு நான்காம் வினாடி தன்னில்
தானுதித்தால் வயதுதான் எழுபத்தெட்டு
தேனென்ற மொழியுடையோன் சேகரங்கள் உள்ளான்
தீமையென்ற சொல்லொருக் காலும் சொல்லான்
வானென்ற குணம் உள்ளான் அறம துள்ளான
மகத்தான பெரியோரை வணங்கி நிற்பான்
கோனென்ற சிவகலையும் உள்ளோன் ஐயே!
கொடுமையுள்ள வஞ்சகரைச் சேரான் தானே

(இ-ள்) அரசு நான்காம் வினாடியில் பிறந்தவன் எழுபத்தெட்டு வயது வரை ஜீவித்திருப்பான். இனியமொழி பேசுபவன். நல்ல பொருள் செல்வம் உண்டு. கொடுஞ்சொல் என்றும் சொல்லமாட்டான். வானிலும் உயர்ந்த குணம் உள்ளவன் தருமநெறி தவறாதவன். பெரியோரிடம் வணக்கமும் மரியாதையும் உடையவன். தலைமையான சிவயோகம் பயில்பவன். அதில் சிறந்தவன் ஆவான் என்பதாம்.

## 15. அரசு 5ம் வினாடியில் பிறந்த பலன்

96. ஒண்ணாக அரசைந்தாம் வினாடி தன்னில்
உதித்தவனுக் கேபிரமன் விதித்த தந்நாள்
எண்ணாத அறுபத்தேழ் ஆகும் மைந்தா
என்ன சொல்வேன் இவன்பெருமை இயம்பொ ணாது
துன்னாத அன்னைசுற்றம் கிளைஉண் டாகும்
தொடுத்திடுமே பூமிதனில் செல்வம் உண்டாம்
வன்மையுடன் வாழும்இவன் குடிதான் அப்பா
மனமகிழ்ச்சி மெத்த உண்டு மதிக்கொ ணாதே.

(இ-ள்) அரசு ஐந்தாம் வினாடியில் பிறந்தவன் அறுபத்தேழு வயது வாழ்வான். இவன் பெருமை சொல்லத்தரமன்று. தாய் தந்தை சுற்றம் சூழ்ந்த நல்வாழ்க்கை உண்டு. நல்ல செல்வம் உண்டு. இவன் குடும்பம் மிக உயர்ந்த அந்தஸ்துடன் வாழும். இவன் எப்பொழுதும் மிக்க மனமகிழ்ச்சியுடன் வாழ்வான் என்பதாம்.

## 16. நித்திரை முதல் வினாடியின் பலன்

97 ஒண்ணா உறக்கத்தில் முதல் வினாடி
உத்தமனே உதித்ததெனில் வயதே ழுஞ்சாம்
விண்ணான பாக்கியமோ இல்லை இல்லை
வீணான துயரமது மெத்த உண்டு
கண்ணான நோயதுவும் உண்டு பாரு
கலங்குமடா அவன்மீது சுகமோ கொஞ்சம்
தன்னாலே விதிஅமைப்பு உள்ள மட்டும்
தனலமீது சுமைசுமப்பான் திண்ணம் தானே.

(இ-ள்) நித்திரை முதல் வினாடியில் பிறந்தவனுக்கு வயது 35 ஆகும். இவனுக்குப் பாக்கியம் இல்லை. வீணாக அதிக துன்பம் துயரம் அனுபவிக்க வேண்டி வரும். பல நோயும் கண்ணில் நோயும் உண்டு. எப்பொழுதும் மனக்கலக்கம் உண்டு; சுகம் மிகவும் குறைவு, தலையெழுத்து, ஆயுசு உள்ள மட்டும் தலைமீது பளு சுமந்தே கூலிவேலை செய்து பிழைக்க வேண்டி வரும்.

## 17 நித்திரை இரண்டாம் வினாடியின் பலன்

98. திண்ணமாம் துயிலிரண்டு வினாடி தன்னில்
செனித்திட்டோர் தன்வயது இருபத் தெட்டு
கன்னமிடும் களவுகளும் கொலையும் செய்வான்
கண்டபடித் துஷ்டனெனத் திரிவான் கண்டாய்
வண்ணமுறு மனைவியுமே சேர்வ தில்லை
மகத்தான பாவியென் உலகம் அஞ்சும்
எண்ணமுறும் துயரம்உயிர் உள்ள மட்டும்
இருக்கும்இது சிவன்செயலாம் என்று பாரே.

(இ-ள்) நித்திரை இரண்டாம் வினாடியில் பிறந்தவனுக்கு வய்து இருபத்தெட்டு கன்னம் இடுதல், களவு, கொலை செய்தல் ஆகிய எல்லாம் செய்வான். இவன் துட்டன் என்று கண்டபடி எல்லோரும் பேசும்படி பெயர் வாங்குவான். இவனுக்கு மனைவி வாய்ப்பதில்லை. இவனைப் பெரியபாவி என்று அஞ்சி உலகம் ஒதுக்கும். உயிர் உள்ள மட்டும் இவனுக்குத் துயரம் தான் அதிகம். இதுவும் சிவன் செயல்தான்.

## 18. நித்திரை மூன்றாம் வினாடியில் பிறந்தபலன்

99. பாரேநீ உறக்கம்மூன் றாம் வினாடி தன்னில்
பாரிலுதித் தான்வயது எழுமூன் றாகும்
தேரேநீ தேரையைப்போல் திரைஞ்சு போகும்
செடம்அதுதான் உள்ளமட்டும் துன்பம் நீங்கா
காரேநீ தாய்தந்தை உறவும் இல்லை
கண்டவர்கள் இவனுடனே கலந்து பேசார்
வாரேநீ தேசம்விட்டுத் தேசம் போக
மனம்துணிந்து அவ்விடம்போய் மாளு வானே.

(இ-ள்) உறக்கம் மூன்றாம் வினாடியில் பிறந்தவனுக்கு வயது இருபத்தொன்று இவன் தேரையைப்போல் இளைத்த தேகம் உடையவன். இவன் உடலில் உயிர் உள்ளவரை துன்பமே அடைவான். இவனுக்குத் தாய்தந்தை உறவும் ஆதவைப்பும் கிட்டாது. இவனைப் பார்த்தவர்கள் எல்லாம் இவனுடன் பேசவே பயப்படுவார்கள். இவன் தன் ஊர் நாடு விட்டு வெளி ஊர் வெளிநாடு சென்று அங்கும் வாழ முடியாமல் இறந்து விடுவான் என்க.

## 19. நித்திரை நான்காம் வினாடியில் பிறந்தபலன்

100. மாளுவான் உறக்கம்நான் காம்வி னாடி
வந்துதித்தோன் தன்வயது பதிமூன் றாகும்
மாளுவான் அக்குடியிற் பிறந்தா லென்ன
வருந்துவான் இவன்உயிர்தான் மாளு மட்டும்
தேளான பிணியாளன் துயரம் மெத்த
தெளிவுள்ள வாக்குருதி கொள்ளொட் டாது
நாளான நாளுக்கு நாள்தான் அப்பா
நலங்குவான் சுகமென்ப தில்லை தானே.

(இ-ள்) நித்திரை நான்காம் வினாடியில் பிறந்தவனுக்கு வயது பதிமூன்றாகும். இவன் பிறந்து பயன் என்ன? உள்ள மட்டும் வருந்துவான். தேள் போன்று கொட்டும் கொடிய நோய் இருந்து கொண்டே இருக்கும். வாய்க்கு ருசியும் தெரியாது. உணவு கஷ்டம். நாளுக்கு நாள் இவன் இளைத்துக்கொண்டே இருப்பான். சுகம் எள்ளளவும் இல்லை என்பதாம்.

## 20. நித்திரை 5-ம் வினாடியில் பிறந்தபலன்

101. இல்லைஎன்ற இதற்கிளப்பம் உறக்கம் தன்னில்
இயம்பும்ஐந்தாம் வினாடிதனில் வந்து தித்தான்
தொல்லை என்ற வயதுகொஞ்சம் ஒன்பதே தான்
சுகமதுதான் ஒன்றுமில்லை பிணியே மிச்சம்
கல்லல்என்ற சடலமது பறக்கும் பாரு
கண்டவர்கள் விதிப்பயனோ என்று சொல்வார்
சுள்ளியியே சுழலவிட்ட பாண்டம் போல
சுழலுவான் மாளு மட்டும் சுகம்இல் லானே.

(இ-ள்) நித்திரை 5-ம் வினாடியில் பிறந்தவனுக்கு வயது மிகவும் குறைவு ஒன்பதுதான், சுகம் எதுவும் இராது. நோய்தான் மிச்சம். இவன் உடல் உயிருள்ள பிணம் போல ஜீவன்களையற்று பிறக்கும் இவன் விதிப்பயன் கொடிது என்று கண்டவர்கள் எல்லாம் சொல்வர். கீழே எரியூட்டி மேலே சுழலவிட்ட பாண்டம் போலே இவன் மாளும் மட்டும் சுழன்று கெடுவான் என்பதாம்.

## 21. மரணம் முதல் வினாடியில் பிறந்தவன் பலன்

102. பாரப்பா மரணத்தின் முதல்வி னாடி
பண்பான நேரத்தில் பிறந்தா னாகில்
மாரப்பா வயதுகொஞ்சம் பனிரெண் டாகும்
மக்களே தாய்தந்தை சேதம் ஆகும்
கூரப்பா அவன்உடல்தான் நோவு கொள்ளும்
கடைத்தேறல் ஒருநாளும் இல்லை இல்லை
சாரப்பா அவன்சடலம் மடியும் போதில்
தனியனாய் இவனிருந்து மடிவான் தானே.

(இ-ள்) மரணம் முதல் வினாடியில் பிறந்தவனுக்கு வயது குறைவு பன்னிரண்டுதான். அவன் தாய் தந்தை மடிவார். இவன் அநாதையாவான். இவன் உடலில் நோய்கள் பற்றிக் கொள்ளும் இவன் ஒருநாளும் கடைத்தேற முடியாது. இவன் அநாதையாய்த் தனியாகக் கேட்பாரற்றுச் சாவான் என்பதாம்.

## 22 மரணம் இரண்டாம் வினாடியில் பிறந்த பலன்

103. இறந்துபோம் மரணம் ரெண்டாம் வினாடி தன்னில்
இனிதான உற்பத்தி ஆகும் ஆகில்
மறந்துபோம அவன்வயது ஒன்ப தாகும்
மரணமது போல்துடித்து மாய்வான் நோயில்
குறைந்திடா நாளுக்கு நாள்தான் அப்பா
குணமாக மாட்டாது கொடுமை மிக்க
சிதைந்துபோம் செடலமது செத்தால் நன்று
செகந்தனிலே என்றுலகம் சொல்லும் பாரே.

(இ-ள்) மரணம் இரண்டாம் வினாடியில் பிறந்தவனுக்கு வயது ஒன்பதுதான். எப்பொழுதும் இவன் கடும் நோயால் மரணவேதனைப் படுவான். இதன் கொடுமை ஒருநாளும் குறையாது. குணமாகாது உடல் தளர்ந்து போகும். ,,இவன் இருப்பதை விட இறப்பதே மேல்'' என்று உலகம் சொல்லும். அந்த அளவுக்கு இவன் மேல் எல்லோருக்கும் வெறுப்பு ஏற்பட்டுவிடும் என்பதாம்.

## 23. மரணம் மூன்றாம் வினாடியில் பிறந்தபலன்

104. சொல்லுவது மரணமூன் றாம்வி னாடி
தோன்றிட்டால் அவன் வயது ஏழதாகும்
மல்லுவது நோயதுதான் மெத்த உண்டு
மரணம்போல் வந்துபின்பு தெளிவுண் டாகும்
தொல்லுலகில் இன்னொருகால் இதுபோல் வந்து
சூழுமடா செய்யும்இந்த தத்தும் தேறி
அல்லுவது மேல்உரைத்த வயதில் மைந்த
அந்தகனால் உயிர்ச்சேதம் ஆகும் பாரே.

(இ-ள்) மரணம் 3-ம் வினாடியில் பிறந்தவனுக்கு வயது ஏழுதான் இவனுக்கு பற்பல நோய்கள் உண்டு. இந்த நோய் இவனைச் சாவு வரை கொண்டு வந்துவிடும். இருந்தாலும் தெளிவு உண்டாகும். இவனுக்கு இதேபோல் மேலும் ஒரு ஜன்மம் உண்டு. மேற்சொன்ன வயதில் இறப்பு உண்டாகும்.

## 24 மரணம் நான்காம் வினாடியில் பிறந்த பலன்

105. ஆகுமே மரணம்நான் காம்வி னாடி
அவனியில்வந் துதித்தவற்கு வருஷம் ஒன்றாம்
சாகும்அந்த நாள்அளவும் இவன்தான் அப்பா
தனிவெயிலிற் புழுவதுதான் தவிப்பதே போல்
வேகும்வெகு வியாதிகளால் மடிந்து நொந்து
வீணாக அறிவதல்லாம் சுகம துண்டோ
சாகும்மரணத் துதித்ததும் ஏதோ என்னில்
தான்முன்பு தரித்ததுதான் சுழுமுனை யாமே.

(இ-ள்) மரணம் நான்காம் வினாடியில் பிறந்த குழந்தைக்கு ஆயுசு வயது ஒன்று தான். அந்த சாகும் நாள் வரையில் இது வெய்யிலில் புழுவைப்போல வெகுவித வியாதிகளால் தவித்து நொந்து போவான். இவனுக்குச் சுகம் எது? ஆனால் இப்படி ஒருவயது அற்பாயுளாகப் பிறந்ததற்குக் காரணம் யாது என்னில் இவன் தாய் இவனைக் கருத்தரிக்க தன் கணவனைக் கூடியபோது அவனுடைய சரம் (மூச்சு) இடகலையிலும் பிங்கலையிலும் (இடமும், வலமும்) இல்லாமல் நடுவில் சுழுமுனையில் சூனியத்தில் நடந்து வந்ததுதான் காரணம் என்க.

குறிப்பு : ஒருவன் மனைவியைச் சேரும் போது அவனுக்கு வலது மூச்சு நடந்தால அப்போது தரித்த குழந்தை ஆண் என்றும், இடது மூச்சு நடந்தால் பெண் தரிக்கும என்றும், இரண்டும் அற்ற நடுவில் நடந்தால் அக்குழந்தை அலியென்றும் அல்லது பெண்ணாகப் பிறந்தாலும் உடன் மறிக்கும் என்பது சரசாத்திரக் கொள்கை யாம். அதையே நான்காம் அடியிற் கூறினார் என்க.

## ௨௫. மரணம் ஐந்தாம் வினாடியில் பிறந்த பலன்

106. ஆம் என்ற ஐந்தென்னும் வினாடி தன்னில்
அப்பனே குழந்தையவ தரிக்கு மாகில்
போமென்ற இக்குழந்தை தனக்கு வேந்தன்
பொறித்திட்ட லிபிகொஞ்சம் புகலக் கேளு
தாம்என்ற தாய்அலறை தந்தை நோக
சகோதரங்கள் பொருஅழ தலையே சாய்ந்து
ஏமென்ற ஆறுதிங்கள் தனிலே மாயும்
இவன்தரித்த தவ்வேளை சுழுனை ஆமே!

(இ-ள்) மரணம் 5-ம் வினாடியில் பிறந்த குழந்தைக்குப் பிரமன் எழுதிய விதி தலை எழுத்து மிகக் கொடூரமனதாகும். அது என்ன என்றால் தாய் வருந்தி அலறவும், தந்தை மனம் நோகவும், சகோதரங்கள் எல்லாம் விம்மி அழவும் பிறந்த ஆறு மாத காலத்திற்குள் இக்குழந்தை இறந்து விடும் என்றறிக. இப்படி அற்பாயிசு ஆகக் காரணம் இவனைத் தாய் கருத்தரித்த போது தகப்பன் சேரும் சமயத்தில் அவனுக்கு சரம் இடதும் இன்றி வலதும் இன்றிச் சுழிமுனையில் சூனியத்தில் நடந்ததே தான் என்று அறியவும், முன் பாட்டு விளக்கத்தையும் காண்க.

### இரண்டாம் பகுதி

## பஞ்சபட்சித் தொழிலில் சத்ருமித்ரு நேரத்தில் பிறந்த பலன்

ஒருவன் எந்தப் பட்சியின் எந்தத் தொழிலின் எந்த அந்தரத்தில் பிறந்தான் என்பதை அறியும் வழியை நுதலிப்புகுபடலம் 11-வது அட்டவணை விளக்கத்திலும் அடுத்து இப்படலத்தின் முன்னுரையிலும் கண்டோம். அதாவது பூர்வபட்சம் பிற்பகல் 4 மணிக்குப் பிறந்தவன் 3-36க்கு மேல் வரும் 5-ம் சாமத்தில் 24 நிமிஷம் அதாவது 1 நாழிகை சென்று பிறந்ததால் 11-வது அட்டவணைப்படி ஆந்தையின் ஊண் அந்தரத்தில் பிறந்தான் என்பதையும் கண்டோம். ஊணில் ஊண் பொழுது 1½ நாழிகை ஆகையால் 5-ம் சாமத்தில் சாமம் ஆரம்பித்து 1 நாழிகையே சென்றமையால் இவன் ஊணில் முதல் வினாடி அல்லது அந்தரத்தில் பிறந்தான் என்று கொள்ள வேண்டும். (பிறப்பு பூர்வபட்ச செவ்வாயாகக் கொள்ளப்பட்டது).

இப்படி ஒருவன் ஒரு பட்சியின் ஒருதொழிலில் பிறக்கும்போது, மற்ற பட்சிகள் செய்யும் தொழில் இவனுடையதை விட வலிதாகவோ தாழ்ந்ததாகவோ இருக்கும் அந்தபிற பட்சிகள் பிறப்பு பட்சிக்குச் சத்ருவாகவோ மித்ருவாகவோ இருக்கும். ஒருவன் பிறப்புப்பட்சிக்கு சத்ருமித்ருபட்சிகள் அதே சமயத்தில் செய்யும் தொழிலால் ஏற்படும் பாதிப்புக்கு, விளைவுக்கு இப்போது பலன் சொல்லப்படுகிறது. இந்தப் பலன் தன்னுடையதைவிட தாழ்ந்த தொழில் செய்யும் பட்சியைப்பார்க்க வேண்டியதில்லை. உதாரணத்தில் ஜாதகன் ஊணில் ஊண் அந்தரத்தில் ஆந்தைபட்சியைக் கொண்டு பிறந்தான். இவன் பிறந்த பூர்வபட்சி செவ்வாய் ஐந்தாம் சாமத்தில் மற்ற பட்சி களாகிய வல்லூறு சாவு, காகம்நடை, கோழி அரசு, மயில் துயில் ஆகியவற்றைச் செய்கின்றன. இதில் மயில், வல்லூறு, காகம் இவற்றின் தொழில் ஆந்தையின்

தொழிலைவிட தாழ்ந்துள்ளதால் இந்தப் பிறப்புக்கு அவற்றால் பாதிப்பு இல்லை. கோழிமட்டும் இவனைவிட வலுத்து அரசு செய்கிறது. கோழி பூர்வ பட்சத்தில் ஆந்தைக்குப் பகை சத்ரு ஆகிறது. எனவே ஊண் தொழில் சத்ரு அரசு செய்யும் போது ஏற்படும் பாதிப்பு என்ன என்பதை அறியவேண்டும். இங்கே கோழி சத்ரு ஆகையால் பாதிப்பு பாதகமாக இருக்கும். இதுவே மித்ருவாக இருந்தால் பாதிப்பு சாதகமாக இருக்கும். எனவே அப்படிப்பட்ட ஊண், நடை, அரசு, துயில், சாவு இவற்றின் சத்ரு, மித்ரு பலன் என்பதை இப்போது தொடர்ந்து விளக்குகிறார். மேற்சொன்ன உதாரணத்தைக் கொண்டே மற்றவற்றையும் புரிந்து கொள்க இந்தவகையில்.

1. ஒரு பிறப்பு மரணவினாடியில் ஏற்பட்டால் மற்ற நாலு தொழிலாலும் பாதிப்பு உண்டு. மித்ருவானால் மரணவினாடி கடுமை குறைந்தும் சத்ருவானால் அதுவே அதிகமாகவும் இருக்கும்.

2. பிறப்பு துயிலானால் மரணம் நீக்கிய மற்ற மூன்றாலும் பாதிப்பு மேற் சொன்ன வகையில் உண்டு.

3. பிறப்பு ஊண் ஆனால் அரசு தொழில் பட்சியால் மட்டும் பாதிப்பு நல்ல தாகவோ கெட்டதாகவோ முடியும் மற்ற 3 தொழிலால் பாதிப்பு இராது.

4. பிறப்பு அரசானால் யாராலும் பாதிப்பு இராது. இதுபற்றி அகத்தியர் பஞ்சபட்சி சாத்திரம் சுவடி எண் 777 கூறும் மேற்கொண்டு பாடல்களைப் பார்ப்போம்.

## 1. மரண வினாடியின் சத்துரு மித்துருபலன்

107. சூனியத்தில் மித்ருவலி தாக நின்றால்
இதுபலனே சரியாகும் சத்ருவானால்
ஆணியற்ற மரம்போல தவிப்ப தல்லால்
அலைந்து வரும் வெகுகொடுமை சடலம் நோகும்
ஏணியற்ற உயிரதுதான் தவிப்ப தாகும்
என்னசொல்வேன் சத்துருதான் வெல்வான் பாரு
தோணியென்னும் பாய்மரத்தின் பட்சி போலே
துன்பமது மிகநோவு செய்வான் பாரே.

(இ-ன்) ஒருவன் மரணத்தொழிலின் ஏதாவதொரு வினாடியில் பிறந்து மற்ற தொழில் நடத்தும் பட்சிகள் இவன் பட்சிக்கு மித்ருவானால் இதற்கு முன்னர் சொல்லப்பட்ட பலன்கள் அப்படியே நடக்கும். ஆனால் அலையே சத்ருவானால் அதாவது அதே சமயம் மற்றபட்சி வலுத்து சத்துருவானால் ஆணிவேர் அற்றமரம்

போல இவன் அவதிப்படுவான். வெகுகொடுமை சேரும். உடல்நோவு படும். அலைச்சல் அதிகமாகும். வலிமையற்ற இந்த உயிர் (ஏண்-வலிமை) தவிக்கும். இவன் கடலில் தனியாய் செல்லும் படகின் பாய்மர உச்சியில் அகப்பட்டுக்கொண்டு எங்கும் பறந்து செல்லமுடியாத பறவையைப்போல இவனுக்குத் துன்பமும் நோயும் அதிகமாகும்.

## இதுவும் அது

108. செய்யவே பொருள்வரத்தும் இல்லை இல்லை
செயமான மணமில்லை சேர்க்கை இல்லை
வையுமே உலகமெலாம் வம்பன் என்று
மனைவிமக்கள் உறவுமுறை மருவல் இல்லை
நொய்யதொரு நோயாலோ வருத்தம் மெத்த
நுவலும் அந்த நோயதனால் மெலியும் சீவன்
கொய்யுமொரு சத்துருவின் பகைபொல் லாது
கொடுமையுள்ள மரணத்திற் பிறக்கொ ணாதே

(இ-ள்) மரண வினாடி சத்ருவில் பிறந்தவன் கஷ்டம் சொல்ல முடியாது. இவனுக்குச் செல்வம் பொருள்வரத்து இல்லை, வெற்றி இல்லை, திருமணம் கூடாது. இவனை உலகம் வம்பன் என்று திட்டும். மனைவி, மக்கள், உறவு எதுவும் இருக்காது, சொல்ல முடியாத நோய் ஒன்றால் மிகவும் வருத்தம் உண்டாகும். எனவே மரணத்தொழிலில் வேறுபட்சி பகையாக இருக்கும் நேரத்தில் பிறப்பது மிகவும் துரதிர்ஷ்டமாகும்.

## இதுவும் அது

109. பிறக்குமிதில் சத்துருதான் அரசன் ஆகில்
பிண்டத்தில் மாண்டுவிழும் ஊண தாகில்
சிறக்கவே பதினைந்து நாளைக் குள்ளே
செத்துவிடும் தப்பாது ஜெகத்தில் மைந்தா
உறக்கலே மாசமது மூன்றுக் குள்ளே
ஒழிந்துபோம் ஊணதுதான் மித்ரு வாகில்
பரக்கவே மாசமொரு ஐந்துக் குள்ளே
பதிக்கரசன் உயிர்ச்சேதம் செய்வான் பாரே!

(இ-ள்) மேற்படி சத்ரு பட்சி அரசில் இருந்தால் ஜீவன் பிறக்கும்போதே உயிரற்ற பிண்டமாய்க் கர்ப்பத்திலிருந்து நழுவிக் கழன்று விழும். அதுவே ஊணாகில் பதினைந்து நாளைக்குள்ளே இறந்துவிடுவான். இது தப்பாது, ஊண் பட்சியே மித்ரு பட்சியாக வந்தால் மூன்று மாதத்திற்குள் இறந்து விடுவான். எப்படி இருந்தாலும் இவனுக்கு 5 மாதத்தில் மரணம் சம்பவிக்கலாம்.

## 2 நித்திரை வினாடியின் சத்துரு மித்ரு பலன்

நித்திரை வினாடிகளில் ஒருவன் பிறக்கும்போது மற்ற பட்சிகள் சத்ரு மித்ருக் களாக இருக்கும்போது உண்டாகும் பலனைக் கூறுவது.

110. செய்திடுவான் உறக்கத்தில் மித்ரு அரசாகில்
சென்னத்தில் பிரமலிபிமுன் உரைத்ததும் சரியே
எய்திடுவான் சத்ருஅர சாகி நின்றால்
என்ன சொல்வேன் வெகுநோயால் துன்பம் ஆவான்
வைதிடுவான் வருமானம் என்றும் இல்லை
மணமில்லை பிரபுதயையும் மசிழ்ச்சி இல்லை
கொய்திடுவான் பிறந்தாறு திங்களுக்குள்
குவலயத்தில் வாழ்வதில்லை திண்ண மாமே.

(இ ள்) நித்திரைப் பேற்றில் (வினாடியில்) ஒருவன் பிறக்குபோது இவன் பட்சியின் மித்ரு பட்சி அதே சமயத்தில் அரசு தொழில் செய்தால், இவனுக்குச் சொல்லப்பட்ட வினாடியின் பலன் அப்படியே நடக்கும். அதுவே அப்படிபட்ட வேறு பட்சி அரசில் பகையாக இருந்தால் ஜாதகனுக்கு வெகுநோயும் துன்பமும் உண்டு. இநதப் பிறவியை எல்லோரும் வைது ஒதுக்குவார்கள் இவன் ஒருக்கால் வளர்ந்தால் திருமணமோ, பொருள் வரவோ, பலா வரவோ, பெரியோர் தயையோ யாதுவும் இராது. எப்படி இருந்தாலும் இந்த நிலையில் பிறந்தவன் 6 மாதத்திற்குள் இறந்து விடுவான் என்பதாகும்.

குறிப்பு: மேற்படி பிறப்பு 6 திங்களுக்குள் இறக்கும் என்று சொன்னபின், திருமணம், செல்வநிலை முதலியவற்றைப் பற்றிக் கூற வேண்டிய அவசியமில்லை இந்தப் பிறப்புக்கு இந்த உயர்வுகள் இராது என்று மற்ற இடங்களில் கூறியது போலவே இங்கும் கூறியதாகக் கொள்க. பிற இடங்களிலும் இப்படியே.

## 3 அரசு பேற்றின் சத்ரு மித்ரு பலன்

111. திண்ணம் என்ற அரசனுக்குச் சத்ரு இல்லை
செயலாகும் ஜெனித்ததிலே கேட்ட தெல்லாம்
வண்ணமென்ற மகிழ்ச்சியுடன் வரத்தும் மெத்த
மனைவிமக்கள் வரன்முறையார் உதவி மெத்த
எண்ணம்கொள் துயரமென் னளவும் இல்லை
ஏழை என்ற சொல்இல்லை ஈவதிவன் தொழிலே
அன்னம்மிகு களஞ்சியம்என் றியாவரும் பூசிப்பார்
அப்பனே இதற்கிணைதான் சொல்லக்கூடாதே.

(இ-ள்) ஒருவன் அரசு வினாடியில் பிறந்தால் அவனுக்குச் சத்ருவே இல்லை. பிறவியால் கெட்டதெல்லாம் நல்லதாகும். மகிழ்ச்சியும் தனவரவும் உண்டு. மனைவி மக்கள் உறவினர் இவனை எப்பொழுதும் சூழ்ந்திருந்து உதவி செய்வர். துயரம், துன்பம் சிறிதளவு கூட இராது. ஏழை என்ற பெயருக்கே இடமில்லை. இவன் செல்வந்தன். இவன் தொழில் பிறருக்கு ஈவது, தானம் செய்வதுதான் என்பதாகும்.

## 4 நடைப்பேற்றின் சத்ரு மித்ரு பலன்

ஒருவன் நடை வினாடியில் பிறக்கும்போது மற்ற பக்ஷிகள் ஊண் அரசில் இருந்து சத்ரு மித்ருவானால் உண்டாகும் பலனைக் கூறுவது.

112. கூடாதே நடையினில் மித்ருஊண் ஆகில்
கூறியதோர் லிபிதனக்குக் கால் அதிகமாகும்
நாடாதே மித்துருதான் அரசன் ஆகில்
நாடியதோர் பிரமலிபிக் கரைஅதிக மாகும்
தேடாதே சத்ருஊண் ஆக நின்றால்
செப்பம் அதில் கால்வாிசை செல்லாய்ப் போகும்
வாடாத சத்துருதான் அரசன் ஆகில்
வழுத்தியதோர் லிபியிலரை குறையும் பாரே.

(இ-ள்) ஒருவன் பிறக்கும்போது நடை வினாடியாக இருந்து அப்போது மற்ற பக்ஷி மித்துருவாக இருந்து ஊண் தொழிலில் இருந்தால் இவனுக்குச் சொல்லப்பட்ட வயது கால்பங்கு அதிகமாகும். அதேபோல் மற்றபக்ஷி மித்ருவாகி அரசானால் சொன்ன வயது அரைப்பங்கு கூடும்.

இப்படி இல்லாமல் இவன் பிறக்கும்போது வேறு பக்ஷி ஊண் சத்ருவானால் இவனுக்குச் சொல்லப்பட்ட வயதில் கால்பங்கு குறையும். அரசு சத்ருவாகி இருந்தால் சொன்ன வயது அரைப்பங்கு குறையும் என்பதாம்.

கூறியதோர் லிபி என்றது அந்தந்த வினாடி ஜென்மத்திற்கு, வயது உதாரண மாக நடை முதல் வினாடிக்கு வயது 50 (87ம் பாடல் காண்க). இவன் மித்ரு ஊண் இருக்கப் பிறந்தால் சொல்லப்பட்ட வயது இங்கு சொல்லப்பட்ட முறையில் ¼ பங்கு அதிகமாகும் எனவே 50 என்பது 62½ ஆகக் கூடும் என்க. இப்படியே மற்றவற்றிற்கும் கொள்க.

## இதுவும் அது

113. குறையான வயதேழுக் குளளே மைந்தா
குறைந்திடுவான் கைகாலில் குற்ற மாகும்
திரையான இவன்பிறந்த பதினைந் துக்குள்
சிரசுமுதல் கண்காது மூக்கு தட்டில்
குறையாகும் மூன்றுபத்து வயதுக் குள்ளே
கூர்மையுள்ள வேகத்தில் குறைவு செய்வான்
கரையாகும் பிரமலிபி உள்ள மட்டும்
கணக்கில்லா நோய்களிலே ஆழ்வான் தானே.

(இ-ள்) இப்படி நடை வினாடியில் ஊண் சத்ரு அல்லது அரசு சத்ரு இருக்கப் பிறந்தவன் ஏழு வயதுக்குள் கைகாலில் அடி காயம் படுவான். பதினைந்து வயதுக்குள் கண், காது, மூக்கு, உதடு இவற்றில் காயம், அடி, குறை உண்டாகும். முப்பது வயதுக்குள் இவன் சக்தி, வேகம், வலுவு குறையும். கணக்கற்ற பற்பல நோய்களால் அவதிப்படுவான் என்பதாம்.

## இதுவும் அது

114. அழுந்துவான் சத்துருவின் பகையா காது
அப்பனே, விந்துஅது தரித்த நேரம்
கொழுந்துவிட்டு எழுந்தஅனல் போலே மக்கள்
குடிகெடுத்த சத்துருவும் நின்ற தாலே
தழைத்ததொரு சுழிமுனைஅங் கிருந்த தாலே
சண்டாள சத்துருபகை ஆன தாலே
நெளிந்துவிடும் சந்திரன்சூ ரியனை விட்டு
நேராமற் போனதினால் பகையாம் பாரே.

(இ-ள்) மேற்படி சத்ரு பேற்றில் இவனைக் கருத் தரித்தநாள் தீமையாலேயும் அப்போது இவன் தகப்பனுக்குச் சுவாசம் சூனியத்தில் இருந்ததாலேயும்,சந்திர கலை சூரியகலை இரண்டும் கெட்டதாலே இவன் துன்பமே பெரிதாக அனுபவிக்கும் அமைப்புடன் பிறந்துள்ளான் என்பதாம்.

(இது வேதாந்த பரமாய் உள்ளது. குறிப்பால் சுருக்கமாக விளக்கியுள்ளது விரிவு பெரியோர்பால் உணர்க.)

## 5. ஊண் பேற்றின் சத்துரு மித்துரு பலன்

ஒருவன் ஊண் வினாடியில் பிறந்த போது மற்ற பக்ஷி சத்துரு மித்துரு வானால் ஆகும் பாதிப்பை விளக்குவது.

115. பகையான ஊணினிலே மித்துருவலி தாகில்
பாடினது பொய்யது பலிக்கும் பாரு
தொகையான சத்ருஅங்கே அரசாய் நின்றால்
துவங்கவுமே ஓங்கவிடான் குறைய ஒட்டான்
தகையாக வருங்கருமம் தவிர்த்து வைப்பான்
சண்டான சத்துருதான் தாழ்ந்து போகான்
வகையான தேகத்தில் பீடை கொஞ்சம்
வருத்தம்வரும் வந்தால்மல் செய்வான் பாரே.

(இ-ள்) ஊண் வினாடியில் பிறந்தவனுக்கு அதே சமயம் மற்ற பக்ஷி மித்ரு ஆகி அரசானால் இவன் வினாடிக்குச் சொன்ன நல்ல பலன் அப்படியே நடக்கும், ஆனால் அதுவே சத்ரு பக்ஷியாக இருந்தால், இவனை மேலும் போகவிடான். குறையவும் விடமாட்டான். வரும் காரியமெல்லாம் தடங்கலாகும். இவனுக்குப் பகைவனாகும் எவனும் தாழ்ந்து போகமாட்டான். உடலில் பீடை கஷ்டம் உண்டாகும். வருத்தம் வரும் வந்தாலும் வலுவற்றுப்போகும். முடிவில் நல்லதே நடக்கும்.

### இதுவுமது

116. வலுவான அரசுமித் துருவே ஆனால்
மக்களே பிரமலிபி அரைஅதிக மாகும்
நலிவான தேகத்தில் நலியே இல்லை
நன்மைஎன்ற மனம்போகம் வாழ்வு மிச்சம்
கொலுவான பூமியினம் பலிக்கும் பாரு
கொண்டு விற்கும் வியாபாரம் குணம தாகும்
வலுவான மன்னர்உற வாகும் மேலும்
மக்களே அதிகபலம் வருகும் பாரே.

(இ-ள்) இதே ஊணில் அரசு செய்யும் பக்ஷி வலுவான மித்துருவாக இருக்கும் போது பிறந்தவன் இவனுக்கு ஊண் வினாடியில் சொன்ன பலன் அளவு மேலும் அரைப்பங்கு அதிகமாகும். இவன் உடலில் நோய் என்பது வரவே வராது. நல்ல இடத்தில் கலியாணமும் அதனால் உயர்ந்த போமுகம் சுகமும் கிடைக்கும் வாழ்வு விளங்கும். பூமி பயிர் நன்றாக விளையும். வியாபார விருத்தி பல்கிப் பெருகும். நல்ல பெரிய மனிதர்கள் (அரசர்கள்) நேசம் கிட்டும், இவனுக்கு என்றும் சந்தோஷமான பலனே கிடைக்கும்.

# 6. ஆயுள் பிரமாணம்

ஒவ்வொரு தொழில் வினாடிக்குப் பலன் சொல்லும் பாடல்களில் அங்கங்கே ஜாதகன் வயது சொல்லப்பட்டாலும் இங்கே ஊண், நடை அரசு, துயில், சாவு இந்தத் தொழில்களுக்குத் தனியாகப் பொது ஆயுள் என்று இவ்வளவு சொல்லப் படுகிறது. இது சுவடிகளில் இல்லாமையால் "உரோமரிஷி வினாடி பஞ்சபக்ஷி" என்ற நூலிலிருந்து எடுத்து எழுதப்படுகிறது.

117. தானென்ற பிறப்புக்கு வயது சொல்வேன்
தன்மைஉள்ள ஊணுக்கு எழுப தாகும்
மான்என்ற நடையினுக்கு வயதோ மைந்தா
மறையவன்தான் லபித்தபடி ஐம்ப தாகும்
தேன்என்ற அரசினுக்கு வயது மெத்த
செப்புவென்றால் நூற்றிப்பத்து இருந்து வாழ்வான்
கோன்என்ற உறக்கத்தின் வயது கொஞ்சம்
குறையான எழைந்து வயதாம் பாரே.

## இதுவுமது

118. வயதுகொஞ்சம் மரணத்தின் வயது கேளு
மக்கனே பதினைந்து வருஷம் ஆகும்
பயன் உடைய அரசுபகை ஆகா தப்பா
பண்பான இதற்கதிகம் இல்லை இல்லை
அயன்என்னும் தந்தைஅன்று சேர்ந்த நேரம்
அந்தியமாய்ச் சுழிமுனைதான் முடிந்த நேரம்
வயசதுவே அற்றுவிடும் சனிஇவன்தான் மைந்தா
மருவிமணம் வரும்நேரம் நோய்வரும் ஊண் கேளே.

(இ-ள்) 117 ஒவ்வொரு தொழிலும் பிறப்பதற்கு ஆயுட் பிரமாணம் வருமாறு:

1. ஊண் - எழுபது 3. அரசு நூற்றுப்பத்து
2. நடை - ஐம்பது 4. உறக்கம் - முப்பத்தைந்து

118. மரணம் அல்லது சாவுக்குப்பதினைந்து

இப்படி இருக்கும் போது ஒருவன் பிறந்த நேரத்தில் மற்றபட்சி ஒன்று சத்துருவாகி அரசு தொழிலும் செய்யுமாகில் அது மிகவும் கொடியதாகும். இதற்கும் அதிகமான தீயபலன் வேறெதுவும் இல்லை. பிரமனுக்குச்சமமான இவன் தந்தை இவன் தாயைச் சேர்ந்த நேரம் அவனுக்குச் சுவாசம் சூனியத்தில் இருந்தது. இந்த ஆதான அதாவது கற்பாதான நேரம்தான் பிறந்தவன் திருமணம் செய்து கொள்ள ஏற்பாடு செய்யும் நேரத்தில் நோய் இவனைப் பெரிதாகப் பாதித்து கல்யாணம் தடைப்பட்டுப் போகும். எனவே இது வெகுகொடியதாகும் என்பதாம்.

## ॥ஶ்ரீ ॥ உ

## மகாதசை ஆண்டு

இப்படலத்தின் முகப்பில் சொன்னபடி இப்போது பஞ்சபக்ஷியின் அடிப்படையில் தசைபுத்தி விளக்கம் சொல்லப்படுகிறது. ஜாதகத்தின் ஜென்ம நக்ஷத்திரம் தொட்டு அதன் அதிபதி தசை ஆரம்பமாகி அடுத்தடுத்து நக்ஷத்திர அதிபதிகள் நடத்துவது ஜோதிட அடிப்படைக் கொள்கை. அதேபோல் இப்பஞ்ச பக்ஷியின் அடிப்படையில் மனிதன் பிறந்தது முதல் எந்தப் பட்சியின் எந்தத் தொழிலின் தசை புத்தி முதலியவை நடந்து பலன் தரும் என்பதை அறிய கணிதமுறை உண்டு. இது சுவடிகளில் இல்லை. அச்சிட்ட அகத்தியர் பஞ்சபட்சி சாஸ்திரம் என்ற நூலில் மகாதசை ஆண்டு என்ற தலைப்பில் ஒரு பாடல் மட்டும் காணப்படுகிறது. இதற்கு யாரும் இதுவரை விளக்கம் காணவில்லை. இதுவும் யாம் பல்லாற்றானும் சிந்தித்துப் பெரிது முயன்று பொருள் கண்டு விளக்கியுள்ளோம். இப்பொழுது பாடல்.

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

119. உண்டிநடை ஐந்தாகி இருபத் தைந்தாம்
உறுதூக்கம் சாவுநா லைந்த தாகும்
கண்ட இரு பதினைந்து மரசாக் கூட்டி
மகாதசைநூ றாண்டந்திர திசையாம் திங்கள்
விண்ட நாள் சூக்ஷதிசை பிராண திசைநான்
விளங்கிய பஞ்சாங்க முறையே வல்லோர்
அண்டருக்கு மேலாக ஆயுள் காணார்
அலைகடல்சூழ் அவனியெலாம் அறிவர் தாமே.

(இ-ள்) பஞ்சாங்கத்தில் ஜோதிடத்திற்குக் கையாளும் முறையிலேயே பட்சித் தொழிலின் தடை கணக்கிட வேண்டும். அதே முறையில் புத்தி அந்தரம் 'சூக்ஷ' பிராண தசைகளும் கணக்கிட இயலும். இந்த வகையில் தொழில்களின் தசைகள் கீழ்கண்ட வரிசைக் கிரமத்தில் குறிப்பிட்ட ஆண்டுகள் நடக்கும்.

| | | | |
|---|---|---|---|
| ஊண் | தசை | 5 | ஆண்டுகள் |
| நடை | தசை | 25 | ” |
| துயில் | தசை | 20 | ” |
| சாவு | தசை | 20 | ” |
| அரசு | தசை | 20 | ” |

இவ்வகையில் தசை விளக்கம் அறியவல்லவர் தீர்க்காயுளாய் எல்லாம் அறிந்தவராய் விளங்குவர் என்பதாம்.

(விளக்கம்)

1) ஜோதிடத்தில் 9 கோள்களுக்கும் தசை வருடங்கள் தொகை வெவ்வேறு. மொத்த தசை வருஷங்களும் அங்கு 120 ஆண்டுகள் வரும். ஆனால் பட்சிபட்சியில் எல்லாப் பட்சங்களுக்கும் பொதுவாக ஒவ்வொன்றுக்கும் மொத்த தசை ஆண்டு நூறு ஆகும்.

2) வளர்பிறை தேய்பிறைகளில் தனித்தனி கொடுக்கப்பட்டுள்ள. நட்சத்திரத்தினை அனுசரித்தே பட்சியை நிர்ணயம் செய்ய வேண்டும்.

3) ஜென்ம நட்சத்திர பரம நாழிகை மற்றும் பிறந்தபோது ஜன்மநட்சத்திர செல்லு நாழிகை இவற்றின் விகிதாசாரத்தில் 100 வருஷத்தில் ஜென்மத்தில் சென்றது போக மீதி செல்ல வேண்டிய மகாதசையாண்டுகள் இருக்கும்.

4) ஆருடப் படலத்தில் சொல்லப்பட்ட பட்சிகளின் சூக்கும நாழிகை கணித இலக்கணப்படியே ஒவ்வொரு தொழில் புத்தியையும் பிரிக்க வேண்டும். அதே விகிதாசாரத்திலேயே அந்தரங்களையும் பிரிக்க வேண்டும்.

5) மகாதசையாண்டு ஜென்மத்தில் சென்றது போக இருப்பு ஆண்டுகள் முழுவதும் கடந்து ஜாதகர் ஜீவித்தால் ஜென்ம நட்சத்திரத்திற்கு அடுத்த நட்சத்திர பட்சியின் கணித இலக்கைப்படி மற்றொரு சுற்று மகாதசையாண்டுகள் நடக்கும். இது பெரும்பாலும் ஜென்மநட்சத்திரத்தில் பெரும்பகுதியும் கழிபச் செல்லாகிவிட்ட ஜாதகங்களுக்கே நடக்கும்.

6) இதுவரை சொல்லப்பட்ட பஞ்சபட்சியின் சித்தாந்தப்படியே வலுவுள்ள தொழில் புத்தி உள்ளவர் (அரசு, ஊண்) அந்தக் காலம் முழுவதும் தாழ்ந்துள்ள(நடை, உறக்கம், சாவு) புத்தியுடையவர்களைவிட ஓங்கி இருப்பர். இப்படி எல்லாவகையிலும் பட்சி மகாதசை புத்தி அந்தரங்களின் பலனை அறிய இயலும்.

7) இதேபோல் ஜாதகப்படி நடக்கும் தசாபுத்திகளுக்கும், பஞ்சபட்சிப்படி நடக்கும் தசைபுத்தியின் தாரதம்யப்படி, ஜாதகதசை நல்ல பலன் அல்லது தீயபலன் எந்த அளவில் தருவான் என்பதையும் அறிய இயலும்.

1) உதாரணமாக ஒருவருக்கு ஜாதகப்படி சுபனின் நல்லதசை நடந்து அதே நேரத்தில் பட்சியின் அரசு, ஊண் புத்திகள் நடந்தால் மொத்த பலன் மேலோங்கி நடக்கும்.

2) இரண்டில் ஒன்று கெட்டால் மத்திபபலன் நடக்கும்.

3) இரண்டும் கெட்டால் மிகவும் காலம் மோசமாக நடக்கும்.

4) கெட்ட, மாரக தசாபுத்தி நடந்து, அதே சமயம அரசு, ஊண் புத்தி நடந்தால் கெடுதி, மாரகம் இவை சமாளிக்கப்படலாம்.

5) இதேபோல் பட்சிப்படி சாவு, உறக்கத் தசைகள் நடந்து, ஜாதகதசை யோகாதிபனின் நல்லதசை நடந்தால் பட்சிதசையின் தீமை பெரும்பாலும் பாதிக்காது.

6) இப்படிப் பலவகையில் இருதசைகளையும் ஒப்பிட்டுப்பலன் அறியமுடியும். அடுத்து பட்சிமகாதசை கணிதமுறையைக் காண்போம்.

உதாரணம் ஒன்று: பிறந்த தேதி 3-7-1930 பிரமோதூத ஆனி 19 வியாழக்கிழமை சுக்லபட்ச அஷ்டமி, அஸ்த நட்சத்திரம். 33 நாழிகை 58 விநாடிக்குமேல் மறுநாள் சித்திரை நட்சத்திரம் 25.18 விநாடி வரை. ஜனனம் உதயாதி நாழிகை 49 விநாடி 36.

| | |
|---|---|
| இதன்படி ஜனனகால சித்ரா | 43.36 |
| நட்சத்திரம் செல்லு | 33.58 |
| | 9.38 |

9 நாழிகை 38 வினாடி அல்லது 578 வினாடி

சித்திரை பரம நாழிகை 59 வினாடி 56 அல்லது 3596 வினாடி

பட்சிமகாதசை 100 ஆண்டில்

ஜனனகால செல்லு = 578/3596 × 100

16 வருஷம் 0 மாதம் - 26 நாள்

இருப்பு 83 வ 11 மா - 4 நாள்

16 வருஷம் சொச்சம் கர்ப்பத்தில் சென்றுவிட்டபடியால் பிறந்த அன்று

| | |
|---|---|
| உள்ள நிலை | 16—0—26 |
| ஊண்புத்தி | 5 |
| நடையில் செல்லு | 11—0—26 |

| | |
|---|---|
| நடையில் இருப்பு 25வ புத்திகள் | 17.வ.0-மா 26 நாள் |
| | 25—0—0 |
| | 11—0—26 |
| | 13—11—4 |

ஜனனகாலத்தில் நடை புத்தியில் 13வ 11மாதம் 4நாள் நடக்க வேண்டியது தொடர்ந்து

| | |
|---|---|
| புத்திகள் | 1930—7—3 |
| நடை | 13—11—4 |
| உறக்கம் | 20—0—0 |
| சாவு | 20—0—0 |
| | 1984—6—3 |

அதாவது இவர்து 55 வயது முதல் பட்சி மகாதசையில் அரசு புத்தி ஆரம்பித்து நடக்கிறது. அதாவது 54 வயது வரை இவருக்கு நடை, உறக்கம், சாவு ஆகிய வலுவற்ற புத்திகள் நடந்தன, அனுபவத்திலும் இந்தக் காலம்வரை இவர் மிகுந்த துன்பம், வறுமை கவலை இவற்றை அனுபவிக்கவேண்டி வந்தது. அரசு புத்தி ஆரம்பித்தது முதல் இவருக்கு முன்னேற்றம், புகழ், பொருளாதார உயர்வு முதலியவை ஏற்பட்டு வருகின்றன. எனவே இந்தத் தசைவிளக்கம் எவ்வளவு அனுபவ பூர்வமானது, உண்மையானது என்பது விளங்கும்.

அடுத்து இத்தப் புத்தியை அந்தரங்களாகப் பிரிக்கும் வகை:

இவருக்குப்பட்சி காகம். ஆருட காண்டத்தில் கொடுத்துள்ள கணிதம் இலக்கணப்படி காகத்தின் சூக்கும அரசு-1 நாழிகை, ஊண் 1-நாழிகை, நடை, 2 நாழிகை, உறக்கம் $1\frac{1}{2}$ நாழிகை, மரணம் $\frac{1}{2}$ நாழிகை ஆக சாம நாழிகை 6. அரசு புத்தியாகையால் அரசு அந்தரம் முதலில் நடக்கும். இதன்படி அரசு முதலிய அந்தரங்கள் வருமாறு, அரசு 1 நாழிகை அதாவது 60 வினாடி சாம நாழிகை 6 அதாவது 360 வினாடி. அரசு புத்தி ஆண்டு 30.

1) அரசு அந்தரம் $= 60/360 \times 30 = 30 \times 1/6$
= 5 ஆண்டுகள்

2) ஊண் அந்தரம் 1 நாழிகை எனவே இதுவும் 5 வருடம்

3) நடை அந்தரம் 2 நாழிகை அதாவது முன்னதைவிட 2 பங்கு
= 10 ஆண்டுகள்

4) உறக்கம் அந்தரம் = $\frac{1}{2}$ நாழிகை
அதாவது ஊணில் பாதி
= 2 வரு 6 மாதம்

5) சாவு அந்தரம் $1\frac{1}{2}$ நாழிகை அதாவது
ஊணைப்போல் $1\frac{1}{2}$ மடங்கு
= 7 வருடம் 6 மாதம்

இப்பொழுது மொத்தம் 30 ஆண்டுகள் ஆயின, இதே விகிதங்களில் இதில் ஒவ்வொரு அந்தரங்களிலும் சூக்கும அந்தரம் இதே விகிதாசரத்தில் பிரிக்க முடியும்.

இதேபோல் மற்ற பட்சிகளின் கணித இலக்கணப்படி அந்தந்த மகாதசைகளையும் புத்திகளாகப் பிரிக்கலாம்.

(மேலே கொடுத்த கணிதங்கள் மின்கணக்குப்பொறியில் செய்யப்பட்டன. இந்த உதாரணம் இந்நூல் உரையாசிரியருடையதே)

**உதாரணம் இரண்டு:-**

மேற்கண்ட உதாரணத்தில் நல்ல காலம் வயதான காலத்தில் வந்தது. அப்படியானால் இளமையில் மேலோங்கி இருக்கும் நபர்களின் அமைப்பு எப்படி இருக்கும் என்றறிய ஆர்வம் உண்டாவது இயல்பே. அதனால் இந்த எடுத்துக்காட்டு இது நமது முன்னாள் பாரதப்பிரதமர் திரு. ராஜீவ் காந்தியுடையது. 40 வயதுக்கு சற்று தாண்டினவுடன் இவருக்கு அரசுபதவியே கிடைத்தது. இப்போது கணிதத்தைப் பார்ப்போம்.

பிறப்பு 20-8-44 நேரம் காலை 9.9-50
Wartime.
Standard Time = 8.50
சுதேசமணி = 8-12

சூரிய உதயம் 5-48 சுதேசமணி
உதயாதி நாழிகை 6 வினாடி 5
இவர் ஜன்ம நட்சத்திரம் பூரம் 2ம் பாதம்

பூரம் ஆதியந்தம் பரம நாழிகை 67 வினாடி 19
= 4039 வினாடி
ஜெனனகால செல்லு = 4039 வினாடி
ஜெனனகால செல்லு = 22 நாழிகை 33 வினாடி
மகாதசை செல்லு = 1353 வினாடி
= 1353/4039 × 100
33 வருடம் 5 மாதம் 29 நாள்
செல்லவேண்டியது 100வ—33-5-29
= 66 வருஷம் 6 மாதம் 1 நாள்

| | |
|---|---|
| ஜெனனத்தில் சென்றவை | 33-5-29 |
| ஊண் | 5 |
| நடை | 25-5-29 |
| உறக்கம் | 3-5-29 |

உறக்க புத்தி இருப்பு 20—3-5-29
= 16-6-01

**இனி தொடர்ந்து புத்திகள் விவரம் 1944 - 8 - 20**

| | |
|---|---|
| உறக்கம் | 16-6-1 |
| சாவு | 20-0-0 |

இவருக்கு 21-2-1981 முதல் இவர் 37 வயது முதல் அரசு புத்தி தொடர்த்து 30 ஆண்டுகள் நடக்கும். வளர்பிறை பூரம் ஆகையால் இவர் பட்சி ஆந்தையாகும். ஆந்தையின் கணித இலக்கணப்படி சூக்குமங்கள் வருமாறு அரசு ½ நாழிகை, ஊண் 1½ நாழிகை, நடை 1½ நாழிகை. உறக்கம் 2 நாழிகை, மரணம் 1½ நாழிகை இதன் படி அந்தரங்கள் (அரசு புத்தியில்) நடக்கும்.

விதம்:-

| | | | |
|---|---|---|---|
| | அரசு | ½ | 1981-2-21 |
| | | | 2-6-00 |
| | | | 1983-8-21 |
| | ஊண் | 1½ | 7-6-00 |
| | | | 1990-2-21 |
| | நடை | 1½ | 7-6-0 |
| | | | 1997-8-21 |
| | உறக்கம் | 2 | 10-0-0 |
| | | | 2007-8-21 |
| | சாவு | 1½ | 2-6-0 |
| | அதாவது | | 2010-2-21 வரை |

எனவே அரசு தொழில் அந்தரம் சென்ற ஊண் தொழில் அந்தரம் நடக்கும் போது இளமையிலேயே இவர் இந்திய அரசின் பொறுப்பேற்று அரசு பதவி பெற்றது உண்மையாகவே இருக்கிறது. எனவே சித்தர்கள் எவ்வளவு நுணுகி ஆய்ந்து வாழ்க்கைக் கல்விக்கு ஆக்கவழி கண்டுள்ளார்கள் என்று புரியவைக்கவே இவ்வளவு தூரம் கணிதம் முதலியவை செய்து காட்டப்பட்டன. மற்ற எல்லா எடுத்துக்காட்டு களுக்கும் இக்கணித முறையின் அடிப்படையிலேயே கண்டு கொள்க.

குறிப்பு: மகாதசை ஆண்டு 100 ஆகக் கொண்டு அதன் உட்பிரிவுகளான ஐந்து தொழில்களின் புத்திகளின் ஆண்டு கணக்கும், அவை தொடர்ந்து நடக்கும் வரன் முறை அதாவது வரிசைக் கிரமமும் பாட்டில் உள்ள படியே பிரித்துக்காட்டப் பட்டது. இதற்கும் அன்றாடம் அவர் பட்சிகள் தொழில் செய்யும் வரிசை முறையும் வேறுபடுவதைக் காண்க. மகாதசைக்கு மட்டும் இதைக் கொள்க. மற்ற எல்லா இடங்களிலும் முறையாக இதற்கு முன்னால் சக்கரங்கள், பதகங்கள் மற்றும் விளக்கத்திலும் ஆரம்பத்தில் சொன்னபடியே கொள்ள வேணும்.

அடுத்து தொழில்களுக்குப் புத்தி பிரிக்கும்போது அரசை, அடுத்த வலுவுள்ள ஊண் தொழிலுக்குக் குறைவாக 5 ஆண்டுகளே கொடுக்கப்பட்டுள்ளன. ஏன்? சித்தர் கள் நுண்ணறிவினர். செயல் திறன் வல்லவர். மனிதன் செய்யும் காரியங்கள் எல்லா வற்றினையும் உண்பதற்குச் செலவாகும் நேரத்தோடு ஒட்பிட்டால், உண்ணும் நேரம் மிகக் குறைவுதான் (உறக்கம்பாதி நாள்) இரவு முழுவதும். எனவே ஊண் தொழிலுக்கு 5 ஆண்டுகளே மிகக்குறைவாகவே உள்ளது.

சாவு நடந்தபின் செயல் இல்லை. ஆனால் அதற்கு ஊனை விட அதிகமாக 20 ஆண்டுகள் ஏன் என்ற எண்ணம் எழலாம். சாவு பட்சித் தொழில் நடக்கும்போது மனிதன் சாவதில்லை, ஆனால் சாவுக்குச் சமமான துன்பநிலையை அனுபவிக்கின்றான். தவிரவும் அனுபவத்தில் சுகத்தைவிட துன்பமே அதிகம். அதனால் சாவுக்கு 20 ஆண்டுகள் ஏற்படுத்தப்பட்டுள்ளது என்று ஊகிக்கலாம். உறக்கமு இதேபோல் நன்மையற்றதாகையாலும் அதற்கும் 20 ஆண்டுகள் ஏற்படுத்தப்பட்டுள்ளது. அடுத்து நடை செயல் திறன் உடையது. அதனால் அதற்கு சாவு, துயிலைவிட அதிகமாக 25 ஆண்டுகள் என்று ஏற்படுத்தப்பட்டுள்ளது. அரசு எல்லாத் தொழில்களிலும் உயர்வுடையது. அதனால் எப்படி அதிக சுபனான சுக்ரனுக்கு விம்சோத்தரி தசையில் 20 ஆண்டுகள் ஒதுக்கப்பட்டதோ அதேபோல் அரசு தொழிலுக்கும் எல்லாவற்றைக்காட்டிலும் அதிகமாக 30 ஆண்டுகள் ஏற்படுத்தப்பட்டுள்ளது. நம் ஆன்றோர்களான சித்தர்களின் அணுகுமுறை வாழ்வு முறைகளைக் கூர்ந்து நோக்கும் இயல்பான நுண்ணுணர்வு இவை எவ்வளவு உண்மையானது என்பதை ஓரளவு புரிய வைக்கவே இவ்வளவு எழுதப்பட்டது.

அடுத்து நாம் காட்டிய இரண்டாவது உதாரணத்தில் உயர்ந்த செயல் திறன் மற்றும் நன்மை தரும் அரசு புத்தியில் அரசு அந்தஸ்து ஏற்பட்டு மறுபடி அவருக்கு அது பறிபோனது ஏன்? என்ற கேள்வி எழலாம். கூர்ந்து கவனித்தால் இதிலும் ஒரு உண்மை புரியும். அரசில் அரசு அந்தரமும், அதைவிட சிறிதே குறைந்த நன்மையுடைய ஊண் அந்தரமும் 21-2-1990 வரை நடந்தது. அடுத்து தாழ்ந்ததான நடை அந்தரம் ஆரம்பமாகி சிறிது காலத்தின் முன்னால் இவருக்குத் தலைமை போய் விட்டது. ஆனால் நடை அந்தரத்தையே மேலும் சூக்குமமாக அந்தராந்தரங்களாகப் பிரித்தால் நடையில் நடை, நடையில் உறக்கம், நடையில் சாவு, அதன் பின் நடையில் அரசு பிரத்யந்தரம் ஏற்படும் போது, இன்னும் சிறிது காலத்தில் இவருக்கு மீண்டும் முன்னேற்றம் ஏற்படலாம். இதுவும் புத்தி தொழிலாகையால் சாத்தியமானதே. விரிவஞ்சி பிரத்யந்தர உட் கணிதங்கள் காட்டப்படவில்லை,

குறிப்பு:இந்த நூல் வெளியானபின் 21 5-1991-ல் இவர் மனித குண்டுவெடிப்பால் இறக்க நேரிட்டது. இது இவர் ஜாதகத்தின் ஆயுர்பாவத்தில் ஆயுர்தாயம் முடிந்ததால் ஏற்பட்டது என்று கொள்ளவேண்டும். விபத்து நடந்தபோது 21-5-1991 அன்று இரவு 8-14 முதல் 10-48 வரை இவர் சென்னை விமான நிலையத்தில் சிறிது ஓய்வுக்குப்பின் கிளம்பிய போதும், விபத்தால் இறந்த போதும் இவர் பட்சிக்கு ஆந்தைக்குச் சாவு தொழில் நடந்தது குறிப்பிடத்தக்கது. இதே போல் நமது (இதற்கு முந்தைய) முன்னாள் பிரதமர் திருமதி இந்திரா காந்தி சுடப்பட்ட 31-10-1984 அன்று இவர் பட்சியான கோழி தொழிலுக்குக் காலை 8-24 முதல் 10-48 வரை 'சாவு' தொழில் நடந்து கொண்டிருந்தது. அலுவலகத்தில் கிளம்பியபோதும், சுடப்பட்டபோதும் இவர் பட்சிக்கு 'சாவு' தொழில் நடத்தது என்பது குறிப்பிடத்தக்கது.

(இவையும் உரையாசிரியர் தனி உரிமை)

# 8. பூப்புப் படலம்

## (ருதுப் படலம்)

மனிதன் பிள்ளைப்பருவம் கடந்து இளமை வாலிபப் பருவம் நெருங்கும்போது அவன் உடல் உள்ளம் இவற்றில் பருவ மாறுதல் காரணமாக "ஆர்மோன்கள்" என்று சொல்லப்படும் ஆடவர், பெண்டிரின் இன அணுக்கள் வளர்ச்சியாலும், பாலுணர்வின் வாயிலில் காலெடுத்து வைக்கிறான், இவ்வகையில் பெண் முதன் முதலில் பூப்படைதல் (ருதுவாதல்)ஒரு முக்கிய நிலையாகிறது. அவள் தாயாகும் நிலைக்கும் வந்துவிட்டாள் என்பதை இது குறிக்கும்.

ஜோதிடத்தில் முதன் முதலில் பூப்பாகும் நேரத்திற்குச் சாதகம் கணித்து "ருது ஜாதகம்"என்ற பெயரால் பலனறியப்படுகிறது. அதேபோல் ஒரு பெண் முதன்முதலில் நேத்தில் உதிக்கும் பட்சி, தொழில் அதன் வினாடிக்கேற்ப அவன் வாழ்க்கை எப்படி அமையும் என்பதைக் கூறுவதே இந்த 'ருது' படலமாகும். இதில் உள்ள பாடல்கள் அனைத்தும் சுவடி 'இ' அகத்தியர் பஞ்சபட்சி சாத்திரம் சுவடி எண் 777-ல் உள்ளவையே. இடம் சுட்டியவை மட்டும் வேறு நூல்களிலிருந்து கொண்டவை. ஜன்ம ஜாதகம் இருக்க ருது ஜாதகம் எதற்குப் பார்க்க வேண்டும் என்ற காரணத்தை முதலில் தெளிவுபடுத்துகிறது.

### 1. ருது ஜாதக அவசியம்

#### எண்சீர் ஆசிரிய விருத்தம்

120. பாரான பாவையர்தம் வாழ்வும் கேடும்
பண்புளதும் இல்லதும்நீர் பகர்வீர் என்ன
நேரான மானிடர்தான் நின்று கேட்கில்
நீள்நிலத்தில் அவள்பிறந்த நாளைக் கேளு
ஆரான பிறந்திடுநாள் சொல்வார் ஆகில்
அப்பனே அதுகொண்டு சொல்ல வேணும்
ஊரான ருதுவாகும் காலம் கொண்டு
ஊண்மையாம் அதுபேசும் ஊணு ஊனே

(இ-ள்) ஒரு பெண்ணின் வாழ்வு எப்படி இருக்கும் நல்லபடி பண்பாக சிறப்பாக இருக்குமா? என்று கேட்டு ஒருவர் வந்து அப்பெண்ணின் பிறந்தநாள் நேரம் சொன்னால் அதற்கு ஜாதகம் கணித்து அவள் வாழ்க்கை அமைப்பு அந்தஸ்து முதலியவற்றைச் சொல்ல வேண்டும். அப்படி இன்றி அவள் ருது ஆன நேரத்தைச் சொன்னால் அவள் அகைய விருக்கும் போக பாக்கியம், உணவு நிறைவு முதலியவற்றைத் தெளிவாகச் சொல்லலாம் என்பதாம்.

பெண்களின் எல்லா விஜயங்களுக்கும் பிறந்த ஜாதகத்தையும் அவர்களுக்கு அமையும் போகம் அதாவது கணவன் சேர்க்கை, தொடர்ந்து பிள்ளைப்பேறு, நிறை உணவு இவைகளுக்கு மட்டும் தான் ருது ஜாதகம் பார்க்கவேண்டும் என்பது ''ஊரான ருதுவாகும் காலம் கொண்டு உண்மையாம் அது போகம்'' என்ற பாடலின் கடைசி வரி தெளிவாக்குகிறது. எனவே சிலர் பார்ப்பது போல் எல்லாவற்றிற்கும் ருது ஜாதகம் பார்ப்பது தேவையில்லை என்பது தெளிவாகிறது. அப்படி ருது வாகும் பட்சியின் தொழில் வினாடிப்படி எப்படி சம்பந்தப்பட்ட விஷயம் இருக்கும் என்று தொடர்ந்து விளக்கப்படுகிறது.

ஜாதக காண்டத்தில் சொல்லியபடி ருதுவாகும் நேரத்தை ஒரு குழந்தை பிறந்தது போன்று நினைத்துப் பட்சியும் தொழிலும் தேய்பிறை வளர்பிறை நாட்களுக்கு பகல் இரவுக்கு தனித்தனிக் கொடுத்துள்ள, ருதலிப்புகுபடலத்தில் உள்ள தொழில் முறைப் பதங்களிலிருந்து கணித்துக் கொள்ளவும். முறை அங்கும் ஜாதகக் காண்டத் திலும் சொல்லப்பட்டுள்ளது

இப்படலத்தில் இனிவரும் பாடல்கள் எல்லாம் சுவடி எண் 777 அகத்தியர் பஞ்சபட்சி சாஸ்திரத்தில் உள்ளவை. 115 முதல் 126-ம் பாடல் வரை பக்கம் 52 முதல் 61 வரையாகும்.

## 2 ஊண் கால இருதுவின் பலன்

121. ஊண்என்ற பட்சியிலே ருதுதான் ஆகில்
உண்பதிலும் உடுப்பதிலும் குறைதான் இல்லை
சேண்என்ற பொருள்உண்டு பாலும் உண்டு
செப்பொணாச் செயலுண்டு செல்வ முண்டு
மான் என்ற வாழ்வுண்டு வாஞ்சை யுண்டு
வழியான பிள்ளைகள்மற் றெல்லாம் உண்டு
கோண்என்ற சிவகலைதான் அதிகம் ஆகும்
கூட்டுறவாம் மித்துருதான் அரசு நன்றே

(இ-ள்) ஊண் காலத்தில் ஒருத்தி பூப்பானால் உணவு உடைக்கு அவளுக்குக் குறை இல்லை, நிறையப் பொருள் உண்டு. கணவனுடன் நல்ல வாழ்வு உண்டு. அவனுடைய வாஞ்சையன்பு உண்டு. புத்திரவிருத்தி நல்லபடி உண்டு. சிவகலையாப் வலது சரம் குறிக்கும் ஆண் சந்ததியே அதிகம் உண்டு. இதே நேரத்தில் இவள் பட்சியின் மித்துருபட்சி அரசில் இருந்தால் இந்த வைபவங்கள் மிகவும் உயர்வாக அமையும்.

இதுவும் அது

122. நன்றான மித்துருதான் அரசன் ஆகில்
நடக்கும்டா இவனாலே அதிக லாபம்
குன்றாது ஒருபோதும் வாழ்வு தானும்
கூட்டிவைக்கும் சுகபோகம் குலமே செல்வம்
மன்றாடும் பூங்குழலாள் ஆயுள் மட்டும்
வாழ்வுசொல்ல எவராலும் மதிக்கொணாது
சென்றாடும் சத்துருவின் பகையா காது
சீரழிவு செய்திடுவான் திண்ணம் தானே

(இ-ள்) ஒருவர் ஊண் பக்ஷியால் ருதுவாகி அதே சமயம் அந்த பக்ஷிக்கு மித்துரு பக்ஷிக்கு அரசு தொழில் நடந்தால் அதிகலாபம் உண்டாகும். இவளுக்கு வாழ்வு ஒரு நாளும் குறையாது. குலத்தினர் நட்பு, செல்வம், சுகபோகம் எல்லா வற்றையும் சேர்த்து வைக்கும், இவள் ஆயுள் உள்ள மட்டும் அழகு குலையாள் (மன்றாடும் பூங்குழலாள்) இவள் ஆயுள் உள்ள மட்டும் வாழ்வும் வைபவமும் சொல்ல முடியாத அளவுக்கு அனுபவிப்பாள்.

ஊண்பக்ஷியில் பிறந்தபோது அரசு செய்யும் பட்சி சத்துருவானால் அதன் பலன் வருமாறு.

123 தான்அவனாய் இருந்தவரைப் பிரித்து வைப்பான்
தனம்பொருளை பவிசுகளைத் தவற வைப்பான்
கோனவனென் றறியாமல் உலகத் தார்கள்
குதித்திடுவார் ஒருதொழிலைக் குறித்துக் கொண்டு
மானனைய மின்னார்கள் பூக்கும் காலம்
மதிவேணும் நேரமங்கே வாய்க்க வேணும்
தேனனையாள் கலியுகத்தில் கோடிக் கொன்று
திடமாகத் தானிருந்து வாழ்வார் தானே

(இ-ள்) ஊண் ருதுவில் சத்ருபக்ஷி அரசாக இருந்தால் கணவனைப் பிரித்து வைக்கும். தனம் பொருள் அந்தஸ்து முதலியவை தவறிப்போகும், கோனவன் (சத்ருபக்ஷி) அரசு என்று அறியாமல் சிலர் ஜாதகியின் உயர்வு பேசிக் குதிப்பார்கள். எனவே பாவையர்கள் முதல் பூப்பு அடையும் போது சந்திரன் நல்ல நிலையில் இருக்க வேண்டும். (மதிவேணும்) நல்ல காலமும் (தனக்கு ஊண், அரசு தொழில், மித்ரு பக்ஷி அரசும் ஆக இருக்கும் நேரம்) அமைய வேண்டும். உயர்ந்த நல்ல நிலையி லுள்ள இப்படிப்பட்ட பெண் கோடிக் கொருத்தி தான் பிறப்பாள் என்பதாம்.

## 7. நடை கால உருதுவின் பலன்

(எண் சீராசிரிய விருத்தம்)
இப்படலம் முழுமையும் இதுவே

124. வாழாத நடைதனிலே ருதுவே யானால்
வாழ்வில்லை சுகமில்லை மனைக்கட் டில்லை
மாளாத சத்துருஊண் அரசாய் நின்றால்
மற்றதொரு தீவினையும் சொல்லொ ணாது
ஆளான மித்துரு ஊண் அரசே ஆகில்
அதனுடைய கொடுமையினை அகற்றி வைப்பான்
கோளான வாழ்வுண்டு சுகமும் உண்டு
கொடியான அரசும் ஊண் பகையா காதே

(இ-ள்) நடைகாலத்தில் ஒருத்தி பூப்படைந்தால் வாழ்வும் சுகமும் இல்லை. வீடு வாசலில்லை. அதே சமயம் மற்ற பக்ஷி சத்ருவாகி அரசு ஊண் காலத்தில் இருந்தால் இவளுக்குச் உண்டாகும் தீய துன்பங்கள் சொல்லத்தரமன்று. ஆனால் அரசு ஊண் பக்ஷிகள் அப்போது இவள் பக்ஷிக்கு இவள் மித்துருவாக இருந்தால் மேமே சொன்ன கொடுமைகளையும் நடைகால ஜனனத் தீமையையும் அகற்றிவிடும். இந்த நிலையில் இவளுக்கு சுற்றம் தழுவிய வளமான வாழ்வும் சுகமும் உண்டு. இனி அப்போது சத்துரு ஊண் அரசாக இருப்பதன் விளக்கமான பலன் வருமாறு.

இதுவுமது

125. சத்துருவாய் நின்றாக்கால் வ்ருஷம் ஒன்றில்
தான்வாழ்வு போய்விடும்பின் தாய்தந்தை தோஷம்
செத்துவிடும் பிறவிகள்தான் பொருளும் தேசம்
தீவினையாம் அகலாத வேசி யாவாள்
நைந்துவிடும் உடலில் நின்று பிணிகள் தானே
நசித்துப்போம் அக்குடிதான் நாசம் ஆக
மத்திமமே ஆகுமென்று முதல்நூல் தன்னில்
வசனித்தார் குருமுனியும் வசனித் தாரே

(இ-ள்) நடைகால பூப்பானவள், அப்போது வேறு பட்சி ஊண் அரசாகி பகையானால் அவள் வாழ்வு கெடும். தாய், தந்தைக்குத் தோஷமாம். பிறவி அதாவது நித்திய வாழ்வு தடைப்பிணம் போன்று சத்தில்லாமல் நடக்கும். பொருள் சேதமாகும் கெடும் செயல் செய்வாள். வேசியாகி விடுவாள். உடலில் பலவகைப்பட்ட நோய்கள் காணும், அவள் பிறந்த குடியும் குடித்தனமும் நாசமாகும். இது மத்திம பலன் தான் என்று குருமுனிவர் தம் முதல் நூலில் சொல்லி வைத்திருக்கிறார் என்பதாகும்.

(குறிப்பு) குருமுனிவர் என்பது அகத்தியராகலாம். பாட்டில் முதல் நூல் என்று வருவதால் பஞ்சபட்சி பற்றி அகத்தியரே முதன்முதல் ஒரு தனி நூல் செய்திருக்கிறார் என்பதும் தெரிகிறது. அதைத் தழுவிதான் பஞ்சபட்சி பற்றி மற்ற நூல்கள் வந்தன வாகக் கொள்ள வேண்டும்.

## 4 அடுத்து அரசுகால ருதுவின் பலன்

126 வசனித்த அரசினிலே ருதுதான் ஆகில்
வாக்கினால் அவள் வாழ்க்கை வழுத்தொணாது
அசனித்த பாக்கியமும் பவிசும் என்ன
அனைவர்களும் கைகட்டி நிற்பதென்ன
நிசமித்த வாழ்வதுதான் ஆயுள் மட்டும்
நிலைக்கும்பார் மேன்மேலும் பெருமை மைந்தா
விஷமித்த சத்துருவே இல்லை இல்லை
விளம்பும்ஒரு போஜனத்தில் சத்துரு ஆகாதே

(இ-ள்) அரசு காலத்தில் ஒருத்தி பூப்படைந்தால் அவள் வாழ்க்கையின் உயர்வை இந்த வாக்கிவால் சொல்ல முடியாது. நல்ல சாப்பாடு உண்டு. நிறைந்த பாக்கியம் உண்டு. பதவியும் அந்தஸ்தும் உண்டு. அனைவரும் கைகட்டி நின்று இவள் உத்தரவை எதிர்பார்க்கும் அளவுக்கு இவள் நிலை உயர்வாகும். ஆயுள் உள்ள மட்டும் இவள் பெருமை ஓங்கிக்கொண்டே இருக்கும். இவளுக்குச் சத்துருவோ பகையோ இருக்காது கணவர் உள்பட எல்லாம் உயர்வாக அமையும், இதேசமயம் மற்ற பட்சி ஊண், சத்துரு ஆனால் கெட்ட பலனும் உண்டு.

## அரசு காலத்தில் மற்ற பக்ஷி ஊண் சத்துருவாக ருதுவான பலன்

127. ஆகாத போஜனத்தில் சத்துரு ஆகில்
அகற்றிவைப்பான் வாய்க்குருசி ஆன தெல்லாம்
நோகாத மித்துருதான் அரசன் ஆனால்
தொடிக்குள்மனம் புண்ணாகித் தெளிவுண்டாகும்
சோகமதாய்க் காணாத கரட்சி யான
சொப்பனத்தில் கதைபோலத் தொலைந்து போகும்
வேகமாம் போஜனத்தில் சத்துருதான் என்ன
வேணபடி நடப்பதற்கு நடுங்கும் பாரே

(இ-ள்) அரசு வேளையில் ஒருத்தி ருதுவாக அதே சமயம் ஊண்பட்சி சத்துரு வானால் அவளுக்கு வாய்க்கு ருசியான சாப்பாடு கிடைக்காது. அதுவே மித்துரு வானாலும் திடீர் என்று மனக்கலக்கமும், பின் உடனே அது தெளிந்து அமைதி

உண்டாகும் துன்பமான அனுபவங்கள் உண்டாகும். ஆனால் அவை சொப்பனம் போன்று உடனே மறைந்துவிடும். இப்படி ஊண் சத்ருவானால் அவள் தன் இஷ்டப் படி நடப்பதற்கு மனம் தைரியம் கொள்ளாது என்பதாம்.

## 5. நித்திரை கால உருதுவின் பலன்

128. பாரப்பா உறக்கத்தில் ருதுதான் ஆனல்
பார்ப்பதென்ன அவள்உயிரே பங்கம் ஆகும்
சேராதவாழ்வில்லை சுகமும் இல்லை
செகத்திலே பின்னுதவி தானு மில்லை
ஆரடா உதவிசெய்ய நினைத்தா லும்தான்
அடிமாண்டே இவளுயிரும் அழிந்து போகும்
கோரடா நினைத்ததெல்லாம் கைப டாது
குறியாக அவள் முகமும் இறங்கும் பாரே.

(இ-ள்) உறக்க வேளையில் ஒருத்தி ருதுவானால் அவளுக்கு ஆயுள் பங்கம் அரிட்டம் உண்டு. எல்லாம் சேர்ந்த வாழ்வில்லை. திருமணமும் கைகூடாது. உலகில் யாராலும் உதவி இராது. யாராவது இவளுக்கு உதவி செய்ய நினைத்தாலும், அதை அடைய முடியாமல் இவள் இறக்கவும் நேரலாம். நினைத்தது எதுவும் கைவசப் படாது. எப்பொழுதும் இவள்முகம் களைஇழந்து காணப்படும்,

### இதுவுமது

இறங்குவது ஏதாலே தூக்கத் தாலே
எண்ணமென்ற பிரசண்ட வாயு வாலே
இறங்குவது மனம்புண்ணாய்ப் போவ தாலே
எடுத்ததொரு காரியங்கள் பலியா ததாலே
உறங்குவது பட்சியுட பகையா காது
உற்றதுணை யாருமில்லை உலகத் துள்ளே
மயங்குவது பிரமலிபி உள்ள மட்டும்
மனுஉதவி இல்லாமல் போகும் பாரே.

(இ-ள்) தூக்க வேளையில் பூப்பானவளுக்கு எண்ணம் காற்று போல் அலையும். நிலை கொள்ளாது மனம் புண்படும். காரியங்கள் தடைபடும். இதேசமயம் வேறுபட்சிகள் பகையாய் தொழில் நடத்தினால் (அரசு, ஊண், நடை) இவளுக்கு யாரும் துணையாக மாட்டார்கள். இவளுக்குப் பிரமன் எழுதிய ஆயுள் உள்ள மட்டும் மனிதர்கள் கூட்டுறவு உதவி இல்லாமல் போகும் என்பதாம்.

## இதுவுமது

136. போகாத பொருள்போகும் வாழ்வு போகும்
புனிதமென்ற சொல்போகும் தனமும் போகும்
சாகாத உயிர்போலத் தவிக்கும் பாரு
சண்டாள சத்துருவன் அரச னானால்
வேகாது வெந்துவிடும் பொசிப்பே இல்லை
மேதினியில் மித்துருவன் அரசன் ஆகில்
நோகாது கனவுகண்ட காட்சியே போல்
நோகாது நொந்துமனம் கலங்கும் பாரே.

(இ-ள்) உறக்க வேளையில் பூப்பானவள் அதே சமயம் மற்றபட்சி ஊண் அரசு ஆகி சத்துருவும் ஆனால் இவளுக்கு எல்லாப் பொருளும் போகும். வாழ்வு போகும் வாக்கு நாணயம் கெடும். பணம், செல்வம் அழியும், நெஞ்சம் கவலை துள்பத்தால் வெந்து புலம்பும். எந்த நுகரும் பாக்கியமும் இராது. இதுவே அரசு ஊண் மித்நுருவானால் மேற்கண்ட துன்பங்கள் எல்லாம் கனவில் அனுபவிப்பது போல் சிறிது காலம் மனம் நொந்து கலங்கிய பின் தெளியும் என்பதாம்.

## இதுவுமது

131. கலங்குவாள் ஐம்புலனும் ஒடுங்கும் மட்டும்
கண்டவர்கள் அவளுடனே கலந்து பேசார்
கலங்குவாள் தாமரைமேல் தண்ணீர் போலே
வருந்துவது மெத்தஉண்டு உயிர்தான் அப்பா
நலங்குவாள் உயிர்இருந்தும் நடைப்பிணம்போல்
நானிலத்தில் இவட்குதவி எவரும் இல்லை
விலங்குவாள் இவளை அறியாமல் ஐயோ
வீழ்ந்தோமே என்றுபர தவிப்பாள் தானே.

(இ-ள்) எப்படி இருப்பினும் நித்திரை வேளையில் பூப்பானவள் தன் ஐந்து புலனும் ஒடுங்கும் மட்டும், அதாவது இறப்பு வரும் மட்டும் கலக்கம் அடைவாள். அவளைக் கண்டவர்கள் யாரும் உதவி செய்ய மாட்டார்கள். தாமரை இலைமேல் தண்ணீர் ஒட்டாது இருப்பது போல, வாழ்வில் சௌகரியங்கள் இருந்தும் அவை தனக்கு அனுபவமாகாமல் தவிப்பாள். நிறைய வருத்தமுண்டு, நடைப்பிணம் போல வாடி இவள் அலைவாள். உலகில் இவளுக்குயாரும் உதவி செய்ய மாட்டார்கள். "நாம் இவ்வளவு கெட்டு விழுந்து விட்டோமே" என்று மனத்துள்ளேயே இவள் பரிதவித்துக் கொண்டிருப்பாள் என்பதாம்.

## இதுவுமது

132. தவிப்பதுவும் தனதாலே வேளை யாலே
சண்டாள சத்துருபகை யான தாலே
குவிப்பதுபோல் பொருளாசை மெத்த உண்டு
கூடிவர மாட்டாது குமுறும் நெஞ்சம்
சவிப்பதுபோல் செல்வார்கள் தரணி யோர்கள்
சவிப்பார்கள் பிறர் இவளுக் குதவி செய்யார்
அவிப்பதுபோல் உயிர்அதுதான் உள்ள மட்டும்
அலைந்தலைந்து மனஞ்சடலம் அழியும் பாரே.

(இ-ள்) இவள் தவிப்பதற்குக் காரணம் இவள் மற்ற பட்சி சத்துருவாய் இருக்க தன்பட்சி நித்திரை காலத்தில் ருதுவானதால் தான். இவளுக்குப் பொருள் சேர்க்க மிக ஆசை உண்டு. ஆனால் எதுவும் கூடிவராமல் மனம் புண்ணாகும். இவளை எல்லோரும் சபிப்பார்கள். யாரும் இவளுக்கு உதவி செய்ய மாட்டார்கள். உயிர் உள்ள மட்டும் அலைந்து திரிந்து மனம் புண்ணாகி உடல் நசிந்து இவள் அழிவாள் என்பதாம்.

குறிப்பு:- நித்திரை பூப்பு அடைவதற்கு மிகவும் கொடுமையான பலன் கூறப் பட்டது. காரணம் மனிதன் பாதிப் பொழுது உறங்குகிறான். இறப்போ ஒரு வினாடி யில் நடந்து விடுகிறது. மற்ற ஊண், நடை, அரசு இவை மீதி பாதிப் பொழுதைப் பங்கு போட்டுக் கொள்ளும். அதனால் வாழ்க்கையில் உறக்கம் தான் அதிக காலம் நீடிக்கிறது. உறக்கம் கெட்ட பலன் தரும் தொழில். அதனால் அது நீடிக்கும். அதிக காலம் கருதி இவ்வளவு கொடிய பலன்கள் சொல்லப்பட்டன.

ஆனால் இதற்காக அதிகம் கவலைப்பட வேண்டியதில்லை. ஜென்ம பிறப்புப் பட்சி வேளை நன்றாக இருந்தால் இந்தப் பூப்பு முன் சொன்னபடி தாய்மை, தகுதி, போகம் இவற்றைக் குறிப்பதால் புத்ரதோஷம், கணவனுடன் சலசலப்பு, இவை தவிர, வாழ்க்கையில் எல்லா அம்சங்களும் இவள் பெற்றிருப்பாள்.

## 6. மரண கால ருதுவின் பலன்

133. அலைவான மரணத்தில் திரண்டாள் ஆகில்
அழிந்திடுமே வருஷமொன்றில் சடலம் தானும்
குலையுமே அவன்பொருள்தான் மித்ருவலி தானால்
குடிகெடுத்த சத்துருவலி தாகு மாகில்
கலையுமே மாசமொரு மூன்றுக் குள்ளே
கடினமடா குடிவாழ்க்கை கடை தேறாது
இலைபோல நாளுக்கு நாள்தான் தேய்ந்து
இவளுயிர்தான் இவ்வுலகில் இராது பாரே.

(இ-ள்) மரணபட்சி வேளையில் ருதுவானள் நிலையும் மோசம். தான் திரண்ட ஒரு ஆண்டுக்குள் இவள் இறக்க நேரலாம். இவள் திரண்ட போது மற்ற பட்சி வலிதாக மித்துருவானால் இவள் உயிர் போகாது, ஆனால் இவள் பொருள், தனம் அழியும். அதுவே மற்ற பட்சி சத்துருவானால் இவள் திரண்ட மூன்று மாதத்திற்குள் இவள் குடி வாழ்க்கை கடைத்தேறாமல் போகும். கடினம் கஷ்டமிகுப்.இல்லை என்று சொல்லுகின்ற நாளுக்கு நாள் எல்லாம் தேய்ந்து மேல் சொன்ன மூன்று மாதத் திற்குள் இவள் இறந்துவிடுவாள் என்பதாம்.

குறிப்பு : முன்பாட்டு விளக்கத்தில் சொன்னதுபோல் ஜென்ம ஜாதகம், பிறப்பு பட்சி இவை வலிதாக இருந்தால் புத்ர, களத்ர, அரிஷ்டம் தவிர மற்ற வகையில் ஓரளவுக்கு திருப்தி அடைய வாய்ப்பு உண்டு.

## 9. நலம் தீங்கு வெற்றி தோல்வி படலம்

ஒருவர் தன் நக்ஷத்திரப் பக்ஷிப்படி எந்தத் தோழிலில் என்னென்ன காரியம் செய்தால் நல்லது அல்லது தீது என்பதையும் அவை எத்தொழில் செய்தால் வெற்றி அல்லது தோல்வியைக் கொடுக்கும் என்பதையும் கூறுவது, முதலில் நன்மை, தீமை சொல்லுவது.

### 1. நலம் தீமை

#### எண்சீர் ஆசிரிய விருத்தம்

134. ஆகுமூண் அரசுமணம் செய்ய நன்று
அகமெடுக்க நிலம்கொள்ள மாடாடு தேட
யேகுமே பொருள்கொடுத்துப் பணிகள் செய்ய
எதிர்த்தாரை செயம்பண்ண வணிகம் செய்ய
ஆகுமே எல்லாமிச் சமயத் தில்தான்
அதுகூடு மல்லாமல் குறைவ தில்லை
போகுமே நடையுறக்கம் சாவில் செய்தால்
பொருட்சேதம் உயிர்ச்சேதம் ஆகும் பாரே.

(இ-ள்) தன்பட்சி ஊண் அரசில் இருக்கும் போது கீழ்க்கண்ட காரியங்களில் ஈடுபட்டால் காரியம் நன்மையாக அமையும்.

மனைமுகூர்த்தம் பண்ணி வீடு கட்டுதல், ஆடு, மாடு தேடுதல் பணம் கொடுத்து நகைகள் செய்ய, அல்லது கூலி கொடுத்துப் பற்பல பணிகளை நிறைவேற் றிக்கொள்ளுதல், எதிரியை மோதல், வெற்றிபெறல், திருமணம் புரிதல் இவை யெல்லாம் இந்த நேரத்தில் நன்மையாக முடியும். எல்லாம் ஒன்றுக்குப் பத்தாக கூடுமே அல்லாது குறையாது. இவையே நடை, உறக்கம், சாவு ஆகிய சமயங்களில் ஈடுபட்டால் நன்மையுண்டாகாது. பொருட் சேதமும், உயிர்ச்சேதமும் தான் நடக்கும்.

## இதுவுமது

135. குணமாக நிலம்கி ரயம் பொருள்வி யாபாரம்
கொண்டு வந்து ஆளடிமை உறவு சேர்க்கை
மணமாக வாழ்வு தரும் சம்பந் தங்கள்
வல்பிணி தீருதற்கும் குத்துக் கீதல்
கணமாகப் பெரியோரைக் காணும் நேரம்
கனிவான நல்லகாலம் தவறும் காலம்
மணியான முனிநூலைப் பார்த்து யானும்
வசனித்தேன் உரோமரிக்ஷி வகையாய்த் தானே.

(இ-ள்) மேலும் மேற்படி தன்பட்சி ஓங்கி இருக்கும்போது கீழ்க்கண்ட காரியங்களும் செய்ய நன்றாம். நிலம், வயல், மனை முதலியவை விலை பேசுதல், வேலைக்காரர் ஏற்பாடு செய்தல், தன் உறவினர்களுடன் பழகி தன் வசம் சேர்த்துக் கொள்ளுதல், திருமணத்திற்காக வரன் அல்லது பெண் கேட்டு சம்பந்தம் பேசுதல், ஏற்பட்ட கொடியநோய் தீர மருத்துவரைப் பார்த்தல், தன் நிலபுலன் முதலியவை ஒருவருக்குக் குத்தகைக்கு விடுதல், பெரியவர்களை, மேலுள்ளவரைத் தன் காரிய நிமித்தம் காணச் செல்லுதல் முதலியவற்றுக்குப் பயன்படுத்தலாம். இதை நீக்கிய, நடை, உறக்கம் சாவுகாலங்கள் தீய கால கட்டங்களாகும். இந்த வகையில் அகத்திய முனிவர் சொன்ன முதல் நூலைப் பார்த்து நல்ல காலம் எது, கெட்டகாலம் எது என்று சொல்லிவிட்டேன் என்பதாம்.

## 2. முகூர்த்தத் தன்மை

(முகூர்த்தம் வைக்கும்போதும் பல காரியங்களுக்கும் பட்சித் தொழில்படி செய்ய நன்று என்பது)

136. இருக்கும்நது பார்க்கும் இந்த வகையைப் போல
என்னென்ன காரியங்க ளாகும் பாரு
சருக்காது வருஷமோ பிறக்கும் காலம்
தனிமாதம் தான்பிறக்கும் காலம் பாரு
வருவார்கள் நிலைபாரு வாழ்வு பாரு
மக்களது விதைவிதைத்து எடுத்தல் பாரு
குறுகாது குறையாது கொள்கை பாரு
கோடிவத்திரம் வாங்கினதன் கொள்கை பாரே!

**குறிப்பு:** இப்பாடல் உரோமரிஷி வினாடி பஞ்பட்சியில் முகூர்த்தப்படலம் என்ற பெயரில் சற்று மாறுபட்ட வடிவில் உள்ளது. இதற்கு முன் இரண்டு பாடல்களும் இத்தலைப்புக்குப் பொருந்தும். அவற்றுக்குப் பார்க்கும் நல்ல நேரமும், பட்சியின் நல்ல நேரமும், பட்சியின் நல்ல தொழிலாக ஒத்து வந்தால் நல்லது. அதுவே இப் பாடலிலும் சொல்லப்படுகிறது.

(இ-ள்) பெண்கள் ருது ஆவதற்குப் பார்ப்பது போலவே நாம் மேற்கொள்ளும், எல்லாக் காரியங்களுக்கும் முகூர்த்த நேரமும் பட்சி தொழிலின் நல்ல விதமும் ஒத்து அமைய வேண்டும். இதேபோல் வருஷம் பிறக்கும்போது பட்சியின் வினாடியின் தொழிலைப்போலவே அந்த வருஷம் முழுவதும் பலன் உயர்வாகவோ, தாழ்வாகவே இருக்கும். இதுவே மாதமும் பிறக்கும் நேரத்திற்கும் பொருந்தும். சோதிடம் அல்லது ஆருடம் கேட்க நம்மை நாடி ஒருவன் வரும்போது உள்ள அவன் பட்சி நிலையை ஒத்தே அவன் கேட்க வந்த காரியமும், வாழ்வும் ஆகும். அதேபோல் பயிர் விளைவிப் பதற்கு, விதைவிதைக்க, புதுத்துணி உடுத்த அல்லது புதுக்கோடி வத்திரப் (புதுத்துணி) வாங்க இவற்றிற்கும் பட்சி தொழில் நல்லபடிஅமையும் நேரம் பார்த்து வாங்க வேண்டும். இப்படிச் செய்தால் எதுவும் குருகாமல் குறையாமல் எல்லாம் நல்லதாக அமையும் என்பதாகும்.

## 3. வெற்றி தோல்வி

ஒருவன் பட்சி செய்தொழிலின் நேரத்தை ஒத்து அவன் தொடங்கும் வெற்றி தோல்வி அளிக்கிறது. இதை விளக்குவது.

137. மித்துருவின் நிலையினிலே வைத்துக் கொண்டு
வினவிநீ கேட்கும் வகை சொல்லச் சொல்லும்
பற்றுகின்ற மனமானால் நடையில் வைத்து
பவிசுகள் அரசதிலே இருந்து கொண்டு
வெற்றியாம் அட்சரத்தை ஓது ஓது
வெல்லுவது திண்ணமென்று உறுதி கொள்ளு
சத்தியமாய் முனியுரைத்த மொழிதப் பாது
தனிவழக்கு வெல்லுதற்கு வகையைக் கேளே.

(இதன் பொருள்) உன்னை நாடிவந்தவனை உன்பட்சி தொழில் நல்லபடி ஓங்கி நடக்கும்போது, அதில் மித்துருவுடைய திசையிலே அவனை இருக்க வைக்க வேண்டும். அவனை நடைபட்சி திக்கில் வைத்து நீ அந்தச் சமயம் அரசு செய்யும் பட்சி திக்கில் நின்றுகொண்டு, தன்பட்சி வெல்லுவதற்குப் பொதுப் படலம் 74-ம் பாட்டில் சொல்லப்பட்ட முறைப்படி பஞ்சாட்சரத்தை அகர முறைமாற்றி நீ ஓதி முயற்சிசெய். உன்காரியம் நிச்சயம் வெற்றியாகும். இது அகத்தியமுனி சத்தியமாப் உரைத்ததாகும். இந்த வாக்கு தப்பாது. இனி எதிரியை வெல்லும் வகையைக் கேட்பாயாக என்பதாம்.

குறிப்பு: மித்துருவின் நிலையில் வைத்துக் கொண்டு என்பதற்கு இரு வகையாகக் கொள்ளலாம்-தன் பட்சிக்கு மித்துருபட்சி, தன்னைவிட ஓங்கும் தொழிலை அந்தச்சமயம் செய்துகொண்டிருந்தால் அந்தப் பட்சிக்குரிய திசையில்தான் இருக்க வேண்டும் என்பது திக்குகள் வளர்பிறை தேய்பிறைகட்கு, அவ்வப்படலங்களில் தரப்பட்டுள்ளன கண்டுகொள்க.

அடுத்து, தன் பட்சி எந்தத் தொழில் செய்தாலும் அதன் முதல் அந்தரம் தன்பட்சியுடையதாகும். மற்ற நான்கு அந்தரங்கள் வேறு நான்கு பட்சிகளுடைய தாகவும் இருக்கும். இது பொதுப்படலம் 21-வது தலைப்பில் ''பட்சிமுத்து பூரண பட்சி'' என்ற தலைப்பில் விளக்கப்பட்டது. அதன்படி மற்ற நான்கு சூக்கும அந்தரங்களின் அதிகாரம் தன்பட்சியின் மித்துரு பட்சிக்கு எப்போது வருமோ அந்த அந்தரத்தில் உன்காரியந்தைச் செய்தால் வெற்றிவரும் என்பது இரண்டாவது பொருள்

நிலைமைக்கேற்ப மித்ரு பட்சியின் திசையையோ அல்லது மித்ரு பட்சியின் அந்தரத்தையோ பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்பதே முடிவு. மற்ற இடங்களிலும் இப்படியே கொள்க.

மேலே பாட்டின் முடிவில் எதிரியை வெல்லும் வகையைக்கேள் என்று சொல்லப்பட்டுள்ளது. இது பொதுப்படலம் 23-வது தலைப்பில் 80-வது பாடலில் விளக்கப்பட்டுள்ளது கண்டு கொள்க.

## 10. யாத்திரைப் படலம்

வழிப்பயணம் செய்வோர் சூலம், யோகம், நட்சத்திரம், கிழமை இப்படிக் கொத்த யாத்திரைக்கு உகந்த நல்ல நாள்பார்த்துப் புறப்படுவது மரபானாலும் தன் பட்சி ஒங்கியதொழில் நடத்தும்போது புறப்படுவதே நல்ல வெற்றியும் பயனும் தருமாதலால் அதுபற்றிக் கூறப்படுகிறது.

### 1. ஊண் கால யாத்திரை பலன்

138. ஊணதிலே வழிப்பயணம் புறப்பட் டால்தான்
உத்தமனே உடலிலொரு பிணியு மில்லை
தோணவே போசனங்கள் வகையாம் உண்டு
சொல்லரிய சந்தோஷம் பிறப்புற வாகும்
தானுவாய்த் தன்னிடத்திற் பொருளும் சேரும்
சஞ்சலங்கள் மனதிற்குச் சற்றும் இல்லை
மாண்புடைய அரசதுதான் சத்துருவே ஆனால்
வழிநடையில் துயரம்மெத்த வமுத்த லரமே

(இ-ள்) ஊண்காலத்தில் தன்பட்சி இருக்க பயணம் புறப்பட்டால் உடலில் நோயில்லை. போகும் இடங்களிலெல்லாம் பற்பலவகைச் சுவைகளில் உணவு கிடைக்கும். மிகவும் மன மகிழ்ச்சியும், பல புது உறவு நட்புகளும் கிடைக்கும். செல்வம் நிலையாகச் சேரும், சஞ்சலம் சற்றும் இராது.

ஆனால் அதேநேரத்தில் தன் பட்சியில் சத்துரு பட்சி அரசு செய்து கொண்டிருந்தால் பலன் வழியில் மிகவும் துயரம் உண்டாகும்.

(குறிப்பு:) இப்படலப் பாடல்கள் யாவும் எண்சீர் ஆசிரிய விருத்தமே அனைத்துமே சுவடி எண் 777 அகத்தியர் பஞ்சபட்சி சாத்திரம் பாடல்கள் 143 முதல் 154 வரை பக்கம் 73 முதல் 80 வரை.

## இதுவுமது

## 2. ஊண்காலத்தில் சத்ரு அரசானால் பயணப் பலன்

139. வழுத்தவே உடல்தனக்கு வருத்தம் உண்டாம்
வகையான போசனங்கள் வாய்த்தி டாது
கொளுத்துமோ சிலுகுசண்டை களவும் ஆகும்
கொடுமையாய் உறவினரை அகற்றி வைப்பான்
தழைத்ததோர் மனதிற்கு எள்ள ளவேனும்
சந்தோஷம் சலனம் அல்லால் சற்றும் இல்லை
எழுத்ததோர் சத்துருவின் வலிதா காது
துணையான மித்துருவின் வலிது நன்றே

(இ-ள்) தன் ஊண் பட்சியில் கிளம்பும்போது மற்றபட்சி சத்துருவாகி அரசில் இருந்தால் உடலுக்கு வருத்தம் உண்டு. செல்லும் இடத்தில் வகையாக உணவு கிடைக்காது. சில்லறைச் சண்டை பூசல் உண்டாகும். தன் உறவினர் பிரிந்துசெல்வர். (தான் தேடிப்போகும்போது கிடைக்கமாட்டார்)மனதிற்குச் சஞ்சலம் சலனம் இருக்குமே யன்றி எள்ளவும் சந்தோஷம் இராது. எனவே இந்த சத்துரு வேளை ஆகாது. இதுவே மற்றபட்சி அரசாகி மித்துரு ஆனால் ஊண்யாத்திரை நற்பலன் பூராவும் இன்னும் மேலாகக் கிடைக்கும்.

## 3. யாத்திரை நடைகாலப் பலன்

140. நன்றல்ல நடையினிலே போகொ ணாது
நடந்தலைவ தல்லாமல் மற்றொன் றில்லை
பண்டுறவாய் இருந்தவரும் பகைவர் ஆவார்
பசிநேரம் பொசிக்கும் அந்தப் பலனும் இல்லை
வண்டயரும் கூந்தனல்லார் சேர்க்கை இல்லை
வழக்குகளிற் சென்றாலும் வெல்வ தில்லை
கொண்டமனை யாட்டியுடன் கொடுமை மெத்த
கூற்றுபோல் சத்துருஊண் அரசா காதே

(இ-ள்) தன் பட்சி நடைகாலத்தில் பயணம் தொடங்கினால் நடந்து அலையும் அலைச்சல் அதிகமாகுமே அல்லாது காரியம் எதுவும் ஆகாது. முன்னால் உறவாக நட்பாக இருந்தவரும் இப்போது பகைவர் ஆவார். பசிநேரத்திற்கு உணவு கிடைக் காது. வண்டுமொய்க்கும். தேனுள்ள மலரணிந்த கூந்தல் கொண்ட இளம்பெண்கள் சேர்க்கையும் கிடைக்காது, வழக்காடினால் அது வெல்லாது. கொண்ட மனைவி யுடன் சத்துருவானால் மேலும் கொடிய பலனே உண்டாகும்.

## 4 யாத்திரை நடையில் சத்துரு மித்துரு பலன்

141. அரசனாய் மித்துருநாதன் இருந்தால் நன்று
அலைந்தாலும் போசிப்புக்கு இனமுண் டாகும்
சிரகசிய வந்ததொரு பிடை தன்னை
சிலுகுதன்னை நீக்கிவைப்பான் க்ஷணத்திலே தான்
சரசமில்லை உறவுதனில் சொற்ப லாபம்
சரீரத்தில் பிணிவந்து தானே நீங்கும்
பரிசம் என்ற மணமதுதான் செய் யொணாது
பகைவந்து ஒருபோதும் வாழார் பாரே.

(இ-ள்) நடைகாலத்தில் வேறுபட்சி அரசு செய்து தன்பட்சிக்கு மித்ருவாய் இருந்தால் பயணத்தில் அலைச்சல் இருந்தாலும் உணவுவகை கிடைக்கும். எதிர் பார்த்தவரைச் சந்திக்க முடியும். வரும் பூசல் சண்டைகள் நீங்கும். பிடை விலகும்' நினைத்தவர்களோடு சரசம் செய்யமுடியாவிட்டாலும் சொற்பலாபம் உண்டாகும். உடலில் நோய்கண்டு விலகும். இதுவே மற்றபட்சி அரசு பகையானால் பரிசம் போடவும் மணம்செய்து கொள்ளவும் முடியாது. பகையான இக்காலத்தில் வாழவும் முடியாது. எனவே மற்ற பட்சி அரசாகிப் பகையாகும்போது பயணம் விலக்கவேண்டும் என்பதாம்.

## 5 யாத்திரை அரசுகாலப்பலன்

142. வாழ்வான அரசதனிற் பயணம் ஆனால்
மனதிற்கு எள்ளளவும் பிடை இல்லை
கேளிராம் உறவினர்கள் அனந்த கோடி
கெம்பீர போகபோக் கியங்கள் உண்டாம்
மாளாத சத்துருக்கள் வழக்கு வெல்லும்
மணம்செய்ய நன்றாகப் பெருகி வாழ்வார்
ஏழ்மையில்லாப் பொருட்களுடன் வஸ்த்ர முண்டு
இன்பம்உண்டு அரசனுடன் இணங்கிப் பாரே.

(இ-ள்) தன்பட்சி அரசுதொழில் செய்யும்போது பயணம் மேற்கொண்டால் எள்ளளவும் துன்பம் இராது. உறவினர் சேர்க்கையும் உதவியும் உண்டு. உயர்ந்த மட்டத்தில் பெரிய அளவில் போக போக்கியங்கள் உண்டுபண்ணும் (Luxuries) சத்துருக்கள் வழக்கு தன் பங்கில் வெல்லும், பயணம், திருமணத்திற்காக மேற்கொண் டால் அது நன்கு நடந்து மணமக்கள் மிகவும் மகிழ்ச்சியுடன் வாழ்வார். செல்வம் சேரும் இன்பம் உண்டு. உயர்மட்ட முக்கியஸ்தர்கள் சினேகிதமும் உண்டாகும்.

### இதுவும் அது

143. பாரடா சொன்ன சொல்லும் பழுதே இல்லை
பகை இல்லை எதிர்த்தவரும் செயிப்ப தில்லை
சேரடா பிரபுவுற வாகும் பாரு
சேர்க்கையுமோ மெத்தவுண்டு கிளர்ச்சி உண்டு
ஆரடா அரசனைத்தான் வெல்லப் போகும்
ஆராலும் கூடாது சுகமதி கமாம்
நேரடா சத்துருயில்லை இல்லை இல்லை
நேர்ந்தபடி வெல்லுவது திண்ணம் தானே.

(இ-ள்) தன்பட்சி அரசு நேரத்தில் பயணமானால் இவன் சொல்லும் சொல்லுக்கு மதிப்புண்டு பழுதாகாது. இவனுக்குப் பகையிராது. எதிர்த்தாலும் இவனைச் செயிக்க முடியாது. பயணத்தில் பெரிய பிரபுக்கள் உறவு கிடைக்கும். பலரும் சேர்வர்-மனதுக்கு அதிக மகிழ்ச்சி உற்சாகம் உண்டாகும். அரசு நேரப்பயணம் செய்பவனை யாராலும் வெல்ல முடியாது. இவனுக்குச் சத்துருவே இல்லை. இவன் நினைத்தப்படி காரியம் முடித்து வெற்றி பெறுவது நிச்சயமாகும்.

## 6. யாத்திரைக்கு நித்திரை காலப் பலன்

தன்பட்சி நித்திரையில் இருக்கும்போது யாத்திரை செல்வதால் உண்டாகும் தீமையைச் சொல்லுவது.

114. திண்ணமாம் நித்திரையில் சொல்லொ ணாது
தீராத நோயாகும் தீனி இல்லை
வண்ணமாய் முன்னுறவு பகையே ஆகும்
வழக்கதனில் சென்றாலும் பொருளே சேதம்
கன்னியாய் இருந்தாலும் சேர்க்கை இல்லை
கடினமடா போனவர்கள் திரும்ப மாட்டார்
முன்னேதன் பட்சியதும் உறங்கிப் போச்சு
மூடர்களே சத்துருவுண் அரசா காதே.

(இ-ள்) தன்பட்சி உறங்கும்போது பயணம் சென்றால் தீராத நோய் உண்டாகும். உணவு கிடைக்காது முன்னர் இருந்த நெருங்கிய உறவும் பகையாகி விடும். வழக்காடச்சென்றால் அவ்வழக்கு வெல்லாது. ஒருபெண் திருமணம் நிமித்தமாகப் பயணமானால் திருமணம் கூடாது. இந்த நித்திரையில் பயணம் கிளம்பச் சென்றவர்கள் திரும்பிவர மாட்டார்கள். இந்த நிலையில், மற்றபட்சி அரசாகிப் பகையானால் மேலும் துன்பம் அதிகமாகும்.

## 7. நித்திரை காலத்தில் மற்றபட்சி அரசு சத்துருவாகி இருப்பதன் பலன்

145. அரசுதான் சத்துருதான் கொடுமை மெத்த
அலக்கழிப்பான் மனம்புண்ணாய் நோக வைப்பான்
சுரமான சூடுகொண்டு உடலும் காந்தி
சுழல்வண்டு சூழ்வதுபோல் துன்பம் மெத்த
பரமான பாவத்துக் காளு மாகி
பகைத்தோர்கள் நகைத்திடவே பழிகள் செய்வான்
சரமான பிரசண்ட காற்றுக் குள்ளே
சருகும்போல் பாம்பின்வூர்ய்த் தவளை யாமே.

(இ-ள்) நித்திரைக் காலத்தில் மற்றபட்சி அரசு சத்துருவாக இருக்கப் பயணம் சென்றவன் நிறைய அலையநேரும். மனம் அல்லல்பட்டுப் புண்ணாகும், நோக வைக்கும். உடல் மிகவும் சூடுபற்றிக் காந்தி நிறம் மாறிவிடும். தன்னைச்சுற்றி குளவி வண்டு சுற்றிச்சுற்றி அலைக்கழிப்பதுபோல் மிகவும் துன்பம் உண்டாகும். பாவத்துக் காளாவான். பகைவர்கள் ஏளனம் செய்யும்படியாக இவனுக்குப் பழிகள் சேரும். சண்டமாருதக் காற்றில் அகப்பட்ட துரும்பானசருகு இலைபோலே இவன் மீளாத் துயருக்காளாவான் என்பதாம். எனவே இப்படிப்பட்ட சமயத்தில் பயணம் மேற்கொள்ளக்கூடாது என்பதாம்.

## 8. பட்சத்திரைக்கு மரண காலப்பலன்

146. தவளையடா மரணத்தில் பயண மானால்
சத்துருதான் ஊணர சாகி நின்றால்
கவலைஎன்ன இனிமேலும் சாவு திண்ணம்
கைப்பொருள்போம் மற்றொருவர் உதவி இல்லை
சவலையைப்போல் மனம்கொதித்து நோகும் புண்ணாம்
சண்டான சத்துருவின் பகையா காது
திவலையதும் தப்பாது முனிவர் வாக்கியம்
திண்ணமடா உயிர்திரும்ப மாட்டார் பாரே.

(இ-ள்) தன்பட்சி மரணத்தொழில் சமயம் பயணம் கிளம்பினால் அந்தச் சமயம் வேறுபட்சி ஊண் அல்லது அரசாகிப் பகையும் ஆனால், கிளம்பினவன் கட்டாயம் உயிரிழப்பான். கைப்பொருள் களவுபோம். யாரும் இவனுக்கு உதவமாட்டார்கள். சவலைப்பிள்ளை ஏங்குவதுபோல் இவன்மனம் கொதித்து வெதும்பிப்போவான். இது அகத்தியமுனிவர் சொன்ன வாக்கியம். எனவே ஒருசிறிதளவுகூடத் தப்பாது சொன்னபடியே நடக்கும். பயணம் சென்றவர்கள் நிச்சயம் திரும்பி வரமாட்டார்கள்.

## 9. மரணகாலப் பயணத்தில் மற்றபட்சி அரசு ஊணில் ஆனால் தன் பட்சிக்கு மித்துரு ஆனபலன்

147. மாட்டாத மரணத்தில் மித்ருவலி தானால்
மனம்நினைத்துப் போனதுபோல் வருவ தில்லை
தேட்டமாம் பொருள்தொகையும் கைவசப் படாது
சிந்தைநொந்து புண்ணாகிச் சடலம் நோயாம்
பாட்டிலே மனத்துயரம் பட்டு நொந்து
பதறுவதும் அல்லாது பழிவந் தெய்தும்
நீட்டியதோர் மரணத்தில் காரியம் ஏதும்
நினைத்தாலும் நீணிலத்தில் ஆகா தாமே.

(இ-ள்) தன்பட்சிமரணத் தொழிலில் மற்றபட்சி ஊண் அரசாகி ஆனால் மித்துருவானால் பயணம் பலன்வருமாறு:

மனம் நினைத்துப்போனபடி நடவாது.திரும்பி வரவும் முடியாது.தேடிப்போகும் பணத்தொகை கிடைக்காது சிந்தைநொந்து, மனம் புண்ணாகி, உடலில் பிணி காணும். படாதபாடுபட்டு மனத்துயரம்தான் அதிகமாகும். பழியும் வந்துசேரும். மரணகாலப் பயணத்தில் எந்தக்காரியமும் ஆவதில்லை.நினைத்தது எதுவும் நடக்காது, எனவே இந்தச் சூழ்நிலையில் பயணம்கூடாது என்பதாம்.

குறிப்பு- இங்கு மரணம் தொழில் யாத்திரையில் மற்றபட்சி அரசு ஊண்மித்துருவாக அதேகெட்ட பலன்கள் சொல்லப்பட்டன. ஆனால் சத்துருவானால் இதை விட கெட்டபலன் பயணத்தில் மரணமும் நேரும் என்று சொல்லப்பட்டது, இதுதான் இரண்டுக்கும் வேறுபாடாகும்.

# 11. முடிசூட்டுப் படலம்

இதில் ஒரு அரசன் பட்சியின் நல்ல தொழில் பார்த்து முடிசூட்ட வேண்டும் என்று அதன் பலன் கூறுவது. தற்காலத்தில் அரசியல் துறையில் அமைச்சர், ஜனாதிபதி, சட்டசபை உறுப்பினர், முதலியோர் பதவிப் பிரமாணம் செய்துகொள்வது போன்றவை இந்த பட்சி தொழில் நேரத்தைத் தேர்ந்தெடுக்கலாம்.

## 1. அரசு முதல்வினாடி முதலியவற்றில் முடிசூட்டுவதன் பலன்

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

148. முந்தினதோர் வினாடியிலே முடித ரித்தால்
முசியாமல் வளர்ந்திருப்பார் ஆயி ரந்தான்
சந்திரன்போல் குளிர்ந்திருப்பார் மனைகு ளிர்ந்து
தப்பாது அறுநூறு மறுவி னாடி
பந்திநின்ற வாழ்விதிலே பாதி யாகும்
பதிமூன்றில் நூறாண்டு பணித்து பாரு
எந்தவித மானாலும் நாலாம் பங்கில்
இருந்தரசும் ஆளுமடா ஐம்ப தாண்டே.

(இ-ள்) அரசு பட்சியாகத் தன்பட்சி இருக்கும்போது முடிசூட்டிக் கொள்வோன் அரச பரம்பரை ஆயின் ஆயிரம் ஆண்டுகள் சந்திரன்போல் மனமும் விடும் குளிர்ந்து வாழும். இது அரசின் முதல் வினாடியின் பலனாகும். அரசின் இரண்டாம் வினாடியில் முடிசூட்டினால் அவன் பரம்பரை அறுநூறு ஆண்டு அதேபோன்று தழைக்கும். ஆனால் வாழ்வும் வளமும் முன்னதில் பாதியாகும். மூன்றாம் வினாடியில் முடிசூட்டிக் கொண்டால் நூறாண்டு அந்த வம்சம் விளங்கும். எந்தவிதமானாலும் நாலாம் வினாடியில் அவன் முடிசூட்டிக் கொண்டால் ஐம்பது வருஷம்தான் அவன் அரசாட்சி இருக்கும்.

குறிப்பு: இங்கு தன் ஜென்ம நட்சத்திரப் பட்சியைக் கொள்ளாமல் ஒருவர் பிறந்த நேரத்து வினாடி பட்சியையும் தொழிலையும்போல, முடிசூட்டும் நேரத்தையும் பட்சியின் தொழில் வினாடியாகக் கணித்து அதை முடிசூட்ட நிர்ணயம் செய்ய வேண்டும். இது நுதலிப்புகுபடலத்திலும், ஜாதகப் படலத்திலும் விளக்கப்பட்டது.

## 2. ஊண் வினாடிகளில் முடிசூட்டிய பலன்

### (யாப்பு-அதுவே)

149. ஆமென்றால் ஊணுக்கு முதலில் பாதி
பலன்பாதி அவ்வளவே குளிர்ச்சி எல்லாம்
தாண்டவம்செய் சிவனுடைய வாக்கு தானும்
தவறாமல் பலநூலும் ஆய்ந்து பார்த்து
வேண்டியே மனமிரங்கி மனிதர்க் காக
வேணுமென்ற வகைவிபர மாகச் சொன்னேன்
காண்டிபன்போல் இவன்தொடுத்த காரியங்கள்
களங்கமில்லை கைவசமே ஆகும் பாரே

(இ-ள்) தன்பக்ஷி ஊண் வினாடியில் முடிசூட்டிக் கொண்டால், அரசு வினாடிகளில் சொல்லிய பலன்களில், வளம், வாழ்வு குளிர்ச்சி எல்லாம் துவங்கி வாழும். அதாவது ஊண் முதல் வினாடிக்கு அரசு முதல் வினாடி ஆயிரம் ஆண்டுகளில் பாதி ஐநூறு ஆண்டுகள் இந்த அரசாட்சி வளரும். அதேபோல் கணக்குபார்க்க ஊணின் இரண்டாம் வினாடிக்கு 300 ஆண்டும் மூன்றாம் வினாடிக்கு ஐம்பதாண்டும் நான்காம் வினாடிக்கு 25 ஆண்டுகளும் மேற்கண்ட பலன்கள் நடக்கும் என்பதாம்.

"இதன் மேல் நூலாசிரியர் கூற்று" இந்த பஞ்சபக்ஷி நூல் தாண்டவம் செய்யும் பரமசிவன் அகத்தியருக்குச் சொன்னது. அதைப் பல நூல்களை ஆராய்ந்து நானும் சொல்லுகிறேன். மனிதர் வாழ்வு மேம்பட இதைச் சொல்லுகிறேன். இந்த அரசு, ஊண் வினாடிகளில் முடிசூட்டிய இருவரும் காண்டீபனாம் அர்ச்சுனன்போல் எடுத்த காரியங்களைத் தவறாமல் முடிப்பார் என்பதாம்.

குறிப்பு:- அரசு, ஊண், இரண்டுக்கும் முதல் நான்கு வினாடியில் முடி சூட்டு வதற்குத் தான் பலன் சொல்லப்பட்டது, ஐந்தாம் வினாடி பயனில்லை என்று கொள்க.

## 3. நடை வினாடிகளில் முடிசூட்டிய பலன்

யாப்பு- அதுவே

150. பாரேநீ நடையினிலே எதுவா னாலும்
பதிவானால் ஒன்றுபத்து ஆண்டுக் குள்ளே
வேறேயோர் மனிதர்கையில் போகும் பாரு
வேண்டியதோ? துயரமது வந்து சேரும்
காரேநீ ஆளுயது உடமை யெல்லாம்
களவுபோம் கெடுவினையால் பொருளும் போகும்
சேரேநீ ஆகுமென்ற காரி யங்கள்
செய்யாதே மனத்திறமும் இல்லை தானே.

(இ-ள்) நடை தொழில் எந்த வினாடியில் முடிசூட்டிக் கொண்டாலும் பத்து ஆண்டுக்குள் அரசாட்சி வேறொருவர் கைக்கு மாறிப்போகும். வேண்டாத துயர மெல்லாம் வந்துசேரும். முடிசூட்டிக் கொண்டவன் உடமை. பொருள் எல்லாம் பிறர் கைவசமாகிவிடும். கைகூடும் என்ற காரியங்கள் எல்லாம் ஆகாது, மனதுக்குத் தெம்பும் இராது. எனவே நடையின் எந்த வினாடியிலும் முடிசூட்டுவதை நிறுத்திக் கொள்ள வேண்டும்.

குறிப்பு- நடைவரைதான் சொல்லப்பட்டது. உறக்கம், சாவு தள்ளப்பட்டது. ஜாதக ருது காண்டங்களில் இவ்விரண்டிற்கும் சேர்த்துச் சொல்லப்பட்டதே, இங்கு ஏன் சொல்லவில்லை. அங்கு பிறப்பும் ருதுவாதலும் ஊழ்வினை வயமாகும். எனவே அவற்றின் இயல்பான தீயபலன் சொல்லவேண்டியதாயிற்று. ஆனால் முடிசூட்டுதல் முதலியவை நாமே செய்து கொள்வது. தீயவற்றை விலக்கலாமாகையால் உறக்கம் சாவு வினாடிகளுக்குப் பலன் சொல்லப்படவில்லை என்க.

இப்படலம் மூன்று பாடல்களும் சுவடி எண் 777, 112, 113, 114 ம் பாடல்கள் (50, 51 52, பக்கங்களில்) உள்ளவை. இவை மிகவும் சிதைந்து கண்ணழிந்து காணப்பட்டன. இதுவேறு அச்சிட்ட நூல்களிலும், சுவடிகளிலும் சொல்லப்படாததால் தேவை கருதி ஒருவாறு பாட்டின் வடிவு, முழுச் சொல்லமைப்பும் பெரும்பாலும் சிதையாமல் செப்பம் செய்து எழுதப்பட்டது.

## 12. மனைப் பலடம்

புதுமனை கோலுதல், புதுவீடு கட்டிய பின் புதுமனை புகுதல் இவற்றிற்குப் பட்சித் தொழிலின் வினாடிகளின் பலன் கூறுவது.

இது சுவடிகளிலும் இல்லாமையால் அச்சிட்ட நூல்களிலும், எம் குறிப்புகளிலும் இருந்து தொகுத்து உரை நடையாக இங்கு தேவை கருதிக் கொடுத்து உள்ளோம்.

### 1. ஊண் வினாடிகளில் மனைகோலப், புக உண்டாகும் பலன்

ஊண் தொழிலின் முதல் வினாடியில் மனைகோல, புதுமனை புக அந்த வீடு 300 வருஷம் நன்கு விளங்கும். செழிப்பாகவும், சுகமாகவும் இருக்கும். 2-ம் வினாடியில் அந்த வீடு 200 வருஷம்வரை பலன் நல்லபடி இருக்கும்.

### ஊண் 3,4,5,ம் வினாடிகளின் பலன்

ஊண் தொழிலின் மூன்றாம் வினாடிகளில் மனையெழுப்ப, புக 200 வருஷம், நான்காம் வினாடியில் செய்ய 190 வருஷமும் 5-ம் வினாடியில் செய்ய 150 வருஷம் வரையிலும் மேற்படி கட்டிடத்தில் வாழ்பவர்களுக்கு எல்லா சௌக்கியங்களும் உண்டாகும். செல்வம், களத்திர, புத்ர, பௌத்ராதி சௌபாக்கியங்களும் முட்டின்றி இருக்கும். நடைகால முதல் வினாடிக்கும் இந்த சௌபாக்யாதிகள் சொல்லப்பட்ட கால அளவு முட்டின்றி இருக்கும்.

### 2 நடை காலத்தில் மனை கோல, புக ஏற்படும் பலன்

நடைகால முதல் வினாடியில் புதுமனை கோல, புகவும் செய்தால் வீடு 100 வருஷம் இருக்கும் அதிக சுகம் இருக்காது

இரண்டாம் வினாடியில் மேற்படி செய்ய 90 வருஷம் வீடு விளங்கும். ஆனால் சுகம், துக்கம் இரண்டும் கலந்திருக்கும்,

மூன்றாம் வினாடியில் செய்ய வீடு 80 வருஷம் இருக்கும். சுகம் இராது. பொருளும் பொன்னும் போகும். கட்டடம் கட்டினவன் அதாவது எசமானனுக்கு 30 வருஷத்திற்குள் கெட்டவன் என்ற பெயர் உண்டாகும். பொருள் சேதம் மிகவும் உண்டு.

நான்காம் வினாடியில் செய்ய கட்டடம் 70 வருஷம் இருக்கும். கட்டினவனுக்குக் கடன் தீராது. துயரம், சண்டை, அரசு தண்டனை இவை உண்டாகும். 30 வருஷம் சென்ற பின் கட்டடம் வேறு ஒருவன் கைக்கு மாறும்.

ஐந்தாம் வினாடியில் செய்ய கட்டடம் கொஞ்ச காலம் தான் இருக்கும். செழிப்பும் அவ்வளவே இருக்கும் கட்டினவனுடைய மனைவி இறப்பாள். எல்லா இன்னல்களும், நலிவுகளும் உண்டாகும்.

## 3. அரசு காலத்தில் மனைகோல புக, ஏற்படும் பலன்

அரசு காலத்தில் முதல் வினாடியில் மனைகோல புக, அக்கட்டிடம் 1000 ஆண்டுகளுக்கு மேலும் செழிப்பாக இருக்கும். அந்தக் கட்டிடத்தின் மற்றும் வாழ்வோர் புகழ் வெகுதூரம் பரவும், செல்வம் செழிக்கும், சுபமங்களங்கள் பெருகும். களத்ர, புத்ர, பௌத்ர, மித்ரர் போன்று யாவரும் சூழ அதில் இருப்போர் வாழ்வர். யானை, குதிரை, போன்ற (இக்காலத்தில் ஸ்கூட்டர், கார், போன்றவை) வாகனங்கள் சௌகரியமுடன் கிடைக்கும்.

இரண்டாம் வினாடியில் மேல் சொன்ன எல்லா நலன்களுடன் கட்டிடம் 600 ஆண்டுகள் இருக்கும்.

மூன்றாம் வினாடியில் செய்ய 100 வருஷம் அக்கட்டிடம் மேற்கண்ட எல்லா நலங்களும் பெற்று விளங்கும்.

நான்காம் வினாடி பயனில்லை, 50 வருஷங்கள் தான் மேற்சொன்ன எல்லா நலனும் பொருந்தி இருக்கும்,

ஐந்தாம் வினாடி முற்றிலும் பயன் தராது.

## 4. துயில், மரணகால பலன்

துயில், மரண காலங்களில் புதுமனை கோல, வீடு எழுப்ப, புக கட்டிடம் முடிவதற்குள் எஜமானன் இறந்துவிடுவான். இன்னும் பற்பல துன்பங்களும் உண்டாகும். எனவே இவை விலக்கத்தக்கதே.

# 13 பிணிப் படலம்

### முதற் பகுதி - உரைநடை விளக்கம்

உடலில் உள்ள வாத, பித்த சிலேத்துமங்கள் என்னும் மூன்று தத்துவங்கள் குறிப்பிட்ட அளவில் இல்லாமல் கூடினாலும், குறைந்தாலும் மனிதனுக்கு நோய் ஏற்படுகிறது. இது எப்பொழுது நேரும் என்று சொல்ல முடியாது. இது ஏற்படும் நேரத்தில் நோயாளியின் பட்சியின் தொழில் வினாடிக்கேற்பப் பிணிகள் விரைவில் குணமாவதும் அல்லது நீடிப்பதும் நோய் தீராமலே நோயாளி இறப்பதும் நேரும். இதன் விவரங்களையும் இப்படிப் பிணிகள் நேரும்போது வழிபாட்டு முறைப்படி எப்படி சாந்தி செய்யவேண்டும் என்பன போன்ற செய்திகள் இப்படலத்தில் சொல்லப்படுகின்றன.

ஏட்டு நூல்களில் இவை ஆற்றொழுக்காகவும், முறையாகவும் கூறப்பட்டாலும், குறையாகவும் இருப்பதால், அச்சிட்ட நூல்களிலும் நம் குறிப்புகளிலிருந்தும் தொகுத்துத் தேவை கருதி இங்கு எழுதப்படுகிறது,

## 1. ஊண் காலப் பிணி

தன்னுடைய பக்ஷி ஊண் காலத்தில் இருக்கப் பிணி வந்தால் 15 நாளில் தீரும். வினாயகருக்குத் திருமுழுக்குச் செய்து நல்லோர்க்கு அன்னமளித்து வழிபட்டு மருந்தும் உண்ண நோய் தீரும்.

## 2. நடை காலப் பிணி

நடை காலத்தில் பிணி வந்தால் அதிகக்கவலை ஏற்படும். ஒரு மாதத்தில் தீரும். அன்னதானம் செய்து மருந்துண்ணத் தீரும்.

## 3. துயில் காலத்தில் பிணி

தன் பக்ஷி துயில் காலத்தில் இருக்கப் பிணி ஏற்பட்டால் 3 மாதத்தில் தீரும் தேகத்திற்கு அதிக துன்பம் ஏற்படும். காளி, கொற்றவைக்குத் திருமுழுக்குச் செய்து அநுமாருக்கும் வழிபாடு செய்தல் மற்றும் மருந்தும் உண்ண நோய் தீரும்.

## 4. அரசு காலப் பிணி

தனது பக்ஷி அரசு காலத்தில் இருக்கப் பிணி வந்தால் 8 நாளில் தீரும். சதா சிவனுக்குத் திருமுழுக்குச் செய்வது, அரச மரம் சுற்றி வழிபாடும் செய்து, மருந்தும் உண்ண பிணி தீரும்.

## 5 மரண காலப் பிணி

தன்து பக்ஷி மரண காலத்தில் இருக்கும் போது பிணி ஏற்பட்டால் தீருவது அதிக கஷ்டம். 6 மாதத்தில் தீர வாய்ப்பு உண்டு. தேருமோ, தேராதோ என்று சந்தேகம் ஏற்படும். சனிக்கோளுக்கு வழிபாடு செய்து மருந்துண்ணத் தீர வாய்ப்பு உண்டு.

குறிப்பு : இப்படி ஒவ்வொரு தொழிலும் பிணி காணும்போது மற்றபக்ஷி சத்துருவாகி ஊணரசு ஆக வலுத்தால், நோய்கடுமை அதிகமாகவும், தீரும் கெடுவு அதிகமாகவும் நீளும், அதுவே மித்துருவாக இருந்தால் நோயின் கடுமை குறைந்து, சொன்ன கெடுவைவிட குறைந்த காலத்தில் நோய்தீர வாய்ப்புண்டு, எனவே இதற்கு சத்துரு மித்துரு நிலை அறிந்து பலன் சொல்லவேண்டும், இனி ஒவ்வொரு வினாடிக்கும் பிணி ஏற்படும் பலன் சொல்லப்படுகிறது.

## 6. ஊண் கால வினாடிகள்

1. ஊண் காலத்தில் முதல் வினாடியில் பிணி வந்தால் 4 அல்லது 5 நாளில் தீரும். இதற்கு வினாயகருக்குத் திருமுழுக்காட்டி மருந்துண்ணத் தீரும்.

2. ஊண் காலத்தில் இரண்டாம் வினாடியில் பிணி கண்டால் 7 நாளில் தீரும். இதற்கும் முன்போல் செய்து மருந்துண்ணவும்.

3. ஊண் காலம் மூன்றாம் வினாடியில் நோய் கண்டால் 4 நாளிலும், 4ம் வினாடியில் 13 நாளிலும் 5-ம் வினாடியில் 15 நாளிலும் தீரும். பூசை, வழிபாடு முன் போல.

## 7. நடை கால வினாடி பிணிப் பலன்

தன் பட்சி நடைகாலத்தில் இருக்கும்போது பிணி வந்தால் முதல் வினாடியில் கண்டால் 15 நாளிலும், இரண்டாம் வினாடியில் 15 நாளிலும், 3ம் வினாடியில் 20 நாளிலும், 4ம் வினாடியில் 20 நாளிலும் 5ம் வினாடியில் ஒரு மாதத்திலும் தீரும். வழிபாடு முன்னர் ஊண்காலப் பிணிக்குச் சொன்னதைச் செய்து மருந்துண்ணவும்.

## 8. அரசு கால வினாடி பிணிப்பலன்

தனது பட்சி அரசில் இருக்கும்போது பிணி முதல் வினாடியில் வந்தால் அதிகச் சூட்டினால் உடலெல்லாம் கொதிப்பேறும், 3 நாளிலும் தீரும். இரண்டாம் வினாடியில் 5 நாளிலும், மூன்றாம் வினாடியில் பிணி கண்டால் 8 நாளிலும், நான்காம் வினாடியில் பிணி கண்டால் 10 நாளிலும், 5ம் வினாடியில் பிணி கண்டால் 12 நாளிலும் தீரும். அரசு காலத்தில் எந்தப்பிணி வந்தாலும் உயிர்ச்சேதம் ஆகாது. வழிபாட்டு முறை முன் அரசு காலத்தில் சொல்லியதைச் செய்யவும்.

## 9. துயில் கால வினாடி பிணிப் பலன்

தனது பட்சி துயில் காலத்தில் இருக்கும் போது முதல் வினாடியில் பிணி கண்டால் 8 நாளிலும் 2-ம் வினாடியில் பிணிகண்டால் 15 நாளிலும் 3-ம் வினாடியில் பிணிகண்டால் 20 நாளிலும், 5-ம் வினாடியில் பிணிகண்டால் 30 நாளிலும் தீரும். இக்காலத்தில் பிணிவந்தால் உயிர்ச்சேதமும் ஆகலாம். துயில் காலத்தில் முன்னர் சொல்லிய வழிபாட்டு முறையை அனுசரித்து மருந்தும் உண்க.

## 10. மரணக் கால வினாடி பிணிப் பலன்

தனது பட்சி மரணகாலத்தில் இருக்கும்போது பிணிவந்தால் 6மாதத்தில் தீரும். அதேசமயம் வேறு பட்சி சத்ருவாகி வலுவானால் (ஊண், அரசு, நடை, துயில்) 2 மாதத்தில் கொல்லும், இரண்டாம் வினாடியில் பிணி கொண்டால் ஒரு வருடத்திலும், மூன்றாம் வினாடி முதல் 5-ம் வினாடிவரை வந்தால் அதேபோல் மரணம் உண்டாகும்.

## 11 பிணிக் கால அளவு

பொதுவாக ஊண் காலத்தில் கண்ட பிணி 1 மாதத்திலும், நடைகாலப் பிணி 6 மாதத்திலும், அரசு காலப்பிணி 1 பட்சத்திலும் அதாவது, 15 நாளிலும், துயில் காலப்பிணி 1 வருஷத்திலும், மரணகாலப்பிணி 3 வருஷத்திலும் தீரும்.

குறிப்பு: இவையெல்லாம் முகப்பில் சொன்னதுபோல்''உரோமரிஷி வினாடி பஞ்ச பட்சி'' என்ற நூலில் பிணிப்படலத்தில் 222ம் பாடல் முதல் 280ம் பாடல் வரையில்

கொடுத்துள்ள விஷயங்களைத் தொகுத்து இங்கு சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளன. பிற நூல்களிலும் இவை உள்ளன.

## பிணிப்படலம் இரண்டாம் பகுதி

போகர் பட்சி நூலிலிருந்த ஒவ்வொரு தொழிலுக்கும் வினாடி வாரி விரிவான பாடல் உரையுடன் எழுதப்பட்டது.

### ஊண் காலப் பிணியின் பலன்

151 எக்காலு மூணதனிற் பிணியுதித்தால்
என்மகனே மூவைந்து நாளிற்றீரும்
அக்காலி லைங்கரற்கு வபிஷேகித்து
அதிற்றூப தீபமிட்டுத் தொழுது போற்றி
முக்காலு மருந்தீயச் சொல்லுங் காலை
யுயர்மறையோர்க் கன்னதானமுங் கொடுத்து
சிக்காலுஞ் சிலுகற்றே மருந்துட் கொள்ள
தீவிரமா யுள்ளபிணி செல்லும் பாரே.

(இ—ள்) பிணியானது ஊண் காலைவேளையிலுதிக்குமாகில் அது பதினைந்து நாளையிற்றீரும். அப்படித் தீராதாகில் விநாயகர்க்கு அபிஷேகஞ் செய்வித்துத் தூபதீபங் கொடுத்து தொழுது வணங்கி மருந்தீயும்போது பிராமணர்களுக்கு அன்னதானஞ் செய்வித்து அந்த நோயகலத்தக்க மருந்துகளை உட்கொள்ளச் சீக்கிரத்தில் அந் நோயானது நீங்கிவிடும்.

### நடை காலப் பிணியின் பலன்

152 செல்லவும் நடையதனிற் பிணியுதித்தால்
சீழ்வுரண மிகுதியுண்டாந் திங்களொன்றில்
அல்லலறும் வேலவற்கு வபிஷேகித்து
அங்ஙனே கன்னியர்க்குக் களம்பும்பூசி
எல்லலயினி லன்னமது வன்பாய்ச் செய்து
இதிற்பண்டி தற்குவுப சாரம் பண்ணி
கல்லலற மருந்தீயச் செய்வாயாகில்
கண்டதொறு பிணியகலுங் கணக்காய்த்தானே.

(இ—ள்) பிணியானது நடைகால வேளையிலுதிக்குமாகில் அது சீழ் இரணம் செந்நீர் மிகுதியாய் ஒரு மாதத்தில் தீரும். அப்படித் தீராதாகில் சுப்பிரமணியருக்கு அபிஷேகஞ் செய்து கன்னிகைகட்குக் களபகஸ்தூரி, குங்கும, மஞ்சள், தாம்பூலந்தரிக்கச் செய்து அவர்கட் கன்னம் பரிமாறி மருந்தளிக்கும் வைத்தியர்க்கு உபசாரஞ் செய்து மருந்தியுங்கள். அப்பிணியானது உடனே தீரும்,

153 கணக்காக வரசதனிற் பிணியுதித்தால்
கண்டிடவும் நாளெட்டிற் றீரும் பாரு
பிணிக்காகச் சிவனுக்கு வபிஷேகித்து
புன்னரசு மரம்பிரதட்சணமுஞ்செய்து
வணக்கமாய் நோயாளிப் பீடை நீங்க
வாகாக வோமங்கள் வளர்த்தியிய
இணக்கமா யக்கினியில் வந்த நோயும்
இடர்செய்யா தகன்றுவிடு மெனிதிற்றானே.

(இ-ள்) பிணியானது அரசுகால வேளையிலுதிக்குமாகில் எட்டு நாளையில் தீரும். அப்படித் தீராதாகில் சிவலிங்கத்துக்கு அபிஷேகஞ் செய்து வணங்குவதுடன் அரசுமரமுஞ் சுற்றிப் பிரதட்சணஞ் செய்து நோயாளியின் பீடை நீங்க ஓமங்கள் வளர்த்து மருந்தளிக்க அழலால் வந்தநோய் இடர் செய்யாது அகன்றுவிடும்.

## துயில் காலப் பிணியின் பலன்

154 எளிதாக வுறக்கத்திற் பிணியுதித்தால்
ஏகுவது மாதமது மூன்றுக்குள்ளே
வெளியாக வுடலதனை நோகச் செய்யும்
மேவிடவுங் காளிக்கு வபிஷேகித்து
வளியாக வாயுவினால் வந்த நோய்க்கு
வடைமாலை வடுகனுக்கு வணங்கிச் சாத்தி
ஒளியாது பிடகன்கை மருந்து மீந்தால்
உத்தமனே யுந்நோயுந் தீரும் பாரே

(இ—ள்) பிணியானது துயில்கால வேளையிலுதித்தால் மூன்று மாதத்தில் தீரும். அப்படித் தீராதாகில் அது தேசத்தை வருத்தி நோகச் செய்யும். அதற்குக் காளிகா தேவிக்கு அபிஷேகஞ் செய்து வாயுவினால் வந்த நோய்க்கு வடைமாலை வடுக னுக்குச் சாத்தி வைத்தியன்கை மருந்தளிக்க அந்நோயானது நீங்கிவிடும்:

## மரண காலப் பிணியின் பலன்

155 திறவே மரணத்திற் பிணியுதித்தால்
செல்லு வதும் வெகுவருத்த மாதமாறில்
தேறவே தேறாதோ வென் பார்பாரு
செய்வினையுந் தீவினையு மென்பார் பாரு
கூறவே வவன் செயலு மிருக்குமாகில்
குணமாகு மரசுபகை யுரானரமில்லை
ஆறவே பரிகாரஞ் சனியனுக்கு
அபிஷேகஞ் செய்திடவு மதமாய்ப் போமே.

(இ-ள்) பிணியானது மரணகால வேளையிலுதிக்குமாகில் அதுவெகு வருத்தமாய் ஆறு மாதத்தில் தீரும். அப்படித் தீராதாகில் யாவரும் தேறுமோ, தேறாதோ வென்றும், செய்வினையோவென்றும் பலர் கூறுவதுடன் வேல் தாங்கிய முருகர் கருணையிருக்குமாகில் குணமாகிவிடும் அதிலும் அரச பகையிருக்குமாகில் நோய் நீங்காது நீடிக்கும். இதற்குப் பரிகாரம் நவக்கிரகங்களில் சனியனுக்கு அபிஷேகஞ் செய்து நவதானியம் தானஞ் செய்து நெய்விளக்கு வைத்துவர அந்நலி வருத்தமின்றி நீங்கும்.

மரணமான சாவுத்தொழிலில் தோன்றிய பிணியாதலால் இது தீருவது கஷ்டம். ஜாதக ஆயுள் கெட்டியாகி தீர்க்காயுள் ஜாதகமானால்தான் பிழைப்பான் என்று கொள்க.

156 அதமாகு மாகாச வெளியதாகும்
அங்ஙனே ஆணரசு பகையாகாது
சதமாகச் சத்துருவின் கொடுமை மெத்த
தன்னிடவு மித்துருவே யிருக்க வேண்டும்
பத்மாகக் கூற்றின்றன் மரணம் நாளும்
பற்றிடவு மில்லாம லிருக்க வேண்டும்
இதமாக விவைகளுக்கோர் பகையாகாது
இருந்திடிலே வுயிர்ச் சேத மிசையுந்தானே.

(இ-ள்) பிணிகாலப் பகுப்பை யுரைக்குங்கால் ஆகாசமென்பது வெளி. அதில் ஊணரசு பகையாயிருக்கின் சத்துருக்களினாற் கொடுமை அதிகரிக்கும். அதை நீக்கி மித்துருவாயிருக்குமாகில் வெகு நன்மையாம். சத்துருவாகில் அது இயமனது மரண நாளாகும். அவை பகையாயிருக்கின் உயிர்ச்சேத முண்டாகும்.

## அடுத்து ஒவ்வொரு தொழிலுக்கும் 5 வினாடிகளுக்கும் பிணியேற்பதின் விளைவைக் கூறுகிறார்

### ஊண்காலப் பிணியின் 1-ம் வினாடி

157. இசையவே பிணியுதித்தோன் முதலாம் விநாடி
இதிற்கண்ட நோயதுநா ளிருப்பதிற்போம்
தசையிலே நோயதுதான் பலமேயில்லை
தான் வெற்றி யாமரசு பகைகூடாது
அசையவே தன் பகையிற் பிணிதான் மெத்த
ஐங்கமற்கு வபிஷேகஞ் செய்து போற்றி
விசையனாய்த் தொழுது நிற்கத் தேகத்துள்ள
வினைதீரும் பயமில்லை விளம்புங் காலே.

(இ-ள்) ஊண் காலப் பிணியின் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது இருபது நாளில் தீரும். அந்நோயானது பலமின்றி வெற்றியடையும். அதில் அரசு பகையாயிருக்கின் பிணியானது அதிகரிக்கும் அதற்கு விநாயகர்க்கபிஷேகஞ் செய்து தொழுதேற்ற அவ்வினையானது யாதொரு விக்கினமின்றித் தீரும்.

## ஊண் காலப் பிணியின் 2 ம் விநாடி

158 விளம்பவே நோயுதித்தோ னிரண்டாம் விநாடி
மேவிடவுந் தேகபிணி யேழு நாளில்
வளம்பட்வே நோய்தீரும் தீராதாகில்
வாகாக வைங்கரத் கபிஷேகித்து
உளமகிழ வருச்சனைசெய் தடிவணங்க
ஒதுங்கி விடும் நோயரசு பகையில்லாவிட்டால்
தளமாகப் பயமில்லை வலி விராது
சடுதியிலே நோய்தீருந் தடையிராதே.

(இ-ள்) ஊண் காலப் பிணியின் 2-ம் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது ஏழுநாளில் தீரும். அப்படித் தீராதாகில் கணபதிக்கு அபிஷேகஞ் செய்து அருச்சனை புரிந்து அவரைத் தொழுது போற்ற அப்பிணியான தகலும். அதிலரசு பகையாகில் யாதொரு பகையுமின்றி விரைவினிலே அந்நோயானது வலிவு செய்யாது நீங்கிவிடும்.

## ஊண் காலப்பிணியின் 3-ம் விநாடி

159 தடையுறவே நோயுதித்தோன் மூன்றாம் விநாடி
தனிலுதித்த நோய்நவ நாளினிலே தீரும்
இடையினிற் தீராதேல் விநாயகற்கு
ஏற்றியே பூசிக்க வேகும் நோய்தான்
நடையினிலே யரசுபகை யிருந்தாலுந்தான்
நலிவுமெத்த லில்லையதி லரசும்பாதி
கடையாக பகையூணில் வலிவுமில்லை
கண்டிதமாய் நோயகலும், காலம் பாரே.

(இ-ள்) ஊண் காலப் பிணியின் 3-ம் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது ஒன்பது நாளில் தீரும். அப்படித் தீராதாகில் விக்கினேஸ்வரர்க்கு அபிஷேகஞ்செய்து பூசித்துப்போற்ற அந்நோயான தகலும், அரசு பகையாயிருந்தாலும் பயமில்லை. அவ்வரசும் பாதி புலனைத் தரும், ஊணில் அரசு பகையாகில் அது வலிவு செய்யாது நோயையகற்றி வைக்கும்.

## ஊண்காலப் பிணியின் 4-ம் வினாடி

160 காலமதில் நோயுதித்தோ நாலாம் வினாடி
கண்டபிணி பதின்மூன்று நாளில் தீரும்
ஞாலமதில் தீராதே லைங்கரற்கு
நற்கடலைப் பழந்தேங்காய் நாட்டிவைத்து
சாலவே யடிபணிந்து தொழுது போற்றி
தான்பிராம ணோபசாரங்கள் செய்ய
மேலவன் பகையாயிருக்கில் வலிவு செய்யாது
வினைதீரும் பிருதிவிக் கூறு மேவுங் காலே,

(இ-ள்) ஊண் காலப் பிணியின் 4-ம் விநாடியைச் சொல்லின் இதிலுதித்த நோயானது பதின்மூன்று நாளையில் தீரும். அப்படித் தீராதாகில் விநாயகற்கு, அவல் கடலை சுண்டல், பழம், தேங்காய் வைத்து வணங்கி, தொழுதேற்றி, பிராமணோபசாரஞ் செய்துவர பகையாயிருக்கினும் அரசு வலிவு செய்யாது பிருதிவியின் கூறாகிய அந்நோயனது நீங்கிவிடும் என்றவாறு.

## ஊண் காலப் பிணியின் 5-ம் வினாடி

161 மேலவே நோயுதித்தோ னைந்தாம் வினாடி
வேதனை நோய் பதினைந்து நாளில் தீரும்
தாதவே யரசுபகை வினையுஞ் செய்யும்
சார்பாகக் கணபதிக்கு வபிஷே கித்து
பாவவே மறையவர்க்கு வன்ன தானம்
பாங்காகச் செய்திடவும் பாரில் தீரும்
ஆவதுவு மூணதிலே வந்த நோயும்
அன்னதுவும் பிருதிவியி லுதித்த தாமே.

(இ—ள்) ஊண் காலப் பிணியின் 5-ம் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது பதினைந்து நாளையில் தீரும். அப்படித் தீராதாகில் அரசு பகையால் வேதனை செய்யும். அதற்குக் கணநாயகர்க்கு அபிஷேகஞ் செய்து வேதியர்க்கு அன்னதானமளித்து, சோடசோபசாரஞ் செய்ய அப்பிணியான தகலும். அதுவூணதிலே வந்த நோய் பிருதிவியி லுதித்தால் நீங்கிவிடும்.

## நடைகால வினாடிகள் பலன்

### நடைகாலப் பிணியின் 1 ம் விநாடி

162 உதிக்கவே நடைக்கால முதலாம் விநாடி
உள்ளதினிற் பிணிவர ந்ரட்பத்தில் தீரும்
கதிக்கவே தீராது நோய்மி குக்கில்
கனகம்வே லுடையவரைத் தொழுது போற்ற
மதிக்க வேந்தன் பகையால் வருத்தமில்லை
வாகாக நோய்தீரும் வைய கத்தில்
விதிக்கவே பட்சி தொழி லறிந்து நீயும்
வேளையும்பார்த் தெவர்கட்குஞ் சாந்தி செய்யே.

(இ—ள்) நடைகாலப் பிணியின் வினாடியைச் சொல்ல அதிலுதித்த நோயானது பத்து நாளையில் தீரும். அப்படித் தீராவிடில், கனகவேலுடைய வள்ளலுக்கு அபிஷேகஞ்செய்து, தொழுது போற்ற, அரசு பகையாயிருந்திடினும் வருத்தமின்றித் தீராத நோயும் தீர்ந்து விடும். நீ நன்றாய் பட்சித் தொழிலையறிந்து வேளையைப் பார்த்து எவர்கட்கும் சாந்தி செய்யக்கடவாய் என்றவாறு

### நடைகாலப் பிணியின் 2 ம் விநாடி

163 சாந்தியாம் நடைகால மிரண்டாம் விநாடி
தான்தீரும் பதினைந்து நாளிலப்பா
காந்தியாய்த் தணிகைவாழ் முருகருக்கு
கனமாகப் பிரார்த்திக்கக் குறையொன்றில்லை
யேந்திலின் கிருபையினா லிடர்கள் நீங்கும்
என்மக்க ளரசுபகை பெரிதாயெண்ணி
ஈந்திடவு மருந்தினையே மீறிடாது
எளிதினில் தான் தீர்ந்து விடு மிடரி ராதே.

(இ-ள்) நடை காலப் பிணியின் இரண்டாம் வினாடியைச் சொல்ல அதிலுதித்த நோயானது பதினைந்து நாளையில் தீரும். அப்படித் தீராவிடின் தணிகை மலையினில் எழுந்தருளியிருக்கும் சிவ சுப்ரமணியருக்குப் பிரார்த்தனை செய்து கொள்ள அவர் கிருபையால் யாதொரு குறைவின்றிப் பிணி நீங்கிவிடும். இதில் அரசு பகை பெரிதாக வெண்ணிக் காலமறிந்து மருந்தளிக்க அது மீறாது இலேசாய் நீங்கிவிடும் என்றவாறு.

## நடைகாலப் பிணியின் 3-ம் வினாடி

164. இடாறவே நடைகால மூன்றாம் விநாடி
பிறிதிலுதித்த பிணியதுவும் நாளிரு பதிற்குள்
அடரவே தீராது வருத்த மிஞ்சில்
அறுமுகனைப் பூசிக்கி லந்நோய் தீரும்
தொடரவே சத்துருவூ ணரசா காது
தொல்லை பட மனதைவுந்தான் துயரஞ் செய்யும்
சடமதனி லப்புவினால் வந்த நோயும்
தான்றீருந் தாமதத்தில் தங்கா தென்னே.

(இ-ள்) நடை காலப் பிணியின் மூன்றாம் விநாடியைச் சொல்ல, அதிலுதித்த நோயானது இருபது நாளையில் தீரும். அப்படித் தீராதாகில் வருத்த மதிகப்படின் அறுமுகக் கடவுளைப் பூசிக்க அந்நோயானது தீரும். அதிலும் சத்துரு வூணரசாகாது அது தொல்லைப்பட்ட மனத்துக்குத் துயரஞ் செய்யும். தேகத்தில் அப்புவினால் ஜனித்த நோய் தாமதத்தில் தங்காது நீங்கிவிடும் என்றவாறு.

## நடைகாலப் பிணியின் 4-ம் வினாடி

165. தங்காது நடைக்கால நாலாம் விநாடி
சனித்த நோய் நாளிருபத் தைந்தில் தீரும்
தங்காது நோய் மிகுக்கின் சண்மு கற்கு
சந்ததமும் பிரார்த்திக்கத் தானே தீரும்
பொங்காது வந்ததுவுந் தரித்த வேளை
பொருமியே நவக்கிரகத் தோஷத் தாலே
மங்காது வந்தநோ யப்பு கூறாம்
வதைக்குமே சத்துருபகை வந்த தாலே.

(இ-ள்) நடைக் காலப் பிணியின் நாலாம் வினாடியைச் சொல்ல அதிலுதித்த நோயானாது இருபத்தைந்து நாளையில் தீரும். அப்படித் தீராதாகில் சண்முகத் தேவனைத் தொழுது பிரார்த்திக்க அந்நோயானது தானே தீரும். இது சுக்கில சுரோணித பேதத்தாலும், நவக்கிரக தோஷத்தாலும் அப்புவின் கூறாய் வந்த பிணி யகலும். அது சத்துரு பகையாயிருக்கின்ற வரைக்கும் என்றவாறு.

### நடைகாலப் பிணியின் 5-ம் வினாடி

166. வந்ததுவும் நடைக்கால வைந்தாம் விநாடி
மாற்றாது மாதமது வொன்றில் தீரும்
நொந்ததுவும் தீராதேல் வேல வற்கு
நுட்பமா யபிஷேகஞ் செய்யுங் காலை
தந்ததுவு மரசுபகை சாற்றெச ணாது
சார்பாக ஆண்பகையும் பொல்லா தப்பா
வெந்ததுவும் நீரதால் தேக வாதை
மேலாகி நின்றுவிடும் விரும்பிச் செய்யே.

(இ-ள்) நடைகாலப் பிணியின் ஐந்தாம் வினாடியைச் சொல்ல அதிலுதித்த நோயானாது ஒரு மாதத்தில் தீரும் அப்படித் தீராதாகில் வேலவர்க்கு அபிஷேகஞ் செய்யுங் காலையில் நீரதின் கூறாய் வெந்து வெம்பிய தேகவாதையானது நின்று விடும்படி விரும்பிச் செய்யும் என்றவாறு.

### அரசு காலப் பிணியின் 1-ம் வினாடி

167. விரும்பவு மரசுகால முதலாம விநாடி
வேறாக நாளதுவு மூன்றில் தீரும்
திரும்பவு மக்கினியால் மூன்றில் தீரும்
தேகமதில் வந்தபிணி செல்வ தற்கு
நரும்புனலைச் சிரமணிந்த சிவன் றனக்கு
தன்றாக வபிஷேகஞ் செய்வா ராகில்
இரும்பிடுநோ யதிகரித்து யாவுந் தீரும்
இடரதுமே யக்காலி லேகும் பாரே.

(இ-ள்) அரசுக் காலப் பிணியின் முதலாம் வினாடியைச் சொல்ல, அதிலுதித்த நோயானது மூன்று நாளையில் தீரும். அப்படித் தீராதாகில் கங்கையைச் சடையிற் தரித்த பரமேஸ்வரனுக்கு அபிஷேகஞ் செய்து, பிரார்த்திப்பாராகில் அக்கினியின் கூறும், சூடதிகரித்து இரும்பிடு நோயானது அக்காலில் இடராதென்றிராது சகல நோய்களுந் தீரும் என்றவாறு.

அந்தக் காலில் தோன்றியதால் எளிதில் தீரும் என்றாகிறது.

## அரசு காலப் பிணியின் 2-ம் வினாடி

168. ஏகுமரசுக் கால விரண்டாம் விநாடி
பிணிலுதித்த நோயைந்து நாளில் தீரும்
போகுமோ சனி பிடித்த தோஷத் தாலே
புரட்டி விடு மக்கினியிற் பொறுக் கொணாது
வாகுடனே சிவன்கிருபை வைத்த தாலே
மாறிவிடு மத்தோஷம் மற்றும் பீடை
ஆகுமது வளராது விலகி யோடும்
அங்ஙனே யரசுபகை யகலா தென்னே.

(இ-ள்) அரசுகாலப் பிணியின் இரண்டாம் வினாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது ஐந்து நாளையில் தீரும். அப்படித் தீராதாகில் சனி பிடித்த தோஷத்தாலும் அக்கினியின் கூறும் அதிகரித்ததை சிவன் கிருபை வைப்பவராயின் அந்நோயகலும் மற்றுமுள்ள பீடையானது ஓங்காது விலகிவிடும் அதிலும் அரசு பகையிருக்குமாயின் அகலாதென்பதாம் என்றவாறு.

## அரசு காலப் பிணியின் 3-ம் விநாடி

169. ஏகுமரசுக் கால மூன்றாம் விநாடி
ஏகவே யெட்டுநாளை யினிற் றீரும்
பன்னவே பரமனார்க் கபிஷே கித்துப்
பணிந்திடவே பற்றில்லா தகலும் பாரு
முன்னமே தொல்லையென்று நினைத்தி டாதே
வூணதனில் வந்தபிணி யொதுங்கிப் போகும்
சொன்னபடி யக்கினியால் வந்த தோஷம்
சொல்லாது வனமேகுஞ் சூட்டுங் காலே

(இ-ள்) அரசுகாலப் பிணியின் மூன்றாம் வினாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது எட்டு நாளையில் தீரும். அப்படித் தீராதாகில் பரமசிவனுக்கு அபிஷேகஞ் செய்து அவரைப் பணிந்து போற்ற யாதொன்றும் பற்றில்லா தகலும். இது தொல்லை யென்று நினைக்க வேண்டாம். தேகத்திலுதித்த பிணியான தொதுங்கிடும் அதில் அக்கினியால் வந்த பீடையும் சொல்லாது வனமேகும். அதாவது தீரும் என்றவாறு.

## அரசு காலப் பிணியின் 4-ம் வினாடி

170 சூட்டவே யரசுகால நாலாம் விநாடி
தொல்லை நோய் பத்துநாளையிற் தீரும்
நாட்டவே தீராதேல் சிவன் றனக்கு
நன்றாக வபிஷேகஞ் செய்யும் போது
பூட்டகமாய்ச் சனிபிடித்த தோஷந் தீரும்
பொல்லாத நோயகலும் வினைநில் லாது
காட்டவே யாதேனும் பகையொன் றில்லை
கழறவு மிப்பலனைக் கருத்தில் லையே.

(இ-ள்) அரசக் காலப் பிணியின் நாலாம் வினாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது பத்து நாளையில் தீரும். அப்படி தீராதாகில் சிவனுக்குக் குன்ற அபிஷேகஞ் செய்துவர அதிற் சனிபிடித்த தோஷந் தீருவதன்றிப் பொல்லாத நோய்களுமகலும், வினையென்பது பற்றற்றும் யாதேனுமோர் பகையிராது. இப்பலனைக் கருத்தில் வைத்துச் செய்வாய். (எ-று).

## அரசு காலப் பிணியின் 5-ம் வினாடி

171. கருத்தி லரசுக்கால வைந்தாம் விநாடி
கதித்தநோய்ப் பனிரெண்டு நாளையிற் றீரும்
வருத்தமாய்த் தீராதேல் வலிசெய் யாது
மனமகிழ்ச்சி யில்லாது வியாதி கொண்டு
திருத்தமா யக்கினியா லுதித்த சூடு
செப்பவுமை யாள்கிருபை செயலாற் றீரும்
நிருத்தமாய் நோயற்றுச் சௌக்கிய மாகும்
நோக்கவு மரசுபகை நோட்டம் பாரே.

(இ-ள்) அரசுகாலப் பிணியின் ஐந்தாம் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது பனிரெண்டு நாளையிற்றீரும். அப்படித் தீராதாகில் அது வலிவு செய்யாமலும் மனமகிழ்ச்சியில்லாமலும் வியாதியுற் பவித்து அக்கினியிலுதித்த அழல் உமையவளின் கிருபையால் தீரும். தேக நோயற்று சௌக்கியமாகும். இதில் அரசு பகையாகாதென்பதாம். (எ-று)

## நித்திரை கால வினாடிகள் பலன்

### நித்திரை காலப் பிணியின் 1-ம் வினாடி

172. நோட்டமா யுறக்கத்தில் முதலாம் விநாடி
நுவலும்நோ யெட்டுநா ளையினிற் றீரும்
நாட்டமாய்க் காளிக்கு வபிஷே கித்து
நன்றாக மாருதிக்கு வணக்கஞ் செய்து
வாட்டமாய்ப் பிரார்த்திக்க வாயுவி னாலே
வந்ததொரு பிணிதீரும் வளம தாக
நீட்டமா யரசு பகை யாகா தங்கே
நிற்குமப் பிணிஅதுதா னீங்கும் பாரே.

(இ-ள்) நித்திரை காலப் பிணியின் முதலாம் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது எட்டுநாளையிற்றீரும். அப்படித் தீராதாகில் காளிக்கு அபிஷேகஞ் செய்து அனுமனையும் வணங்கித் தோத்தரித்துப் பிரார்த்திக்க வாயுவினாலுதித்த பிணியானது வதை செய்யாது அகன்று விடும். இதில் அரச பகையாயிருந்தலாகாது. இல்லாவிடின் பிணியானது நீங்கிவிடும் என்றவாறு.

### நித்திரை காலப் பிணியின் 2-ம் வினாடி

173. நீங்கவே யுறக்கத்தி லிரண்டாம் விநாடி
நேரும் நோய் பதினைந்து நாளிற் றீரும்
பாங்கதாய்த் தீராதா லாங்கா ளிக்கும்
பண்பாக வபிஷேகஞ் செய்து தீர
ஓங்கவே நோய்தீர்த லரிதே யாகும்
உள்ளநோய் லகுவாகி யுயரும் பின்னும்
சேங்கவே மனத்துயரங் கொடுத்து மப்பால்
தொலைந்துவிடு மெய்ப்பிணியுஞ் சுகுண மாமே.

(இ-ள்) நித்திரை காலப் பிணியின் இரண்டாம் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது பதினைந்து நாளையிற்றீரும். அப்படி தீராதாகில் காளிகாதேவிக்கு அபிஷேகஞ் செய்து வைக்க அந்நோய் தீருவதரிதாயினும் அவ்வேளையிலகுவாகி மறுபடியும் அந்நோயதிகரித்து அதனால் மனத்துயரங்கொண்டு மீண்டும் விலகுவிக்கும், தேகமுஞ் சுகமாகும் என்றவாறு.

### நித்திரைகாலப் பிணியின் 3-ம் விநாடி

174. குணமாக வுறக்கத்தில் மூன்றாம் விநாடி
கூடியே நோயது விருபதிலே தீரும்
சணமாகத் தீராதேல் காளிக் குந்நான்
தக்காலி பொங்கலிட்டு வைர வற்கு
மணமாக வடைமாலை மகிழ்ந்து சாத்தி
வணங்கவே தேகநோய் வலிவு குன்றி
தணலாக வாயுவினாற் சனித்த தோஷம்
தான்றீரும் பண்டிதன்கை மருந்து மீயே.

(இ-ள்) நித்திரை காலப் பிணியின் மூன்றாம் விநாடியைச் சொல்ல இதிலுதிக்கும் நோயானது இருபது நாளிற்றீரும். அப்படித் தீராதேல் காளிகா தேவிக்குப் பொங்கலிட்டுப் பலி கொடுத்து வைரவற்கு வடைமாலை சாத்தி வணக்கஞ் செய்ய அந்நோய் வலிவு குன்றி வாயுவினாலுதித்த தோஷ மாற வைத்தியன்கை மருந்தளிக்க உடனே நீங்கி விடுமென்பதாகும் என்றவாறு.

### நித்திரைகாலப் பிணியின் 4-ம் வினாடி

175. மருந்தளிக்க வுறக்கத்தில் நாலாம் விநாடி
வந்துதித்த நோய்மாத மூன்றிற் றீரும்
வருந்தவே காளிக்கு வபிஷேகித்து
வணங்கவே யரசுபகை வாய்த்திட் டாலும்
பொருந்தவே வெகுகொடுமை செய்யும் நோய்கள்
புரண்டேகு மக்கணமே பொல்லாங் கெல்லாம்
அருந்தவே மருந்ததனை யுண்ணும் போது
அகலுமே யுள்ளதோ ஷமாய்த் தானே.

(இ-ள்) நித்திரை காலப் பிணியின் நாலாம் வினாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது மூன்று மாதத்திற்றீரும். அப்படித் தீராதாகில் காளிக்கு அபிஷேகஞ் செய்து, வணங்க அரசு பகையாயிருக்கினும் வெகு கொடுமை செய்யும், நோய்கள் தீரும். பொல்லாங்காகிய தோஷத்துக்கும், தக்க மருந்தளிக்க யாவும் விலகிவிடும் என்றவாறு.

### நித்திரைக்காலப் பிணியின் 5-ம் விநாடி

176. அதமாக வுறக்கத்தி லைந்தாம் விநாடி
அடுத்தநோ யைம்பதுநா ளையிற் றீரும்
பதமாகத் தீராதேல் மரண மெய்தும்
படியவே யரசுபகை யிருந்த தாகில்
வதையாக வதைக்குமடா க்ஷணத்துக் குள்ளே
வாகாக வரசுமித் துரு சொல்லொ ணாது
சதகமாக நோயனைத்துந் தீருந் தீரும்
சந்தேக மில்லையிது போகர் வாக்கே.

(இ-ள்) நித்திரைக்காலப் பிணியின் ஐந்தாம் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது ஐம்பது நாளையிற்றீரும். அப்படித் தீராதேல் மரணஞ் செய்யும். அதிலும் அரசு பகையாயிருக்கின் க்ஷணத்துக்குள்ளே வதைத்துவிடும். அரசு மித்துருவாயிருக்கின் அவசியமில்லை யாதலால் தக்கபடி சாந்தியுஞ் செய்து அவிழ்தப் பிரயோகஞ் செய்ய அந்நலியானது உடனே நீங்கிவிடும் என்றவாறு,

## மரண கால வினாடிகள் பலன்

### மரணகாலப் பிணியின் 1-ம் விநாடி

177 வாக்கதுவு மரணத்தில் முதலாம் விநாடி
வந்த நோ யதுமாத மிரண்டிற் றீரும்
போக்கதுவாய்த் தீராதேல் மரண மெய்தும்
புகலவே யரசுபகை யானா லுந்தான்
ஏக்கமுற யிடறுவான் பழிகா ரன்றான்
ஏகுவா னாகாச வெளியின் றோஷம்
நோக்கமுறத் தப்பிடிலோ மாத மாறில்
நோய்தீரும் பயமில்லை நுட்பங் காணே.

(இ-ள்) மரணகாலப் பிணியின் முதலாம் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது இரண்டு மாதத்திற்றீரும். இப்படித் தீராதேல் மரணஞ் செய்யும். அரசு பகையாயிருக்கின். இடறிற் பழிகாரனாவான். இது ஆகாசவெளியின். தோஷ மாதலால் ஒரு வேளை தப்புமாகில் ஆறுமாதத்தில் அந்நோய் எளிதிற்றீரும். யாதொரு பயமுமில்லை என்றவாறு.

## மரணகாலப் பிணியின் 2-ம் விநாடி

178 காணவே மரணத்தி னிரண்டாம் விநாடி
கண்டநோ யொருவருஷத் தினிலே தீரும்
தோணவே யரசுபகை தொடர்ந்த தப்பா
தொல்லைமெத்த தேகம் விட்டு வுயிரைத் தாக்கும்
பூணவே சூனியத்திற் சேர்ந்த தோஷம்
பொல்லாது மறலி வந்து புரட்டித் தள்ளி
நாணவே தன்னுலகங் கொண்டு போவான்
நன்றாகச் சாந்தி பிரார்த் தனையுஞ் செய்யே.

(இ-ள்) மரணகாலப் பிணியின் இரண்டாம் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது ஒரு வருஷத்திற்றீரும். அப்படித் தீராதாகில் அரசு பகை பொல்லாதாகையால் அது மெத்தவும் வருத்தப்பட தேகத்தைவிட்டு உயிரை நீக்கி வைக்கும் அக்காலத்திற் சூனியத்தைச் சேர்ந்த தோஷம் பொல்லாததானால் இயமன் வந்து புரட்டித் தள்ளி தன்னுலகிற் கொண்டு போய்ச் சேர்ப்பான். அதற்குத் தக்கபடி ஓமசாந்திகளும், தேவதாப் பிரார்த்தனைகளுஞ் செய்ய நலிவுநீங்கும் என்றவாறு.

## மரணகாலப் பிணியின் 3-ம்விநாடி

179 செய்யவே மரணத்தின் மூன்றாம் விநாடி
செனித்த நோய் வதைத்து விடுந் தீரா தப்பா
மெய்யதுதா னாகாச வெளியின் றோஷம்
விலகாது வூணரசு பகையா காது
பொய்யல்ல சூனியத்திற் சேர்ந்த நோயும்
போகாது கங்கையுட சாப மீறி
பையவே தேகம்விட் டுயிரை மாய்க்கும்
பண்படவுத் தீராது பழியா கும்மே.

(இ-ள்) மரணகாலப் பிணியின் மூன்றாம் விநாடியைச் சொல்ல தேகத்திலுதித்த நோயானது மாறாது மாய்த்துவிடும். இது ஆகசா வெளியின் கூறானதாலும் ஊணரசு பகையாகாததினாலும் சூனியத்திற் சேர்ந்த நோயானதாலும் கங்கையின் சாபமீறிய தாலும் நீங்காது. பழிபாவமாய்த் தேகத்தைவிட்டு உயிரை மாய்த்துவிடும். இதற்கு எவ்விதப் பரிகாரங்கள் செய்த போதிலும் தேறாது என்றவாறு.

## மரணகாலப் பிணியின் 4-ம் வினாடி

180. மாய்க்குமே மரணத்தி னாலாம் வினாடி
வந்தபிணி யுடலழிய வாட்டும் நோயாம்
ஏய்க்குமே சத்துருநாள் மரணவேளை
இன்பமற வரசுபகை யான காலம்
சாய்க்குமே சூனியத்திற் சேர்ந்த தோஷம்
சடமழியு மரணமது சாருந் திண்ணம்
வாய்க்குமே மரணமது குணமா காது
வருத்தமாஞ் சாந்தி செய்ய மாறா தாமே.

(இ-ள்) மரணகாலப் பிணியின் நாலாம் வினாடியைச் சொல்ல தேகத்திலுதித்த நோயானது உடலழியச் செய்ய நோயாகவும், சத்துருநாள் மரண வேளையாகவும் அரசு பகையான காலமாகவும், சூனியத்திற் சேர்ந்த தோஷமாகவுமிருப்பதால் அது சடமழிய மரணத்தை யுண்டாக்குவது திண்ணம். இது விருத்தமாய் எவ்வித சாந்தி செய்த போதிலும் மாறாது மரிக்கும் என்றவாறு.

## மரணகாலப் பிணியின் 5-ம் வினாடி

181. மாறாது மரணத்தி கலைந்தாம் விநாடி
வாய்த்த நோ யுடலழிய வந்த நோயாம்
தீராது பிரமன் விதி முடிந்த காலம்
சென்றிடுவர் தொகைசரிதான் செத்த வேளை
கூறாதுமறலி விடான் கொண்டு போவான்
கூடழியு முயிர்போகுங் குறிதா னிங்கே
தாராது யெப்பலனுஞ் சாந்தி செய்ய
தங்காது யேகிடுவான் சண்ட னூர்க்கே.

(இ-ள்) மரணகாலப் பிணியினைந்தாம் விநாடியைச் சொல்ல தேகத்திலுதிந்த நோயானது உடலழிய வந்த நோயாகவும் பிரமன் விதி முடிந்த காலமாகவும் பிறந்த வேளையின் கொடுமை சரியாய்ப் போனதாகவுமிருப்பதால் மறலியானவன் உயிரை விடாமற் கொண்டு போவானென்பதுண்மை. இதற்கெவ்விதச் சாந்தி செய்த போதிலும் தப்பாமலேகிடுவான். என்றவாறு

## பிணிக் கால அளவு

183. கண்டனென்ற வூணதற்கு மாதமொன்று
சார்பாக நடையதற்கு மாத மாறு
கண்டதொரு வரதற்குப் பட்ச மொன்று
கருதவே துயிலதற்கு வருஷ மொன்று
விண்ட மரணமதற்கு வருஷ மூன்று
விதித்திடவும் பிணிக்காண் கால மீது
கொண்டரசு பகைக்கொன்று பத்தா யோதுங்
குறிக்காணப் போகருமே கூறி னாரே

(இ-ள்) பிணிக்கால அளவைச் சொல்லா ஊண் பட்சிக்கு மாதம் ஒன்றாகவும், நடைபட்சிக்கு மாதம் ஆறாகவும், அரசு பட்சிக்கு பட்சம் ஒன்றாகவும், துயில் பட்சிக்கு வருஷம் ஒன்றாகவும், மரண பட்சிக்கு வருஷம் மூன்றாகவும், பிணிக்காக விதித்திருப்பதால் அரசு பகைக்கு ஒன்று பத்தாயோதும், தினக்குறிகளை போகர் திருவாய் மலர்ந்தருளிய தென்பதாம் என்றவாறு.

183. கூறிடவுஞ் சூனியமுற் றிருப் பதாலே
குணமுறவே சாந்திபிரார்த் தனைகள் செய்ய
மீறிடவு மீறாது வந்த நோய்கள்
விண்டுவே நீங்கி விடுஞ் சௌக்கியமாரும்.
நேரிடுங்காரியஞ்செய்விக்கும். பலித மாகும்
நினைத்தப்படி யஷ்டகன்மம் நெறியா யிடும்தான்
சீறிடவே யோடிடவுஞ் சாந்திகேளு
செப்புவேன் வேளைக் கண்டு முடித்தி டாயே.

(இ-ள்) முற்கூறியபடிற் சூனிய மிதிக்கிருப்பதாலே அதற்குத் தக்க சாந்தி பிரார்த்தனைகள் செய்ய அந்த நோய்கள் மீறிடாது நீங்கி தேகஞ் சௌக்கியமாகும். தானினைந்த காரியம் செயிக்கும். செய்வினைகள் பலிதமாகும். அஷ்ட கரும கிரியை யனைத்துமாகும். இவை கட்டுற்ற சாந்தி சொல்வதைக் கேட்டு யாதும் பிசகாது காலவேளை யறிந்து செய்யக் கடவாய் என்றவாறு

## 14. பீடை நிவாரணப் படலம்

### முதல் பகுதி

சென்ற படலத்தில் பட்சியின் தொழில்களின் இயல்புக்கேற்ப அவ்வக் காலங்களில் ஏற்படும் நோய்களின் கடுமை, துன்பம், அவை நீடிக்கும் கால அளவு முதலியவை கூறப்பட்டன. இப்படலத்தில் அவை நீங்க, மேற்கொள்ள வேண்டிய மந்திர, எந்திர, வேள்வி வழிபட்டு முறைகளை விளக்கப்படுகிறது. இவை எடுத்துக் கொண்ட சுவடிகளில் பற்பல வடிவங்களில் தரப்பட்டுள்ளன. இவை முறுகிய தவநிலை உடையார்க்கே, சான்றோர்க்கே கூடுமாகையாலும் தொகுத்துச் சுருக்கமாகவே எழுதப்பட்டுள்ளது.

நம்நாட்டு சித்தர்கள் எல்லாம் வல்லவர்கள், சாகாக்கல்வி கைவரப் பெற்றவர்கள், அறிவியல் தெரிந்தவர்கள். இவ்வகையில் திருமூலர் தம் திருமந்திரத்தில் பல்வேறு வழிபாட்டு முறைகளையும், இதில் தொடர்ந்து சித்தர்கள் பலரும் இவைகளைக் கையாண்டுள்ளனர். இம்மந்திர யந்திர வழிபாட்டு முறைகளின் அறிவியல் அடிப்படை என்ன, எப்படி இவை பயன் தருகின்றன என்பதைச் சிறிது காணுவோம்.

எல்லா உயிரினங்களுக்கும் தன்னியல்பான வடிவம் ஒன்றுண்டு. இவ் வடிவமும் மும்மூன்று வடிவங்களை உள்ளிட்டது. ஒன்று அதன் ஒலியியல் வடிவம் (Sound form) இரண்டாவது அதன் வரிவடிவம் (Geometrical expression), மூன்றாவது அதன் பருவடிவம். அதாவது கண்ணுக்குப் புலனாகும் வடிவம் (Gross form) இம்மூன்றும் இணைந்து முரணின்றி இயங்கினால் ஒரு உயர் நிலையில் முழுவளர்ச்சியும் வெற்றியும் உண்டாகும்.

இவ்வகையில் ஒருவனின் பெயர் எழுதப்படும்போது அது அவனின் வரி வடிவம் அல்லது யந்திரமாகும். ஒலிக்கப்படும்போது அது அவனுடைய ஒலி வடிவமாகும். இதுவே மந்திரம் எனலாம். இரண்டும் முரணின்றி இயங்கி அவன் பரு வடிவத்தை (Gross form) நன்று அமைந்து இயங்கச் செய்கின்றன. அதாவது அவன் பெயரின் ஒலி விக்கிரஹம்.

இவை மூன்றும் எங்கும் பரந்து உலகைத் தன்னியல்பில் இயக்குகின்ற கடவுட் சக்தியிடமும் பொருந்தும். முதலில் மந்திரத்தைப் பார்ப்போம்.

மனனம் + த்ரானம் என்ற சொல்சேர்க்கை மந்திரம். மனனம் செய்பவனைக் கணக்கிட்ட அதிர்வுகள் (Vibration) இயக்கப்படும்போது அதாவது தெய்வத்தின் ஒலிக்குறி ஈடான மந்திரம் உரிய வகையில் திருப்பித் திருப்பி இயங்க வைத்து மேற்படி அதிர்வுகளை ஏற்படுத்தும்போது, ஒலிப்பினை ஆக்க பூர்வமான மேல் நிலைக்கு எழுப்பிச் செல்வதுடன் அவன் எண்ணங்களையெல்லாம் ஈடேற்றி நாளேற அதன் கட்டுப் பொருளான வழிபடு கடவுளை அருவ நிலையிலிருந்து உருவ நிலைக்குக் கொண்டுவந்து, வழிபடுவோனுக்கும் அந்த வழிபடு கடவுளுக்கும் ஒரு ஒலியியல் மின்காந்தத் (electromagentic like link) தொடர்பை ஏற்படுத்தி, அதன் மூலம் மேலேசென்று எங்கும் பரவிய பரம்பொருளுடன் கரைந்து வழிபடுகடவுள் (இஷ்ட தேவதை) (articulate form of super intelligence) மூல விக்ரஹம், அதாவது பருவடிவமாகிறது. மந்திரம் அதன் ஒலி வடிவமாகிறது. அந்த தேவதையைக் குறித்த வரிவடிவம் அதன் யந்திரமாகிறது. யந்திரம் முன்சொன்ன அதிர்வு தத்துவ

அடிப்படையில் (law of vibration radiation) தான் பயன்படுகிறது. ஒரு பரப்பில் ஒரு கோடு சுழிப்போமானால் அந்த பரப்பில் ஏற்கனவே உள்ள அதிர்வுகள் Atmospheric vibration) பாதிக்கப்பட்டு வேறு விதமாக இயங்குகின்றன, இப்படி அதிர்வுகள் பலவகையில் நுண்ணிதின் இயங்கும் வண்ணம் அமைக்கப்பட்டு, வழிபடு கடவுள் ஒவ்வொன்றுக்கும் இயல்பான வகையில் தம் நுண்ணுணர்வால் ஆன்றோர் மந்திரமாகவும், யந்திரமாகவும் அமைத்து வைத்தனர்.

இப்படி அடிமட்ட நிலையில் உயிரினங்களுக்கும் மேல்மட்ட நிலையில் பரம்பொருளுக்கும் இந்த ஒலியியல், ஒளியியல் (வரியியல்) பருவியல் (Gross form) வடிவங்களும் தனித்தனி இயங்கி மனிதனின் எண்ணத்தை ஈடேற்றிவைக்கின்றன. இம்மூன்று நிலைகளையும் உள்ளடக்கியே வள்ளுவப் பெருமானார்.

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

என்பாராயினர்.

அதாவது உலகில் உள்ள அடிமட்ட நிலையில் உள்ளவை முதல், கடவுள் நிலைவரை, இந்த மூன்று நிலைகளிலும் இருதிறத்தையும் இணைக்கும் பாலமாக எழுச்சி உடைய எழுத்து அதாவது, மந்திரமே முதற்காரணமாக அமைகிறது என்று விளங்க வைத்துவிட்டார்.

எழுச்சி உடையது எழுத்து, எழுதப்படுவதால் அல்ல, குண்டலியை எழுப்பி மேல்நிலைக்கும் சஹஸ்ராரத்திற்கும் உயிரை எழுப்பி தன்னிலையை உணர வைக்கும் எழுத்தை அறிவித்தவன் தான் இறைவன் ஆகும். இதுவே "எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்" என்ற முதுரையின் பொருளாகும்.

எழுத்துக்களுக்கு ஒலி அலை நீளங்கள் உண்டு (Vibrating sound wave lengths) எழுத்துக்களுக்கு வண்ணங்கள் உண்டு. ஒலி அதிர்வுகளால் ஏற்படும் மாறுபாட்டால் அவற்றிற்கு அமுதத் தன்மையும் நச்சுத் தன்மையும் உண்டு. இவையே பாட்டியலிலும் விளக்கப் பெறுகிறது. வெறும் வெற்றிடத்தில் பல்வகை ஒலி அதிர்வு கூட்டு ஒலிகளை ஒலித்து இயேசு பெருமானின் உருவத்தை பாரீஸில் பல்லாண்டுகளுக்கு முன் வண்ணத்தில் ஏற்படுத்தினான் ஒரு விஞ்ஞானி. எனவே ஒலி அமைப்புகளுக்கு ஆக்கம், அழிவுத் (Constructive and destructive) தன்மைகள் உண்டு. இதையே நச்செழுத்தென்றும் அமுத எழுத்தென்றும் பாட்டியலில் பகுத்து வைத்தனர். ஆன்றோர் இம்மந்திர வலிமை கொண்டே செந்தமிழ் நல்லிசைப் புலவர்கள் அறம்பாடுதல், வசைபாடுதல், போன்ற தப்பாது பயன்தரும் செயல்களைச் செய்தனர்.

மனத்திலிருந்து எழுத்து ஒலி அளவை வேறுபாட்டால் அதிர்வுகளை ஏற்படுத்தி முன்னிய கருத்தை முடிப்பது மந்திரம் என்று கண்டோம். ஆனால் மனம் மற்றொன்றுக்கும் நிலைக்களனாகின்றது. அதுவே எண்ணம் திண்ணமாயின் ஒரு முனைப்பில் நின்றால் எண்ணியது முடிக்கக்கூடும் என்பது துணிவு. இதையே வள்ளுவனார்.

"எண்ணிய எண்ணியாங் கெய்துவர் எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்"

என்பர். எண்ணங்களுக்கும் அலை நீளங்கள் அவை பரவும் சூழ்நிலை (Medium) உண்டு. எண்ணங்களிலும் ஆக்கம் அழிவு வினைவியல் தன்மை கொண்டவை உண்டு.

எனவே எண்ணமும், எழுத்தில் ஒலியியல் அதிர்வுகளும் இணைந்து செயல்படும் இணையற்ற கருவியே மந்திரமாம்.

இந்நிலையில் ஒரு உயிரின் ஒலி வடிவம், வரி வடிவம், பருவடிவம் இவை மூன்றும் முரணின்றி ஒன்றியிருக்க மந்திரம் உதவும். இதே முயற்சி தான் மனத் திண்மையால் எங்கும் பரந்த பரம்பொருளை ஒலிவடிவு, வரிவடிவு, பருவடிவு இவற்றில் இழியச் செய்து, உயிரின் இம்மூன்று வடிவ நிலையும் ஒன்றுக்கொன்று கரையும்போது பெருஞ்செயல்கள் கைகூடும். கடைசியில் வடிவற்ற வெறும் அறிவுப் பிழம்பில் எல்லாம் ஒன்றி விடுகின்றன. இதுவே வீடு என்னும் நிலை.

இனி இந்த அருள்வயப்பட்ட ஒலி அளவை அதிர்வுகள் இறையுணர்ச்சியுடன் வரும்போது அருட் பாடல்களாகின்றன. இறை வழிபாட்டில் தன் வயமற்ற நிலையில் இவை பெருவலிமையுள்ளவையாம். இப்படி வேண்டுதலை 'Prayer' என்றும் ஆங்கிலத்தில் சொல்லப்படும். இந்த வழிபடும் விளைவால் ஏற்படும் ஆக்க அதிர்வுகள் பரவெளியில் அழியாமல் சான்றோர்கள் மூலம் அங்கங்கு நிலவுகின்றன. இவையே பாடல் பெற்ற கோயில்களாம். இந்த (Prayer Power can be Stored) என்று பல ஆண்டுகட்கு முன் ஒரு ஆங்கில விஞ்ஞானி நிலை நாட்டினார். இப்படிச் சேர்த்து வைத்ததையே நாம் இற்றை ஞான்று கோயில்களிலிருந்து நாமும் வழிபட்டுப் பெறுகின்றோம். இப்படிப் பல வகையிலும் இவ்வருள்திற முறையைப்பற்றி (Spritual Majic) நாம் எவ்வளவோ பரக்கப் பேசலாம். விரிவஞ்சி, மந்திர, யந்திர, தந்திர வழிபாட்டு முறைகள் அறிவியல் அடிப்படையில் தப்பாமல் பயன் தரும் என்பதை இது காறும் கூறியவற்றால் ஒருவாறு நிறுவினோம். இனி பஞ்சபட்சி நூல்களில் கூறப்படும் பீடை நிவாரணப் பகுதியினை ஓரளவு ஆன்றோர்பால் (குருவிடம்) விரிவாகத் தெரிந்துகொள்ள இருந்தாலும், கோடிட்டு காட்டி நூல் முழுமை கருதியும், தகுதியுடையாரேனும் இது கற்று மற்றோருக்கும் பயன்படுவர் என்பது கருதியும், இங்கே சுருக்கமாக எழுதப்படுகிறது. நூல் முகப்பில் உள்ள பஞ்சபட்சி யந்திர அமைப்பு வழிசாட்டு முறைகள் ஆகியவற்றிற்கும் இது பொருந்தும்.

# பீடை அல்லது பிணி நிவாரணம்

## பொது வழிபாடு

எல்லா காலப் பிணிகளுக்கும் பொது:–

ஆனைமுகனுக்குக் குடம் வைத்துப் பூசனை செய்யவும் முழுக்காட்டி வெண் மலரணிவித்து, விளக்கேற்றி, நறும்புகை காட்டி, தேங்காய் உடைத்து இன்னும் இது போன்ற வழிபாட்டு முறைகளைக் கைக்கொள்க. ஆனை முகனுக்கு உரிய மந்திரமான "ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் ரீம் சங் உங் ஐயும் கிலியும் கணபதி அனைத்து வகையும் (சர்வ சாபமும் அனைத்து பிழையும் சர்வ தோஷமும்) நசிமசி சுவாகா" என்று 1008 உருவு ஓதி வழிபடவும்.

## 1. ஊண் கால பீடை நிவாரணம்

ஆனை முகன் முன்னிலையில் ஒருபடி பச்சை நெல் பரப்பி அறுகோணம் அமைத்துப் புதுக்குடம் வைத்துப் பச்சைநூல் சுற்றி, புதிதாகக் கிணற்று நீர் நிறைத்து மாவிலை தேங்காய் வைத்து அதன் எதிரில் அவல், கடலை, பொரி, தேங்காய், பச்சரிசி, வெல்லம், பச்சரிசிப் பொங்கல் முதலிய படையல்கள் வைத்து "ஓம் ஐயும் கிலியும் சவ்வும் அங் உங் அனைத்து பீழையும் (சர்வ பீடையும்) நசிமசி" என்று 1008 உருவு வழிபாடு செய்து இரண்டு வேள்வி நிலை (ஓமகுண்டம்) வைத்து அதில், அகில், அரசு, முன்னை, சர்க்சரை முதலிய சமித்துக்களால் ஆவின் நெய்யால் மேற்படி இரண்டாவது மந்திரத்தால் வேள்வி சொரிந்து (ஓமம் வளர்த்தி) மீண்டும் முதலில் சொன்ன கணபதி மந்திரத்தை 5000 முறை உருவு வழிபட்டு, பூசை முடிந்தவுடன் குடநீரால் பிணி கொண்டானை முழுக்காட்டவும். பின்பு வெள்ளித் தகட்டில் உச்சாடன சக்கரத்தைக்கீறி முறைப்படி மண்டலம் பூசித்துக் குளிசமாடி பிணியாள னுக்குக் கட்டவும். நோய் நீங்கும்.

(இங்கு சொன்ன உச்சாடன சக்கரமும், பின்னால் வருபவையும் தொடர்ந்து அடுத்த அட்டகன்மப் படலத்தில் இடம்பெறும். பூசை மற்றும் குளிசமாடும் முறை முதலியவற்றைச் சான்றோர்பால் செவியறிவுறூஉவாக (உபதேசமாகப்) பெறுக இங்கு கூறிய மந்திர எழுத்துக்கள் யாவும் தமிழே. திருமந்திரத்தில் இவை பரக்க உள்ளதைக் கண்டு தெளிக. வடமொழிக்குத்தான் வலிமையுண்டு தமிழ் எழுத்துக் களுக்கில்லை என்பது அறியார் கூற்று. எல்லா மொழி எழுத்துகட்கும் இவ்வலிமை உண்டு. இன்னோரன்ன பிறவும் இதுபோலவே விளங்கிக் கொள்க.

## 2. நடை கால நிவாரணம்

முன்போல் முதலில் வினாயகர் பூசை செய்து கலசமும் இரண்டு வைத்து வேள்வி நிலைகளும் அங்ஙனமே இரண்டு வைத்து அரசு, வன்னி, நாயுருவி, விளா கருங்காலி, தருப்பை முதலான சமித்துக்கள் இட்டு ஆவின் நெய்யால் இலுப்பை நெய்யையும் கூட்டி "ஓம் ஸ்ரீம் ரீம் அங் உங் ஐயும் கிலியும் கணபம் அனைத்துப் பீழையும் (சர்பபீடை) நசி மசி சுவாகா" என்ற மறை மொழியால் 16000 முறை அவி சொரிந்து, ஓமகுண்ட சாம்பல் முழுவதையும் குடநீரில் கரைத்துப் பிணியாளன் சிரசில் முழுக்காட்டவும், செம்புத்தகட்டில் தம்பனச் சக்கரம் கீறி வழிபட்டு குளிசமாடி பிணியாளனுக்குக் கட்டவும்.

## 3. அரசு காலப்பிணி சாந்தி

இதற்கும் முன்கூறியதுபோல் கணபதி பூசை செய்து பின்தனிக்குட பூசையு செய்து வேள்வி நிலை இரண்டு வைத்து அரசு, சந்தனம், சமித்து போட்டு முன்பு சொன்ன மந்திரத்தாலேயே 5000 முறை ஓமம் வளர்த்தி பிறகு தங்கத் தகட்டில் 'மாரண' யந்திரத்தைக் கீறி மண்டலம் வழிபட்டுக் குலிசமாடி பிணி கொண்டான் அணியத்தரும்.

## 4. துயில் கால சாந்தி

துயில் காலத்தில் பிணி வந்தால் முன்சொன்னதுபோல் கணபதி பூசையும் கும்ப பூசையும் செய்து வேள்வி நிலைகள் நான்கு வைத்து ஆல், அரசு, அத்தி, இத்தி முன்னை, வன்னி முதலிய சமித்துக்களிட்டு ஆவின்நெய், தேங்காய்நெய், இலுப்பை நெய் மூன்றும் கூட்டி தருப்பை நுனியால் அவி சொரிந்து வேள்வியாற்றி, வேள்ளி நிலை எரியும்போது நவதானியமும் நெல் பொரியும் ஆகுதி செய்து"ஓம்ரீயும் கிலியும் ஐயும் சவ்வும் ஸ்ரீயும் ரீயும் நசிமசி" என்ற மந்திரம் 10,000 உருவு வழிபட்டு தம்பனம், மோகனம், பேதனம், வித்வேஷணம் ஆகிய சக்கரங்கள் நான்கையும் ஓம குண்டத்தின் முன்வைத்து, மேற்படி சாம்பல் கலந்த தண்ணீரால் பிணியாளனை முழுக்காட்டிப் பின் மண்டலமும் வழிபட்டு எல்லாத்தகடுகளையும் ஒன்றாகக் குலிசமாடி நோயாளிக்குக் கட்டத் தீரும்.

## 5. மரண கால சாந்தி

முன் கூறியதுபோல் கணபதி பூசை செய்க. எட்டு ஓம குண்டங்கள் வைத்து எட்டு ஓம குண்டங்கள் எதிரிலும் அட்டகன்மத் தகடுகள் எட்டையும் வைத்து, சக்கரங்களுக்குரிய மந்திரங்கள் (பஞ்சாட்சரத்தை அவ்வத் தொழிற்படி மாற்றி உச்சரிக்கும் முறை - அட்டகன்மப் படலத்தில் காண்க) 16,000 உருவு வழிபட்டு அரசு, வன்னி, நாயுருவி, அத்தி, கருங்காலி, ஆல், அருகு முதலிய சமித்துக்கள் இட்டு எருமை, செம்மறி ஆடு, இவற்றின் நெய், தேங்காய் நெய், புங்கன், புன்னை இவற்றைக் கலந்து வேள்வி வளர்த்தி அதில் நெற்பொரி நவதானியமும் இட்டு ஒவ்வொரு கலசத்திற்கும் 16,000 எண் வீதம் அவ்வவ்வற்றிற்குரிய பஞ்சாக்கரத்தை எட்டுக்கும் மொத்தம் 1,28,000 முறை வழிபட்டு முன்னர் கூறியபடி சாம்பலைக் கலசநீரில் கரைத்து பிணியாளனை முழுக்காட்டவும், இதில் பிணியாளனுக்கு குளிசம் கிடையாது.

# 14. பீடை நிவாரணப் படலம் - 2ம் பகுதி

## சாந்திப் பொது விதி

184 முடிக்கவே சாந்தியது வுரைக்கக் கேளும்
உற்றதொரு நோயனைத்தும் விலகு தற்கு
தடிக்கவே சாந்திசெய்யத் தீரு மங்கே
சண்டாள பீடையது நீங்கா தாகில்
நடிக்கவே பாறையினிற் பாசி பற்றி
நாட்டிடல் போல் சுருங்கியது தேகம் நொந்து
துடிக்கவே நோய்மிருந்த கன்ம பீடை
துய்யவே வூணதற்குச் சொல்லக் கேளே.

(இ-ள்) முடிக்கும் காரியங்கட்குச் சாந்தியானது வுரைக்கக் கேட்பாயாக. அதாவது யாதொரு நோய்கட்கும் விலகும் படியான சாந்தி செய்வாராகில் அந்நோய் நீங்கிவிடும். மீறியும் அச்சண்டாளப் பீடையானது நீங்காவிடின் அது பாறைமீது பாசி பற்றியவாறு போலச் சுருங்கி அத்தேகம் நோக்காடாகித் துடிக்கும் படியான நோய் அதிகரித்த கன்மபீடை ஊண் பட்சிக்குச் சொல்லக் கேட்பாய் என்றவாறு.

## ஊண் காலப் பிணிக்குச் சாந்தி

185 சொல்லவூண் பட்சியினால் வரும் நோய் தீரச்
சுத்தமாய்க் கணபதியை நிறுத்தி வைத்து
அல்லலர்ந்த வெண்மலரா லர்ச்சித் தேதான்
அங்கவுப சாரமுட னடி வணங்கி
வெல்ல (ஓம்றீம்ஹறிங் ரீம்சங் உங்ஜயும்)
மென (கிலீம்கணபதி சர்வகார்ய)
மல்றவே (மசிநசி) யெனவுமோத
வாயிரத்தெட் டுருவுதான் செபித்தி டாயே.

(இ-ள்) ஊண் பட்சியினால் வரும்நோய் தீருவதற்குச் சாந்தியாவாது: சுத்தமுள்ளவிடத்தில் ஓர் கணபதியை நிறுத்தி அதற்கு வெள்ளைப் புஷ்பங்களால் அருச்சனை புரிந்து சோட சோபசாரமுடன் பிரார்த்தித்து அடிதொழுது(ஐம் றீம் ஹறிங் ரீம். சங் உங் ஐயும் கிலீம் கணபதி சர்வ சாய மசி நசி) என்று 1008 உரு செபித்து மூன்று நாள் இவ்வாறு செய்துவரத் தீரும் என்றவாறு

186. செபிக்கவே யதன்பின்பு கும்பம் வைத்துச்
சேர்படிநெல் பரப்பியறு கோணந் தன்னில்
லிபிக்ககா ரணபஞ்சாட் சரமுங் கூட்டி
நவில்காரிய பஞ்சாட் சரமுங் கூட்டி
தபிக்கவச் சக்கரத்திற் சூல மிட்டு
தான் ஓம் அம் சிங்கி வாவென் றேற்றி
செபிக்கவே கும்பத்தில் சலம் நிரைத்து
தண்ணீர் மேல் மாவிலையைத் தங்கவையே.

(இ-ள்) செபித்தபின் ஓர் கும்பம் வைத்து ஒருபடி நெல் பரப்பி அதில் அறுகோண மிட்டுக் காரண பஞ்சாட்சரங் கீறி பின்னும் காரிய பஞ்சாட்சரமுஞ் சேர்த்து அச்சக்கரத்திற் சூலங்களிட்டு (ஓம் அம் உம் சிவ சிவ) என்று மாவிலையை அக்கும்பத்துள் சொருகி வைத்துத் தண்ணீரில் நிற்கும் படிச் செய்வாய் என்றவாறு.

187. தங்கவே யதன்மேலும் தேங்காய் வைத்துச்
சார்பாக நூல் சுற்றி யாடை சாத்தி
அங்ஙனமே கும்பத்தின் முன்னே யப்பா
அடைவாக வஸ்துசுற்றி யும் அமைத்து
இங்கிதமாய்ப் பூசைவர்க்க மிகப்ப டைத்து
இயற்றவே (ஓம் ஐயும் கிலியும் சௌவும்)
பொங்கமா யுருத்தவே (அங் உங்) கென்று
புகல்வர்சர்வபீடை மசிநசி யென்றோதே.

(இ-ள்) அம்மாவிலையின்மேல் ஒரு தேங்காயை வைத்து அதற்கு நூல்சுற்றி ஆடை சாத்தி அக்கும்பத்தின் முன்னே வஸ்து சுற்றி வடை பாயசம் பரமான்னம் பலகார வர்க்க முதலியதை வைத்து (ஓம் ஐயுங்கிலியும் சௌவும் அங்உங் சர்வபீடை மசிநசி) யென்று செபித்துத் தியானஞ் செய்யவும் என்றவாறு.

188. ஓதவே யாயிரத்தெட டுருவும் போட்டு
ஓமகுண்டந் தனித்தனியே யிரண்டு வெட்டி
போதவே சமித்துவகை வன்னி மூன்னாளில்
புகழரசதா பனம்நெல்லு தீவளர்த்தி
நீதமா யாவினெய் யாகுதிகள் செய்து
நேராகக் குண்டத்திற் குபசாரஞ் செய
தோதமா யட்சரத்தைச் சொல்லக் கேளு
சுகுணமாய் முதலூரத்தைதீ துருவம்போடே.

*(இ-ள்)* பிற்கூறிய மந்திரத்தை *1008* உரு செபித்து ஓமகுண்டம் இரண்டு வெட்டித் தீவளர்த்தி அதற்கு சமித்துவகை வன்னி முள்ளி தர்ப்பை தானியமிவை களைச் சொரிந்து நெய்யினாலாகுதி செய்து மேற்படி குண்டத்திற்குபசாரஞ் செய்து முதலிற் செப்பிய மந்திரத்தைச் செபிக்கவும் என்றவாறு.

***189.*** **கேளப்பா வுருவையா யிரமு மானால்**
**கெணிதமுடன் பொங்கலிட்டுப் பலியுந் தந்து**
**ஆளப்பா யெல்லாமக் குடத்திற் போட்டு**
**அந்நீரை யவன்சிரசில் விடுத்துப் பின்பு**
**வீளப்பா சிவ சிவா யெனப் பணிந்து**
**மிளவு மபிஷேகஞ் செய்யு மப்பால்**
**வாளப்பா நாலதுதான் பதினொன்றானால்**
**வாங்கிவிடும் பீடையெல்லாமாறிப் போமே.**

*(இ-ள்)* முதல் மந்திரம் *5000*-ம் உருச்செபித்து அதன் பின் பொங்கலிட்டுப் பலி தந்து அதையெல்லாம் அக்குடத்திற் போட்டு அந்ததக் கலசத்தை அந்நோயாளி சிரசில் விடுத்து அங்கு சிவசிவாயெனப் பணிந்து மீண்டும் அபிஷேக முதலியதைச் செய்து அப்பால் பதினொருநாள் இவ்வாறே முடித்துவர அப்பீடை யனைத்தும் மாறி தேகம் சௌக்கியமாய்ச் சுகுணப்படுவர் என்றவாறு.

***190.*** **மாறிவிடும் வெள்ளியினாற் றகடு செய்து**
**மதிலுச்சா டனவெழுத்தை மாறி நீயும்**
**கோரியே வாலையென்ற தேவி பூசை**
**குறையவே தப்பாம லியாவும் தீர்த்து**
**தேறிடவு முன்றகட்டை யெதிரில் வைத்துச்**
**செபியுச்சாட் டனமுருவா யிரத்தெட் டானால்**
**மீரிடா தங்குதித்த பீடை நீங்கும்**
**மெத்தவுப சாரஞ்செய் கன்னிகைக்கே.**

*(இ-ள்)* ஓர் தகடு வெள்ளியினாற் செய்து அதில் உச்சாட்டன வெழுத்தை மாறியெழுதி வாலைக்குத் தேவி பூசை யாவும் வைத்து வகை தப்பா லியாவுஞ் செய்து அத்தகட்டைத் தேவிக்கு முன் வைத்து உச்சாட்டன வெழுத்தை *1008* உருச் செபித்துத் தீர்க்க அங்குதித்த பீடையானவை யனைத்தும் நீங்கிவிடும். அதன் பின்பு ஓர் கன்னிகைக்கு மனம் புளகிக்க உபசாரஞ் செய்யக் கடவாய் என்றவாறு.

## நடை காலப் பிணிக்குச் சாந்தி

191. கன்னி நடை பட்சியினில் வரும் நோய்தீரக்
கணபதியைத் தாபித்துக் குண்டங் கொண்டு
முன்னமே கும்பம்வைத்துச் சமித்து தானும்
ஒதரசு வன்னியுட னுருவி தர்ப்பை
இன்னமுங் கருங்காலி பூலா விளாவும்
இதின் சுப்பல் நெற்பொரியுங் கடலை மொச்சை
சொன்னதுதா னொன்றாகக் கலந்து கொண்டு
சூட்டுமே குண்டத்திற் புகவுந் தானே.

(இ-ள்) நடைப் பட்சியினால் வரும் நோய் தீர்வதற்குச் சாந்தியாவது, ஓர் ஸ்தானத்தில் கணபதியைத் தாபிதஞ் செய்து இரண்டு குண்டம் வைத்து அதில் கும்பம் வைத்து சமித்துகளான அரசு வன்னி உருவி தர்ப்பை கருங்காலி பலாவிளாவின் சுப்பல் நெற்பொரி கடலை மொச்சை யாவு மொன்றாய்க் கலந்து அக்குண்டங்களிற் போடவும் என்றவாறு.

192. புகவதி லாவினெய்கி லுப்பை நெய்யும்
புனிதமா யிரண்டொன்றாய்க் கலந்து கொண்டு
அகமகிழ வெக்கியத்தா குதிகள் செய்யு
அங்ஙனமே யச்சரந்தைச் சொல்லக் கேளு
மகிழவே ஓம் றீம் ரீங் அங் உங் ஐயும்
வதிற் (கிலியுங் கணபதி சர்வ பீடை)
நேர் பொங்கல் பலியுட னுபசரித்தே
நெகிழ மசிநசி பதினாயிரஞ் செபித்து

(இ-ள்) அதில் ஆவினெய், இலுப்பை நெய் இரண்டுமொன்றாய்க் கலந்து கொண்டு அவ்வாக்கியத்தில் ஆகுதி செய்யவும். அதற்கட்சரத்தை வுரைக்குங்கால் (ஓம் றீம் ரீங் அங் உங் ஐயுங் கிலீயும் கணபதி சர்வபீடை மசி நசி) என்று 10,000 உருவு செபித்துப் பொங்கலிட்டு பலி முதலியதுங் கொடுத்து உபசரித்துப் பூசித்திடவும் என்றவாறு.

193. சரிக்கவே குண்டத்திற் சாம்ப லெல்லாம்
தான்வாரிக் கும்பத்திற் போட்டு விட்டு
தரிக்க நீர் குளிப்பாட்டி சிவசி வாவென்
றங்ஙனே சிவன்பர்தந் தெழுது போற்றி
விரிக்கவே சவித்தகடு வடித்துமங்கே
விசித்திரமாய்த் தம்பனத்தை யெழுதி விட்டு
பரிக்கவே நடை பீடை பறம்ப தற்கு
பதினொரு நாள் செய்துவரப் பணித்திடாயே;

அக்குண்டத்தில் சாம்பலெல்லாம் வாரிப்போட்ட பின் அந்நீரை பீடிக்கப்பட்டவர் சிரசில் விட்டுக் குளிப்பாட்டிச் சிவ சிவாவென்று அச்சிவனது பாதத்தைத் தொழுது வணங்கி ஒரு செம்புத் தகட்டில் நல்ல வேளை பார்த்து (வியாதியஸ்தர் அரசு அல்லது ஊண் வேளை) தம்பன சக்கரத்தை வரைந்து அதைப் பூசித்துக் கட்டிவிட நடையின் பீடை விலகும் இப்படிப் பதினொரு நாள் செய்வாய்.

### அரசு காலப் பிணிக்குச் சாந்தி

194. பணிக்கரசு பட்சியினில் வரும்நோய் தீர
பாங்காகக் கணபதியை வைத்துப் போற்றி
அணியவே கும்பத்தை வைத்து முன்னம்
அதன்முகமாய் வாலைதனைப் பூசித் தேதான்
துணிகரமாய்க் குண்டமது இரண்டு வெட்டி
சொல்லவும் சமித்துவகை சுப்ப லம்மா
தணியவும ரசுசந்தனமும் ஆகும்
தன்மையாம் நெற்பொறிகா ராவின் நெய்யே.

அரசு பட்சியினால் வரும் நோய் தீர சாந்தியாவது: ஓரிடத்தில் கணபதியை நிறுத்தி வைத்து எதிரில் கும்பத்தைத் தாபிதம் செய்து அதன் எதிரில் அமர்ந்து வாலைந் தாயைப் பூசிக்கவேண்டும். அதன்பின் இரண்டு குண்டம் வெட்டி சமித்து வகை சுப்பல்களில் அரசு சந்தன சமித்து நெற்பொரியோடு காராம்பசுவின் நெய் சொரிந்து ஆகுதி செய்ய வேண்டும்.

195. நெய்யதனில் ஆகுதியும் செய்த பின்பு
நேராக உருவைஐ யாயிரஞ் செபித்து
வையதினில் பலிகொடுத்துத் தூபம் காட்டி
வாரியஅச் சாம்பலெல்லாம் கும்பத் தேற்றி
உய்யவும் நோயாளி சிரசில் விட்டு
உருக்கமாய் சிவன்பதத்தைத் தொழுது போற்றில்
எய்யவும் வதைக்கின்ற நோய்கள் தீரும்
இயல்பாக சுவர்ணதகு டடித்திடாயே.

முற்கூறிய நெய்யால் ஆகுதி செய்தபின் முன் மந்திரத்தை 5000 உருச் செபித்து பலியும் கொடுத்துத் தூப தீப நைவேத்யம் காட்டி அச்சாம்பலை எல்லாம் அக்கும்பத்தில் போட்டு அந்நோயாளியின் சிரசில் விட்டுச் சிவனது பாதத்தைத் தொழுதுபோற்றி வணங்க வதைசெய்யும் நோயானது தீரும். அதன்பின் சுவர்ணத் தகடு கட்டி விடுவாயாக என்பதாம்.

196 அடிதொழுது மசிஎழுத்தை வரைந்து நீயும்
அன்பாக ஏழுநாள் பூசித்தே தான்
முடித்திடவும் பிடையெல்லாம் விலகும் பாரு
முக்கியமாய் சிவன்கிருபை இருக்க வேண்டும்
நடித்திடவும் அவர்பதத்தைப் பணிந்து போற்றி
நாளுமே வீற்றிருப்பர் நன்மை யாக
நடுத்திடுமப் பிடையங்கே நீங்கு மங்கே
சாற்றினார் போகருமே சார்பாய் தானே.

அந்த சுவர்ணத் தகட்டில் 'மசி' என்னும் எழுத்தை எழுதி அன்புடன் முறையாக 7 நாள் பூசித்து முடித்த உடனே பற்றி இருந்த பீடை எல்லாம் விலகிப் போகும். சுகசௌக்யம் ஏற்படும். சிவகிருபை இருந்தால் உலகில் மேன்மையான வாழ்வு கிடைக்கும். மற்றவை வெளிப்படை.

## துயில் காலப் பிணிக்குச் சாந்தி

197 சாருதுயில் பட்சியினில் வரும்நோய் தீர
சாந்தியுரைத் திடக்கேளைங் கரனை வைத்து
நேரில் அங்கே வைப்பதெல்லாம் வைத்து மாங்கே
ஓரிடமாய் ஓமகுண்டம் மழுவும் வெட்டி
ஒக்கவும் சமித்துவகை உரைக்கக் கேட்டுத்
தேரிடவும் அரசுவத்தி இத்தி வன்னி
திகழ்புன்னை பலாஉருவி சுள்ளி யாமே.

துயில் பட்சியினால் வரும் நோய் தீர சாந்தியாவது: ஓரறையில் ஐங்கரனைத் தாபிதம் செய்து அதற்குரிய பூசை நைவேத்யம் இவை வைத்து அதன் முன் வாலைத் தாயை நிறுத்தி முகமாய் நேர்பூசை செய்ய ஓமகுண்டமும் வெட்டி அரசு, பலா, அத்தி, இத்தி, வன்னி, புன்னை ஆகிய சுள்ளிகளால்.

198 ஆமதுவும் நவதான்யம் பொரியும் கூட்டி
நன்மையாம் ஆவின்நெய் இலுப்பை நெய்யும்
நேமமுடன் தேங்காயும் கலந்து மூன்றும்
நெருப்பில்விடுந் தர்ப்பையினால் உருவா மட்டும்
நாமதுவும் ''ஓம் ரீங் கிலியும் ஐயும் சௌவும்''
நாட்டிடு ''ஹரீம் அங்உங் சிவாய'' வென்று
நாமதில் ''சுவர் பிடை மசிநசி'' யெனவும்
தானெழுதி பதினாயிர முருவும் ஏற்றே.

அச்சுள்ளிகளோடு நவதானியமும் நெற்பொரியும் கூட்டி ஆவின்நெய் இலுப்பை நெய் தேங்காய் எண்ணெய் மூன்றும் கலந்து நெருப்பில் தர்ப்பையினால் உருவுபோடு மளவும் ஆகுதி செய்து வரவும். இதற்கு மந்திரம் ஓம் ரீங் கிலியும் ஐயும் சௌவும் ரீம் ஹரீம் அய் உங் சிவாயா சர்வபீடை "நசி மசி" என்று 7000 உரு ஜபம் செய்து வரவும்.

190 ஏற்றுமே குண்டமொன்றில் தம்ப னத்தால்
ஈதன்றி மற்றொன்றில் பேத னத்தால்
போற்றியே வித்துவே ஷணத்தால் மூன்றில்
பொல்லாது நான்கிலிடு பேத னந்தான்
சாற்றியே பலியுடனே தூபம் காட்டித்
தவமான குண்டத்தில் சாம்பல் வாரி
நாற்றிசையில் கும்பத்தில் போட்டு மூழ்க
நற்சிவனுக் கபிஷேகம் நாட்டிச் செய்யே.

ஒரு குண்டத்தில் தம்பன மந்திரமும் மற்றொரு குண்டத்தில் பேதன மந்திரமும் வேறொரு குண்டத்தில் வித்துவேஷண மந்திரமும் நாலாவது குண்டத்தில் மீண்டும் பேதன மந்திரமும் செபித்தும் தூப தீபம் நைவேத்தியம் தந்து அக்குண்டங்களின் சாம்பலெல்லாம் வாரிக் கும்பத்தில் போட்டு அந் நோயாளியைக் குளிப்பாட்டிச் சிவனுக்கு அபிஷேக அர்ச்சனைகள் செய்து தொழுது போற்றவும்.

200 நாட்டியே ரவிமதியும் சேர்த்தி டித்து
நற்றகட்டில் கீறுமுச் சாட னத்தைத்
தாட்டியாய்ப் பிணியாளன் தனக்குக் கட்ட
தாண்டிவிடும் தோஷமெல்லாம் பிடை நீங்கும்
பூட்டிடவும் கன்னிகையை உபச ரித்து
புகழ்பெரிய மறையவருக் குபசாரம் செய்து
கேட்டிடவும் போகர்சொன்ன வாறு போலக்
கெணிதமாய் மண்டலந்தான் இயற்று வாயே.

வெள்ளியும் (ரவி) செம்பும் (மதி) ஒன்றாகச் சேர்த்துருக்கித் தகடடித்து உச்சாடன சக்கரத்தை எழுதி உருவேற்றி நோயாளிக்குக் கட்டவும். அவனது பீடை தோஷம் யாவும் ஒழிந்து போம். அங்கு ஒரு கன்னிகைக்கு உபசாரம் செய்வதோடு பிராமணருக்கும் உபசாரம் பண்ணி வரவும் எல்லாம் சரியாகும்.

## மரண கால பிணிக்கு சாந்தி

201. இயல்மரண பட்சியினில் வரும் நோய் தீர
இதுவருத்தம் மாத்தசிவன் கிருபை வேண்டும்
செயலாகக் கணபதியை நிறுத்திப் போற்றி
சேரவே வாலையிடம் குடும்பம் வைத்து
மயலாக ஓமகுண்டம் எட்டும் போட்டு
வாகாகச் சமித்துவகைச் சொல்லக் கேளு
சுயமாக வத்தி இத்தி யுருவி வன்னி
தொடர்கருங் காலிமாவின் சுப்பல் சேரே. 201

மரணப்பட்சியினால் வரும் நோய் தீர வேண்டுமானால் சிவன் கிருபை அதிகம் வேண்டும். இவன் போன சென்மத்தில் அதிகம் புண்ணியம் செய்திருக்க வேண்டும்.

(இது தீருவது வெகு கடினமானது ஆகையால்) ஓரிடத்தில் கணபதியைத் தாபிதம் பண்ணி தொழுது போற்றி அதனருகில் வாலைத்தாயைப் போற்றி அவள் எதிரில் கும்பம் வைத்து எட்டு ஓம குண்டம் வெட்டி அதற்கு ஹோம சமித்து வகை அதாவது அரசு, அத்தி, இத்தி, நாயுருவி, வன்னி, கருங்காலி, மா முதலிய சுப்பல்களைச் சேர்த்திடுவாயாக.

202. சேர்த்திடவே நெல்லிசுப்பல் பூவரசன் சுப்பல்
செய்வாக நெற்பொரியும் நவதான் யங்கள்
ஏர்க்கவே செம்மறி நெல் மேதை நெய்யும்
இலுப்பைநெய் புன்னை புங்கன் வேம்பின் நெய்யும்
தீர்க்கவே வேசரிநெய் பன்றி நெய்யும்
திரமாக எக்கிமத்திற் செலுத்திப் பின்பு
ஆர்க்கவே கும்பமெட்டு கன்மம் எட்டும்
ஐம்பதினா யிரம்செபமும் உருவும் போடே.

முன் சொன்ன சமித்துக்களுடன் நெல்லி, பூவரசன் சமித்து நெற்பொரி, நவதான்யம் சேர்த்து செம்மறியாட்டு நெய், எருமை நெய், இலுப்பை நெய், புன்னை நெய், புங்கம் நெய், கழுதை நெய், பன்றி நெய் ஆக அவ்வெட்டு வாக்கியங்களில் ஓமம் பண்ணி கன்மங்கள் எட்டாததால் ஐம்பதி னாயிரம் உரு செபம் செய்யவும்.

குறிப்பு: துயில், மரண கால நோய்களுக்கு அவற்றின் கடுமைக்கேற்ப அதிக சமித்து முதலியவை, உருவேற்றும் செபமும் அதிகக் கணக்கிலும், குண்டங்களும் எட்டாகக் கூறப்பட்டது காண்க.

203. உருவாகப் பலியிட்டுப் பொங்கலும் தந்து
உள்ளெரிந்த சாம்பலதைக் கும்பத் திட்டு
தருவாக நீ நின்று சிவனடி போற்றித்
தண்ணீரை அவன்சிரசில் தளரவிட்டு
மருவாய் ஓர் மண்டலமிவ் வாறு செய்ய
மாறிவிடும் தோஷமெலாம் பறந்து போகும்
குருவாகப் போகர் சொன்ன படியே செய்யக்
குணமாகும் தோஷமெலாம் குறைவராதே.

அதன்பின் பொங்கலிட்டு பலிஇட்டு அதில் எரிந்த சாம்பலை வாரிக் கும்பத்திற் போட்டு சிவனைத் தியானித்து அவன் சிரசில் கும்பத்தின் நீரைத் தெளித்து இவ்வாறு ஒரு மண்டலம் செய்ய எல்லா தோஷங்களும் அற்று மாறிவிடும். குருமூர்த்தமாய் எழுந்தருளி இருக்கும் போகர் சொன்னபடிச் செய்ய சர்வ பீடை நோய்களும் நீங்கும் என்றபடி.

# 15. மூலிகைப் படலம்

## தோற்றுவாய்

மூலிகைகள் மருத்துவப் பண்புள்ள பச்சிலை முதலியவை. இவற்றுள் எவ்வளவோ அரிய மருத்துவப் பண்பும் தெய்வீகத் தன்மையும் உடையவை உள்ளன. உயி காத்தல், செம்பு பொன்னாக்கல், தீராதநோய் தீர்த்தல் போன்றவை வல்ல மூலிகைகளும் உண்டு. இவற்றின் அரிய நுணுக்கங்கள் அனைத்தும் பெற்று விளங்கியவர்கள் நம் தமிழகச் சித்தர்களே. எலும்பு முறிவைச் சேர்த்தல், கிழவனையும் இளமையாக்குதல் போன்றவையும் மூலிகையால் செய்யத்தக்கவையே. மூலிகையின் தாவர அணுக்கள் உயர்சக்தி வாய்ந்தவையே. ஆப்பிரிக்கா முதலிய நாடுகளில் மனிதன் விலங்கினம் இவற்றையும் தன் அகன்ற இலைகளால் உள்ளடக்கிப் பிழிந்து சத்தை உட்கொண்டுவிடும் அரக்க மூலிகை வகைகளும் உண்டு. எனவே மூலிகைகளில் உயிர்ச்சத்து அணுக்களிலும் ஐந்து பூதங்களின் பரிணாமம் பஞ்சீகரணம் ஏற்படுகிறது. சில மூலிகைகளில் உயிரோட்டம் மிக உயர்ந்த அளவில் இருப்பதால் மேல் நிலையில் அதாவது தெய்வீக நிலையிலும் இயங்கி நிற்கும் தன்மை ஏற்படுகிறது. இம் மூலிகையின் பஞ்சபூத பரிமாணங்களின் தன்மைக்கேற்ப பஞ்சபக்ஷிகளின் பூதயியல் படி ஒவ்வொன்றுக்கும் சில பல மூலிகைகள் ஒத்து வருவன. எனவே அம்மூலிகையின் உயிரோட்டத் தன்மையால் முன்னர் சொன்ன அட்டகன்ம மந்திரவகையையும் இணைத்து ஏவல் கொள்ளும் மரபு சித்தர்களிடையே நல்லது, கெட்டது இரண்டிற்கும் ஆட்படுத்தும் மூலிகைகள் வழக்கில் உள்ளன. தன் பக்ஷிக்குரிய மூலிகை அவற்றை அட்டகன்மத்துடன் இணைத்து ஆக்கம் அல்லது அழிவு ஆக இரு செயல்களுக்கும் பயன்படுத்தி வெற்றி கண்டு விளங்கினர் சித்தர்கள். இவ்வகையில் தன்பக்ஷிக்குரிய மூலிகையை எப்படி வேர்நீக்கி எடுக்க வேண்டும், எப்படி எப்படி அட்டகன்மத்திற்குப் பயன்படுத்த வேண்டும் என்பது உள்ளிட்ட பலவும் இப்படலத்திற் கூறப்பட்டுள்ளன.

"பஞ்சபக்ஷி பலத்திரட்டு" சுவடி எண் 868-ல் இது பரக்க பலவகையிலும் கொடுக்கப்பட்டுள்ளது. அதன் அடிப்படையிலும், மற்ற நூல்களின் அடிப்படையிலும், இவை இங்கு சுருக்கமாகவே எழுதப்படுகிறது. முன்சொன்னதுபோல் இதுஉபதேச முறைப்படிப் பெறவேண்டுதலானும் பிறருக்கு ஊறு செய்வார் பயன்படுத்த நேரு மாதலானும் இதுசுருக்கமாக எழுதப்படுகிறது.

## 1. பூர்வபட்சத்திற்கு

பக்ஷிகளின் மூலிகைகள் வருமாறு:

வல்லூறுக்கு அரைக்கீரை, ஆந்தைக்கு சிறுகீரை, காகத்திற்குச் சாரணை, கோழிக்கு தகரை, மயிலுக்கு நாங்கிலியாம்.

## 2. அமரபக்ஷம் பக்ஷி மூலிகை

வல்லூறுக்கு - நாய்க்கடுகு, ஆந்தைக்கு - அறைக்கீறை, காகம் - அவுரி, கோழிக்குக் - குப்பைமேனி, மயிலுக்குத் -தைவேளையுமாம்.

## 3. மூலிகை வேர் நீக்கும் (பிடுங்கும்) முறையும் பயன்படுத்தலும்

தன்பக்ஷிக்குரிய மூலிகையின் வேரை தன்பக்ஷி அரசு ஊண் வேளைகளில் குறிப்பிட்ட திதி நக்ஷத்திரம் முதலியவற்றில் முறைப்படி நீக்கி மந்திர முறையில் வழிபட்டு வலிமையூட்டித் தங்கம் அல்லது வெள்ளிக் குலிசத்திட்டு வலது புயத்தில் அல்லது தலையில் அணிய, உலக வசியம் முதற்கொண்டு தன் காரியங்கள் எல்லாம் கைகூடும்.

இதுவன்றி மாற்றான் பட்சி துயில், மரணத்தில் இருக்கும் போது தன் பட்சி ஊண் அரசில் இருக்கும் போது மாற்றான் பட்சிக்குரிய மூலிகை வேரை முறைப்படி குறிப்பிட்ட திதி நக்ஷத்திரங்களில் நீக்கி அதற்கேற்ற வகையில் பேதனம், உச்சாடனம், வித்துவேடணம், மாரணம் போன்ற கன்மங்களை உரிய மந்திர வகையில் உருவேற்றி, அந்தந்த கன்மங்களில் சொன்னபடி குறிப்பிட்ட இடங்களில் புதைத்தல் போன்ற காரியங்களால் மாற்றான் அழிவதும் திண்ணம். இவையெல்லாம் மாற்றான் ஊழ் வினை உறுத்து வந்து ஊட்டும்போது சான்றோர் பால் தன்னியல்பாக நிகழ்வன ஆதலின், குறிக்கோள் பழிவாங்கல் பகைமை இவை உள்ளிட்டு செய்யத் தக்கதன்று. இவற்றிற்கு மந்திர முறை முதலியன பஞ்சபக்ஷி பலத்திரட்டில் (சுவடி எண் 868) கூறப்பட்டிருந்தாலும் உலக நன்மை கருதி ஈண்டு எழுதப்படவில்லை. ஆசான் பால் கேட்டுணர்க. இனி பட்சிகளின் தொழில் காலங்களில் வேர் நீக்குதல் முதலியவற்றின் பலனைக் கூறுகின்றோம்.

தன் பக்ஷியின் மூலிகைக்குச் சாபவிமோசனம் செய்ய வேண்டும். மூலிகையை சொல்லிய முறைப்படிப் பிடுங்க வேண்டும்.

தன் பக்ஷியின் மூலிகை என்ன என்பதை அறிந்து அடியிற் கூறிய தொழில் களுக்கு அந்தத் தொழில்களுக்குரிய திக்கில் முகம் நோக்கி நிர்வாணமாக நின்று கொண்டு இதற்குரிய வழிபாடு முதலியவையும் செய்து பிடுங்க வேண்டும்.

## மூலிகைத் தொழில்களுக்கு முகம் நோக்கும் திக்கு

வடக்கு—வித்வேஷணம், மோகனம்
கிழக்கு—வசியம், ஆகிருஷ்ணம் சுபம்
தெற்கு—பேதனம், மாரணம்
மேற்கு—உச்சாடனம், தம்பனம் அசுபம்

சுபகாரியங்களுக்கு வில்வ மரம், சிவாலயம், நந்தவனம், ஆற்றோரம் முதலிய இடங்களில் செய்யவும்.

வசியம், ஆகிருடணம் அரசு காலத்திலும் மோகனம், தம்பனம், ஊண் காலத்திலும் செய்ய சித்திக்கும்.

## 5. மூலிகை வேர் பிடுங்கும் காலம்

| | | |
|---|---|---|
| பூர்வபட்சம் | பகல் - ஆகிருடணம், வசியம் | |
| | இரவு - மோகனம், தம்பனம் | |
| அமரபட்சம் | பகல் - உச்சாடனம், வித்வேடனம் | |
| | இரவு - மோகனம், தம்பனம் | |

## 6. ஐந்து தொழில் காலங்களிலும் வேர் பிடுங்குதலின் பலன்

### 1. ஊண்கால வேர் பிடுங்கும் பலன்

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

204. பாரேநீ ஊண்வினாடி பிடுங்கி வைக்கப்
படருமே காரியங்கள் யாவும் நன்மை
ஆரடா சத்துருவும் மித்துரு ஆவான்
அப்பனே சோபனங்கள் சேர்ந்து கூடும்
தூரமடா பீடைகள் விலகிப் போகும்
தப்பாது பணம்சேரும் தனவா னாவான்
தேரடா வேர்பிடுங்கிக் குளிச மாடி
ஒகோகோ இதன்பெருமை உரைக்கொ ணாதே

(இ—ள்) தன் பட்சி ஊண் காலத்தில் தன் மூலிகையை வேர் பிடுங்கி வழிபாடு முதலியவை செய்தால் எல்லாக் காரியங்களும் கை கூடும். பகைவன் நண்பனாகி விடுவான். சுபகாரியங்கள், நல்ல நிகழ்ச்சிகளே மனையில் நடக்கும். துன்பங்கள் ஊழ் வினையால் வரும் பீடைகள் எல்லாம் விலகிப் போகும். தப்பாமல் பணம் சேரும். இவன் பெரும் தனவந்தன் ஆவான் என்பதாம்.

## 2. நடை வேர் பிடுங்கும் பலன்

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

205. ஒண்ணாது நடைவேரில் பிடுங்கி வைக்க
உத்தமனே முடைபடுத்தி வருத்தம் பண்ணும்
எண்ணாத எண்ணிமனம் இடறிப் போகும்
என்னவும் சுகமில்லை உள்ள மட்டும்
தன்னாலே விதியமைப்பு உள்ள மட்டும்
தானனு பவிக்கணுமே கதிவே றில்லை
விண்ணான சித்தர்களும் திருப்பல் தேரார்
வேறெவர்தான் மேதினியில் திருப்பு வாரே

(இ-ள்) நடை காலத்தில் தன்பட்சி வேர் பிடுங்கினால் கர்த்தாவுக்கு முடை ஏற்படும். இடர் உண்டாகும். துன்பம் சேரும். எண்ணாத எண்ணம் எல்லாம் எண்ணி மனம் வருந்தும், உயிருள்ள மட்டும் சிறிதளவு கூட சுக மிராது. தனக்கு விதித்த ஆயுட் காலம் மட்டும் தான் இத்துன்பத்தை அனுபவிக்க வேண்டுமே அன்றி வேறு வழி இல்லை. எல்லாம் வல்ல தவச் சான்றோர்களான சித்தர்களாலும் கூட இந்த கெட்ட பலனை மாற்ற முடியாது. உலகில் வேறு யாரும் இதை நிவர்த்தி செய்ய முடியாது என்பதாம்.

குறிப்பு- தன் அரசு காலத்தில் மாற்றான் நடை காலத்தில் வேர்பிடுங்கி அவனைக் குறித்து அட்ட கன்மம் செய்ய இப்பலன் மாற்றானுக்கும் சேரும். இது அசுபச் செயல்கள் எல்லாவற்றிற்கும் பொருந்தும் என்க.

## 3 அரசு கால வேர் பிடுங்கும் பலன்

### எண்சீராசிரிய விருத்தம்

206. பாரே நீ அரசுவேர் பிடுங்கி வைக்கப்
பசுமையுள்ள தகடுதனில் பொத்திக் கொண்டு
சேரேநீ உன்சிரத்தில் கட்டும் போது
சகலவசம் உனைவெல்ல யாரும் இல்லை
கோரேநீ இவ்வுலகில் சத்ரு இல்லை
கொங்கணவர் இவ்வாறே மெச்சிக் கொண்டார்
காரேநீ எறும்புமுதல் யானை மட்டும்
தலைகள்எல்லாம் உன் வசமாம் பெரியார் கூற்றே.

(இ-ள்) தன்பட்சி அரசு காலத்தில் தன் பட்சிக்குரிய மூலிகையை வேர் பிடுங்கிக் குளிச மாடித்தரித்தால் உன்னை வெல்ல யாராலும் முடியாது. எல்லாம் வசியம் ஆகும். உனக்கு சத்துருக்கள் யாரும் இருக்க மாட்டார்கள். கொங்கணவா இதற்கு மிகப்பலன் கூறியுள்ளார். எறும்பு முதல் யானைவரை எல்லாம் உயிரினங் களும் உனக்கு வசமாகிக் கும்பிடும் என்று பெரியோர் கூறுவர்.

## 4. துயில் காலத்தில் வேர் பிடுங்கும் பலன்

தன்பட்சி உறக்கக் காலத்தில் தன்பட்சிக்குரிய மூலிகையை வேர்பிடுங்கி முறைப்படிச் செய்தால் ஏற்படும் பலன்.

207. பாரேநீ உறங்கினவேர் பிடுங்கி வைக்கப்
பகையான எதிரியுனை வெல்வ தில்லை
நேரப்பா எதிர்த்தவரை நீ செயிப்பாய்
நேமித்த செயல்நொடியில் வெல்ல லாகும்
கூரப்பா இவ்வேளை கொடுமை எண்ணேல்
கூறவே றில்லைகொலை தோடம் நேரும்
காரப்பா மனிதர்மேல் பிரிவு செய்து
தன்மையுள்ள தொழில் வேலை ஆய்ந்து பாரே.

((இ-ள்) (சாதாரணமாக உறக்க காலத்திற்குக் கெட்ட பலன் சொல்ல வேண்டும். ஆனால் இங்கு சத்துரு வெல்லவே முக்கியமாகக் கூறப்பட்டுள்ளது. இதனால் மாற்றான் பட்சியின் துயில் வேளையில் தன்பட்சி வலுத்தபோது செய்த வினையால் ஏற்படும் பலனை இது கூறுவதாகக் கொள்ள வேண்டும்.)

(எதிரி) உறக்க காலத்தில் (அவன்) பட்சிக்குரிய வேர் பிடுங்கியினால் உன்னை எந்தப் பகைவராலும் வெல்ல முடியாது. உன்னை யாரும் எதிர்க்க மாட்டார்கள். நீயே ஜெயிப்பாய். நீ நியமித்த செயலெல்லாம் நொடியில் முற்றுப் பெறும் நீ இவ் வேளையில் எதிரியைக் குறித்து மாரணம் போன்ற தீய செயல்கள் செய்தால் கொலை தோஷம் வரையும் ஏற்படும். ஆகையால் இம்மாதிரித் தீயசெயல்களெல்லாம் செய்யாது மனிதர்கள் மேல் அன்பும் பரிவும் வைத்து இந்தத் தொழில்களைப் பார்த்துப் பொறுப்புடன் மேற்கொள்ள வேண்டும்.

## 5. மரண வேர் பிடுங்கும் பலன்

### எண்சீராசிரிய விருத்தம்

208. வேளைஎன்ன மரணவேர் பிடுங்கி வைக்க
வெல்வதுநீ எதிரியும்தான் வெல்லப் போமோ
தானென்ற சத்துருவும் இல்லை இல்லை
சண்டாள நேரமிது சத்ரு வெல்லான்
பாளைஎன்ற உறவுபொருள் உயிரும் சேதம்
பண்பில்லாக் கொடுமையிது ஆகு மப்பா
காளைஎன்ற எருதின் மேல் ஏறும்ஈசன்
கடாக்ஷித்துத் திருப்புவதும் அரிதா கும்மே

(இள்) எதிராளி பட்சி மரண வேளையில் அவன் வேர் பிடுங்கிப் பயன்படுத்த நீ வெல்லுவாய். உனக்குச் சத்துருவே இல்லை. ஆனால் இந்தத் தொழில் நேரம்

மிகவும் கொடுமையான நேரமாகும். எதிரியின் உறவு, வளம், உயிர் எல்லாம் சேதமாகும். இந்த மரணச் செயல் செய்துவிட்டால் எருதேறும் ஈசனால் கூட இதன் கொடுமையைத் திருப்ப முடியாது. காப்பாற்ற முடியாது என்க.

## 6. மூலிகையைச் சாப விமோசனம் செய்து பிடுங்கும் வகை முதலியன

### விகற்பித்து வந்த எண்சீர் ஆசிரிய விருத்தம்

209. பாரே நீ மூலிகையைக் கண்டிடத்தைச் சுத்திபண்ணி
பகருவாய் ஓம்மூலி நாடெங்கும் தேடி
காடெங்கும் தேடிக் கண்டு கொண்டேன்
சேரே நீயுமொரு சத்தியும் நானொரு
சிவனுமாய் இருக்கச் சிவா என்று
செலுத்துவாய் உடுபதியைச் சாபம் நசி மசி யென்றும்
கோரேநீ கன்னிநூல் காப்புக் கட்டி
கொடுத்திடுவாய் தூப தீபம் வந்து காட்டி
வேரே நீ பிடுங்குமுனம் அவனக் கரத்தையும்
காலடிமண் கருத்தோடொ ராயிரத் தெட்டும்
ஓதி வேர் பிடுங்கு வாயே!

(குறிப்பு): இச்செய்யுள் யாப்பு மீறி வந்துள்ளது. இக்காலத்து உரைநடைக் கவிதை ஏற்கும்போது சித்தர்கள் வாக்யப் பொருள் சிறப்புக் கருதி உள்ளவாறே தரப்பட்டது.

(இ-ள்) நீ ஒரு மூலிகையைப் பிடுங்க வேண்டுமானால் அது இருக்கும் இடத்தைத் தேடிக் கண்டு, அந்த இடத்தைச் சுத்தம் பண்ண வேணும். அம் மூலிகையை முன்னிலைப்படுத்தி அஃறிணையாயினும் உயிரோட்டம் உள்ள தாகலான் "நான் உன்னை நாடு காடு எல்லாம் தேடிக் கண்டுபிடித்துள்ளேன். ஓம் மூலி சாபம் நசிமசி" என்று சாப நிவர்த்தி மந்திரத்தை உருவேற்றிக் கொண்டு, மூலிகையை முன்னிலைப்படுத்தி "நானும் சிவ தத்துவத்தில் அதாவது கடவுள் நிலையில் இருக்கிறேன். நீயும் சிவதத்துவமே" என்று உறுதி கூற வேண்டும். சத்துருவின் காலடி மண் முன்னே எடுத்து வந்து அதனுடன் இணைத்து வேர் பிடுங்க வேண்டும். இது செய்யும் போது உடுபதியாகிய சந்திரகலையில் இடது கையில் சரம் (மூச்சு) நடக்கும்படி வைத்துக்கொள்ள வேண்டும். மூலிகைக்குத் தூப தீபம் காட்டி நீ பிடுங்கு முன் உன் எதிரியின் அக்ஷரத்தையும் (பெயர் முதலெழுத்து) அவன் காலடி மண்ணையும் வைத்துக்கொண்டு (உரிய மந்திரத்தையும், அவன் பெயரையும் இணைத்து ஓதும் முறை உண்டு) ஆயிரத்தெட்டு முறை மந்திரம் ஓதி, அந்த வேரைப் பிடுங்க வேண்டும். பிடுங்கு முன் கன்னிப் பெண் நூற்ற நூலைக் காப்புக்கட்டி தூப தீபம் காட்டிப் பிடுங்க வேண்டும்.

### எண் சீராசிரிய விருத்தம்

210 பிடுங்குகிற போதல்லோ நீநிர் வாணன்
பெரிதான ருத்திரனை மனதில் வைத்து
நடுங்குவது வாசியைத்தான் உள்ளே வாங்கு
மைந்தனே நினைத்ததுபோல் எண்ணிக் கொள்ளு
ஒடுங்குவது திண்ணமென் றெண்ணிக் கொண்டு
எதிரிமூலம் தான் ஊண் அரசு அவனை
நடையுறக்கம் சாவில் வைத்து
அடங்குவது குறித்திடத்தில் சாவெழுத் தோது அடைவான்
மரணம் தான் காலடிமண் கருத்தைத் தொட்டே

(இ-ள்) (இச்செய்யுளும் முன் செய்யுள்போல் யாப்பு பிறழ்ந்துள்ளது)

மூலிகை பிடுங்கும்போது நீ நிர்வாணமாக இருக்க வேண்டும். உருத்திரப் பெருமானை மனத்தில் வைத்துத் தியானிக்க வேண்டும். வாசியை (மூச்சை) உள்ளே (பூரகம்) செய்து வாங்கிக்கொள்ள வேண்டும். எதிரிக்குத் தான் செய்ய நினைக்கும் காரியத்தை எண்ணிக் கொள்ளவேண்டும். (சங்கல்பம் செய்துகொள்ள வேண்டும்) உன் தொழில் வேலையை ஊண் அரசில் வைத்துக்கொண்டு, எதிரி தொழிலை (பட்சி) நடை, உறக்கம் சாவில் வைத்துக்கொள்ள வெண்டும். அப்போது மாரணம் செய்தற்குரிய பஞ்சாக்ஷர அக்ஷரமாறல் படி (சாவெழுத்தை) ஓதி தியானம் செய்ய வேண்டும். அவன் (சத்துரு) காலடி மண்ணும் இணைத்து வேர் பிடுங்கினால் எதிரி மரணம் அடைவது திண்ணம்.

### எண் சீராசிரிய விருத்தம்

211. தொட்டல்லோ வேருமண்ணும் இரண்டு மொன்றாய்
சேர்ந்துசுருக் கிட்டந்த வெழுத்தை மாற
விட்டல்லோ ஐம்புலனும் சிதறிப் போகும்
மேலான வேருடனே மயானம் சென்று
கட்டல்லோ போடாதே கொடுமை மெத்த
உன்குலந்தான் கடைத்தேற மாட்டா தப்பா
கொட்டியது தேள்போல விஷந்தான் ஏறும்
கூடாது ஒருவாரலும் திருப்பொ ணாதே

(இ-ள்) மேல் செய்யுளில் சொன்னதுபோல் வேரையும், காலடி மண்ணையும் இணைத்து இரண்டு மொன்றாய் சுருக்கிட்டு (முடி இட்டு) மரணத்திற்குரிய பஞ்சாக்ஷர எழுத்தைப் பிடித்து மாற்றி உருவுசெய்ய, எதிரியின் ஐம்புலனும் சிதறிப்போகும். இப்படி அந்த வேருடன் இடுகாடு சென்று அங்குப் புதைக்க வேண்டும். இப்படி மரணத்தால் ஒருவனைக் கட்டிப்போடக் கூடாது. இது வெகு கொடுமையும் பாவமுமு ஆகும். இப்படிச் செய்தால் இத்தீவினையால் உன் குலம் கடைத்தேறமாட்டாது.

எதிர்க்கும்தேள் கொட்டியது போல் துன்பம் நஞ்சுபோல் ஏறும். இத்தீமையை யாராலும் விலக்கமுடியாதாகையால் இதை அறங்கருதி தவிர்ப்பது நலம். சான்றோர் பால் ஊழ்வினையால் தன்னியல்பால் இத்தொழில் நடந்தால் அது விதி விலக்காகும் என்க.

நல்ல தொழில்களுக்கு மட்டும் சொன்ன முறையில் தன்பட்சியின் வேரை, அதன் ஊண், அரசு காலத்தில் பூசித்துப் பிடுங்கி மேலும் வழிபட்டு தங்கக்குலிசமாடி தலையில் சூட்டிக்கொள்ளதான் எண்ணிய காரியங்கள் எல்லாம் இனிது நிறைவேறும். உலக வசியமாகும். செல்வமும் சீரும் பெருகும் என்க.

# 16. அட்ட கன்மப் படலம்

## (முதற் பகுதி)

மனத் திண்மையாலும் தவ வலிமையாலும் வேண்டியவரை வாழவைப்பதும் அல்லாதவரைத் தாழவைப்பதும் அவர் அவர் ஊழ்வினைப் பயன் வந்து தூண்ட சான்றோன் தன்னிலையில் இயல்பாகச் செய்து முடிக்கும் செயற்கரியச் செயல்கள் தாம் அட்ட கன்மங்கள் எனப்படும் இதையே.

''ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின் தவத்தான் வரும்''

''வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்''

''கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தவப்பட் டவர்க்கு''

என்ற குறள்களில் வள்ளுவனார் விளக்கியுள்ளார். செய்தவம் நாம் வேண்டியதை அடைவிக்கக் கூடியது. அதன் வலிமை பெரிது. காலனும் தவச்சான்றோர் முன் தான் வலியிழந்து தோற்பான் என்றெல்லாம் கூறா நிற்பர். இவற்றின் விரிவை திருமூலச் சித்தரும் திருமந்திரம் நாலாம் தந்திரத்தில் "திருவம்பலச் சக்கரம்" என்ற பகுதியில் கூறியுள்ளார். நாலாம் தந்திரம் முழுவதிலும் மந்திர தந்திர வகைகள் தேவ தேவியர்க் குரியவை பலவும் கூறப் பெறுகின்றன.

இந்த நிலையில் இவற்றைச் செய்வோன் தன்பட்சி ஓங்கி இருக்க மாற்றான் பட்சி தாழ்ந்திருக்கும்போது, உரிய, பக்ஷம், திதி, நட்சத்திரம் இவை கூடிவரும் போது மேற்படி கன்மங்களைச் செய்தால் கட்டாயம் தப்பாமல் பலனளிக்கும். இவையெல்லாம் முறையாக விவரிக்க இவை இப்படலத்தில் விளக்கப்படுகிறது.

## 1 இன்னின்ன கன்மங்களில் பக்ஷிகளில் எந்தெந்தந் தொழிலில் செய்யலாம் என்பதை விளக்குவது

212 பாரடா வசியமா கருக்ஷணம் ரெண்டும்
பண்பான அரசதிலே எடுத்திட் டோது
நேரடா மோகனதம் பனமி ரண்டும்
திடமான ஊணதிலே ஒதிப் பாரு
வாரடாவித் வேடனமுச் சாடனமி ரண்டும்
நடையென்னும் எழுத்திலே பிடித்து மாறு
கூரடா பேதனத்தைத் துயிலில் மாறு
குடிகெடுத்த மாரணம்தான் சாவில் மாறே.

(இ--ள்) வசியம், ஆகிருடனம் இரண்டு கன்மங்களையும் தன் பட்சி அரசிலே செய்ய வேண்டும். மோகனம், தம்பனம் இரண்டும் தன் பட்சி ஊண் தொழிலில் இருக்கும் போது செய்யவேண்டும்- வித்துவேடனம், உச்சாடனம் ஆகிய இரு கன்மங் களையும் செய்ய வேண்டும். (தன்பட்கி வலுத்து மாற்றான் பட்சி நடையில் இருக்கும் போது) பேதனம் என்னும் காரியத்தைப் பிறன் பட்சி உறக்கத்தில் தொழில் செய்யும் போது கவனிக்க வேண்டும். மாரணம் என்னும் கொடிய கன்மத்தை மாற்றான் பட்சி மரணத்திலிருக்கும்போது செய்ய வேண்டும் என்பதாம்.

## 2. பஞ்சாக்ஷரமும் அட்ட கன்மமும்

மேலே சொன்ன அட்ட கன்மங்களும் பெரும் பகுதியும் பஞ்சாக்ஷரத்தை மந்திர எழுத்துக்களாகக் கொண்டு மாற்றி மாற்றிச் செய்யும் மரபு உண்டு. இதற்கு அக்ஷர மாறல் என்ற பெயர் உண்டு. முதலெழுத்தை கடையாக வைத்தல், நடு எழுத்தை முதலாக வைத்தல் போன்று கடைத்தலை மாறல், இடைத்தலை மாறல் என்று இப்படி இவை வழங்கப்படும்.

இப் டிப் பஞ்சரக்ஷர எழுத்தை மாற்றி அட்ட கன்மங்களன்றி பத்து கன்மங்களு செய்ய வகையுண்டு என்று பஞ்சபட்சி 'பலத்திரட்டு' சுவடி எண் 868-ல் 2 -ம் பக்கத்தில் கீழ்க்கண்டபடி கூறப்பட்டுள்ளது.

பஞ்சாக்ஷரங்களில் சதவித கர்மங்களுண்டு 1. நமசிவய-தம்பனம் 2. யவசிழந-பேதனம் 3. மசிவயந-மோஹனம் 4. நயவசிம-வித்வேதணம் 5. சிவயநம-மாரணம் 6 மநயவசி சாந்தி 6. வயநமசி-உச்சாடனம் 8 சிமநயவ-குரோதம் 9, யநமசிவ-ஆகிருணம் 10. வசியநம-வசிமாயம்.

இவை பூருவம் அமரங்களுக்குச் சொல்லப்பட்டிருக்கிற அக்ஷரங்களை குருமுக மாய் ஆராய்ந்து தெளிந்து நடத்த மேற்சொல்லிய கருமங்கள் "சித்தியாம்"என்பிதாம். அதாவது இப்பஞ்சாக்ஷர அக்ஷர மற்றும் எழுதும் பலகை திக்கு. இன்னோர்ன்ன பிறவற்றையும் குருமுகமாய் உபதேசமுறையில் பெற்று நடத்தி இவை சித்தியாகும் என்று தெரியவேண்டும்.

இந்த கன்மங்களுக்கு சக்கரம் அமைக்கும் விதம் பற்றித் திருமந்திரம் நான்காம் தந்திரம் விரிவாகக் கூறுகின்றது. அதன் அடிப்படையிலும் பஞ்சபட்சி பலத்திரட்டு சுவடி எண் 868ல் பக்கங்கள் 117 முதல் 125 வரை கொடுக்கப்பட்டுள்ள குறிப்புகளின் அடிப்படையிலும் எட்டு சக்கரங்களையும் அமைத்து அந்தந்த கன்மங்கள் எந்தெந்த வாரம் திதி மித்திரங்களில் செய்யவேண்டும் என்ற விவரங்களும் இனி எழுதப்படுகின்றன.

இச்சக்கரங்களில் எழுத்துக்களுடன் எண்களும் தமிழ் இலக்கத்தில் கொடுக்கப் பட்டுள்ளது. உலகில் மொழி உருவம் பெற்றபோது எண்களை எழுத்துக்களாலேயே குறித்தனர். அவற்றின் ஒலி அலை நீளங்கள் முதலியவற்றால் ஏற்படும் பாதிப்பின் அடிப்படையிலேயே இச்சக்கரங்கள் பயனளிக்கின்றன. இன்று பெரிதும் வழங்கும் (Numerology) என்னும் எண்கலையும் இந்த அடிப்படையிலேயே இயங்குவதாகும். இச்சக்கரங்கள் எப்படிக் கட்டினாலும் 51 கூட்டெண் வரும்படி அமைந்துள்ளன.

## III. அட்டகன்மப்படலம் 2-ம் பகுதி

வாரத்தின் 7 கிழமைகளிலும் ஒவ்வொரு கிழமையிலும் 27 நட்சத்திரது களிலும் என்னென்ன தொழில் செய்யலாம் என்பதைப் போகர் பட்சி நூலிலிருந்ங் பாடல்கள் எடுத்து எழுதப்படுகின்றன.

## அட்டகன்மப் படலம் - இரண்டாம் பகுதி

### ஞாயிற்றுக் கிழமைக் குயரின

213 கூறினேன் ஞாயிறதில் அசுபதியும் சஷ்டி
குணமான மிதுனமதும் மோகனமும் ஆகும்
தேறினேன் பரணியும் ஏகா தேசி
திறமான கடகமுமே தம்பன மேயாகும்
வாறின தோர் கார்த்திகையும் துதிகை தானும்
வளமான சிங்கமது வேஷணமு மாகும்
தூறினேன் உரோகிணியும் சத்தமியும் கூட்டி
சுகமான கன்ம மது பேதனமும் பாரே.

## இதுவுமது

214 பாரடா சீரிடமும் துவாதசி யோடு
பண்மையுள்ள துலாக்கோலும் உட்சாடணமே ஆகும
கூறடா ஆதிரையும் திரிதிகையும் சேர்த்தால்
குறியான விருச்சிகமும் மரணமே செய்யும்
தீரடா புனர்வசுவும் அட்டமியும் சேர்ந்தால்
செகம்புகழும் தனுசதுவும் வசிய மாகும்
சாரடா பூசத்தோடு திரையோதசி மகரம்
சண்டான ஆகருஷணம் ஆகும் தானே.

(சண்டான ஆகுரு ஷணம் சண்டாள குணமான முரட்டுக் கீழ்த்தன்மை படைத்தவரையும் ஆகிருடணம் செய்யும் என்பதாம்)

215 தானென்ற ஆயிலியமும் திரிதிகையும் கும்பம்
தரணி தனில் மோகனமே செய்யும் பாரு
வானென்ற நவமியுடன் மகமும் சேர்ந்தால்
வகையான மீனமதும் தம்பனமும் ஆகும்
தேனென்ற பூரமுடன் அமாவாசை மேஷம்
திகைப்புள்ள வித்துவே ஷணமும் ஆகும்
கோனென்ற உத்திரமும் பஞ்சமியும் சேர்ந்தால்
கூறியதோர் இடபமது மோகனந் தானே.

216 தானேதான் அத்த முடன் தசமி கூடில்
தன்மையுள்ள மிதுனமுமே உட்சாட ணமுமாகும்
தானேதான் சித்திரையும் அம்மா வாசை
தரித்ததொரு கற்கடகம் மாரணம தாகும்
தானேதான் சுவாதியுடன் சஷ்டி சேரில்
தயவான சிங்கமது வசிய மாகும்
தரனேதான் இவ்வகையாய் கண்ட பேர்க்கு
தாணிதனில் எதிரிஇல்லை சாற்று வோமே

217. மாமோக விசாகமுடன் பிரதமை கற்கடகம்
மகத்தான மாரணமும் ஆகும் பாரு
பாமோக அனுடமுடன் சஷ்டி யோடு
பகையான சிங்கமுமே வசிய மாகும்
காமோக கேட்டையுடன் ஏகா தேசி
கன்னியுமே ஆகிருடணம் கனிவாய் ஆடும்
கோமாக மூலமுடன் துதிகை தானும்
குலாவிய துலாத்துடனே மோகன மாமே.

218. மோகமுள்ள பூராடம் சத்தமியும் கூட்டி
உரிமையுடன் விரிச்சிகமும் தம்பன மாகும்
பாகமுள்ள உத்திராடம் துவாதேசி தானும்
பணியுமடா வேடணமும் பணிந்தே ஆகும்
தாகமுள்ள திருவோணம் திரிதிகையுமாகும்
தப்பாமல் பேதனமும் செய்யும் பாரு
தேகமுள்ள அவிட்டமுடன் அட்டமியும் கூடி
நெளிந்துபார் உட்சாடணம் செய்யும் பாரே.

219. செய்யுமே உத்ராடம் திரயோ தேசி
செயமான மீனமும் மாரண மாகும்
வையமே சதயமுடன் சதுர்த்தி யோடு
வளமான மேஷமுமே செய்யும் வசியம்
குய்யுமோ பூரட்டாதி நவமிகற் கடகம்
கொண்டுவரும் ஆகருஷணம் குணமாய் பாரு
நையுமே ரேவதியும் சதுர்ந்தசி மிதுனம்
நயமான மோகனமும் செய்யும் பாரே.

### திங்கட்கிழமைக் குரியவை

220. பாரப்பா திங்களுடன் அசுமதி தானும்
பஞ்சமிகற் கடகமும்தான் தம்பன மாகும
தேரப்பா பரணியுடன் தசமி சிங்கம்
நேர்மையுள்ள வித்வேடணம் செய்யும் பாரு
ஆரப்பா கார்த்திகையும் அம்மா வாசை
அம்பனே கன்னியுமே பேதன மாகும்
சாரப்பா ரோகணியும் பிரதமை துலாமும்
சார்வான உட்சாடணம் ஆகும் பாரே

221. ஆகுமே மிருகசீரிடமும் சட்டி
அதிவிருச்சிக மாரணமும் செய்யும் பாரு
ஏகுமே திருவாதிரை ஏகாதேசி
இனிதான தனுசுடனே வசிய மாகும்
போகுமே புனர் பூசம் துதிகை தானும்
புனிதமுடன் மகரமதும் ஆகிருடணமாகும்
சாகுமே பூசமுடன் சத்தமியும் கும்பம்
தனியான மோகனமே செய்யும் பாரே

222. பாரேநீ ஆயில்யம் துவாதசி மீனம்
பத்திரமே தம்பனமும் பதிவாய் காணும்
நேரே நீ பூரமுடன் திரிதிகை மேஷம்
நினைவானவித் வேஷணமும் செய்யும் பாரு
தேரே நீ பூரமுடன் அஷ்டமி இடபம்
தெளிவான பேதனமும் ஆகும் பாரு
காரே நீ உத்திரமும் திரையோதேசி
கனிவான மிதுனமுமே உச்சாடண மாமே

223. ஆமப்பா சுத்தமுடன் சதுர்தசி யோடும்
அப்பனே கற்கடகம் மரண மாகும்
போமப்பா நவமியுடன் சோதி சிங்கம்
புகழ்பெரிய வசியமுடன் செய்யும் பாரு
நாமப்பா சித்திரையும் சதுர்த்தி கன்னி
நயமான ஆகிருட்ணம் ஆகும்பாரு
காமப்பா விசாகமுடன் பஞ்சமி துலாமும்
கனவான மோகனமே செய்யும் பாரே

224. செய்துபார் தசமியுடன் அனுடம் மீனம்
திரண்டவிருட் சிகமதும் தம்பன மாகும்
கொய்துபார் கேட்டையுடன் அமாவாசை
குணமான தனுசதுவும வித்வேஷணம் செய்யும்
பைதுபார் மூலமுடன் பிரதமை மகரம்
பணிவான பேதனமே செய்யும் பாரு
நைதுபார் பூராடம் சஷ்டி யோடும்
நயமான கும்பம் உச் சாடணமும் ஆமே.

225. உட்சாடணம் திருவோணம் ஏகாதேசி
உறவான மீனமது மரண மாகும்
தீட்சாட்டிய திருவோணம் துதிகை தானும்
திருந்தியதோர் மேடமும் தான் வசியமாகும்
நட்சாட்டி அவிட்டமுடன் சத்தமி இடபம்
நன்மைபெற்ற ஆகிருடணம் செய்யும் பாரு
மைசாட்டிய உத்திரட்டாதி துவா தேசி
மறவாமல் மோகனமே செய்து பாரே.

## செவ்வாய்க் கிழமைக் குரியவை

226. செய்துபார் ரேவதியும் திரிதிகையும் நண்டும்
திரமான தம்பனமே செய்து பாரு
செய்து பார் பூரட்டாதி அட்டமியும் சிங்கம்
நுண்மையுன் வித்வேஷணம் தான் ஆகும்
நைதுபார் ரேவதியும் திரையோதசியும் தான்
நவமான கன்னியுமே அசுபதியும் சதுர்த்தி
வளமான துலாமதுவும் உச்சாடணம் ஆமே!

குறிப்பு:- முதல் மூன்று அடிகள் திங்கள் கிழமையைச் சேர்ந்தவை. கடைசி 4-வது வரியில் இருந்து தான் செவ்வாய்க்கிழமைக் குரியவை ஆரம்பமாகிறது.

## இதுமுதல் செவ்வாய்க் கிழமைக் குரியவை

227. ஆமப்பா பரணியுடன் நவமியும் கூட்டி
அப்பனே விருட்சிகம் மாரணமும்
நாமப்பா கார்த்திகையும் சதுர்த்தசி தானும்
நலமான வசிய மென்ற தொழிலு மாகும்
போமப்பா ரோகணியும் பஞ்சமியும் மகரம்
பொருள் வருத்தம் ஆகிருடணமும் தான் ஆகும்
தாமப்பா மிருகசீரிடம் தசமியுடன் தானே
தனதான கும்பமுமே மோகன மாமே.

228. மோகமே திருவாதிரை அமாவா சையோடும்
முனையுள்ள மீனமுமே தம்பனமும் ஆமே
கோனமே புனர்பூசம் பிரதமையும் மேஷம்
குடி கெடுத்த வித்வேஷணம் தானே ஆகும்
வாகனமே பூசமுடன் சஷ்டி யோடும்
வழியான இடபமுமே பேதனமே செய்யும்
சாதனமே ஆயில்யம் ஏகா தேசி
தனிவாழும் மிதுனம் உட் சாடணம்தான் ஆமே

229. ஆமென்ற மகமுடனே துதிகையையும் கூட்டி
அப்பனே கற்கடகம் மரணமே ஆகும்
வேமென்ற பூரமடா சத்தமியும் கூட்டி
மேன்மையுள்ள சிங்கமுமே வசிய மாகும்
ஓமென்ற உத் திரமோடு துவாதேசி தன்னில்
உலகமெல்லாம் ஆகிருடணம் செயயும் பாரு
தாமென்ற அத்தமுடன் திரிதிகையும் கூட்டி
தனிப்பிறந்த துலாமுடனே மோகனமும் ஆமே

230. பாரப்பா சோதியுடன் அஷ்டமியும் தேளும்
பகர்கின்ற தம்பனமே ஆகும் பாரு
தேரப்பா சித்திரையும் திரியோ தேசி
நினைவான தனுசதுவும் வித்வேஷணம் ஆகும்
ஆரப்பா விசாகமுடன் சதுர்த்தி தானும்
அதிர்கின்ற மாரணமும் பேதனமாம் பாரே
கூரப்பா அனுடமே நவமி கும்பம்
குடி கெடுத்த உச் சாடனமும் ஆகும் பாரே.

231. ஆகுமே கேட்டையுடன் சதுர்த்தேசி தானும்
அழித்துவிடும் மாரணமும் ஆகும் பாரு
ஏகுமே மூலமுடன் பஞ்சமி ரிடபம் மேஷம்
என்னசொல்வேன் வசியமடா எதிரி தோல்வி
போகுமடா பூராடம் தசமி யோடு
புகழ்பெரிய இடபமும் ஆகிருடணமே ஆகும்
வேகுமே உத்திராடம் அம்மாவாசி
விதனமுள்ள மிதுனமுமே மோகனமும் செய்யே.

232. செய்யுமடா திருவோணம் பிரதமையும் சேர்ந்து
சேர்க்கையுள்ள கற்கடகம் தம்பனமும் ஆகும்
மையமடா அட்டமுடன் சஷ்டி யோடும்
பின்னுறுதி சிங்கம் வித் வேஷணமே செய்யும்
கொய்யுமடா உத்திரட்டாதி ஏகா தேசி
குலவியதோர் கன்னியுடன் பேதனமே ஆகும்
தெய்யுமடா சதயமுடன் பேதனமும் ஆகும்
தோஷமுள்ள துலாமதுரம் உட்சாடணமும் ஆமே.

## புதன் கிழமைக் குரியவை

233. பாரப்பா சத்தமியும் பூரட்டாதி சேர்ந்தால்
பரிவான விருட்சிகமும் மாரணமே ஆகும்
ஆரப்பா ரேவதியும் துவாதேசி தனுசும்
அப்பனே வசியமடா அன்பாய்ச் சொன்னேன்
ஏரப்பா அசுபதியும் திரிதிகையும் தானே
என்மகனே மகரமா கிருடணமும் ஆகும்
சாரப்பா பரணியுடன் அட்டமியும் நவமி
சார்வான கும்பமுமே மோகனமும் ஆமே.

(குறிப்பு: இதில் இரண்டாவது அடி முடிய செவ்வாய்க் கிழனமக் குரியவை மூன்றாம்அடி முதல் புதன்கிழமைக் குரியவை ஆரம்பம்)

234. மோகமுள்ள கார்த்திகையும் திரயோ தேசி
மூன்யானை மீனமுடன் தம்பனமும் ஆகும்
தாகமுள்ள சதுர்த்தி ரோகிணியும் மேடம்
தப்பாமல் வித்வேஷணமே செய்யும் பாரு
ஆகமுள்ள மிருகசீரிடம் நவமி யோடும்
அன்பசன இடபமுமே பேதனமே ஆகும்
வாகான ஆதிரையும் சதூர்த்தேசி மிதுனம்
வழிகெடுக்கும் உட்சாடணமும் ஆகும் பாரே.

235. ஆகுமே பூரம்பஞ் சமியும் சேர்ந்தால்
அப்பான கற்கடகம் மாரணமே ஆகும்
சாகுமே தசமியுடன் பூசம கூடில்
என்ன சொல்வேன் சிங்கமடா வசியம் ஆகும்
சாகுமே ஆயிலியம் அம்மா வாசி
வன்மையுள்ள கன்னியுமே ஆகிருடணம்தான் ஆகும்
போகுமே மகமுடன் பிரதமையும் நல்ல
புகழ்பெரிய துலாத்துக்கு மோகனமாம் பாரே.

236. பாரேதான் பூரமுடன் சட்டி கூட்டி
பரிவான விருட்சிகமுடன் தம்பனமும் ஆகும்
காரேநீ உத்திரமும் ஏகா தேசி
கலந்ததொரு தனுசதுவித் துவேஷணமும் ஆகும்
தேரேநீ அத்தமுடன் துதிகை தானும்
திறமான மகரமுமே பேதனமாம் பாரு
கோரேநீ சோதியென்ற சத்தமியும் கூட்டி
கும்பமுடன் உட்சாடணமும் ஆகும் பாரே.

237. ஆகுமப்பா சித்திரைது வாதேசி மீனம்
அதுநடத்தும் மாரணம்தான் ஆகும் பாரு
போகுமடா விசாகமுடன் திரிதிகை தானும்
புகழ்பெரிய மேடமே வசிய மாகும்
வாகான அனுட முடன் அட்டமியும் கூடில்
வலியான இடபமுமே ஆகிருடணமே ஆகும்
ஏகுமப்பா கேட்டையுமே திரையோ தேசி
என்ன சொல்வேன் மிதுனமும்தான் மோகனமும் ஆமே.

238. ஆமென்ற மூலமுடன் சதுர்த்தி யோடு
அப்பனே கற்கடகம் தம்பனமே ஆகும்
வேமென்ற பூராடம் நவமி அப்பா
மேதினியில் சிங்கமுமே வித்வேஷமே ஆகும்
காமென்ற உத்ராடம் சதுர்த்தேசி கன்னி
கனிவாள பேதனமே செய்யும் பாரு
நாமென்ற திருவோணம் பஞ்சமியும் கூட்டி
தலமான துலாமதுவும் உட்சாடணமும் ஆமே.

239. ஆமென்ற அவிட்டமுடன் தசமியும் கூடின்
அழகான விருட்சிகமும் மாரணமே ஆகும்
போமென்ற உத்திரட்டாதி அம்மா வாசி
புகழ்பெரிய வசியமா என்ன சொல்வேன்
தேமென்ற சதயமுடன் பிரதமை கூடில்
செம்மையுள்ள ஆகிருடணம் செய்து மாரு
நாமென்ற பூரட்டாதி சட்டி கூட்டி
தலமான கும்பமுடன் மோகனமே ஆமே.

## வியாழக்கிழமைக் குரியவை

240 மோகனம்தான் ரேவதியும் ஏகாதேசி
உண்மையுள்ள மீனமப்பா தம்பனமும் ஆகும்
வாகான வியாழன்தான் அசுபதி திரிதிகை
மக்கனே மேடமப்பா வித்வேஷணமும் ஆகும்
கோகனமே பரணியுடன் சத்தமியும் சேர்ந்தால்
குலாவிதோர் இடபமுமே பேதனமும் ஆகும்
சோகந்தான் கார்த்திகையும் துவாதேசி மிதுனம்
சொன்னேனே உச்சாடணம் செய்யும் பாரே.

குறிப்பு: இதில் முதல் அடி முடிய புதன்கிழமைக் குரியவை. இரண்டாமடி முதல் வியாழக்கிழமைக் குரியவை ஆரம்பம்

241. செய்யுமே ரோகிணியும் திரிதிகையும் கூடில்
திடமான கற்கடகம் மாரணமும் ஆகும்
தையுமே மிருகசீரிடம் அட்டமியும் சேர்ந்தால்
தனினமுள்ள சிங்கமது வசிய மாகும்
செய்யுமே ஆதிரையும் திரையோர் தேசி
குணமான கன்னியுடன் ஆகிருடணம் பாரே
வையுமே புனர்பூசம் சதுர்த்தசி துலா மொன்று
வணங்குமடா மோகனம்தான் மார்க்கமும் பாரே.

242. மார்க்கமுள்ள பூசமுடன் நவமி சோலை
மக்கனே தம்பனமும் மகிழ்ந்து காணும்
ஏர்கை யுள்ள ஆயில்யம் சதுர்த்தேசி தனுசு
என்மகனே வித்வேஷணம் அதுதான் ஆகும்
சேர்க்கையுள்ள மகமுடனே பஞ்சமியும் சேர்ந்தால்
திடமான மகரமுமே பேதம் செய்யும்
ஆர்க்கையுள்ள பூரமுடன் தசமி யோடு
அப்பனே கும்பமுட் சாடணமும் ஆமே.

243. ஆமப்பா உத்திரமும் அம்மா வாசி
அப்பனே மீனமுமே மாரணமும் ஆகும்
நாமப்பா அந்தமுடன் பிரதமையும் சேர்ந்தால்
நலமான மேடமுமே வசியம் ஆகும்
காமப்பா சோதியென்ற சஷ்டி காளை
களைக்குமா கிருடணம்தான் கண்டு பாரு
போமப்பா சித்திரையும் ஏகா தேசி
புனிதமுடன் மிதுனமுமே மோகனமாம் பாரே.

244. பாரென்ற விசாகமுடன் துதிகை தானும்
பார்மகனே கற்கடகம் தம்பனமும் ஆகும்
சீரென்ற அனுடமடா சத்தமியும் கூட்டி
சிறப்பான சிங்கமதும் வித்வேடணமே செய்யும்
காரென்ற கேட்டையடா துவாதேசி கன்னி
கனமான பேதனமே ஆகும் பாரு
வாரென்ற மூலமுடன் திருதிகை துலாம் தான்
மக்கனே உட்சாடணம் மகிழ்ந்து பாரே.

245. மகிழ்ந்து பார் பூராடம் அட்டமியும் தேளும்
மனதுபோல் மாரணமும் ஆகும் பாரு
நெகிழ்ந்துபார் உத்திராடம் திரையோ தேசி
நேரான தனுசதுவும் வசிய மாகும்
இருந்துபார் திருவோணம் சதுர்த்தி சேர்ந்தால்
என்மகனே மகரமுமே ஆகிருடணம் ஆகும்
மகிழ்ந்துபார் அவிட்ட முடன் நவமி கும்பம்
தனதான மோகனம் தான் ஆகும் பாரே.

246. தானென்ற உத்திரட்டாதி சதுத்தேசி மீனம்
தப்பாமல் தம்பனமே செய்யும் பாரு
மானென்ற சதயமுடன் பஞ்சமியும் மேடம்
மனம்போல் வித் வேஷணம் தான் செய்யும் பாரே
நானென்ற பூரட்டாதி தசமி காளை
நலமான பேதனமே ஆகும் பாரு
தேனென்ற ரேவதியும் அம்மா வாசி
சிறந்ததொரு மிதுனமுட் சாடணமும் ஆமே-

## சுக்ர வாரமான வெள்ளிக்கிழமைக் குரியவை

247. மானென்ற வெள்ளியுடன் அசுபதியும் கூடில்
மக்களே பிரதமையும் தண்டுமா ரணமாம்
தேனென்ற பரணியுடன் சஷ்டி சேர்ந்தால்
திடமான சிங்கமது வசிய மாகும்
வேனென்ற கார்த்திகையும் ஏகா தேசி
விதமான கன்னியுமே ஆகிருடண மாகும்.
கோனென்ற ரோகணியும் துதிகை தானும்
கொண்டுதுலாம் மோகனமே செய்யும் பாரே.

248. செய்யுமடா சீரிடமும் சத்தமியும் கூட்டி
ஜெயமான தேளதுவும் தம்பனமு மாகும்
ஐயுமடா திருவாதிரையும் துவாதேசி தனுசு
அப்பனே வித்வேஷணம் செய்யும் பாரு
நய்யுமடா புனர்பூசம் திரிதிகையும் கூட்டி
நயமானமகர மேடம் பேதனமே செய்யும்
கொய்யுமடா பூசமுடன் அஷ்டமியும் கும்பம்
குலாவிதுஉட் சாடணம்தான் குறித்து செய்யே!

249. குறித்து நீ செய்துபார் ஆயில்யம் ஏகா தேசி
குணமான மீனமுமே மாரணமே ஆகும்
மறித்துப் பார் மகமுடனே சதுர்த்தி மேடம்
மன்னரெல்லாம் மன மகிழ்ந்து கேளும் வசியம்
செறித்துப்பார் பூரமுமே நவமி காளை
கணந்தனிலே ஆகிருடணம் செய்வார் பாரு!
விறித்துப் பார் சதுர்த்தேசி உத்திரமும் தான்
மிதுனமதும் மோகமும் ஆகும் பாரே.

250. ஆகுமே அந்தமும் பஞ்சமியும் கற்கடகம்
அன்பான தமபனமே அழகாய்ச் செய்யும்
ஏகுமே சோதியுடன் தசமி சிங்கம்
எனன சொல்வேன் வித்வேஷணம் தான் எதிரி இல்லை
தேகமே சித்திரையும் அம்மாவாசி யோடு
செயமான கன்னியுமே பேதனமே யாகும்
பேர்குமே விசாகமுடன் பிரதமை துலாமும்
பெரிதான உட்சாடணம் பேசும் பாரே.

251. தானேதான் உத்திராடம் துவாதேசி மீனம்
தன்மையுள்ள தம்பனமே தனிதின் நாடும்
கோனென்ற திருவோணம் திரிதிகையும் கூடில்
குணமான மேடமங்கே வித்வேஷணமும் செய்யும்
தேனே தான் சதயமுடன் திரையோர் தேசி
செனித்ததொரு மிதுனமுங்கே உட்சாடணம் செய்யும்
மானேகேள் ரோமனுட வாச்சியம் தன்னை
மகிழ்ந்துபார் மனம் கொண்டு அட்டகன் மமாமே.

### சனிக்கிழமைக் குரியவை

252. மானென்ற பூரட்டாதி சதுர்த்திகற் கடகம்
மன்னவனே திருவெள்ளி மாரணந்தான் செய்யும்
தேனென்ற உத்திரட்டாதி நவமி சிங்கம்
தெளிவாகும் வசியமுடன் செம்மையாகும
வானென்ற ரேவதியும் சதுர்த்தேசி கன்னி
வகையான ஆகிருடணம் வலிமை யாகும்
ஏனென்ற சனியுடனே அசுபதிபஞ் சமியும்
ஏன்மகனே துலாமதுவும் மோகன மாமே

(குறிப்பு: இதில் முதல் மூன்று வரிகள் வெள்ளிக் கிழமைகுரியவை)

253. ஆமப்பா தசமியுடன் பரணி கூடில்
அப்பனே தம்பனமும் விருச்சிகமே ஆகும்
நாமப்பா கார்த்திகையும் அம்மா வாசி
நவமான தனுசுடனே வித்வேஷமு மாகும்
ஓமப்பா ரோகிணியும் பிரதமை மகரம்
உத்தமனே பேதனமே முடியும் பாரு
காமப்பா மிருகசீரிடம் சட்டி கும்பம்
கனிவான உட்சாடணமே காணும் பாரே.

254. காணுமே திருவாதிரை ஏகா தேசி
கனிவான மாரணம் தான் மீனமும் ஆகும்
வேணுமே புனர்பூசம் துதிகை தானும்
மேலான மேடமுடன் வசிய மாகும்
தோணுமே சத்தமியும் பூசம்தான் காளை
தொடுத்திடும்பார் ஆகிருடணம் சொல்லப்போகா
நாணுமே ஆயில்யம் துவாதேசி மிதுனம்
நலமான மோகனமே நயந்து பாரே.

255. நயந்துபார் மகமுடனே திரிதிகையும் சேர்ந்தால்
நலமான கடகம் தம்பனமும் ஆகும்
பயந்துபார் பூசமுடன் அட்டமியும் சிங்கம்
பதிவான வேஷணம்தான் பதிவாய்க் காணும்
கயந்துபார் உத்திரமும் திரயோ தேசி
கன்னியுடன் பேதனமும் கலந்து காணும்
சயந்துபார் அந்தமுடன் சதுர்த்தி தானும்
சாற்றினேன் உட்சாடணம்தான் சார்ந்து பாரே.

256. சாருமடா நவமியுடன் சோதி சோலை
சண்டாள மாரணமாம் சார்ந்து பாரு
ஏருமடா சித்திரையும் சதுர்த்தேசி தானும்
என்னசொல்வேன் வசியமடா இசைந்து காணும்
ஆருமடா விசாகமுடன் பஞ்சமியும் தனுசு
அப்பனே ஆகிருடணம் அழகாய்ச் செய்யும்
தேருமடா அனுடமதும் தசமி கும்பம்
செய்யுமப்பா மோகனமாம் திரமாய்ப் பாரே!

257. திரமான கேட்டையுடன் அம்மா வாசி
சிறந்ததொரு மீனமங்கே தம்பனமும் ஆகும்
பரமான மூலமுடன் பிரதமை மேடம்
பழியான வித்வேஷணம்தான் பதிவாய்க் காணும்
தரமான பூராடம் சட்டி காளை
தப்பாமல் பேதனமே நனியாய்க் காணும்
உரமான உத்திராடம் ஏகா தேசி
உத்தமனே மிதுனமுட் சாடணந்தான் ஆமே.

258. காணவே திருவோணம் திருதியை தானும்
கனிவான கற்கடம் மாரணம்தான் ஆகும்
பூணப்பா அவிட்டமுடன் சத்தமியும் சேர்ந்தால்
புண்ணியனே சிங்கமது வசிய மாகும்
தோணப்பா உத்திரட்டாதி துவாதேசி கன்னி
சொல்லவொண்ணா ஆகிருடணம் துடியாய்ச் செய்யும்
வேணப்பா சதயமுடன் திருதிகை துலாமும்
வேண்டியதோர் மோகனமாம் விரும்பிச் செய்யே!

259. விரும்பியே பூரட்டாதி அட்டமியும் தேனும்
மேலான தம்பனமாம் வேண்டி யாகும்
கரும்பியே ரேவதியும் திரையோ தேசி
கனிவான தனுசதுவும் வித்வேஷணம் தான் ஆகும்
அரும்பியே இந்தநாள் ஆக வேணும்
அப்பனே நட்சத்திரம் திதிராசி வேளை கண்டு
துரும்பியே எவ்வகையும் பார்க்கும் போது
தொடுத்திவாய் இதிலொன்றும் குறை இல்லாதே.

260. குறையாமல் செய்ததினால் பலித மாகும்
குணங்குறிகள் பார்ப்பதற்கு இதுவே வேணும்
பறையாமல் போனதினால் பலிக்கு முன்னே
பஞ்சாங்கம் பலத்திரட்டை சார்ந்து கொள்ளும்
மறையாமல் சொல்லி வைத்தேன் சாத்திரத் துள்ள
வகையெல்லாம் மாறுபஞ்ச பட்சியாய்த் தோன்றும்
நிறைவேதான் அவ்வளவும் தப்பே இல்லை
நிஜமேதான் பஞ்சபட்சி வித்தை தானே.

261. பட்சிவித்தை ஒருபோதும் குறையே இல்லை
பாராமல் போய்விட்டால் பழுதே யாகும்
கொச்ச வித்தை பலித்திடுமே எதனா லோதான்
குறிகுணங்கள் நேரடிங்கே குறைவ தாலே
வச்ச வித்தை கருக்குருவும் கண்ட பேர்க்கு
வணங்குமடா பட்சிவித்தை மயக்க மில்லை
நச்சு(ம்) வித்தை இதற்கு நிகர் ஒன்று மில்லை
நாட்டிலே இத்தொழிலைச் சொல் வொணாதே.

குறிப்பு: 27 நட்சத்திரங்களிலும் ஒவ்வொரு கிழமையில் எவ்வாறு திசைகளில் செய்யத்தக்க வெவ்வேறு அட்டகர்ம விபரங்களை இச்செய்யுட்கள் விவரமாய்க் கூறுவனவாம். இவற்றில் சொல்லப்படும் விஷயமே முதன்மையாகக் கொண்டு எதுகை, அசை, அதிகமுள்ள சீர்கள், யாப்பு நெறி முதலியவற்றை சிற்சில இடங்களில் கருக்கொள்ளாமல் எண்சீர் ஆசிரிய விருத்தங்களாக இவை ஆக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு கிழமைக்கும் தனியே அட்டவணை தொழில், திதி நட்சத்திரம், முதலிய வற்றைக் காட்டும் பதகங்கள் தனியாகக் கொடுக்கப்பட்டுள்ளன.பாடல்களின் பொருளும் வெளிப்படையாக இருப்பதால் தனி விளக்கம் எழுதப்படவில்லை. பதகங்களைக் கண்டு தெளிவு பெறுக. இப்பாடல்களில் வரும் சொற்கள் சிலவற்றின் பொருள்.

காளை - இடப ராசி, சோலை – விருட்சிக ராசி, நண்டு - கற்கடகம் அல்லது கடக ராசி - தேள் என்பது விருச்சிக ராசி.

கடைசி இரண்டு பாடல்களில் பட்சி வித்தை மறைப்பொருளாகக் காத்துக் கொள்ளவேண்டும் என்றும் தகுதியற்றவர்களுக்குச் சொல்லக்கூடாது என்றும் எச்சரிக்கைச் செய்யப்படுகிறது.

# அட்ட கன்ம சக்கரங்கள்

## 1. தம்பனம்

| | | | | |
|---|---|---|---|---|
| ரு<br>எ | ம<br>ங | சி<br>ரு | வ<br>க | ய<br>அ |
| சி<br>ரு | வ<br>க | ய<br>அ | ரு<br>எ | ம<br>ங |
| ய<br>அ | ரு<br>எ | ம<br>ங | சி<br>ரு | வ<br>க |
| ம<br>ங | சி<br>ரு | வ<br>க | ய<br>அ | ரு<br>எ |
| வ<br>க | ய<br>அ | ரு<br>எ | ம<br>ங | சி<br>ரு |

## 2, வசியம்

| | | | | |
|---|---|---|---|---|
| ய<br>அ | வ<br>க | சி<br>ரு | ரு<br>எ | ம<br>ங |
| சி<br>ரு | ரு<br>எ | ம<br>ங | வ<br>அ | ய<br>அ |
| ம<br>ங | ய<br>அ | வ<br>க | சி<br>ரு | ரு<br>எ |
| வ<br>க | சி<br>ரு | ரு<br>எ | ம<br>ங | ய<br>அ |
| ரு<br>எ | ம<br>ங | ய<br>அ | வ<br>க | சி<br>ரு |

## 3. உச்சாடனம்

| | | | | |
|---|---|---|---|---|
| சி<br>ரு | வ<br>க | ய<br>அ | ரு<br>எ | ம<br>ங |
| ய<br>அ | ரு<br>எ | ம<br>ங | சி<br>ரு | வ<br>க |
| ம<br>ங | சி<br>ரு | வ<br>க | ய<br>அ | ரு<br>எ |
| வ<br>க | ய<br>அ | ரு<br>எ | ம<br>ங | சி<br>ரு |
| ரு<br>எ | ம<br>ங | சி<br>ரு | வ<br>அ | ய<br>க |

## 4. மோகனம்

| | | | | |
|---|---|---|---|---|
| ரு<br>எ | ய<br>அ | வ<br>க | சி<br>ரு | ம<br>ங |
| வ<br>க | சி<br>ரு | ம<br>ங | ரு<br>எ | ய<br>அ |
| ம<br>ங | ரு<br>எ | வ<br>அ | ய<br>க | சி<br>ரு |
| ய<br>அ | வ<br>க | சி<br>ரு | ம<br>ங | ரு<br>எ |
| சி<br>ரு | ம<br>ங | ரு<br>எ | ய<br>அ | வ<br>க |

## 5. மாரணம்

| | | | | |
|---|---|---|---|---|
| ம<br>ந | சி<br>ரு | வ<br>க | ய<br>அ | ரு<br>எ |
| வ<br>க | ய<br>அ | ரு<br>எ | ம<br>ந | சி<br>ரு |
| ரு<br>எ | ம<br>ந | சி<br>ரு | வ<br>க | ய<br>அ |
| சி<br>ரு | வ<br>க | ய<br>அ | ரு<br>எ | ம<br>ந |
| ய<br>அ | ரு<br>எ | ம<br>ந | சி<br>ரு | வ<br>க |

## 6. பேதனம்

| | | | | |
|---|---|---|---|---|
| ம<br>ந | ரு<br>எ | ய<br>அ | வ<br>க | சி<br>ரு |
| ய<br>அ | வ<br>க | சி<br>ரு | ம<br>ந | ரு<br>எ |
| சி<br>ரு | ம<br>ந | ரு<br>எ | ய<br>அ | வ<br>ரு |
| ரு<br>எ | ய<br>அ | வ<br>க | சி<br>ரு | ம<br>ந |
| வ<br>க | சி<br>ரு | ம<br>ந | ரு<br>எ | ய<br>அ |

## 7. ஆகிருடணம்

| | | | | |
|---|---|---|---|---|
| வ<br>க | சி<br>ரு | ய<br>அ | ரு<br>க | ம<br>ங |
| ய<br>அ | ரு<br>எ | ம<br>ங | வ<br>க | சி<br>ரு |
| ம<br>ங | வ<br>க | சி<br>ரு | ய<br>அ | ரு<br>எ |
| சி<br>ரு | ய<br>அ | ரு<br>எ | ம<br>ங | வ<br>க |
| ரு<br>எ | ம<br>ங | வ<br>க | சி<br>ரு | ய<br>அ |

## 8. வித்வேடணம்

| | | | | |
|---|---|---|---|---|
| வ<br>க | ய<br>அ | ரு<br>ஏ | ம<br>ங | சி<br>ரு |
| ரு<br>எ | ம<br>ங | சி<br>ரு | வ<br>க | ய<br>அ |
| சி<br>ரு | வ<br>க | ய<br>அ | ரு<br>எ | ம<br>ங |
| ய<br>அ | ரு<br>எ | ம<br>ங | சி<br>ரு | வ<br>க |
| ம<br>ங | சி<br>ரு | வ<br>க | ய<br>அ | ரு<br>எ |

## 3. அட்டகன்ம சக்கரங்கள்

விளக்கம்

1. தம்பனம்: ஒருவன் நிலை மேற்கொண்டு வளராமல் கிளர்ச்சியடையாமல் கட்டி வைப்பது, நிறுத்தி வைப்பது. பூர்வபக்ஷம் இரவில் வடக்கு நோக்கிச் செய்ய வேணடும். குறிப்பிட்ட திதி, வார நட்சத்திரங் களில் செய்ய வேண்டும்.

2. வசியம்: ஒருவரை தன் வசப்படுத்திக் கொள்வது. மனைவிக்குக் கணவனை வசப்படுத்துவது, கணவனுக்கு மனைவியை வசப்படுத்துவது இப்படி நில்ல தேவைக்கேற்பச் செய்வது. பூர்வபக்ஷம் பகலில் கிழக்கு நோக்கிச் செய்வது இதற்கும் இன்னும் வருவன வற்றிற்கும் அதற்குரிய திதி வார நக்ஷத்திரங்களில் செய்ய வேண்டும்.

3. உச்சாடனம்: ஒருவன் நிலையை மேற்கொண்டு கிளர்ச்சியடையச் செய்து நிலைகொள்ளாமல் செய்வது. அமரபக்ஷம் பகலில் மேற்கு நோக்கிச் செய்யவேண்டும்.

4. மோகனம்: தன்னை நோக்கிய அளவில் பிறர் மோகிக்க அதாவது தன்னை யறியாமல் மயங்கி வசப்படுத்தலாகும். பூர்வபக்ஷம் இரவில் வடக்கு நோக்கிச் செய்தல் வேண்டும்.

5 மாரணம்: தனக்கு வேண்டாத பகைவர் உயிர் இறக்கச் செய்வது. அமரபக்ஷம் இரவில் தெற்கு நோக்கிச் செய்ய வேண்டும்.

6. பேதனம்: தனக்கு வேண்டாத இருவர் அல்லது பலருக்குள்ளும் தமக்குள் பேதம் அல்லது பகை கொள்ளச் செய்வது. அமரபட்சம் இரவில் தெற்கு நோக்கிச் செய்க.

7. ஆக்ருஷணம்: பிறர் யாரும் தன்பால் ஈர்த்துக் கொள்ளச் செய்வது. பூர்வ பக்ஷம் பகலில் கிழக்கு நோக்கிச் செய்யவேண்டும்.

8. வித்வேஷணம்: பகைவர் பலர் தன் முன் பகை கொள்ளச் செய்வது அமர பக்ஷம் பகலில் மேற்கு நோக்கிச் செய்ய வேண்டும்.

பஞ்சபட்சிகளுக்கும் பிறை, வட்டம், முக்கோணம், சதுரம், அறுகோணம் போன்ற தனிச்சக்கரங்கள், அவற்றிற்குத் தனி மந்திரங்கள் இவற்றை அந்தந்த பக்ஷிகளின் தன்மைக்கேற்ப அவற்றை மேற்படி சக்கரங்களின் உள்ளே எழுதி உரிய பலகை அல்லது தங்கம், செம்பு, ஈயம் போன்ற சொல்லப்பட்ட தகடுகளில் எழுதி உருவேற்றி உயிரூட்டி வழிபட வேண்டும். காரியம் சித்திக்கும். இவை எல்லாம் உரிய குருமூலம் பெற வேண்டும்.

தீச்செயல்களாகிய மாரணம், வித்வேஷணம், பேதனம் போன்றவற்றை தான் விரும்பிச் செய்யாதிருத்தலே தருமம், அறம் என்று சித்தர்கள் கூறுகிறார்கள். எனவே இவற்றைத் தன்னை மீறி நடக்கும்போது ஊழ்வினை என்று தன் போக்கில் நடக்க விட வேண்டும். இனி வாரத்தின் ஏழு நாட்களிலும் ஒவ்வொரு கிழமையிலும் செய்ய வேண்டிய கர்மங்கள் பற்றி, திதி நட்சத்திரம் முதலியவற்றுடன் கீழ் கொடுக்கப்படுகின்றன. இவை ''பஞ்சபட்சி பலத்திரட்டு சுவடி எண் 868லும், மற்றும் ''உரோமரிக்ஷி வினாடி பஞ்சபட்சி'' அட்ட கன்மப் படலத்துள் சொல்லியவற்றை யும் இணைத்துப் பதகங்களாக அமைக்கப்பட்டுள்ளன.

## அட்டகருமப் பதகம் ஞாயிற்றுக் கிழமை

| நட்சத்திரம் | திதி | லக்னம் | கன்மம் |
|---|---|---|---|
| அசுவதி | சஷ்டி | மிதுனம் | மோகனம் |
| பரணி | ஏகாதசி | கடகம் | தம்பனம் |
| கார்த்திகை | துதிகை | சிங்கம் | வித்வேஷணம் |
| ரோகிணி | சத்தமி | கன்னி | பேதனம் |
| மிருகசீரிடம் | துவாதசி | துலாம் | உச்சாடனம் |
| திருவாதிரை | திருதிகை | விருச்சிகம் | மாரணம் |
| புனர்பூசம் | அஷ்டமி | தனுசு | வசியம் |
| பூசம் | திரயோதசி | மகரம் | ஆக்ருஷணம் |
| ஆயில்யம் | திருதியை | கும்பம் | மோகனம் |
| மகம் | நவமி | மீனம் | தம்பனம் |
| பூரம் | அமாவாசை | மேஷம் | வித்வேஷணம் |
| உத்திரம் | பஞ்சமி | ரிஷபம் | மோகனம் |
| அஸ்தம் | தசமி | மிதுனம் | உச்சாடனம் |
| சித்திரை | அமாவாசை | கடகம் | மாரணம் |
| சுவாதி | சஷ்டி | சிங்கம் | வசியம் |
| விசாகம் | பிரதமை | கடகம் | மாரணம் |
| அனுஷம் | சஷ்டி | சிங்கம் | வசியம் |
| கேட்டை | ஏகாதசி | கன்னி | ஆக்ருஷணம் |
| மூலம் | துதிகை | துலாம் | மோகனம் |
| பூராடம் | சத்தமி | விருச்சிகம் | தம்பனம் |
| உத்திராடம் | துவாதசி | தனுசு | வித்வேஷணம் |
| திருவோணம் | திருதிகை | மகரம் | பேதனம் |
| அவிட்டம் | அஷ்டமி | கும்பம் | உச்சாடனம் |
| சதயம் | சதுர்த்தி | மேஷம் | வசியம் |
| பூரட்டாதி | நவமி | கடகம் | ஆக்ருஷணம் |
| உத்திரட்டாதி | திரியோதசி | மீனம் | மாரணம் |
| ரேவதி | சதுர்த்தசி | மிதுனம் | மோகனம் |

## திங்கட்கிழமை

| நட்சத்திரம் | திதி | லக்னம் | கன்மம் |
|---|---|---|---|
| அசுவனி | பஞ்சமி | கடகம் | தம்பனம் |
| பரணி | தசமி | சிங்கம் | வித்வேஷணம் |
| கார்த்திகை | அமாவாசை | கன்னி | பேதனம் |
| ரோகிணி | பிரதமை | துலாம் | உச்சாடனம் |
| மிருகசீரிடம் | சஷ்டி | விருச்சிகம் | மாரணம் |
| திருவாதிரை | ஏகாதசி | தனுசு | வசியம் |
| புனர்பூசம் | துதிகை | மகரம் | ஆத்ருஷணம் |
| பூசம் | சத்தமி | கும்பம் | மோகனம் |
| ஆயில்யம் | துவாதசி | மீனம் | தம்பனம் |
| மகம் | திருதிகை | மேஷம் | வித்வேஷணம் |
| பூரம் | அஷ்டமி | ரிஷபம் | பேதனம் |
| உத்திரம் | திரயோதசி | மிதுனம் | உச்சாடனம் |
| அஸ்தம் | சதுர்த்தி | கடகம் | மாரணம் |
| சித்திரை | சதுர்த்தசி | கன்னி | ஆக்ருஷணம் |
| சுவாதி | நவமி | சிங்கம் | வசியம் |
| விசாகம் | பஞ்சமி | துலாம் | மோகனம் |
| அனுஷம் | தசமி | விருச்சிகம் | தம்பனம் |
| கேட்டை | அமாவாசை | தனுசு | வித்வேஷணம் |
| மூலம் | பிரதமை | மிதுனம் | பேதனம் |
| பூராடம் | சஷ்டி | கும்பம் | உச்சாடனம் |
| உத்திராடம் | எகாதசி | மீனம் | மாரணம் |
| திருவோணம் | துதிகை | மேஷம் | வசியம் |
| அவிட்டம் | சத்தமி | ரிஷபம் | ஆக்ருஷணம் |
| சதயம் | திரயோதசி | கன்னி | பேதனம் |
| பூரட்டாதி | அஷ்டமி | சிங்கம் | வித்வேஷணம் |
| உத்திரட்டாதி | துவாதசி | மிதுனம் | மோகனம் |
| ரேவதி | திருதிகை | கடகம் | தம்பனம் |

## செவ்வாய்க்கிழமை

| நட்சத்திரம் | திதி | லக்னம் | கன்மம் |
|---|---|---|---|
| அசுவனி | சதுர்த்தி | துலாம் | உச்சாடனம் |
| பரணி | நவமி | விருச்சிகம் | மாரணம் |
| கார்த்திகை | சதுர்த்தசி | தனுசு | வசியம் |
| ரோகிணி | பஞ்சமி | மகரம் | ஆக்ருஷணம் |
| மிருகசீரிடம் | தசமி | கும்பம் | மோகனம் |
| திருவாதிரை | அமாவாசை | மீனம் | தம்பனம் |
| புனர்பூசம் | பிரதமை | மேஷம் | வித்வேஷணம் |
| ஆயில்யம் | சஷ்டி | ரிஷபம் | பேதனம் |
| மகம் | ஏகாதசி | மிதுனம் | உச்சாடனம் |
| பூரம் | துதிகை | கடகம் | மாரணம் |
| பூசம் | சத்தமி | சிங்கம் | வசியம் |
| உத்திரம் | துவாதசி | கன்னி | ஆக்ருஷணம் |
| அஸ்தம் | திரிதிகை | துலாம் | மோகனம் |
| சித்திரை | திரயோதசி | தனுசு | வித்வேஷணம் |
| சுவாதி | அஷ்டமி | விருச்சிகம் | தம்பனம் |
| விசாகம் | சதுர்த்தி | மிதுனம் | மாரணம் |
| அனுஷம் | நவமி | கும்பம் | உச்சாடனம் |
| கேட்டை | சதுர்த்தசி | மீனம் | மாரணம் |
| மூலம் | பஞ்சமி | ரிஷபம் | வசியம் |
| பூராடம் | தசமி | ரிஷபம் | ஆக்ருஷணம் |
| உத்திராடம் | அமாவாசை | மிதுனம் | மோகனம் |
| திருவோணம் | பிரதமை | கடகம் | தம்பனம் |
| அவிட்டம் | சஷ்டி | சிங்கம் | வித்வேஷணம் |
| சதயம் | திரிதிகை | துலாம் | உச்சாடனம் |
| பூரட்டாதி | சத்தமி | விருச்சிகம் | மாரணம் |
| உத்திரட்டாதி | ஏகாதசி | கன்னி | பேதனம் |
| ரேவதி | துவாதசி | தனுசு | வசியம் |

## புதன் கிழமை

| நட்சத்திரம் | திதி | லக்னம் | கன்மம் |
|---|---|---|---|
| அசுவனி | திரிதிகை | மகரம் | ஆக்ருஷணம் |
| பரணி | அஷ்டமி | கும்பம் | மோகனம் |
| கார்த்திகை | திரயோதசி | மீனம் | தம்பனம் |
| ரோகிணி | சதுர்த்தி | மேஷம் | வித்வேஷணம் |
| மிருகசீரிடம் | நவமி | ரிஷபம் | பேதனம் |
| திருவாதிரை | சதுர்த்தசி | மிதுனம் | உச்சாடனம் |
| புனர்பூசம் | பஞ்சமி | கடகம் | மாரணம் |
| பூசம் | தசமி | சிங்கம் | வசியம் |
| ஆயில்யம் | அமாவாசை | கன்னி | ஆக்ருஷணம் |
| மகம் | பிரதமை | துலாம் | மோகனம் |
| பூரம் | சஷ்டி | விருச்சிகம் | தம்பனம் |
| உத்திரம் | ஏகாதசி | தனுசு | வித்வேஷணம் |
| அஸ்தம் | துதிகை | மகரம் | பேதனம் |
| சித்திரை | துவாதசி | மீனம் | மாரணம் |
| சுவாதி | சத்தமி | கும்பம் | உச்சாடனம் |
| விசாகம் | திரிதிகை | மேஷம் | வசியம் |
| அனுஷம் | அஷ்டமி | ரிஷபம் | ஆக்ருஷணம் |
| கேட்டை | திரியோதசி | மிதுனம் | மோகனம் |
| மூலம் | சதுர்த்தி | கடகம் | தம்பனம் |
| பூராடம் | நவமி | சிங்கம் | வித்வேஷணம் |
| உத்திராடம் | சதுர்த்தசி | கன்னி | பேதனம் |
| திருவோணம் | பஞ்சமி | துலாம் | உச்சாடனம் |
| அவிட்டம் | தசமி | விருச்சிகம் | மாரணம் |
| சதயம் | பிரதமை | மகரம் | ஆக்ருஷணம் |
| பூரட்டாதி | சஷ்டி | கும்பம் | மோகனம் |
| உத்திரட்டாதி | அமாவாசை | தனுசு | வசியம் |
| ரேவதி | ஏகாதசி | மீனம் | தம்பனம் |

## வியாழக்கிழமை

| நட்சத்திரம் | திதி | லக்னம் | கன்மம் |
|---|---|---|---|
| அசுவனி | துதிகை | மேஷம் | வித்வேஷணம் |
| பரணி | சத்தமி | ரிஷபம் | பேதனம் |
| கார்த்திகை | துவாதசி | மிதுனம் | உச்சாடனம் |
| ரோகிணி | திரிதிகை | கடகம் | மாரணம் |
| மிருகசீரிடம் | அஷ்டமி | சிங்கம் | வசியம் |
| திருவாதிரை | திரயோதசி | கன்னி | ஆக்ருஷணம் |
| புனர்பூசம் | சதுர்த்தி | துலாம் | மோகனம் |
| பூசம் | நவமி | விருச்சிகம் | தம்பனம் |
| ஆயில்யம் | சதுர்த்தசி | தனுசு | வித்வேஷணம் |
| மகம் | பஞ்சமி | மகரம் | பேதனம் |
| பூரம் | தசமி | கும்பம் | உச்சாடனம் |
| உத்திரம் | அமாவாசை | மீனம் | மாரணம் |
| அஸ்தம் | பிரதமை | மேஷம் | வசியம் |
| சித்திரை | ஏகாதசி | மிதுனம் | மோகனம் |
| சுவாதி | திருதிகை | ரிஷபம் | பேதனம் |
| விசாகம் | துதிகை | கடகம் | தம்பனம் |
| அனுஷம் | சத்தமி | சிங்கம் | வித்வேஷணம் |
| கேட்டை | துவாதசி | கன்னி | பேதனம் |
| மூலம் | திருதிகை | துலாம் | உச்சாடனம் |
| பூராடம் | அஷ்டமி | விருச்சிகம் | மாரணம் |
| உத்திராடம் | திரயோதசி | தனுசு | வசியம் |
| திருவோணம் | சதுர்த்தசி | மகரம் | ஆக்ருஷணம் |
| அவிட்டம் | நவமி | கும்பம் | மேகனம் |
| சதயம் | பஞ்சமி | மேஷம் | வித்வேஷணம் |
| பூரட்டாதி | தசமி | ரிஷபம் | பேதனம் |
| உத்திரட்டாதி | சதுர்த்தசி | மீனம் | தம்பனம் |
| ரேவதி | துதிகை | துலாம் | மோகனம் |

## வெள்ளிக்கிழமை

| நட்சத்திரம் | திதி | லக்னம் | கன்மம் |
|---|---|---|---|
| அசுவதி | பிரதமை | கன்னி | மாரணம் |
| பரணி | சஷ்டி | சிங்கம் | வசியம் |
| கார்த்திகை | ஏகாதசி | கன்னி | ஆக்ருஷணம் |
| ரோகிணி | துதிகை | துலாம் | மோகனம் |
| மிருகசீரிடம் | சத்தமி | விருச்சிகம் | தம்பனம் |
| திருவாதிரை | துவாதசி | தனுசு | வித்வேஷணம் |
| புனர்பூசம் | திரிதிகை | மகரம் | பேதனம் |
| பூசம் | அஷ்டமி | கும்பம் | உச்சாடனம் |
| ஆயில்யம் | ஏகாதசி | மீனம் | மாரணம் |
| மகம் | சதுர்த்தி | மேஷம் | வசியம் |
| பூரம் | நவமி | ரிஷபம் | ஆக்ருஷணம் |
| உத்திரம் | சதுர்த்தசி | மிதுனம் | மோகனம் |
| அஸ்தம் | பஞ்சமி | கடகம் | தம்பனம் |
| சித்திரை | அமாவாசை | கன்னி | பேதனம் |
| சுவாதி | தசமி | சிங்கம் | வித்வேஷணம் |
| விசாகம் | பிரதமை | துலாம் | உச்சாடனம் |
| அனுஷம் | சஷ்டி | விருச்சிகம் | மாரணம் |
| கேட்டை | ஏகாசி | தனுசு | வசியம் |
| மூலம் | துதிகை | மகரம் | ஆக்ருஷணம் |
| பூராடம் | சத்தமி | கும்பம் | மோகனம் |
| உத்திராடம் | துவாதசி | மீனம் | தம்பனம் |
| திருவோணம் | திரிதிகை | மேஷம் | வித்ஷேணம் |
| அவிட்டம் | பஞ்சமி | தனுசு | பேதனம் |
| சதயம் | திரயோதசி | மிதுனம் | உச்சாடனம் |
| பூரட்டாதி | சதுர்த்தி | கடகம் | மாரணம் |
| உத்திரட்டாதி | நவமி | சிங்கம் | வசியம் |
| ரேவதி | சதுர்த்தசி | கன்னி | ஆக்ருஷணம் |

சனிக்கிழமை

| நட்சத்திரம் | திதி | லக்னம் | கன்மம் |
|---|---|---|---|
| அசுவனி | பஞ்சமி | துலாம் | மோகனம் |
| பரணி | தசமி | விருச்சிகம் | தம்பனம் |
| கார்த்திகை | அமாவாசை | தனுசு | வித்வேஷணம் |
| ரோகிணி | பிரதமை | மகரம் | பேதனம் |
| மிருகசீரிடம் | சஷ்டி | கும்பம் | உச்சாடனம் |
| திருவாதிரை | ஏகாதசி | மீனம் | மாரணம் |
| புனர்பூசம் | துதிகை | மேஷம் | வசியம் |
| பூசம் | சத்தமி | ரிஷபம் | ஆத்ருஷணம் |
| ஆயில்யம் | துவாதசி | மிதுனம் | மோகனம் |
| மகம் | திரிதிகை | கடகம் | தம்பனம் |
| பூரம் | அஷ்டமி | சிங்கம் | வித்வேஷணம் |
| உத்திரம் | திரயோதசி | கன்னி | பேதனம் |
| அஸ்தம் | சதுர்த்தி | துலாம் | உச்சாடனம் |
| சித்திரை | சதுர்த்தசி | தனுசு | வசியம் |
| சுவாதி | நவமி | விருச்சிகம் | மாரணம் |
| விசாகம் | பஞ்சமி | தனுசு | ஆக்ருஷணம் |
| அனுஷம் | தசமி | கும்பம் | மோகனம் |
| கேட்டை | அமாவாசை | மீனம் | தம்பனம் |
| மூலம் | பிரதமை | மேஷம் | வித்வேஷணம் |
| பூராடம் | சஷ்டி | ரிஷபம் | பேதனம் |
| உத்திராடம் | எகாதசி | மிதுனம் | உச்சாடனம் |
| திருவோணம் | துதிகை | கடகம் | மாரணம் |
| அவிட்டம் | சத்தமி | சிங்கம் | வசியம் |
| சதயம் | திரிதிகை | துலாம் | மோகனம் |
| பூரட்டாதி | அஷ்டமி | விருச்சிகம் | தம்பனம் |
| உத்திரட்டாதி | துவாதசி | கன்னி | ஆக்ருஷணம் |
| ரேவதி | திரயோதசி | தனுசு | வித்வேஷணம் |

# 17 அட்சர மாறல் படலம்

இப்படலத்திலுள்ள செய்திகளும் ''உரோமரிஷி வினாடி பஞ்சபட்சி'' நூலிலிருந்து எடுத்தெழுதப்பட்டுள்ளது. வழக்கம் போல விளக்கம் உரையாசிரியருடையவை.

## தொடர்பு விளக்கம்

அட்ட கன்மம் செய்வதற்குப் பஞ்சாட்சரத்தைப் பயன்படுத்தும் முறை மிகப்பழைய காலத்திலிருந்தே பின்பற்றி வரப்பட்டுள்ள சித்தர்கள் மரபாகும். மந்திரம் செயல்படும் தன்மை, யந்திரம் செயல்படும் தன்மை இவற்றை இந்நூலில் பலபடியாக விளக்கியுள்ளோம்.

இவற்றைச் செய்வதற்கு ஒருவன் தன்னைச் சித்தனாக்கிக் கொள்ள வேண்டும். வாசியோகம் குண்டலியோகம் உணவுக் கட்டுப்பாடு தவநிலை மனவொழுக்கம் முதலியவற்றால் தன்னை உயர்த்திக் கொள்ளவேண்டும். ஒருவரைக் கெடுக்கவோ தண்டிக்கவோ மாரணம் முதலியவை செய்யக் கூடாது. இசைநூலில் பல்காலும் எச்சரித்துள்ளோம்.

முதலில் வெளியில் அட்டகன்மங்களில் ஒவ்வொன்றுக்கு யந்திரம் எழுதிவைத்து உருவேற்றி மூலிகைவேர் முதலியவற்றையும் செய்வதற்கு முன் பஞ்சாட்சரத்தை, அதன் சொல்லப்படும் வரிசையில் வெவ்வேறு வகையாக கால், தலைமாறல் கடையெழுத்து முதலெழுத்தாய் வரல், இடை தலைமாறல், நடு எழுத்து முதலாவதாக மாறல், முதல் எழுத்திலிருந்து ஒவ்வொன்றையும் முதலாக வைத்து அடுத்தடுத்து வைத்த எழுத்தைக் கடையில் வைத்து இப்படிப் பல முறைகளில் பஞ்சாட்சரத்தை உருவேற்றி முழுமுதற்கடவுளை நம் சூக்கும உடலிலுள்ள ஆறாதாரச் சக்கரங்கள் ஒவ்வொன்றிலும் இம்முறை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு ஆதாரச் சக்கரத்திலும் அதற்கு அதி தேவதையாய்ச் செயல்படும் சிவபெருமானின் வெவ்வேறு வடிவங்களை ஒரு முக சிந்தனையுடன் அந்நந்த ஆதாரத்தில் தியானித்து வழிபட்டுச்சித்தி செய்து கொள்ள வேண்டும் என்றும், அதற்கான வழிமுறைகளை, சில இடங்களில் குறிப்பாகவும் சிற்சில இடங்களில் வெளிப்படையாகவும் உரோம ரிஷியார் கூறிச் செல்கிறார். இவை ''கருவூரார் அட்டமா சித்து'' ''திருமந்திர மாலை'' ''திருமூலர் திருமந்திரம்'' முதலிய நூல்களில் சித்தர்கள் பலபடியாக விளக்கியுள்ளனர். இவையாவும் குருமுகமாக வரவேண்டியவை. இதுவரை பட்சி நூல் எழுதிய பலரும் இதை இதனாலேயே வெளிப்படையாக விளக்காமல் போயினர். அப்படி விளக்கினால் தகுதியற்றவர்களுக்கு அது போய்ச்சேருமாயின், பட்சிசாபம், சித்தர்சாபம் முதலியவற்றால் அப்படி விளக்கியவர்கள் அடையும் வினைப்பகுதியால் வரும் கெடுதியை ஞான கருக்கப்படலத்தில் ஆசிரியர் பலவாறாக விளக்கியுள்ளனர்.

மாரணம் முதலிய தீய அட்ட கன்மங்களில் யாரை அழிக்க வேண்டுமோ அவர்களைப்போல் பாவை செய்து (பொம்மை) பஞ்சபூத எழுத்துக்களை அவர் அவர் பிறப்புப் பட்சிகளின் தொழில்கள் தன் பட்சியின் தொழில்கள் முதலியவற்றிற்கேற்ப அப்பாவையில் எழுத்துக்களை அமைத்து ஆணி ஏற்றி தீயவை செய்து புதைத்தல் முதலியகெட்ட தொழில்கள் தொன்றுதொட்டு நடந்து வந்துள்ளன. அதை மேற்கொண்டால் தீரா இழப்பும் அழிவும் தான் ஏற்படும் என்று சித்தர்கள் எச்சரித்துள்ள

னர். இந்த வரம்பிற்குள் நின்று தெரிந்த சிலவற்றை மறைத்தும், நமக்கே புரியாத சிலவற்றை முடிந்தமட்டில் விளக்கியும் எழுதியுள்ளேன். இதனால் நான் எல்லம் தெரிந்தவன் என்றோ, சித்தன் என்றோ கொள்ள வேண்டாம். தெரிந்தவற்றை எழுதினால் வேறு நன்கு தெரிந்தவர்கள் விளக்க வரலாம்.

அல்லது நம் காலத்திற்குப் பின் சிறந்த ஞானியார் பிறக்கலாம், விளக்கலாம் என்ற எண்ணத்துடன் தான் இவ்வளவும் எழுதுகிறேன். தெரிந்தவர்கள் பயன்படுத்திக் கொள்ளட்டும். தெரியாதவர்கள் தக்க ஆசான்களை நாடி விளக்கம் பெறாது இது தொடர்பாக நமக்கு எதுவும் எழுத வேண்டாம். இனி தெரிந்த வரையில் இப்படலப் பாடல்களை விளக்க முற்படுகிறேன்.

இதற்கு முன் இந்தப் படலத்தில் குறிப்பாகக் கூறப்பட்டுள்ள குண்டலி யோகத்தினைச் சிறிது விளக்க முற்படுகிறேன்.

'மூலாதாரத்து மூண்டெழு கனலைக்
காலால் எழுப்பும் கருத்தறிவித்து'

என்ற வினாயகர் அகவல் கூறும். அதாவது மூலாதாரத்தில் உறங்கிக் கொண்டிருக்கும் 3½ சுற்றுள்ள குண்டலியை வாசி என்ற காற்றால் (காலால்) அதை அடக்கி வாசி யோகத்தால் எழுப்பி உச்சியில் உள்ள சஹஸ்ராரம் வரைப் பாய்ச்சி அங்கு சுரக்கும் அமுதை உண்ணச் செய்வதே யோகமாகும்.

இதையே பிற சித்தர்கள்

''மண்டலவீடுகள் கட்டவேணும்
வாயிற்படிகள் ஏறவேணும்''

என்பார்கள். மண்டல வீடுகளாகிய ஆறாதாரங்களில் உள்ளிட்ட எல்லா மையங்களையும் பிராணன் சலிக்காமல் கட்ட வேணும். அதன் வாயிற்படிகள் ஒவ்வொன்றிலும் கீழிருந்து வரன்முறையே குண்டலியுடன் மூலாதாரம், சுவாதிஷ்டூடானம், மணி பூரகம், அனாஹதம், விசுத்தி, ஆக்ஞை, சஹஸ்ராரம் என்ற படிகளில் ஏறி உச்சியில் கலக்க வேணும் என்று இவ்வரிகள் காட்டுகின்றன.

இதையே கொங்கண நாயனார்

**கையில்லாக் குட்டையன் கட்டிக் கிட்டான்-இரு
காலில்லா நெட்டையன் முட்டிக் கிட்டான்
ஈயில்லாத் தேனெடுத்துண்டு விட்டேன் – அது
இனிக்கு தில்லையே வாலைப்பெண்ணே**

என்றார். பிங்கலை இடகலை என்ற இருபுரவாசியும் கட்டி கையற்ற அதாவது கைமுதலான தோள் நிலைக்கும் கீழாக விசுத்திக்கும் கீழேயும் மூச்சு வராமல் அதன் நீளந்தைக் குறைத்துக் கட்ட வேண்டும். இந்த நிலையில் முதுகுத்தண்டுநெடுகிலும் தன் வழியை நெட்டையாக நீளமற்று இரண்டு காலுமற்று நெட்டையான சுழுமுனையுட் பிராணனை செலுத்தி உச்சியில் முட்டிக் கிட்டால் அதுவே குண்டலியோகமாகும். அப்போழுது மேலே சுரக்கும் தேனில் ஈ மொய்க்காது. அது இந்த உலகக்தேன் போன்றதல்ல. அதுபோல் அன்றி மிகவும் அதிகமாக இனிப்பதை ''ஆத்மாவாகிய சீவன் உண்டு விட்டான்'' என்பதே மேலே உள்ள வரிகள் காட்டுகின்றன. இதையே தாயுமானார்.

"எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான்
யாதினும் அரிதரிது காண்
இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ
யாது வருமோ அறிகிலேன்
கண்ணகமிடத்து நான் உள்ளபொழுதே அருள்
ககனுத்திருந்து வட்டக்
காலூன்றி நின்ற மொழி ஆனந்த முகிலோடு
கலந்துமதி அவசமுறவே
பண்ணுவது நன்மை யிப்பதி நிலையு மட்டுமே
பதியாய் இருந்த தேகம்
பவுரி குலையாமலே கவுரி குண்டலி ஆயி
பண்ணவிதன் அருளினாலே
விண்ணிலவு பொழியமுதம் ஒழியாது பருகவே
வேண்டுவன் உனதடிமையான்"
வேதாந்த சித்தாந்த சமரசந் நிலைபெற்ற
வித்தகர் சித்தச் கணமே.

,,மானிடப் பிறவி அரிது. இரு கண்களிடையே என் சீவனான எண்ணத்தினை நிறுத்தி மேலிருந்து (ககனம்) சஹஸ்ராரத்தின் வட்ட மையத்தில் இருந்து கீழே குண்டலியில் காலூன்றி காற்றைப் பிராணனை ஊன்றி அதில் தன்னை இழந்து மனது வசமாகிப் பண்ணாகிய நாதத்தை உள்ளே கேட்டு அதனால் புற அடக்கம் ஏற்பட்டபோது குண்டலிமேல் சென்று நிமிர்ந்து உச்சியில் சஹஸ்ராரத்தில் முட்டும் போது அதனால் ஒழுகும் ஆனந்தத் தேனை விண்ணின் முழு நிலவானசஹஸ்ராரத்தின்" அமுதத்தை ஓயாது பருக விரும்புகிறேன் என்று கூறுகிறார். இந்த நிலையில் ஒருவன் பெண்ணிடம் பெறும் சிற்றின்பம் சிறிது காலத்திற்கே நிலைப்பது போலன்றி• சமாதி குண்டலி யோகநிலை இருக்கும் அளவும் நிலைத்து நீடித்து உடலெல்லாம் மின்சாரம் பாய்ந்தது போன்ற பேரின்ப உணர்வு இருந்து கொண்டே இருக்கும். எனவே இந்த நிலை அடைந்தவன் மிண்டும் பெண்ணின்பத்தை விரும்ப மாட்டான் இதையே

"மாதர் போகத்தையும் சாதி பேதத்தையும் தள்ளிவைத்து சமாதி"

என்று தாயுமானார் மீண்டும் வற்புறுத்துவார்.

எனவே வாசியோகம் தக்கார் பால் கற்றுத் தன்னை உயர்த்திக் கொள்ள வேண்டும். பிராணன் அல்லது வாசி கட்டுப்பட்டாலே குண்டலி அம்மை மேலெழுவாள். இது சித்தர்கள் கண்ட அனுபவம் இதன் நெறி முறைகளைப் படிப் படியாக விளக்குவதானால் நூல் பெருகும். எனவே இதனை இத்துடன் நிறுத்திக் கொண்டு பஞ்சபட்சியைப் பொருத்தவரையில் ஆறாதாரம் ஒவ்வொன்றிலும் பஞ்சாக்கர எழுத்துக்களை முறை மாற்றி ஒலித்துத் தியானித்து செய்யும் வாசியோக நெறியைக் கோடிட்டுக் குறிப்பாகக் காட்டுவோம்.

## அட்டகன்மத்தில் அக்ஷரங்கள் இரண்டு பக்ஷங்களுக்கும் மாற்றி ஒலிக்கும் உருவேற்றும் விதம்

262. தோணுமே உலகிலுள்ள அட்சரத்துக் கெல்லாம்
தோணாத பஞ்சபட்சி சூட்சம் தோணும்
காணும்ஒரு கருக்குருவும் காணாது பாரு
கடினமாடா ஆசானும் காட்ட வேணும்
பேணுமே மனதுறுதி யாக வேணும்
பிசகினால் பட்சிவித்தைப் பிசகிப் போகும்
ஆணுமே அட்சரங்கள் அறிய வேணும்
அறிவதுதான் வெகு நினைவாய் செலுத்து வாயே.

உலகில் எல்லா மொழிகளிலும் உள்ள அட்சரங்கள் பொதுவேயாம். இவற்றில் பஞ்பட்சியின் சூட்சுமம் ஒளிந்து கொண்டிருக்கிறது. இதைத் தக்க குருதான் காட்ட வேணும். இது பிசகி விட்டால் பட்சி வித்தை பலிக்காது. எனவே உடலில் இவ்வட்சரங்கள் இருக்கும் அல்லது ஒலிக்கும் முறையை அறிந்து கொள்வாயாக என்பதாம்.

263. செலுத்துவாய் பூருவத்தின் பகலுக் கப்பா
திடமான ஆகிருடணம் வசியம் இரண்டு
வழுத்துவாய் பூருவத்தின் இரவு தன்னில்
வளமான மோகனமும் தம்பனமும் ஆகும்
பழுத்துவாய் அமரத்தின் பகலுக் கப்பா
பவகயானஉட் சாடனமும்வித் வேஷணமும் ஆகும்
கொழுத்துவாய் அமரத்தின் இரவு தன்னில்
குடிகெடுத்த மாரணமும் பேதனமும் தானே.

(இ-ள்): வளர்பிறை பகலில் ஆகிருடணம் வசியம் ஆகிய இரண்டும் செய்யலாகும். வளர்பிறை இரவில் மோகனமும் தம்பனமும் செய்க. தேய்பிறை பகலில் வித்வேஷணமும், உச்சாடணமும், தேய்பிறை இரவில் மாரணமும் பேதனமும் செய்க என்பதாம்.

264. ஆகுமே பூருவத்தின் பகலுக் கப்பா
அதுசரி நீ கடைநிலையைப் பிடித்து மாறு
போகுமே பூருவத்தின் இரவு தன்னில்
பொல்லாத நாலெழுத்தின் மாறலை நீஓது
ஏகுமே அமரத்தின் பகலுக் கப்பா
என்ன சொல்வேன் இரண்டெழுத்தின் மாறலை நீஓது
வேகுமே அமரத்தின் இரவு தன்னில்
வெட்டவெளி யாகிவிடும் நடுத்தலை நீ மாறே.

(இ-ள்) பூர்வபட்ச பகல் தொழில் செய்யும்போது அதாவது ஆகிருடணம் வசியம் இரண்டுக்கும் 'நமசிவய' என்பதில் கடை எழுத்தாகிய 'ய' என்பதை முதலா வதாக வைத்து ''யநமசிவ'' என்று மாற்றி ஒலித்து அத்தொழில்களைச் செய்வாய். இங்கே 'ய' வுக்குரிய நெற்றிப்புருவ மையத்தில் நினைவை நிறுத்தி அத்தொழிலைச் செய்ய வேண்டும் என்று ஏற்படும். இனி சொல்லப்போவதற்கும் அப்படியே கொள்ள வேண்டும்.

பூர்வபட்ச இரவுக்கு நாலாவது எழுத்தான 'வ' வை ஆரம்பித்து ''வயநமசி'' என்று ஒலித்து மோகனமும் தம்பனமும் செய்யலாகும். இங்கே 'வ' வுக்குரிய விசுத்தி என்ற ஆதாரத்தில் நினைவு இருக்க வேண்டும்.

அமர பட்சம் பகல் தொழிலில் இரண்டாவது எழுத்தான 'ம' வை முதலில் வைத்து ஆரம்பித்து ''மசிவயந'' என்று சொல்ல வேண்டும். இது 'ம'வுக்குரிய ''சுவாதிஷ்டானம்'' ஆதாரத்தில் ஒலிக்க வேண்டும் என்றாகிறது.

அமரபக்கம் இரவில் நடு எழுத்தான 'சி' என்பதை முதலாக வைத்து ''சிவயநம'' என்று மாற்றி உருவேற்றி நினைவை, 'அனாகதத்' தில் நிறுத்த வேண்டும்.

265. மாறிவரும் மாரணமும் பேதனமும் தெற்கு
வகையானவித் வேஷணமும் உட்சாடனமும் மேற்கு
கோறியிடும் தம்பனமும் மோகனமும் வடக்கு
குலவுகின்ற ஆகிருடணமும் வசியமதும் கிழக்கு
வாரிவிடும் தொழிலை அங்கே தனித்திருந்து பாரு
வணங்குவாய உலகத்தோர் மனதறிந்து சொல்லு
நீரிவிடும் பாவத்துக் காளா காதே
நிமிஷத்தில் எதிரியுடல் நீரிப்போமே.

தொழில்களில் மாரணம், பேதனம் இவற்றைத் தெற்கு நோக்கிச் செய்க. வித்வேஷணமும் உச்சாடனமும் மேற்கு நோக்கிச் செய்க. தம்பனமும் மோகனமும் வடக்கு நோக்கிச் செய்க. ஆகிருடணமும் வசியமும் கிழக்கு நோக்கிச் செய்க. தொழிலைத் தனித்திருந்து யோக நிலையில் இருந்து தொண்டு செய். உலகத்தவர் கேட்பதை மட்டும் அவர் மனதறிந்துச் சொல்வாயாக. வீண் கெட்ட கர்மங்களுக்கு ஈடுபட்டுப் பாவங்களுக்கு ஆளாகாதே. நீ முறைப்படி 'மாரணம்' செய்தால் எதிரியின் உடல் சாம்பலாகி விடும். இது உண்மை என்பதாம்.

266. போகுமே அட்டகன்மம் இதற்கீ டில்லை
பொல்லாத கருத்தொழிலும் இதற்கீ டில்லை
ஆகுமே சல்லியங்கள் ஒட்டி யங்கள்
அணுகாது தொட்டியத்தில் அவர்க்கெல் லாம்தான்
சாகுமே மந்திரியும் தணங்கள் பூதங்கள் தான்
சண்டாளப் பிசாசு முதல் ஐயன் துர்க்கை
வேகுமே பட்சிவித்தை கண்ட போதே
மேலான வித்தை யென்று மெச்சி னாரே.

பட்சி வித்தை அட்ட கன்மத்திற்கு ஈடு வேறு ஒன்று இல்லை. கருவைத் தொட்டுச் செய்யும் ஆணியப் பாவையில் ஆணி அடித்துச் செய்யும் சல்லியம், பாவையை ஒட்டியும், தொட்டும் செய்யும் ஒட்டியம் தொட்டியம் முதலிய தீவினைகள் கணங்கள், பூதங்கள், பிசாசுகள், ஐயனார், துர்க்கை இத்தேவதைகளை முதலாக வைத்துச் செய்த கெடுவினைகள் எல்லாம் பட்சி வித்தை செய்பவனைக் கண்டவுடன் ஓடிப்போகும்.

267. மெச்சினார் பதினெண்பேர் சித்த ரெல்லாம்
வெகு கோடி ரிஷிகளெல்லாம் மெச்சி னார்கள்
கொச்சினார் உலகத்தில் அனந்தம் கோடி
கூர்மையுள்ள மனமுள்ளோர் கரண வேறும்
பட்சி என்ற தொழிலைத்தான் பார்த்த பேர்க்கு
பகையில்லை ஒரு நாளும் பகைத்தோ ரில்லை
இலட்சிய மென்ற ஆயுதமான நடக்கம் செய்தால்
மற்றவித்தை நிமிடத்தில் வரும்பார் நவிலு வேனே.

பதினெண் சித்தர்களும், ரிஷிகள் பலரும் இந்த பட்சி வித்தையைத் மெச்சியுள்ளனர். கொச்சை வாழ்வு வாழ்ந்து போகும் அனந்த கோடி உலகினர்க்கு இது தெரியாது. நிலைக்கும் அசையாத கூர்மையுள்ள மனமுள்ளோர் தான் இதைச் சாதிக்க முடியும். பட்சிவித்தை தெரிந்தவர்களுக்குப் பகையும் இல்லை. இவர்களை யாரும் பகைப்ப தவும் இல்லை. தன் இலட்சியமானதை வைத்து மனதடக்கி இத்தொழில் கற்றவர் களுக்கு மற்ற எல்லா வித்தைகளும் நிமிஷத்தில் வந்துவிடும், தெரிந்து கொள்வார் என்பதாம்.

## 1. மூலாதாரத்துள் பட்சி வித்தை பலிக்கும் விதம்

### பிரமன் பிருதிவியின் வீட்டு அக்ஷரம்

(இது மூலாதாரப் படம் காண்க)

268. நவிலுவேன் உருவை இங்கே வகுத்துக் கொண்டு
நாட்டடா பிருதுவியில் நாற்கோணவீடு
நவிலுவேன் நான்முகன்தன் பீசம் வைத்து
தப்பாமல் 'அங்'' கென்றும் 'நங்' கென்றும் தான்
மவிலுவேன் ரெண்டெழுத்து கோசம் பீசம்
வைத்துமே ரெண்டெழுத்து கொண்டே ஓது
அவிலுவேன் கருவை இங்கே தொட்டுக் கொண்டு
அப்பனே ஓதிப்பார் பலிக்கும் பாரே.

பிருதிவிக்குரிய மூலாதாரத்தில் நாற்கோணயந்திரத்தை எண்ணி பிரமனை ஆவாகனம் பண்ணு. அவன் பீசங்களான 'அங் நங்' என்ற எழுத்துக்களை அங்கே நட்டு இந்த இரண்டாவது எழுத்தை முதலில் வைத்து 'மசிவயந' என்று உருவேற்று. உன் மூலாதாரத்தை நினைவால் தொட்டுக் கொண்டு இப்படி ஐந்தெழுத்தை ஓதிப்பார். உன் தொழில் தவறாமல் பலிக்கும் என்பதாம்.

# ஒன்று

## குண்டலி வாசியோகம்-மூலாதாரம்

இது குத ஸ்தானம். குதம் என்றால் உடம்பிலுள்ள மலவாய். உடலுக்கு முதல் ஆதாரம் ஆனதால் மூலாதாரம் என்று உண்டாயிற்று. இது பிருதிவி (மண்) தத்துவமாகும். கால் எலும்பு இரண்டும் கதிரெலும்பும் கூடும் குய்யத்திற்கும் (அதாவது ஆண்குறி அல்லது பெண்குறி எனப்படும் உடம்பின் மர்மஸ்தானத்திற்கும்) குதத்திற்கும் (மலவாய்க்கும்) நடுவே, குண்டலி வட்டமாய், அந்த வட்டத்தின் நடுவே திரிகோண வடிவமாய், அந்தத் திரிகோணத்துக்கு நடுவே இதழ்களுள்ள ஒரு மலர்வட்டமாகக் கடப்பம்பூபோல் அமைந்திருக்கும். அந்த மலருக்கு நடுவில் ஓங்கார எழுத்து மலர்ந்து நிற்கும். அந்த ராத்தின் நடுவே விக்கினேஸ்வரரும். வல்லபை சூக்தியும் வீற்றிருப்பர். இதைப் பொன்னிறமும், நான்கு அட்சரங்களோடு கூடிய நான்கு கமலமாகவும் தியானிக்கவேண்டும்.




குண்டலி வட்டம்
முக்கோணம்
நான்கு இதழ் கமலம்
மாணிக்க நிறம்
கணபதி
குண்டலினி சக்தி
ஓங்காரம்

இவையெல்லாம் அவ்வவ்விடத்தில் தோன்றுவது போலிருக்கும்.

இவ்வாதார பட்சி வித்தை பிரயோகம் ''நவிலுவேன்", ''அழிந்திடுவார்" ''பகையாது'' என்று தொடங்கும் செய்யுட்களில் கூறப்பட்டுள்ளன.

இவ்வாதார சக்கரம் ''பலிக்குமடா"''பாரப்பா அம்புவுக்கு" என்று தொடங்கும் செய்யுட்களில கூறப்படுகிறது.

## இரண்டு

### சுவாதிஷ்டானம்

மூலாதாரத்திற்கு இரண்டுவிரற்கடைக்குமேலே நெருப்பைப்போல் செந்நிறம் உடையதாய் ஆறு இதழ்களோடு சுவாதிஷ்டானம் என்ற கமலம் ஒன்று இருக்கிறது. இது பிரஜாபதியைக் குறிக்கும். பிரஜாபதி என்றால் பிரஜை உற்பத்தி செய்வது. இது அக்கினித் தத்துவமாகும். ஸ்வ என்கிற சொல் பரமான லிங்கம் என்ற அர்த்தத்தைக் கொடுப்பதாலும், தான் அனுஷ்டிப்பதற்கு இடமாக விளங்குகிறதாகையாலும், இது சுவாதிஷ்டானம் என்னும் பெயர்பெறும். இது நாற்சதுரமும், அச்சதுரத்தின் நடுவே ஆறு இதழ்களுள்ள ஒரு மலர் வட்டமும் கொண்டு, அதன் மத்தியிலே லிங்க பீடமும் வீணாத்தண்டின் அடியுமாகப் பிரகாசித்து, அதன் மத்தியில் நகார எழுத்துநிற்கும் அந்த நகாரத்தின் நடுவில் பிரும்மாவும் சரஸ்வதியும் வீற்றிருப்பார்கள். இதை ஆறு அட்சர உருவங்களோடு ஆறு தளங்கள் உடையதாய்த் தியானிக்கவேண்டும்,

சுவாதிஷ்டானம்




நாற்சதுரம்
ஆறு இதழ் கமலம்
நெருப்பைப்போல் செந்நிறம்
வஜ்ரகாந்தியைப் போன்ற பிரகாசம்
பிரும்மா
சரஸ்வதி
நகாரம்

இவையெல்லாம் அவ்வவ்விடத்தில் தோன்றுவது போலிருக்கும்.

## மூன்று

### மணிபூரகம்

சுவாதிஷ்டானத்திற்கு எட்டு விரற்கடைக்கு மேலே அதாவது நாபிதானத்தில் (கொப்பூழ் அல்லது தொப்புளின் இடத்தில்) இருப்பது வாணலாம் இது ஆயிரத்து எட்டு நரம்பு நாடிகளும் சூழ, நாடிக்கொரு வேராக உள்ளது. இதை உத்திக் கமலம் என்றும் சொல்லுவார்கள். இது அப்புவின் (நீரின்) தத்துவமாகும். இது பிளவுபட்ட ரத்தினம்போல் பிரகாசிப்பதால் மணிபூரகம் எனப்பெயர் பெற்றது. மின்னலைப்போல் மிகவும் பிரகாசத்தோடும், பத்து இதழ்களோடும் விளங்கும். இந்தக் கமலத்தில் பத்து அட்சரங்களோடும் தியானிக்க வேண்டும். இதன் சக்கர அமைப்புப் பெட்டியில் பாம்பு சுருணையாய் சுருட்டிப் படுத்திருப்பதுபோல், மணிகம் என்னும் சக்கரத்தில் மூச்சுக்குத் தாயான பெரும் பாம்பு அந்த தொப்பூழில் படுத்திருக்கும் அந்த இப்படலத்தில் ஜலம் இருப்பதாலும், குணரான மகாவிஷ்ணு நீர் இருக்குமிடத்தில் வசிப்பவராகையாலும் அந்த ஸ்தானத்திற்கு அதிபதியாக விளங்குகிறார். அவரைக் காண்பதற்கு அந்த ஸ்தானம் ஏற்ற இடமாகும்.

இன் சக்கர அமைப்பு: தொப்புளுக்கு நேரே அப்பு ஸ்தானத்தில் பத்து இதழ்களுள்ள ஒரு கமலம் வட்டமாக இருக்கும். அந்தக்கமலத்தின் நடுவில் மகார எழுத்து நிற்கும். அந்த மகாரத்திற்கு நடுவில் மகாவிஷ்ணுவும் மகாலக்ஷ்மியும் வீற்றிருப்பார்கள்.




மூன்றாம் பிறை
பத்து இதழ் கமலம்
மரகத நிறம்
திருமால்
திருமகன்
மகாரம்

இவையெல்லாம் அவ்வவ்விடத்தில் தோன்றுவது போலிருக்கும்.

### மணிபூரக சக்கரம்

''பலிக்குமடா அப்பினுட வீடு மக்காள்'' என்ற செய்யுளில் இவ்வாதார சக்கரம் கூறப்பட்டுள்ளது.

### மணி பூரகத்துள் பட்சி வித்தை பலிக்கும் வழி

## 2. மால் அப்பு வீட்டின் அக்ஷரம்

(படம் : காண்க)

269 பலிக்குமடா அப்பினுட வீடு மக்காள்
பாரான பிறைபோலே மாலின் வீடு
கெலிக்குமடா மாலினுட பீசம் வைத்து
கேள்மகனே 'இங்' கென்றும் 'அங்' கென்றும் தான்
நலிக்குமடா அதனுடைய கோசம் பீசம்
நாட்டியே கருத்தொட்டு நேரம் பார்த்து
வலிக்குமடா ஓர்மனதாய் கொண்டே ஓத
வரிவிடும் செய்தொழிலின் வரிசை பாரே.

மேற்சொன்னதை அடுத்து தொப்புள் எனப்படும் தொப்பூழின் நேர் உள்ளிருக்கும் திருமாலின் வீடாகிய மணி பூரக ஆதாரத்தில் தியானம் செய்ய வேண்டும். இதற்கு 'ம' என்பதை முதலாக வைத்து 'மசிவயந' என்று இரண்டாவதை வைத்து மாறி வழிபட்டுத்தியானிக்க வேண்டும் என்று ஏற்படுகிறது. இதற்குச் சக்கரம் பிறைபோல இருக்கும் (மூன்றாம் பிறை) இதில் மாலின் பீசத்தை வைத்துப் பூசிக்க வேண்டும். ''கிலியும்'' அல்லது 'க்லீம்' என்பது மாலின் பீஜம் எனப்படும். இதனுடன் 'இங்' 'அங்' என்ற இரு கோச பீஜங்களை நாட்டி அந்த இடத்தை முக்கியமாகக் (கரு) தொட்டு (நினைவால்)ஒரு முனைப்புடன் பூசித்தால் எல்லா வித்தைகளும்பலிக்கும் என்றவாறு.

## நான்கு

### அநாகதம்

மணிபூரகத்திற்குப் பத்துவிரற்கடை அளவு மேலே உதயசூரியன் போன்ற பிரகாசத்தோடு உள்ளது அநாகதமாகும். இதை இருதய கமலம் என்பார்கள். இது வாயுவின் (காற்றின்) தத்துவமாகும். வாயுஸ்தானமான இருதயத்தின் இடத்தில், அதாவது மார்பில் லிங்கஹாரம் போன்ற ஒரு கமலம் தலைகீழாய்த் தொங்கிக் கொண்டிருக்கும். இந்தக் கமலம் பன்னிரண்டு இதழ்கள் உடையதாக விளங்கி அவ்விதழ்களில் பன்னிரண்டு அட்சரங்கள் சப்த சொரூபமாய் உருவங்களற்று இருக்கும். இது அட்சர உருவங்களற்று சப்த பிரும்மமயமாய் இருப்பதால் அநாகதம் எனப் பெயர்பெறும். இதன் மத்தியில் பதினாயிரம் சூரிய காந்தியோடு கூடிய பாணலிங்கம் இருப்பதோடு ஆனந்தத்திற்கும் இடமாக விளங்குகிறது. இந்தக் கமலத்தில் மத்தியில் சோதி சொரூபமான ருத்திரர் எல்லாவற்றையும் பஸ்மம் செய்பவராகையால் எல்லா ஜீவன்களின் இருதய கமலத்தில் இருந்து கொண்டு உண்ணும் ஆதாரங்களையெல்லாம் பஸ்மம் செய்கிறார். இதன் சக்கர அமைப்பு வாயு (காற்று) ஸ்தானத்தில் முக்கோணமாய் இருக்கும். அம்முக்கோணத்தின் நடுவில் பன்னிரண்டு இதழ்களையுடைய ஒரு கமல வட்டம் இருக்கும். அந்தக் கமல வட்டத்தின் நடுவில் சிகார எழுத்து நிற்கும், அந்தச் சிகாரத்தின் நடுவில் ருத்திரனும் பார்வதியும் வீற்றிருப்பார்கள்.




அநாகதம்
பன்னிரண்டு இதழ் கமலம்
முக்கோணம்
ஸ்படிக நிறம்
பார்வதி
சிகாரம்

இவையெல்லாம் அவ்வவ்விடத்தில் தோன்றுவதுபோல் இருக்கும்.

''வரிசையா தேவியினுட வீடு மக்காள்'' என்று தொடங்கும் செய்யுட்களில் இவ்வாதார சக்கரம் கூறப்பட்டுள்ளது.

## 3. "அனாகதத்துள் பட்சி வித்தை பலிக்க வழி"

### ருத்ரன் தேவியினுடைய வீட்டின் அக்ஷரம் (வாயு)

(படம் காண்க)

270. வரிசையா தேவியினுட வீடு மக்காள்
வனவான முக்கோணம் சிவனின் வீடு
பரிசையாய் சிவனுடைய பீசம் வைத்து
பார்மகனே 'இங்'கென்றும் 'மசிங்' என்றும்தான்
வரிசையாய் அதனுடைய கோச பீசம்
கலந்துவைத்து கருவையங்கே தொட்டு வைப்பாய்
வரிசையாய் நின்றுசபம் செய்யும் போது
உத்தமனே முக்கோணம் பொல்லாது பாரே.

இதன் பின் இதயகமலத்தில உள்ள சிவனுடைய வீட்டைத் தியானம் செய்ய வேண்டும். இது 'அனாஹதம்' எனப்படும். இதில் சிவனும் பார்வதியும் இருப்பர். இங்கே இது முக்கோண வடிவானதாகும். இங்கே சிவனுடைய எழுத்தைப் பீசத்தை (ஹௌம் என்பது சிவ பீசம் என்று வடமொழி மந்திர பீஜ நிகண்டு கூறும்) வைத்துப் பூசிக்க வேண்டும். அதன்பின் 'இங்' என்றும் 'மசிங்' என்றும் வரிசையான இதன் கோச பீஜங்களை வைத்துப் பூசிக்க வேண்டும். இந்த ஆதார சக்கரத்திற்கு 'சி' என்பதே பஞ்சாக்கர எழுத்தாகும். எனவே "சிவாயநம" என்று வழிபடவேண்டும்.

குறிப்பு:- 'சிவாயநம' என்பது போக பஞ்சாட்சரம் என்பர். எனவே இறைவனை இதயத்தில் (அனாஹதத்தில் நிறுத்தி) தியானித்து வழிபட்டால் உலக போகம் எல்லாம் கிடைக்கப்பெறும் என்று கொள்க. இந்த "அனாஹதத்தை" எண்ணி உன்னிப்பாய் 'சபம்' செய்தால் பொல்லாத முக்கோணம் செயல்படும் தொழில் பலிக்கும் என்றவாறு (இது வாயு தத்துவமாம்).

## ஐந்து

### விசுத்தம்

அநாகதத்திற்கு மேலேஇது கண்டஸ்தானம் எனப்படும் நெஞ்சு உள்ள இடத்தில் தூம்பரவர்ணமான பெரும் ஒளியோடு விசுத்தம் என்னும் கமலம் இருக்கிறது. ஆத்மஸ்தானமான இதில் ஜீவன் இருந்து வலது நாசியிலும் இடது நாசியிலும் சுழுத்தி என்கிற நாடியிலும் மூச்சை உள்ளுக்கு இழுக்கும் படியும் மறுபடி வெளிவிடும் படியும் செய்கிறார். இது ஆறாதாரத்தின் தத்துவமாகும். இது பிரம தரிசனத்தால் ஜீவாத்மாவுக்கு சுகத்தைத் தருவதால் விசுத்தம் என்று பெயர் பெறும். இதன் சக்கர அமைப்பு: அறுகோணமாய், அதன் நடுவே பதினாறு இதழ்கள் உள்ள ஒரு கமல வட்டமாக இருக்கும். அந்தக் கமலத்தின் நடுவே வகார எழுத்து நிற்கும். அந்த வகாரத்தின் நடுவில் மகேஸ்வரனும், மகேஸ்வரியும் வீற்றிருப்பார்கள். கரு நிறமுள்ள இந்தக் கமலத்தின் பதினாறு தளங்களிலும் வடமொழி என்கிற அட்சரம் முதல் 'அஹ' என்கிற அட்சரம் வரை பதினாறு உயிரெழுத்துக்களும் உருவங்களாக அமைந்திருக்கும்.



விசுத்தம்
அறுகோணம்
பதினாறு இதழ்களுள்ள கமலம்
மேகநிறம்
மஹேஸ்வரன்
மகேஸ்வரி
வகாரம்
இவையெல்லாம் அவ்விடத்தில் தோன்றுவது
போலிருக்கும்

இவ்வாதார சக்கரம் "பொல்லாத" என்று தொடங்கும் செய்யுட்களில் கூறப்பட்டுள்ளன.

## 4. விசுத்தியில் பட்சி வித்தை பலிக்க மயேஸ்வரன் ஆகாச தத்து வீட்டின் அக்ஷரம்

(படம் காண்க)

271. பொல்லாத வானமென்ற வீடு மக்காள்
பெரிய மஹா விசுத்தி வீடு அறுகோணம்
நில்லாதே மயேஸ்வரத்தின் பீசம் வைத்து
நின்றாடும் 'எங்' என்றும் 'வங்' என்றும் தான்
சொல்லாத கோசமென்ற பீசம் வைத்துத்
தொட்டிடுவாய் கருவை அங்கே நேரம் பார்த்து
வல்லாத வாயுவென்ற பிரசண்ட வீடு
வாரிவிடும் வெளிதனிலே பதிக்கொண்ணாதே.

அடுத்து 'விசுத்தி' என்னும் ஆகாச தத்துவ வீட்டில் வழிபடும் வகை கூறப் படுகிறது. பாடலில் இது வாயு என்றதும் 'சுவாதிஷ்டம்' என்றது தவறு. நாம் திருத்தி அமைத்துள்ளோம்.

இது கண்ட ஸ்தானத்தில் உள்ளது. இந்தச் சக்கரம் அறுகோண வடிவமாகும், இதில் மஹேஸ்வரனின் பீசத்தை வைத்து (வடமொழி மாத்ருகா நிகண்டில் 'ஐ' என்ற எழுத்து மகேஸ்வரனின் பீஜமாகச் சொல்லப்படுகிறது) 'எங்' 'வங்' என்ற கோச பீசங்கள் எழுத்துக்களை எண்ணி இணைத்து வழிபட வேண்டும். பஞ்சாக்கரத்தில் 'வ' என்பதே இதன் எழுத்தாகும். எனவே 'வ' வை முதலாகக் கொண்டு 'வயநமசி என்று உருவேற்ற வேண்டும் என்று ஏற்படுகிறது. இந்த நிலையில் சக்கரத்தை மனதில் ஊன்றி உருவேற்றினால் பட்சி தொழிலில் எதுவாயினும் நன்கு விரைந்து பலிக்கும் என்பதாம்.

## ஆறு
## ஆக்ஞேயம்

விசுத்தத்திற்கு மேலே லலாடபீடத்தில், இரண்டு கண் புருவங்களுக்கு மத்தியில் ஞானக் கண் தீபம்போல் ஒளிவிசிச் கொண்டிருக்கும். இது வீணாத்தண்டின் முடிவாகவும் ஊடுருவி நிற்கும். இது மனோதத்துவமாகும். இது ஆஞ்ஞையின் சம்பந்தம் உடையதாகையால் ஆஞ்ஞா சக்கரம் எனப்பெயர் பெறும். இதன் அமைப்பு: மூன்று இதழ்களுள்ள கமலத்தின் நடுவே யகார எழுத்தோடு இணங்கி நிற்கும். அந்த யகாரத்தின் நடுவே சதாசிவமும், மனோன்மணியும் வீற்றிருப்பார்கள். இது ஹ, க்ஷ என்னும் அக்ஷரங்களோடு கூடியது.




ஆக்ஞா சக்கரம்
வட்டம்
மூன்று இதழ்களுள்ள கமலம்
படிக நிறம்
மனோன்மணி
யகாரம்

இவையெல்லாம் அவ்வவ்விடத்தில் தோன்றுவது போலிருக்கும்.

இவ்வாதார சக்கரம் 'மதிக்கவே' என்ற செய்யுளில் கூறப்படுள்ளது.

### *ஆக்ஞா சக்கரத்துள் பட்சி வித்தி பலிக்கும் வழி*
### *(படம் காண்க)*

### 5. சதாசிவம் மனோமய வீட்டின் அக்ஷரம்

272. மதிக்கவே போகாது மனோன்மணி வீட்டில்
 மதிரவியும் பூண்டிருந்த ஈசனுட வட்டம்
கதிக்கவே ஈசனுட பீசம் வைத்து
 கனிவான 'ஓங்' என்றும் "ஆங்" என்றும் தான்
விதிக்கவே ரெண்டெழுத்தின் கோச பீஜம்
 மேவியே சுத்திவர பதிந்து கொண்டு
சதிக்கவே கருத்தொட்டு நேரம் பார்த்து
 சருவியோடு ஏகவெளி வாரும் பாரே.

பாடலில் இது ஆகாச வீடு என்று கூறப்பட்டது தவறு. திருத்தி அமைத்து உள்ளோம். இது மனோன்மணி சதாசிவத்தின் ஆக்ஞாசக்கர வீடாகும். இது மனோதத்துவமாகும் வட்ட வடிவமுள்ள யந்திரமாகும். இதில் ஈசன் பீசத்தை வைத்தும் பூசிக்க வேண்டும். 'ஓம்' என்ற பிரணவமே ஈஸ்வர பீஜமாகும். இங்கே அதாவது லலாட பீடமான புருவமத்தியில் ஆக்ஞா சக்கரத்தில் ஓங் ஆங் என்ற இரண்டெழுத்து கோச பீசத்தை வைத்துப் பூசிக்கவேண்டும். "பஞ்சாக்கரத்தில்" இதற்கு 'ய' என்பது எழுத்தாகும். எனவே "யநமசிவ" என்று மாற்றி உருவேற்றவேண்டும் என்று ஏற்படுகிறது. இப்படி புருவமத்தி வட்டத்தில் தியானம் பண்ணினால் பஞ்சபட்சி தொழில் எல்லாம் பலிக்கும் என்றவாறு.

## ஏழு

### ஸஹஸ்ராரம்

இது ஏழாவது சஹஸ்ராரம் எனப்படும். இது ஆக்ஞா சக்கரத்திற்கு நேர்மேலே வாயின் மேலண்ணம் நடுவே நேர்கோட்டில் நெற்றியின் நடுவுக்கு நேர்பின்கோடு சந்திக்கும் இடத்தில் உள்ளது. இது ஆயிர இதழ்க் கமல வடிவம் உள்ளது. இது பிந்து சக்கரம் என்றும் கூறப்படும். பூரகத்தின் யோகத்தினால் வாயுவை ஆதாரத்தில் சேர்த்து குதத்திற்கும் குறிக்கும் நேர்நடுவேயுள்ள குண்டலி சக்தியை சிரமப்பட்டுத் தட்டி எழுப்பி பிந்து சக்கரத்தை அடைவிக்கும்போது பரமசிவனையும் பராசக்தி யையும் (ஆண் பெண்) ஒன்று சேர்த்த ஆனந்தம் ஏற்படும். அப்போது கசிந்து பொழியும் அமுதத்தை "விண்ணிலவு பொழி அமுதை". "ஈ மொய்க்காத" தேனைப் பருகி, ஆறாதார சக்திகளையும் அந்த அமுதப் பொழிவால் திருப்தி செய்து(அதாவது) இந்த காலம் முழுவதும் மனிதனின் நடுத்தண்டு பூராவும் உச்சிமுதல் உள்ளங்கால் வரை பெண்ணிடம் பெறும் சிற்றின்பம் நிலைத்து நிற்கும். 'சில்' லென்ற பேரின்பம் நீடிக்கும் என்பதாம்) அதே வழியில் மூலாதாரத்தை அடையச் செய்யவேண்டும். இவற்றை எல்லாம் தக்க குருவின் பால் கற்றுத்தான் சாதனையில் இறங்கவேண்டும். தாமதமாக எதுவும் செய்யக்கூடாது.

### ஏழு சக்கரங்களின் சுவாச நடப்பு

நம் உடம்பிலுள்ள இவ்வேழு சக்கரங்களிலே தம்முடைய மூச்சு சுற்றிக் கொண்டிருப்பதால், அதன் நடப்பையும் அவ்வச் சக்கரத்திற்குரிய அந்த தேவைகளையும் உணர வேண்டும். மூலாதாரத்திற்கு அதிதேவதை விக்கினேஸ்வரரான கணபதி, அவருக்காக காலை 6 மணி முதல் 6 மணி 40 நிமிடங்கள் வரை 600 மூச்சுக்கள் (ஸட்ஸதம்) நம்முள்ளே மூலாதாரத்தில் நடந்து, கணபதியில் பசியை ஆற்றி அவரைத் திருப்திபடுத்தி, பிறகு அந்த மூச்சு சுவாதிஷ்டான சக்கரத்திற்குச் சென்று அதன் அதிதேவதையான பிரஜாபதி எனும் பிரும தேவருக்காகக் காலை மணி 6.41 முதல் பகல் 1.20 மணி வரை ஆறாயிரம் மூச்சுகளாக (ஷட்ஸஹஸ்ரமாக) நடந்து அவருடைய பசியை ஆற்றி அவரைத் திருப்திபடுத்தும். பிறகு மூச்சு



ஸ்ஹஸ்ராரம்

ஆக்ஞேயம்

விசுத்தி

மணிபூரகம்

சுவாதிஷ்டானம்

மூலாதாரம்.

அந்த இடத்திலிருந்து நாபி ஸ்தானத்திற்குச் (கொப்பூழின் இடத்திற்கு) சென்று அங்குள்ள மணிபூரகச் சக்கரத்தினுள் நுழைந்து, அதன் அதிதேவதையான மஹாவிஷ்ணுவிற்காக பகல் மணி 1.20 முதல் இரண்டு மணி வரை 8 ஆறாயிரம் மூச்சுகள் நடந்து அவருடைய பசியை ஆற்றி அவரைத் திருப்தி செய்யும். பிறகு அந்த மூச்சு அவ்விடத்திலிருந்து இருதய கமலமான அனாகதச் சக்கரத்திற்குச் சென்று அதன் அதிதேவதையான ருத்திரருக்காக இரவு மணி 8.1 முதல் இரவு மணி 2.40 வரை ஆறாயிரம் மூச்சுகள் நடந்து அவரை திருப்திப்படுத்தும். பிறகு மூச்சு அவ்விடத்திலிருந்து கண்ட ஸ்தானத்திலுள்ள விசுத்தி சக்கரத்திற்குச் சென்று அதன் அதிதேவதையான மகேஸ்வரருக்காக இரவு மணி 2.41 முதல் 3.46 வரை ஆயிரம் மூச்சுகளாக (ஸஹஸ்ரமாக) நடந்து அவரைத் திருப்திப்படுத்தும். பிறகு மூச்சு

அவ்விடத்திலிருந்து புருவங்களின் மத்தியிலுள்ள ஆக்ஞேய சக்கரத்திற்குச் சென்று அதன் அதிதேவதையான ஜீவன் அல்லது ஈஸ்வரனுக்காக இரவு மணி 3.47 முதல் 4,58 வரை ஆயிர மூச்சுகள் நடந்து அவரைத் திருப்தி செய்யும். பிறகு மூச்சு அவ் விடந்திலிருந்து தலையின் பிரம கபாலத்திலுள்ள ஸஹஸ்ராரச் சக்கரத்திற்குச் சென்று அதன் அதிதேவதையான பரமாத்மாவிற்காக காலை மணி 4.54 முதல் 6 மணிவரை ஆயிரம் மூச்சுகள் நடந்து அவரைத் திருப்தி செய்யும். பிறகு அந்த மூச்சு மறுபடியும் மூலாதாரத்திலுள்ள கணபதியைத் திருப்தி செய்யச் செல்லும். இவ்வாறு வாழ்நாள் தோறும் நடந்து கொண்டிருக்கும்.

நம் உடம்பிலுள்ள இந்த ஏழு சக்கரங்களையும் சுட்டிக் காட்டுவதற்கே ஸ்ரீரங்கத்திலுள்ள கோவிலுக்கு ஏழு சுற்றுப் பிரகாரங்கள் கட்டப்பட்டதாகக் கூறு வார்கள். திருப்பதியை ஏழுமலை என்பதும் நம்முள் இருக்கும் இவ்வேழு சக்கரங் களைச் சுட்டிக் காட்டுவதற்கேயாகும் மேலும் சிவத்தலங்களான காஞ்சி. திருவண்ணாமலை, ஐம்புகேச்வரம், காளஹஸ்தி, சிதம்பம், காசி, மதுரை என்னும் க்ஷேத்திரங்களை நம் உடம்பினுள்ளே முறையே மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞேயம். ஸஹஸ்ராரம் என்னும் ஏழு சக்கரங் களிலும் காணலாம் என்றும் கூறுவார்கள்.

சுவாதிஷ்டான சக்கரம் பட்சி வித்தைக்கும் கூறப்படவில்லை.
ஸஹஸ்ரார சக்காம் “உண்ணுமே” என்று தொடங்கும் செய்யுளில் கூறப்பட்டுள்ளது.

## மேலே உள்ள ஒரு சக்கர அமைப்பின் பொதுக்குறிப்பு

குண்டலியோக முடிபான பயனை ‘ஆக்ஞா’ சக்கர படவிளக்கத்தில் சொல்லப் பட்டுள்ளது. இப்படம் ஸஹஸ்ரார சக்கரத்தைக் காட்டவே சேர்க்கப்பட்டுள்ளது. இதில் வாசியோமும் கூறப்பட்டுள்ளது. ஒவ்வொரு ஆதாரத்திலும் நடக்க வேண்டிய சுவாச எண்ணிக்கை, அவை நடக்கும் நாளின் காலப்பகுதி இவையெல்லாங் கூறப் பட்டுள்ளன. அந்தந்த சக்கரத்தில் காட்டப்பட்ட மூச்சு எண்ணிக்கையின் விகிதா சாரத்தில் குறைத்து அந்தந்த கால கட்டங்களில் அந்தப் பயிற்சிமுறை பழகிவர மனிதன் ஒரு நாளில் விடும் 21600 மூச்சுக்கள் குறைந்து நாளேற குறைந்து மூச்சுக்கமை நிகழும், இதுவும் மூச்சற்று முச்சந்திய குண்டலியோக முதிர்வும் (குண்டலிமேல் சஹஸ்ராரத்தில் கலத்தல்) அதற்குச் சாதனையாக வாசியோகமும் ஒருவகையில் கூறப் பட்டுள்ளது இவ்வத்தியாயத்தில் முற்பகுதியில் பட்சி வித்தைக்காக ஆறாதார உள்முக யோகம் பயிற்சியும் பின்பாதியில் அதை வெளியில் அட்டகன்மத்திற்குத் தொழில் கடுமைப்படி பானவயில் அவ்வாதாரத்துள் குறிக்கும் எதிரியின் உறுப்புகளில் ஊன்றிச் செய்யும் பட்சி வித்தை கூறப்பட்டுள்ளதாக ஏற்படுகிறது. எதுவாயினும் ஆசான் மூலமே இவையாவையும் கற்றுத் தெளிய வேண்டும்.

இவ்வத்தியாயப் பிற்பகுதியில் அட்டகன்மத்தின் கொடுமைகூறி அதைப்பிறருக்கு செய்து பாபம் சேர்த்துக் கொள்ளக்கூடாது என்றும் பெரும்பாலும் எச்சரிக்கிறது.

இதுவரை கூறப்பட்ட யோகத்திற்கும் இந்த அத்தியாயத்தில் சொன்ன அட்சர மாறலுக்கும் உள்ள தொடர்பு விளக்கம் நம் சிற்றறிவுக்கு எட்டியபடி உரோம ரிஷியார் வினாடி பஞ்சபட்சி பாடல்களை அட்சர மாறல் படலம் என்றிருப்பதை நம் உரையுடன் எழுதுகிறோம்.

## பஞ்ச பூதம் சேர்தலின் பலன்

273. வாரிவிடும ஆகாயம் வாயுவும் சேர்ந்தால்
மக்களே ஒருவருமே மதிக்கப் போதா
நீரிவிடும் பிரசண்ட வாயு சேர்ந்து
நிலைக்கவே ஒட்டாது நிலைகொள் ளாது
மாறிவிடும் தொழில்கூர்மை வெளியில் காத்து
மாட்டுவது போலவே மனதில் சிவண்ணி
ஆரிவிடும் அஷ்டகர்ம வித்தை யப்பா
அறிவுள்ளோர் அறிவார்கள் அறிந்து பாரே.

மேலே சொன்ன சக்கர வழிபாடுகளில் ஆகாய தத்துவம், காற்று தத்துவம் ஆக இரண்டு ஆதாரய்களையும் சேர்த்து தொழில் செய்தால் ஒருவருமே மதிக்க மாட்டார்கள். தொழிலின் தன்மை நீர்த்து வலிவிழுந்து போகும். எதிலும் எதையும் நிலைக்கவொட்டாது. மனது நிலைகொள்ளாது. செய்யும் அட்டகர்ம தொழிலின் தன்மை வலு இழக்கும், எனவே அறிவின் திறத்தைக் கொண்டு இதைத் தெரிந்து கொள்ளவேண்டும்

குறிப்பு: பஞ்சபூத தத்துவங்கள் ஒவ்வொன்றும் இயங்கும் உடல் சக்கரங்களும் அவற்றில் அமைப்பு பஞ்சாக்கர முதலெழுத்தும் அங்கங்கே விளக்கப்பட்டுள்ளன. அவற்றைக் கவனித்தா இப்பாடலின் பொருள் விளங்கும்

## ஆகாசமும் அக்கினியும் சேர்தல்

274. அறிந்து பார் ஆகாச வெளியும் காத்து
அப்பனே அக்கினியும் சேர்ந்து கொண்டால்
எரிந்துபோன கண்ணுக்கு இமை தோன்றாது
என்மகனே அக்கினியும் வாய்வும் சேர்ந்தால்
விரிந்து போம் ஏகவெளி கூடிக் கொண்டால்
பேசுவது ஒன்றுமில்லை பெண்ணி னாசை
சரிந்து போம் கைவல்யம் வாயும் தீயும்
தணிந்துவிட்டால் அவனைவெல்வார் இல்லை தானே.

பஞ்ச பூதங்களில் அக்னியும் ஆகாச வெளியும் ஆன இருசக்கர ஆதாரங்களையும் இணைந்து வழிபட்டால் கண்ணை இமை மறைக்கா-விழித்த நிலை அப்படியே நிலைக்கும் (இதை) வடமொழியில் ''தாடகம்'' என்பர். அதாவது உன் முகச்சிந்தனை சஹஸ்ராரத்தில் மேல் ஓங்கும்.

இனி அக்கினியும் வாயுவும் சேர்ந்தால் வாயு அக்கினியை வளர்க்கும். ஆதலால் வாயு, அக்கினி இரண்டும் ஆதார சக்கரங்கள். அதன் பஞ்சாக்கர முறையையும் இணைத்து வழிபட்டால் செய்கின்ற அட்டகன்மத் தொழில் வலிமையற்றுவிடும். பெண்ணாசை அழிந்து விடும். இதனால் கைவல்யமான மோட்சம் கிட்டிவிடும். காற்றும் தியும் அடங்கும். இந்த நிலையில் இவனை வெல்வார் யாருமில்லை என்றறிக.

### அக்கினியும் தண்ணீரும், தண்ணீரும் மண்ணும்

275. இல்லையே அக்கினியும் தண்ணீர் சேர்ந்தால்
என் மகனே தண்ணீரும் அக்கினியை வெல்லும்
தொல்லையால் வாழ்வு அங்கே கூடும் போது
தொடுத்த தொழில் நாட்செல்லும் சுருக்கே இல்லை
கல்லையே அப்பதுவும் சேர்க்கொண் ணாது
கனிவான மண்ணதுவும் தண்ணீர் சேர்த்தால்
இல்லையே காணாமல் தண்ணீர் வற்றி
இறங்கிவிடும் மண்ணதுவும் உரிஞ்சும் பாரே.

மேற்சொன்ன முறையில் அக்னி தண்ணீர் இரண்டும் சேர அக்கினியை தண்ணீர் அணைக்கும் ஆதலால் அக்கினி அதற்குரிய (பட்சி) வெல்லும். இதனால் தொடுத்த, ஆரம்பித்த அட்டகன்மத் தொழில் நிறைவேற நாட்செல்லும்.

இதேபோல் தண்ணீரும் மண்ணும் சேர்ந்தால் மண் நீரை உண்ணும் ஆதலால் மண் வெற்றி பெறும். எனவே மண்ணுக்குரிய பட்சி வெல்லும்.

குறிப்பு: பஞ்ச பூதத்திற்குரிய பட்சிகள் என்ன என்பதை அறிந்து, அவற்றுக் குரிய ஆதார சக்கரங்களில் மனம் செலுத்திச் செய்யும் தொழிலானது மேலே சொன்னபடி எந்த பட்சி வெல்லுமோ அந்த பட்சிக்குரியவனாக தான் இருந்து தொழில் செய்தால் தொழில் வெல்லும். இது மிகவும் நுண்ணிது ஆதலால் இதனுடன் நிறுத்தப்பட்டது.

## 7. வது ஸஹஸ்ராரம்

### சக்தி சிவக்கூறு

276. உண்ணுமே அஞ்செழுத்தில் ரெண்டு பழுதில்லை
என்றுமே பேசுவது எளிதோ கூறு
மண்ணுமே தண்ணீரும் கூடி யல்லோ
மனுவென்ற சீவசெந்து வளர்ந்துறவாடி
எண்ணுமே உலகமென்ற வாழ்க்கை யெல்லாம்
இரண்டினால் உண்டாக்க இசைந்து பாரு
கண்ணுமே உயிரதுவை வளர்தததது போலப்பா
கனிவான மண்தண்ணீர் அறிவதுதான் பெரிதோ.

அஞ்செழுத்தின் நடுவில் உள்ள இரண்டெழுத்து சிவ என்ற மந்திரம் பழுதில்லாத சிவசக்திக் கூறாகும். ஆணின் சுக்கிலமும்(தண்ணீரும்) பெண்ணின் சோணிதமும் (மண்) இரண்டுமே சக்தி சிவக்கூறே. இவ்விரண்டும் சேர்ந்தே உலகப் படைப்பு. இப்படி மண்ணும் தண்ணீரும் சேர்ந்தால் உயிர் படைப்பாகிறது.

இது தத்துவம் சார்ந்தது.

377. பெரிதான மண்ணல்லோ சக்தி சக்தி
பேசுவமே கூடாது சிவன்தான் தண்ணி
நெரிதானே சக்தி சித்திகண்ட பேர்கள்
நீடூழி காலமெல்லாம் நிறையா தோரும்
சரியான உலகத்தில் சிறுமை பெற்று
தான்திரிவர் அவரையொருவர் அறியமாட்டார்
அரிதான சத்துரு வித்தை எவர்சொல்வார்கள்
அப்பனே இவர் மனதை அறிவார் யாரே.

பெரிதான மண்ணே மூலாதார சக்தியாகும். தண்ணீரான மணிபூரகமே தண்ணீராம். இது உயிர் சத்தான சிவம். அதாவது, கற்பஸ்தானமாகும். இரண்டும் இணைய உற்பத்தி, இது தொடர்ந்து மேலுந்தும்போது மேலே உள்ள சஹஸ்ராரத்தில் எட்டி சக்தியும் சிவமும் அங்கே கூடும். இதுவே ஆனந்தமாம் சித்தியாகும். இதைக் கைவரப் பெற்றவர் நீடூழி காலம் வாழ்வர். ஆனால் வெளித் தோற்றத்தில் சிறுமை பெற்று சாதாரணமாகத் திரிவர். இவர்களின் சித்தி வித்தையை யாரும் அறிய முடியாது என்பதாம்.

278. அரியாரோ அவர் மனதை நோகப் பண்ணோர்
அருகிவிடும் அவர்குடியும் அழிந்து போகும்
தெரியாரே அவர் உப காரம் செய்தார்
சிறுமைவிட்டுப் பெருமையிலே சேர்ந்து வாழ்வார்
சரியான நற்பதவி அவற்கே கிட்டும்
சண்டாள சென்மமென்னால் கரிகொன் ளாது
தெரியாரே உலகத்தோ டொத்து வாழ்வோர்
நேரறிந்து அவர் குணத்தில் நின்று தேறே.

மேலே சொன்ன சித்து கைவரப் பெற்றவரே அட்டகன்மம் செய்ய உரியர். அவர்களுக்கு உபகாரம் செய்தவர் உயர்ந்து வாழ்வார்கள். அவர்களுக்கும் நற்பதவி கிட்டும். சண்டாள சென்மமானால் அதாவது கெடுவினை செய்வாரானால் அப்பதவி கிட்டாது சித்தர்கள் வெளிப்படையாத் தெரியாமல் நம்மிடையே உலவுவார்கள். அவர்களைப் பின்பற்றி முன்னேற வேண்டும்.

279. தேருவது எளிதல்ல வெகுநாட் செல்லும்
செகத்திலே கோடியிலே ஒருவன் உண்டு
அறுபது கோடியிலே அணுகாது பாரு
அப்பனே பெண்ணாசை அற்றுப் போச்சு
கோருவது மண்ணாசை பொன்னின் ஆசை
குடிகெடுத்த காமவெறிக் குழலாளைத் தள்ளி
ஏறுவது சத்தி சிவம் பூசை விட்டால்
இழுந்திடுவாய் சத்திசிவம் எண்ணிக் கொள்ளே.

மேற்படி சித்தர் நெறியிலே (பட்சி வித்தையிலே) முழுவதும் தேறுவது எளிதல்ல. கோடியில் ஒருவன் தான் தேர முடியும். அவனுக்குக் காமவெறி காட்டும் குழலுள்ள வளான பெண்ணின் ஆசை, மண்ணாசை இவை விடாது. அதையும் தள்ளி மீறி வருபவன் அறுபது கோடியில் ஒருவனாகத்தான் இருப்பான். இவனே சித்தன். இந்த சக்தி சிவ பூசையை விட்டால் எல்லாம் இழந்து போகும் என்பதாம்.

280. கொள்ளுவது பட்சி வித்தை அறிய வேணும்
கூடுதனில் வாழுமுயிர் தெரிய வேணும்
துள்ளுவது நிலையில்நின்று வாசி விட்டால்
தூலமென்ற காயமது அழிந்து போகும்
அள்ளுவது பிரதிஷ்டைக்குள் ஆகிக் கொண்டு
அப்பனே பாசவினை அடுத்துக் கொல்லும்
வெல்லுவது சத்திசிவம் பூசை செய்தால்
மேலான பட்சிவித்தைப் பலிக்கும் பாரே.

பட்சி வித்தையை உரிய முறையில் அறியவேணும் தன் கூட்டில், உடலில் வாழும் உயிரை அதாவது ஆத்மாவை, அதாவது தன்னைத்தான் அறிந்துகொள்ள வேண்டும். அசைத்து துள்ளும் மூச்சு யோகத்தை விட்டுவிட்டால், தூலமான இவ்வுடல் அழிந்து போகும். பாசவினை நம்மைப்பற்றிக் கொள்ளும். எனவே மேற்சொன்ன சக்தி சிவம் பூசை செய்தால் இப்படிப்பட்ட சித்தனுக்கே பட்சி வித்தை பலிக்கும் என்பதாம்.

281. பாரப்பா பஞ்சபட்சி சுருக்கம் சொல்வேன்
பஞ்சபட்சி ஒருவருக்கும் சொல்ல வேண்டாம்
நேரப்பா கலியுகத்தில் பழிக்கஞ் சார்கள்
நேர்மையுள்ள மனமுள்ளோர் தேடிப் பார்த்து
ஆரப்பா கோடியிலே ஒருவ ருண்டு
அமர்ந்திருப்பார் ஞானநிலை அறிவு தாங்கி
சீரப்பா இருந்ததோ மனம்சோ தித்து
தெள்ளுதமிழ் பட்சிவித்தை செப்புவாயே.

பஞ்சபட்சி வித்தையை ஒருவருக்கும் சொல்லக்கூடாது. இக்கலியுலகத்தில் யாரும் பழிக்குப் பயப்பட மாட்டார்கள் இதைத் தீயவழிகளில் பயன்படுத்துவர். நல்ல மனம் உள்ள ஞான அறிவு நல்வொழுக்கம் தெரிந்து சிறந்த ஒருவரைத் தேடிப்பார்த்து அப்படித் தகுதி உள்ளவருக்கே பட்சி வித்தையைச் சொல்லவேண்டும்.

## பட்சி வித்தை பலிக்க 12 ஆண்டுகள் வேண்டும் எனல்

282. செப்புவாய் வருடமது பனிரெண் டானால்
திடமான மனதென்று அறிந்து கொண்டு
ஒப்புவாய் சூக்ஷாதி சூக்ஷ மெல்லாம்
ஒளித்துவைத்து மந்தரெல்லாம் சொல்லு வாய் நீ
தப்புவாய் சகலகரு மான மெல்லாம்
தானடக்கம் செய்து கொண்டு அறிவில் நின்று
அப்புவாய் பெரியோரை கற்புடை யோரை
அகந்தையார் சொல்வர் அவர் அழிவார் தாமே

இந்த பட்சிவித்தை பலிக்க 12 வருஷம் சிவயோக நெறிநின்று பழகி இருக்க வேண்டும். இப்படிப்பட்டவர் தானா என்று அறிந்துகொண்டு முதலில் சூக்ஷ்ம விஷங்களையெல்லாம் சொல்லாமல் மற்றவற்றையே அவருக்கு உபதேசிக்க வேண்டும். கற்புடைய அதாவது ஏகபத்தினி விரதமுள்ள இப்பெரியோரை பழிப்பவரெல்லாம் அழிவார் என்பது திண்ணம். அதாவது பட்சிவித்தை பயில 12 வருஷம் தவமிருக்க வேண்டும். இப்படிப் பட்சிவித்தை கற்றவனைப் பழித்தவர்கள் அழிந்து போவார்கள் என்பதாம்.

## 7. மூலாதாரத்தில் மாரணம்

283. அழிந்திடுவார் பட்சியைநீ பார்த்துக் கொண்டு
அப்பனே உடலினுட சக்கரத்தை வைத்து
நெளிக்கவோ நாற்கோணம் பிருதிவியில் இட்டு
நேர்மையுள்ள அங்கென்றுந் தான்
குளிக்கவே 'பிரிங்' என்று கோசபீசம் வைத்து
கூட்டுவசய் அவன் பெயரை சுற்றிவரப் பதித்து
களிக்கவே கருத்தொட்டு ஓதுகை நீ கேளு
கனிவாக "அங்நங் பிரிங் இன்னான் நரிநசி" என்றோதே.

இதில் எதிரியை அவன்போலே பொம்மை செய்து அதன் மூலாதாரத்துக்கு நேராக யந்திர மந்திரம் பதித்து அவன் பட்சியினுடைய தாழ்ந்த தொழில் நேரத்தில் தன்பட்சியின் உயர்ந்த தொழில் நேரத்தில் செய்யும் மாரணம் பிரயோகம் சொல்லப் பட்டுள்ளது. இதற்கு மேல் விளக்க வொண்ணாது.

284. ஓதுகிற பேரதெல்லாம் செய்வகையை நினைத்து
ஓர்வகையாய் நின்றுசபம் ஆயிரத் தெட்டானால்
ஏதுவான வசியமா கிருடணம் செய்யும்
என்மகனே தாலெழுத்தில் தம்பனமோ கனமாம்
ஓதுகின்ற இடண்டரவெழுத்தில் பேதனமும் உட்சாரணமும்
மக்களே நடுத்தலையைப் பிடித்துமாறு
கூறுகின்ற மாரணமும்வித்வே ஷணமும் செய்ய
குறிக்கின்ற அறுபதுநான் ஆகும் பாரே.

இதிலும் மாரணம் முதலியவை சொல்லப்படுகின்றது. மேலேசொன்ன மந்திரத்தை 1008 முறை ஓதவேண்டும். நமசிவய என்பதை 4ம் எழுத்துமுதல் ''வயநமசி' மாறி ஓதி உருவேற்ற தம்பணம் மோகனம் சித்தியாகும். இரண்டாவது எழுத்தான 'ம' வை வைத்து 'மசிவயந' என்று மாற்றி உருவேற்ற பேதனம் உச்சாடணம் எற்படும். நடு எழுத்தாகிய 'சியை' வைத்து ''சிவயநம'' என்று ஓத வித்வேடணமும் மாரணமும் ஆகும். அதற்கு அறுபதுநாள் ஆகும் அதுவரை இப்படிச் சாதிக்க வேண்டும்,

285. ஆடுமே தொழிலறிந்து பூசை செய்தால்
அப்பனே அணுவளவும் தப்பா தப்பா
போடுமே ஓர் மனதாய் பூசை செய்யும்போது
புண்ணியனே யக்கியமாய் முடிந்த தானால்
சாடுமே தேவிக்கும் பொங்கல்பலி யுடனே
தனதான ருத்ரர்செபம் காக்கும் போது
வாடுமே குறித்தபட்சி மாண்டு போகும்
மக்கனே நாள் மூன்றில் அழிந்துபோமே.

இதில் மாரணம் கூறப்படுகிறது. தேவிக்கும் பொங்கலிட்டு ''ருத்திரம்'' செபம் செய்து ருத்ர யக்யமும் செய்து இது செய்ய வேண்டும் இதற்கு மேல் விளக்குவதில்லை.

286. அழிந்து போம் செய்ததையே நினைத்துக் கொண்டு
அப்பனே தொடுத்திடுவாய் எழுத்தறிந்து மாறு
தெளிந்துபோம் தொழிலுக்கு வார்க்கவகை கண்டு
திடமாக நீ இருந்து ஓதும் போதும்
கழிந்து போம் குறித்தபட்சி உடல்சிதறிப் போகும்
கண்மணியே கன்மம் அது தோஷம் தோஷம்
தெளிந்து போம் பட்சியது பொல்லாதப்பா
நேரறிந்து குறிப்பறிந்து நீசெய் வாயே.

இதுவும் மாரணமே கூறும். இதற்குச் சொன்னபடி பஞ்சாக்ஷர எழுத்தைத் தொழிலின் வகைக்கேற்ப மாற்றி உருவேற்றி செய்வதைக் குறிக்கிறது. இவ்வளவு தான் விளக்கவொண்ணும். இந்த மாரணத்தைச் செய்யக்கூடாது என்று உரோமரிஷியார் எச்சரிக்கிறார். எனவே எதிரி கர்மவினை வசந்தால் கட்டாயத்தின் கீழ் செய்வோர்க்கு இது சித்தர் அருளால் தானாக விளங்கும்.

நேரறிந்து குறிப்பறிந்து நீசெய் வாயே.

287. செய்வதுதான் யாருக்குச் செய்ய வேணும்
ஜெகத்திலே என்துரோகி குருதுரோ கிக்கும்
செய்வது தான் பெரியோரைத் தூஷிப் போர்க்கும்
கொடுமையுள்ள வஞ்சகற்கும் கற்பழித்த பேர்க்கும்
நெய்வதுதான் பொய்ச்சூது கற்ற பேர்க்கும்
நேர்மையுள்ள பிராமணரைப் பழித்த பேர்க்கும்
நைய்வதுதான சிவாலயங்கள் அழித்த பேர்க்கும்
நலமில்லா மனத்தோர்க்கும் செய்வாய் பாரே.

''மாரணம் எந்த எந்த பாவம் கெடுவினை செய்தவர்களுக்குச் செய்யலாம்'' என்று இச்செய்யுள் கூறுகிறது. பிராமணர் என்று இங்கே கூறியது சாதி வகையால் அன்றி பிரம்மத்தை அறியும் நெறியில் உள்ள அந்த ஞானியரை என்று கொள்ள வேணும் மற்றவை வெளிப்படை.

## 8. மணிபூரகத்துள் பட்சி வித்தை

### அப்புவின் வீட்டு அக்ஷரம்

288. மாரப்பா அப்புவுக்குப் பிறையாம் வீடு
பணிந்துநல்ல 'இங்'கென்றும் 'மங்'கென்றும் தான்
கோரடா ஸ்ரீரீங் கென்று கோசபீஜம் வைத்துக்
கூட்டுவாய் அவன் பேரை சுற்றிவைத்து
காரடா கருவை அங்கே தொட்டுக் கொண்டு
கனிவாக ஓதும்வகை 'இங்மங்' கென்று
தேரடா விஷங்கட்கு 'கங்' கென்று சொல்லி
தேடியே இன்னை ,நசி நசி' யென்று சுற்றி வையே.

இது மணிபூரகத்தை மையமாய் வைத்துப் பிறையந்திரம் எழுதி பஞ்சாக்கரத்தை 'மசிவயந' என மாற்றி மாரணம் செய்யும் வகையும் மந்திரமுறை முதலியவையும் கூறுகிறது இதற்கு மேல் விளக்க ஒண்ணாது.

## 9. அனாகதத்துள் பட்சி வித்தை

289. சுத்திவைத்து முன்போலச் செய்து பாரு
துடியான அஷ்டகன்மம் ஆகும் பாரு
குத்திவைத்து தேயுவினுட வீட்டைக் கேளு
தெளிவான முக்கோணம் சிவனின் ஆட்டம்
கத்திவைத்து 'உங்'கென்றும் 'சிங்' கென்றும்தான்
கருதுவாய் 'டீங்' கென்று கோபீஜம் வைத்து
முத்திவைத்து ஓதுவது 'உங்சிங' கென்று
மொழியடா 'டீங்'கென்று 'ரங்' 'லங்'
'நசியென்றே'

இது 'அநாகதம்' என்ற இதய கமலச் சக்கரத்தில் முக்கோணம் அமைத்து 'சி'யை பஞ்சாக்கர முதலாக வைத்துச் செய்யும் மாரண முறைகள் கூறுவது. மற்றவை அறிந்து கொள்க.

290. என்றல்லோ எதிரியுட பேரைச் சொல்லி
எழுதுவாய்க் கருவை அங்கே தொட்டுக் கொண்டு
நன்றல்லோ அத்தியுடன் வஸ்து வைத்து
நலமாக முன்சொன்ன படியே ஓது
மன்றல்லோ அட்டகன்மம் அறுபத்தி நாலும்
வகையாகச் செய்வது தான் பலிக்கும் பாரு
குன்றல்லோ வெடிமருந்தும் இதற்கொவ் வாது
குடி கெடுத்த பட்சிவித்தை கூறொண்ணாதே.

இதுவும் போன செய்யுள் தொடர்ச்சி இது அட்ட கன்மம் ஒவ்வொன்றில் எட்டு உபஅட்ட கர்மம் சித்தியாகும் வகை கூறுகிறது. அதாவது வசியத்தில் வசியம், வசியத்தில் மோகனம் என்ற வகையில் போகும் எட்டு கர்மத்திலும் இணைவதால் 64 வகை அட்ட கன்மம் வினைவகை சுட்டிக் காட்டுகிறது. அதற்குமேல் விளக்க வொண்ணாது. இது காற்றின் தத்துவம்

## 10. விசுத்தியுள் பட்சி வித்தை வாயு வீட்டின் அக்ஷரம்

291. கூறவெண்ணா வாயுவினும் வீட்டைக் கேளு
குமரகுரு சக்கரம் தான் அறுகோணம் அப்பா
மாற்றவொண்ணா 'எங்' 'மங்' கென்று போடு
மறையாதே 'வீங்' கென்று கோச பீசம் வைத்து
தேறவொண்ணா சிவத்திற்கு எழுத்தைக் கேளு
திறமான 'எங்வீங் கங்ரங்' இன்னாளை 'நசி' என்றோது
நேரொண்ணா கருத்தொட்டு ஓதும் போது
நீறிவிடும் பிரசண்ட வாயுதானே

இது கண்டஸ்தானத்தில் 'அறுகோண' விசுத்தி சக்கரத்தை வைத்து அட்டகன்மம் செய்யும்முறை கூறுகிறது. இது ஆகாச ததுவமாயினும் வாயு தத்துவமாகக் கொள்ளப்பட்டுள்ளது.

விளக்கம் கண்டு கொள்க. இதற்குமேல் ஒண்ணாது. (வாயுவில் ஆகாயம் அல்லது ஆகாயத்தை வாயு என்று கொள்க).

## 11. ஆக்ஞா சக்கரத்தில் பட்சி வித்தை பலிக்கும் வழி

(படம் சூாண்க)

### ஆகாய வீட்டின் அக்ஷரம்

292. தானென்ற ஆகாய வட்ட வீடு
சதாசிவனார் வாகுமந்த வீட்டில் அப்பா
தேனென்ற 'ஒங்' 'யங்' என்றும் போடு
திரமாக 'பிங்' 'ரிங்' காரம் கோச பீஜம் வைத்து
மானென்ற தேவியைத்தான் வருந்திக் கொண்டு
வளமாக ஓதும்வகை நன்றாய்க் கேளு
பானென்ற ஒங் யங் டிரிங் கங் சங் இன்னானை நசி நசி
பரமபதம் வழி நோக்கிப் பகைத்துச் செய்யே.

இது ஆக்ஞா சக்கரத்தில் 'புருவ நடு' உள்ள இடத்தில் வட்ட யந்திரம் 'ய' என்ற பஞ்சாக்கரம் தொடங்கிச் செய்யும் மாரணவகை கூறும். மற்றவை விளக்கிக் கொள்க.

## 12 மூலாதாரத்துள் பட்சி வித்தை

### பிரிதிவிக்குக் கடைத்தலையாகப் பிடித்து மாறல்

293. பகையாது கடைத்தலையைப்பிடித்து மாற
பகைத்தபேர் எல்லாரும் உன் பதமே சேர்வார்
நகையாது 'நசி'யை விட்டு 'வசி' என் றோது
நலமான தொழில்களெல்லாம் 'நசி'யை நினையாதே
வகையாதே மற்ற அஞ்சு தொழில்கட் கப்பா
வகையாக நசியைவிட்டால் பலிக்காது பாரு
துகையாகத் தொழில் அறிந்து வோத வேணும்
துடியான பகைபோச்சு உறவும் ஆச்சே

பஞ்சாட்சரத்தினை மூலாதாரத்தில் கடை எழுத்தான 'ய' வை முதல் வைத்து 'யநமசிவ' என்று மாற்றி 'ந' என்ற கட்டளைச் சொல்லைத் தவிர்த்து 'மசி' என்று ஓதினால் ஆகிருடணம். மோகனம், வசியம் என்ற மூன்றும் பலிதமாகும். 'நசி என்று ஓதினால் மற்ற 5 தொழில்களும் பலிதமாகும். இவையெல்லாம் தெரிந்த பட்சி வித்தைப் புலவனுக்கு பகை இராது. இவனுக்கு எல்லோரும் நண்பரே.

### சுப காரியத்திற்கு செபம் செய்ய இடம்

294. உறவான தொழில்களெல்லாம் மித்துருவை சேர்த்து
ஓதுவாய் ஒருமனதாய் இருந்து கொண்டு
பறவான நல்லதோர் காரி யங்கள்
பலிக்குமடா வில்வத்தின் கீழ்நின் றோது
மறைவான சிவாலயங்கள் கெங்கை யோடும்
வளர்ந்தநல் வனத்திலே இருந்து செய்தால்
திறமான மூன்றுவகை தொழிலும் ஆகும்
தீமையென்ற தொழில்செய்யும் தலத்தைக் கேளே!

மோகனம், வசியம், ஆகிருடணம் இந்த தொழில் செய்ய தன்பட்சி அல்லது தன்பட்சிக்கு மித்துரு பட்சியின் அரசு, ஊண் காலத்தில் ஒருமனதாய்ச் செய்ய வேண்டும். சிவாலயம், கங்கை நதி, ஓரம், வில்வ மரத்தடி, நந்தவனம் இவறறில் இருந்து செய்தால் மேற்சொன்ன மூன்று வகை சுபக் கருமங்களும் பலிக்கும் என்பதாம்.

### அசுப காரியத்திற்குச் செபம் செய்யும் தலம்

295. தலமதுதான் பாழ்வீடு மெத்த நன்று
தண்மையுள்ள முச்சந்தி பாதை யாகும்
குலமதுதான் காளியுட கோயில் ஆகும்
குலாவுகின்ற பொதுவான அம்பலமும் ஆகும்
செலமதுதான் மாட்டினுட தொழுவ மாகும்
தீயெரியும் காடாகும் சுடுகா டாகும்
வயவதுதான் இத்தலத்தில் தொழிலைச் செய்யே
மக்களே அஞ்சுவகை தொழிலும் ஆமே.

அசுப காரியங்களுக்குப் பாழ்வீடு, முச்சந்தி, காளிகோயில், மக்கள் கூடும் பொதுவான அம்பலங்கள், மாட்டுத் தொழுவம், தீயெரியும் சுடுகாடு, இந்த இடங்களில் 5 அசுப காரியங்களும் ஓதினால் பலிக்கும் என்றவாறு.

296. தொழிலாகும் வகையேது சொல்லக் கேளு
துடரு முன்னே பக்ஷியை நீ கண்ட போது
குளியாகும் அவ்விடத்தைச் சுத்தி பண்ணு
குணமாகும் மந்திரந்தான் 'சிவசிவ' என்று சொல்லு
தழலாகும் பச்சிலைக்கு சாபம் நீக்கி
தன்மையுடன் சாப்பிட்டு சிலைபோல வருந்தப் பாரு
தெளிவாகும் சக்கரத்தை அக்ஷரத்தை வைத்து
நேர்மையுடன் சக்கரத்தை கருத்தொட்டு பூசை செய்யே.

நொழில் செய்யும் வகை என்னவென்றால் சொல்லக் கேட்டுக்கொள்வாய்: நீ உன் செய்ய வேண்டிய பக்ஷியை அறிந்து கொள், இடத்தைச் சுத்தி பண்ணு. நீயும் குளித்த பின் "சிவ சிவா" என்ற மந்திரத்தைச் செபம் செய், பக்ஷிக்குரிய மூலிகையை நீ உன் அதற்கு சாபம் நீக்கி உண். தேவைப்பட்ட சக்கரத்தை முன்பு வைத்து கருத்துன்ற அக்ஷரத்தைப் போட்டு பூசை செய்வாயாக. எல்லாத் தொழில்களும் வெற்றியாகும்.

397. பூசை செய்ய நிர்வாணத் தோடே நின்று
பிடுங்குவாய் கிழக்குமுக மாக நின்று
பூசைசெய்து வேர்வாங்கி தேவி முன்பு
பண்பாக நீ வைத்து துபம் பொலிவுடனே
வேசைசெய்து வேரெடுத்து வைக்கும் தலைமை கண்டு
விழியான பொலிகொடுத்து புதைக்கும் போது
நாசைசெய்து போகுமடா தொழில்பொல் லாது
நாடாதே வெகு பாவம் கொடுமை ஆமே!

பூசிக்கும் முறையாவது: தான் செய்யும் தொழிலுக் குரியவள் பட்சி மூலிகையை சாப நிவர்த்தி செய்து கிழக்கு நோககி நிர்வாணமாக நின்று கொண்டு நல்ல பொலி வுடனே வேரைப் பிடுங்கி அதைச் செய்ய வேண்டியதைச் செய்து பாவைப் பிரயோகம் வகையாகச் செய்து பூமியில் புதைத்துவிட்டால் எல்லாத் தொழில்களும் பலிக்கும். இருப்பினும் தீய கொடுந்தொழிலான ஐந்தையும் எந்த வகையிலும் தீயவை ஆகலான் அவற்றில் ஈடுபடாதிருத்தல் மிக மிக நன்றாம் என்றவாறு. தொழில்கள் எல்லா வற்றினையும் வாலைத்தேவியின் முன் வழிபட்டு, செய்யவேண்டும். இது மறக்கக் கூடாதாம் என்றவாறு.

298 கொடுமையுள்ள வஞ்சகர்க்குச் செய்ய வேணும்
கொலையான பேர்களுக்குச் செய்ய வேணும்
அடிமை யென்று வந்தவனுக்கு அறிவித்தக் கால்
அப்பனே அவன்செய்யும் தொழிலிற் பாதி
வருமையென்ற மனதறிந்து சொன்னாயானால்
வந்திடுமே வெகுபாவம் வந்து சேரும்
கருமையுள்ள பித்தர்கள் வந்து ஏய்ப்பர்
தள்ளிவிடு அதனாலே பலனுடண் டாமே.

தீயதொழில்களைக் கொடிய வஞ்சகர்கள் கொலை செய்தவர்கள், இவர்களுக்குச் செய்யாமல் அடிமைகளை விடுவிப்பதற்கு அப்படிப்பட்டவர்களுக்குச் செய்தால் அடிமை யென்பவர் புணணியத்தில் பாதி செய்தவர்க்குச் சேரும். பழி குற்றமுள்ளவர்களுக்கு பக்ஷி வித்தையைச் சொன்னால் பாவம் அதிகம் உன்னைப் பாதிக்கக் கூடிய பித்தர் களுக்குச் சொல்லாதே. அவர்கள் ஏமாற்றி விடுவார்கள். அவர்களைச் சேர்க்காமல் தள்ளி வைப்பாயாக என்றவாது.

299. பலனுண்டு இத்தொழிலை வெளிவி டாதே
பழிக்கஞ்சாக் கலியுகத்தில் பழியோ பாவம்
பலனுண்டு உலகத்தின் பகையோ இல்லை
பெருமை உள்ள பெரியோர்கள் வார்த்தை சொல்வார்
கலனுண்டு என்று சொல்லி சற்றுநினை யாதே
கலங்காதே மனமுறுதி கழிய வேணும்
சிலருண்டு வருங்காலம் தங்கும் காலம்
செடமறிவதற் கல்லோ தெரிந்துபாரே.

இந்த பட்சி வித்தைக்கு நிறைந்த பலனுண்டு இதை யாருக்கும் வெளியிடாதே. கலியுகம் பழிக்கஞ்சாது. பாவம் அதிகம் செய்யும் காலமாகும். எனவே இதை யாவரும் தீயவழியில் பயன்படுத்துவர். இதை உனக்கு சான்றோர்கள் விளக்கிச் சொல்வார்கள். நாம் நன்கு கற்று விட்டோம் என்று சற்றும் நினையாமல் அடக்கமாக இரு. உனக்குப் பட்சி வித்தை பலிக்க வேண்டுமானால் கலங்காதே மனதுறுதி வேண்டும். சிலருக்கு தனது எதிர் காலம் தெரியவரும் எனவே இந்த சட தேகத்தின் தன்மையை நன்கு அறிந்துகொள் என்பதாம்.

300. தெளிவைத்தான் வெகுவினையம் வைத்துப் பாரு
செடமுழுதும் சத்துருவை மித்துருவைக் கண்டு
அழிவதுதான் உண்டானால் தொழில்செய் யும்போது
அப்பனே பட்சிக்குப் பகையைக் கூட்டு
வெளிவதுதான் பட்சிபகை இருந்தி டத்தில்
தேரான கருத்தொட்டு வைக்க வேணும்
கழிவதுதான் தலைகீழாய் மாறும் போது
சண்ணுமடா கருக்குருவும் சண்ணும் பாரே.

இதுவும் தொழில் செய்யும்போது ஏற்படும் விளைவுகள் முதலிவற்றைக் கூறுகிறது. வினையமாக பட்சித் தொழில் பண்ணவேண்டும் தன் பட்சிக்கு மித்ரு பட்சியைத் தொழிலில் கூட்டவேணும் தொழில் தோற்கும்போல் இருந்தால் (எதிரி) பட்சிக்குப் பகையைக் கூட்டி வினைபுரிய வேண்டும் பகையான இடத்தில் கருத்தூன்றி செயல் செய்யவேண்டும். பஞ்சாக்கரத்தைத் தலைகீழாய் மாற்றும் போது சில உட்போராட்டங்கள் நிகழும்.

301. சண்ணுமடா ருத்ரசபம் முடிந்த தானால்
தானினைந்த படி முடியும் தப்பா தப்பா
எண்ணுமடா முன்போலத் தொழிலைச் செய்து
எடுத்திடுவாய் கொள்ளிதனை அதனில் வைத்து
கண்ணுமடா ருத்திரனை நினைத்துக் கொண்டு
கனிவாக வந்துடனே சுத்தி வைத்து
பண்ணுமடா ஓர்மனதால் இருந்து ஜபம் செய்தால்
பழியல்லா ருத்திரனும் முடிப்பான் பாரே.

பட்சி அட்ட கன்மம் செய்யும் போது சண்டை, தடங்கல், துன்பம் முதலியவை நேர்ந்தால் ருத்ர ஜபம் செய்தால் எல்லா வினைத் தொல்லையும் நீங்கி நன்மை உண்டாகும் என்று கூறப்பட்டது.

302. முடிப்பானே அவனுடைய கருவிருப் பாலே
மோசமது செய்திடுவான் பழி கொலைக் கஞ்சான்
அடுப்பானே அவனுடைய எமதண் டினாலே
அவனடிக்க ஆர்விலக்கப் போறார் அப்பா
குடிப்பானே உதிரமென்ற பானம் தானும்
கொல்லுவான் அவனுடைய ஈரல் கவ்வி
வடிப்பானே மூளையைத்தான் தின்று ஐயா
கலஙகாமல் நீ இருந்து பூசைமுடிப் பாயே.

கலங்காமல் நீ இருந்து பூசை முடிப்பாயே. இதில் மேற்கண்ட செய்திகளே வேறுவகையில் கூறப்பட்டுள்ளன. எதிரிகள் செய்யும் ஏவல்வினைகள், கரு, ஈரல், ரத்தப் பிரயோகம் முதலியவை செய்ப வகை பகை அமைந்தால் நாம் மனம் கலங்காமல் ருத்ர ஜபம் தொடர்ந்து செய்தால் வெற்றி ஏற்படும்.

303. முடிப்பாய் உன்மனது போலே மக்கள்
முடிவதுதான் எதனாலே கருக்குருவி னாலே
கெடுப்பானே எதிரிபலம் குறைந்த தாலே
சிவனுடைய ருத்ரகளை கோபத் தாலே
வடிப்பான காலன் என்ற துகைமுடிந் தாலே
வந்ததுடா இந்த வினை மறுக்கப் போகா
குடிப்பானே ருத்திரனும் உதிரத்தைத் தானே
கோபத்தை ஒருவரால் திருப்பொ ணாதே!

எதிரியின் பலம் குறைந்தால் பட்சி கன்ம வித்தையால் அவனுக்கு ஏற்படும் அழிவைப்பற்றி இது கூறுகிறது. சில சமயம் கன்மம் செய்யும்போது ருத்ர கோபம் ஏற்படும் அதன் விளைவு தோன்றும்போது யாராலும் தடுக்க முடியாது என்று கொள்க.

306. திருப்புவது கருவறிந்த பேரே அல்லால்
ஜெகத்திலுள்ள பேர்களோ திருப்பப் போறார்
கருப்புவது ருததிரனுட மந்திரந்தானப்பா
பகருவது ஓம் ஸ்ரீயும் கிரீம் அங் உங்
மது மாங்கிஷி ருத்ரமூர்த்தி வாவாஎன்று
உருப்புவது உருவங்கே நூற்றிருபத் தெட்டு
வருத்தினால் ருத்திரனும் மனதில் தோன்றும்
முருப்புவது முன்சொன்ன எழுத்தைக் கூட்ட
முடிக்கினால் ஏதிரியில்லை முடிந்து போச்சே

இதுவரை பல பாடல்களில் சொல்லப்பட்டுவந்த ருத்ர மந்திரம் என்னவென்று இப்பாடல் விளக்குகிறது. பட்சித் தொழிலில் சத்துரு தொல்லை ஒழிய இந்த ருத்திர ஜபத்தில் சிறப்பாய் நின்றால் எதிரி அழிந்து போவான் என்று கூறியதாம்.

305. போச்சுதடா முன்சொன்ன படிதப் பாது
பொல்லாத பட்சிவித்தை பொருள்சொல்லாதே
சாட்சி என்று வாராது மனதடக்கம் வேணும்
தன்மையுள்ள புத்தியல்லோ தணிய வேணும்
வாச்சுதென்று உயிர்வதை செய்யநினை யாதே
வந்திடுமபார் கர்மவினை தொலைக்கொணாதே
பாச்சுதுபார் குருபதத்தை பணிந்தோர் அப்பா
பதினெண்பேர் சாபமில்லை பலிக்கும் பாரே

இதுவரை சொன்னதெல்லாம் தப்பாது. பட்சிவித்தையின் உண்மைப் பொருளை வெளியில் யார்க்கும் சொல்லாதே. மனதடக்கம் ஒருமுனைப்பு இவற்றைப் பழகு, பத்தில் நான் அகங்காரம் இன்றி தணியவேண்டும். நமக்கு பட்சிவித்தை வாய்த்து விட்டது என்ற செருக்கால் அனாவசியமாக மாரணம் முதலியவை செய்யாதே. உன்னைக் கொடிய வினைகள் பற்றிக் கொள்ளும். குரு பாதத்தை நினைந்து நடு நிலையில் செயல்பட்டால் பதினெண் சித்தர்கள் சாபம், பட்சி சாபம் இவை உனக்கு ஏற்படாது.பட்சி வித்தையும் உனக்கு நன்றாகப் பலிக்கும் என்று அறிவாயாக என்பதாம்.

306. பலிக்குமடா குருபதத்தை மயக்கொணாது
பரமபதப் பொருளெனவே எண்ணு வாய்நீ
சொலிக்குமடா சரஸ்வதியாள் கிருபை தானும்
தொடுத்திடுமே ஞானவிதி அமையும் பாரு
கெலிக்குமடா உன் நாவில் சொன்ன தெல்லாம்
கெணிதமுடன் உனைப்பகைத்தோர் வாழ்வதில்லை
வலிக்குமடா தன்னுயிர்போல் மன்னுயிரை எண்ணி
வாழ்வதுதான் உலகத்தோ டொத்து வாழே

இதன் பொருள் வெளிப்படை, விளங்கிக் கொள்க.

307 ஒத்து நின்று வாழ்வதுநான் அறிந்து மக்கள்
உலகத்தில் பேய்க்கூத்தாய் ஆடும் பாரு
சத்து நிறை பொருள் அறியார் சண்டி மாந்தர்
சன்னாசி ரிஷிகளைப்போல்வேடம் பூண்டு
சுத்திநின்ற பெரியோரை வணக்கம் செய்து
கலந்த தனால் மறைப்பும் அது வெளியாய்த் தோன்றும்
புத்திவரும் அறிவு தங்கும் சிவயோகம் பெற்ற
பூதத்தில் நீயும்ஒரு சித்தா வாயே.

உலகத்தோடு ஒத்து வாழ்வது முறையானாலும் உலகில் பெரும்பாலோர் சிவயோகம் அறியாமல் வாழ்வது பேய்க்கூத்தாடுவதுபோல் இருக்கும். சத்தான பொருளையறியாமல் சிலர் சன்னியாசி ரிஷிகளைப்போல் வேடம் போட்டு போலித்தனம் செய்வர். ஆனால் அவர்களுடன் கலக்காமல் கற்ற பெரியோர்களை அண்டி வணங்கி மெய்யறிவு பெற்றால் அஞ்ஞான மறைப்பான இருள் மறைந்து ஞான வெளிச்சம் பெறுவாய். அதனால் புத்தி தெளிவும் அறிவு நிலைபெறுவதும் ஏற்படும். அதனால் உனக்கு சிவயோகம் சிறப்பாக அமையும். இந்தக் காரணத்தால் நீயும் ஒரு சித்தன் என்று பேசப்படுவாய். இதனால் சிவயோகம் பயின்ற சித்தன் தான் பட்சி வித்தைகற்கும் தகுதியுடைவன் என்று கூறப்படுகிறது.

308. சித்தனென்ற பெயர்பெறவும் வெகுநாட் செல்லும்
செடம் இருந்தால் அதிசயங்கள் காண லாகும்
பந்தமென்ற கன்மவலைக் குள்ளே சிக்கி
பாழ்நரகில் வீழாதே பலனே துண்டு
கர்த்தனென்ற சிவனுடைய கடாக்ஷந் தாலே
கலந்தேற மனதுறுதி ஆக வேணும்
வத்தனென்ற உலகத்தில் கோடிக் கொன்று
வாழுவாய் இல்லறத்தில் பெரிதாம பாரே

பட்சி வித்தை சிவயோகத்தால் முறைப்படிக் கற்றுத் தெளிந்தாலும் 'சித்தன் என்று பெயர் ஏற்பட வெகுகாலம் ஆகும். அதனால் உலக பந்தமென்ற பாச வலைக்குள் அகப்படாமல் உன்னைக் காத்துக் கொள். இல்லையென்றால் பாழும் நரகத்தில் விழுவாய். மர்த்தரான சிவனாரின் திருப்பார்வையால் அவனுடன் கலந்த உன் மனது உறுதி பெறும். இதனால் நீ உலகத்தைத் துறந்து சன்னியாசி ஆக வேண்டார், கோடிக் கொருவர் தெளிவு பெறுவர். உன்னைப்போல் இல்லறத்தி லிருந்து சிவயோகம் சென்னெறி பிடித்தொழுகுவர் என்று இதுவே பட்சிவித்தையின் சிறப்பு. அது கற்றவரின் சிறப்பு, தீ நெறியில் பயன்படுத்தினால் பட்சி வித்தையினால் ஏற்படும் அழிவு முதலியவை இதுவரை விளக்கிப் பலவாறாக பலவிஷயங்கள் இந்த படலத்தில் கூறப்பட்டன.

## 18. ஆருடப் படலம்

மனிதனுக்கு அன்றாட வாழ்வில் எத்தனையோ குழப்பங்கள், சிக்கல்கள் பிரச்சினைகள் தினமும் ஏற்படுகின்றன. எடுத்தகாரியம் என்னவாகும்? திருமணம் கூடுமா? தேர்வில் வெற்றி உண்டா? என்ன குழந்தை பிறக்கும்? கடன் கிடைக்குமா? கொடுத்த கடன் திரும்பி வருமா வீடுவாங்க முடியுமா, பயணம் இனிது நடக்குமா? பகை வெல்ல முடியுமா? வியாபரத்தில் இலாபம் கிடைக்குமா, இத்தொழில் செய்ய நன்றா? இப்படி எத்தனையோ கேள்விகளுக்கு விடை காணத் துடிக்கிறான் மனிதன். ஜோதிட நூல் மூலம் ஒருவன் கேள்வி கேட்கும் நேரத்திற்குரிய லக்னம், மற்றும் கோள்நிலை கொண்டு இவற்றிற்கு விடைகாணும் வகைதான் ஜோதிட சாஸ்திரத்தில் ஆருடம் என்று சொல்லப்படுகிறது. அதேபோல் ஒருவன் கேள்வி கேட்கும்போது அவன் வாயிலிருந்து வரும் வார்த்தையின் முதலெழுத்தைப் பட்சியாகக் கொண்டு அப்பட்சி கேள்வி கேட்ட அந்த சமயத்தில் செய்யும் தொழில், அந்தரத் தொழில். மற்றும் அதே சமயம் சத்ரு, மித்ருவாகவும் பட்சிகள் அரசு ஊணில் இருப்பதால் ஏற்படும் நல்விளைவு, அல்லது அப்போது நடக்கும் நட்சத்திரத்தின் பட்சியின் மேற் படி தொழில் முதலியவற்றின்படி நன்மை தீமை முதலியவற்றை வகைப்படுத்திக் கூறுவது ஆருடப் பகுதியாகும். இதற்குப் பட்சிகள் குறிக்கும் காரகங்கள் அதாவது பலவேறு பொருட்கள், தன்மை, முதலியவைகள் இவற்றை முதலில் தெரிந்துகொள்ளக் வேண்டும்.

இவை பெரும்பகுதியும் பஞ்சபட்சி பலதிரட்டில் சுவடி எண் 868-ல் 143 முதல் 153 பக்கங்கள் வரை கொடுத்துள்ள செய்திகளையும் பிற சுவடிகள் நூல்கள், முதலிய வற்றிலிருந்து சிறுபான்மையும் தொகுத்துப் பதகமாக அமைத்துத் தரப்பட்டுள்ளது.

# 1. பஞ்ச பக்ஷிகளுக்குரிய காரகங்கள்

| வ.எண் | காரகங்கள் (விஷயங்கள்) | வல்லூறு | ஆந்தை | காகம் | கோழி | மயில் |
|---|---|---|---|---|---|---|
| 1 | பூதம் பூ.ப | பிரிதிவி (மண்) | அப்பு (நீர்) | தேயு (தீ) | வாயு (காற்று) | அகாயம் (வெளி) |
| 2 | பூதம். அ.ப | தீ | காற்று | மண் | நீர் | வெளி |
| 3 | நிறம் பூ.ப | பொன் | வெண்மை | செம்மை | பசுமை | கருமை |
| 4 | நிறம் அ.ப | கருமை | செம்மை | பொன் | வெண்மை | பசுமை |
| 5 | இயல்பான பொது நிறம் | நெருப்பு ரத்தநிறம் | தூய்ய வெண்மை | பொன்மை | பால் வெண்மை | கருமை |
| 6 | ஜாதி பூ.ப | வேத்தன் | வாணிகன் | அந்தணன் | வேளாளன் | தாழ்த்தப் பட்டவன் |
| 7 | ஜாதி அ.ப | அந்தணன் | வணிகன் | வேந்தன் | வேளாளன் | நீசன் |
| 8 | திக்கு பூ.ப பகல்/இரவு | கிழக்கு<br>கிழக்கு | தெற்கு<br>வடக்கு | மேற்கு<br>மேற்கு | வடக்கு<br>தெற்கு | மையம்<br>மையம் |
| 9 | திக்கு அ.ப பகல்/இரவு | மையம்<br>மையம் | வடக்கு<br>தெற்கு | கிழக்கு<br>கிழக்கு | தெற்கு<br>வடக்கு | மேற்கு<br>மேற்கு |
| 10 | உலோகம் | பொன் | வெள்ளி | செம்பு | வெண்கலம் | இரும்பு |
| 11 | தாதுமூலம் | மூலம் | ஜீவன் | தாது | மூலம் ஜீவன் | தாதுமூலம் |
| 12 | வலுவு | முக்கால் | அரை | முழுதும் | கால் | அரைக்கால் |
| 13 | காலம் | வருங் காலம் | முக்காலம் | வருங் காலம் | நிகழ் காலம் | இறந்த காலம் |
| 14 | வகை | வள்ளல் | நிற்பான் | நாற்கால் | கொம்பு | காடு |
| 15 | ஆண், பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 16 | சுவை | புளிப்பு | இனிப்பு | துவற்பு | கார்ப்பு | கைப்பு |
| 17 | பதார்த்தம் | மீன் | கோழி | ஆடு | பன்றி | பட்சி |
| 18 | புசித்தல் | பலகாரம் | கூழ் | சாதம் | நெய்கஞ்சி | பசித்தவன் உண்ணான் |
| 19 | காய்கறி | தண்டு | கீரை | கிழங்குஉன் | காய் | பூ |
| 20 | ஒளித்தல் (மறைத்தல்) | வெளியில் | காட்டில் | வீட்டில் | அயல் வீட்டில் | கண்காணாத வீட்டில் |
| 21 | கொடுத்தல் | கெடுவைப் பான் | நாட் செல்லும் | கொடுப் பான் | ஏமாற்று வான | ஈயான் |
| 22 | நாணயம் | அணா | பணம் | விராகன் | ரூபாய் | துட்டு |
| 23 | தொகை | பத்து | நூறு | லக்ஷம் | ஆயிரம் | மூன்று |
| 24 | தினம் | ஐந்து | இரண்டு | மூன்று | நாலு | ஒருநாள் |
| 25 | துணி | நார்மடி | பட்டு | சரிகை | துணி | கந்தல் |
| 26 | அளவு | உழக்கு | படி | அரைப்படி | மரக்கால் | ஆழாக்கு |
| 27 | எடை | விராகனெடை | பலம் | வீசை | சேர் | மணங்கு |
| 28 | வயது | பாலன் | குமரன் | யவ்வனன் | விருத்தன் | சாவான் |
| 29 | உருவம்பூ.ப | பெரியவன் | இளையவன் | நெடியவன் | குள்ளன் | சமானன் |
| 30 | உருவம்அ.ப | நெடியவன் | குள்ளன் | வெகுரோமன் | வலுத்தவன் | சமானன் |
| 31 | அவயவம் | முகம்<br>பெருவிரல் | கண்டம்<br>தொடுவிரல் | மார்பு<br>நடுவிரல் | வயிறு<br>பவித்திரவிரல் | துடை<br>சுண்டுவிரல் |
| 32 | கோண வகை | நீண்ட கோணம் | ஐங்கோணம் | அறு கோணம் | நாற் கோணம் | முக்கோணம் |

## 2. ஆருடம் சொல்லும் வகை

மேபடி காரகங்களை மனதில் கொண்டு ஒருவன் சொல்லும் முதல் எழுத்தைப் பட்சியாக்கி அதன் செய்தொழில் உணர்ந்து அப்பிரச்சினைக் காலம் முதல் அப்பட்சி செய்தொழில் நேரம் காலங்களிலுள்ள செய்வினைகளை அறிந்து வெற்றி தோல்வி, சத்துரு மித்துருவையும், வலுவையுய் குறையையும் கண்டறிந்து ஆருடம் சொல்லுக. அல்லது அப்பட்சி செய்வினைக் காலம் முழுவதும் முறையே சொன்னாலும் சொல்லலாம்.

## 3 ஆருடத்திற்குப் பூர்வபட்சத் தொழிற் பலன்

ஆருடம் கேட்கும்போது முதல் கேட்கும் சொல்லின் முதல் எழுத்து அதாவது தலை எழுத்தைப் பட்சியாக்சி அவ்வமயம் அப்பட்சி செய்யும் தொழில்கள் ஐந்திற்கும் பூர்வ அமர பட்சங்களுக்குப் பலன் சொல்லுதல். முதலில் பூர்வபட்சத்திற்குப் பலன் வருமாறு.

### பல்விகற்ப நேரிசைக் கலி வெண்பா

309. உண்டிபொருள் வாணிபமும் மொய்குழலாய் வாழ்வாகும்
சுண்டுபுறை நோய்கலக்கம் காணலாம் - எண்டிசையும்
நடைஎல்லாரம் தன்னிலை தாழும் பயிர்போம்
தடைமணம் வாழ்கலகம் தாக்கும் திடமாய்

அரசுபுகழ் வெற்றி தனமாம் பரிசும்
வரவுதரும் வான்செல்வம் தாழா - துரமெனவே

தூங்கநோய் பகைவறுமை துன்பம் வாழ் கலகமுடன்
ஓங்குமனைப் பெண்டுமணம் ஆகாது - தீங்குளதாம்

துஞ்சபிணிச் சாவாம் பகைசெல்வம் வீண்செலவாம்
வஞ்சமனை வாழ்வின்றிப் போம்.

(இ-ள்) கேள்வி கேட்க அப்பட்சி ஊண் காலத்தில் இருந்தால் பொருள் சேரும், வாணிபம் பெருகும், பெண்ணோடு அல்லது பெண்ணின் வாழ்வு விளங்கும். ஆனால் சிறிது நோயும் கலக்கமும் இருந்து கொண்டு இருக்கும்.

நடை தொழிலில் இருந்தால் தன் நிலை தவறும், பயிர் விளைச்சல் சாவியாய்ப்போம். கல்யாணம் தடைபடும், வாழ்க்கை கலக்கத்தால் நிம்மதி கெடும். பொருள்கள் சேரும், நிறைய வரவு கூடும், இருக்கும், சேர்ந்த செல்வம் குறையாது. வலிமை இருக்கும்.

தூங்கும் காலத்தில் இருக்கும்போது நோய் பெருகும், பகை வளரும், துன்பம் கலகம் உண்டாகும், பெண்ணின் கல்யாணம் ஆகாது.

மரண காலத் தொழில் நடந்தால் நோய் கடுமை அதிகமாகிச் சாவு நேரும். பகை வளரும், வீண் செலவு அதிகமாகும். வஞ்சனை ஏமாற்றம் கூடும். வீடு ஆகிவராமல் யாரும் நல்லபடி வாழாததால் பாழாகிப் போய் விடும்.

# 4. ஆருடத்திற்கு அமரபட்சத் தொழில் பலன்

பல்விகற்ப நேரிசைக் கலி வெண்பா

310. பிற்பக்கம் மாரிவிளை வோடுபெண்டு வாழ்வுசேய்
அற்பநோ யோடுபகை உண்டிக்காம் - சொற்பெரிய
வெற்றிசுப லாபமும் வெப்பநோய் போமினிய
கற்றமிகும் கேட்கலுறும் சொல்தனக்கே - முற்றும்
பயம்கலகம் நோயர்சில் மாயா நயமாய்
பிணிகரும்பம் கேடுபகை பீடை கலகம்
அணி அணியாய் தூக்கத்தில் ஆக்குமே – துணிவுடனே
சாவுபிணி கோள்பகையும் சங்கடமும் பொருள்களவு
சாவிப் பயிராகிப் போம்.

(இ-ள்) பட்சிகளின் செய் தொழில்படி அமரபக்ஷத்தில் ஆருடத்திற்குப் பலன் வருமாறு. உண்டி நடந்தால் மழை குறையும், பெண்ணின் வாழ்வில் துன்பம் கூடும், அற்ப நோய் உண்டாகும். பகை கூடும். இவை ஊண்பட்சிக்காம்

நடை காலப்பலன்: காரியத்தில் வெற்றி, சுபகாரியம் கூடும். ஆதாயம் பெருகும். பற்றிய வெப்ப நோய் தீரும். தன் சொல்லுக்குப் பிறர் பணிந்து கேட்டு அதன்படி டப்பார்.

அரசு காலப் பலன் பிணி உண்டாகும். கேடு, பொருள் சோரம் போதல், பீடை கலகம் இவை அடுத்தடுத்து உண்டாகும்.

மரண காலப் பலன்: இறப்பு நேரும். நோய் பெருகும். பிறர் தன்னைப்பற்றி கோள் சொல்வர். பகை வளரும், பொருள் களவு போம், சங்கடம், துன்பம் பெருகும். பயிர் விளையாமல் அறைகுறையாய்ச் சாவியாகும்.

தேய்பிறையில் ஊண்தொழிலுக்குக் கெட்டபலனும், நடைக்குத் தீயபலனும் கொடுக்கப்பட்டுள்ளது காண்க. எனவே மற்ற எல்லா சூழ்நிலைகளிலும் இத்தொழில் களுக்கு தேய்பிறைக்கு இதேபலனைக் கொள்க.

## 5. ஆருடத்திற்குப் பூர்வ பட்சத் தொழிற் பலன் மேலும் ஒவ்வொரு தொழிலுக்கும் தனியாகவும் விரிவாகவும் கூறுதல்

### 1 ஊண் காலத் தொழிற் பலன்

*அறுசீர் ஆசிரியச் சந்த விருத்தம்*

311. போசன மாகில் பதிவாழும் போனார் மீள்வர் போக்கில்லை
காசினி வாழ மழைபொழியும் களவும் காணும் கதிர்விளையும்
பேசின கன்னி பேறாகும் பிணியும் தீரும் பெண்பெறுவான்
காசறு செம்பொன் வணிபமாம் மன்னர் வெல்வார் மலர்க் குழலே

(இ-ள்) ஆருட காலத்தின்போது தோன்றும் பட்சி ஊண் தொழிலில் இருந்தால் ஊரில் இனிது வாழ முடியும், பயணம் சென்றவர் திரும்பி வருவார். வேறு எங்கும் போகமாட்டார். உலகம் தழைக்க மழை பெய்யும். திருடு போன பொருள் கிடைக்கும். நல்ல விளைச்சல் உண்டு. நாம் நினைத்து மணம் பேசின பெண்ணையே மணம் முடிக்க முடியும். நோய் தீரும், கருவுற்றவள் பெண் குழந்தை பெறுவாள். பொன் நகை வியாபாரம் பெருகும். மன்னர் போருக்குச் சென்றால் வெற்றி பெறுவார் என்று அறிவாயாக மலர் சூடிய கூந்தலுடையளே என்பதாம்.

குறிப்பு: ஆருடம் கேட்போர் கேள்விக்கு விடையாகப் பல செய்திகள் சொல்லப் பட்டுள்ளன. உதாரணமாக களவு போன பொருள் கிடைக்குமா? என்று ஒருவர் கேட்பாராயின், அப்போது தோன்றும் பட்சி ஊண் தொழிலில் இருந்தால் "களவும் காணும்" என்றதால் திருடு போன பொருள் கிடைத்துவிடும். இனி அந்த பட்சிக்குரிய காரகங்களைக் கொண்டு, திருடினவன் சென்ற திக்கு, உருவம், ஆண் அல்லது பெண், நிறம், ஜாதி, எப்பொழுது எத்தனை நாட்களில் கிடைக்கும் போன்ற பல விவரங் களையும் கூற முடியும். மற்றவற்றிற்கும் இப்படியே கொள்க. களவு போன பொருள் என்ன என்பதையும் காரகங்களைக் கொண்டு, உயிருள்ளதா, அற்றதா, உலோகமா போன்ற தாது மூலம், சீவன் என்ற வகைகளையும் கூறமுடியும் என்க. அனைத்துக்கும் இதுவே பொருந்தும்.

### 2. நடைகாலத் தொழிற் பலன்

(யாப்பு - இதுவும் அது)

312. யாத்திரை யாகில் நிலைகுலையும் இராசா போரில்
மாத்திரை செய்யிற் பொருளழிவாம் வதுவை தோற்கும்
காத்திடும் தாலி மீளாது செய்யும் கருமம் தாழ்வாகும்
சூத்திரம் சொன்ன முறைப்படியே சொன்னோம் கண்டாய்
சுரிகுழலே.

(இ-ள்) ஆருட காலப்பட்சி நடைத்தொழிலில் இருந்தால் கேட்ட கேள்வி பலனில்லை. நிலைகுலையும். அரசன்போரில் சென்றால் வெல்ல மாட்டான். எந்த காரியமும் அளவு பார்த்துச் செய்தாலும் பொருள் அழிவு உண்டாகும். கல்யாணம் நின்று போம். திருமணம் நடக்காது கால்நடை சென்றிருந்தால் மீளாது செய்யும்

காரியம் நிறைவேறாது. இது சாத்திரம் சொன்ன பெரியோர் கருத்துப்படியே சொல்லப்பட்டது என்று அறிவாயாக! என்பதாம்.

குறிப்பு: ஆருடத்திற்காக அல்லாமலும் மேற்கண்ட பட்சியின் தொழில் காலங்களில் ஈடுபட்டால் மேற்கண்ட காரியங்கள் அந்தந்த இடங்களில் சொல்லியபடி பலனைத் தரும் என்று அறியவும்.

## ௩. அரசுகாலத் தொழிற் பலன்

### யாப்பு இதுவுமது

313. அரசு செய்யிற் புவியுண்டாம் அரசர் தன்னால் ஊதியமாம்
முரசு முழங்க மணமுண்டாம் மொழியும் குழவி
பெருகும் பலரும் வந்துதிரை இடுவார் பிணிபோம் பாராள்வர்
புரவி களிறு முண்டாகும் பொன்னும் பெருகும் பொற் கொடியே

(இ-ள்) ஆருட காலப்பட்சி அரசு தொழில் செய்தால், மன்னரால் அரசாங்கத்தால் ஊதியமுண்டாகும். நினைத்தப்படி கோலாகலமாகத் திருமணம் நடக்கும். பிரசவக் கேள்வியயின் கஷ்டமின்றி சுகப்பிரசவம் உண்டாகும். (பட்சியின் காரகப்படி ஆண் அல்லது பெண் பிறக்கும்) பலரும் திரை கட்டுவர். (பல வழியில் பிறரால் வரும்படி உண்டாகும். நோய்தீரும், பதவி, அரசபீடம், கிடைக்கும். குதிரை யானை போன்ற (கார் ஸ்கூட்டர் போன்ற வாகனங்கள்) கிடைக்கும். பொன் பொருள் சேரும் என்று பொற்கொடி போன்ற அழகிய பெண்ணே அறிவாயாக என்பதாம்,

துயில்பற்றிய இப்படல முகப்பில் உள்ள குறிப்பைக் காண்க.

## ௪. மரணகாலத் தொழிற் பலன்

### யாப்பு அதுவே

314. துஞ்சு மாகில் துயருண்டாம் தூரம போனார் தாம் மீளார்
நெஞ்சில் நினைத்த காரியம்போம நிதியும் பொருளும்
பஞ்சிப் போனார் விளிவாவார் வினையும் துயரும் மிகவாகும்
கஞ்ச மலர்பூ முகமாதே கருத்தும் தெளிந்து நலமறியே.

(இ-ள்) ஆருடப்பட்சி சாவுத் தொழிலில் இருந்தால் துயரம் உண்டாகும். தூரம் பயணம் சென்றவர் திரும்பி வரமாட்டார், அதையும் மிஞ்சி சென்றவர் உயிர் இழக்கவும் நேர்லாம். நெஞ்சில் நினைத்த காரியங்கள் எதுவும் ஈடேறாது. அதனுடன் அதன் காரணமாகவும், பிற ஏதுக்களாலும் பொன்னும் பொருளும் வீண் செலவாகும் என்று தாமரை போன்ற முகமுடையமாதே அறிவாயாக என்பதாம்.

## 6. ஆருடத்திற்கு அமர பட்சத்திற்குரிய பட்சித் தொழிலின் விரிவான பலன்

### 1. ஊண் காலத் தொழிற் பலன்

#### அறுசீர் ஆசிரிய விருத்தம்

315. கெடுதியும் உடனே காணார் கிளையுடன் வாழ்வு பேறாம்
கடுகிய பிணியும் தீரும் கலக்கமோ சற்றுமில்லை
அடைமழை பெருக உண்டாம் அகமேற நிற்கும் நன்மை
முடுகிய பயண மில்லை மொழிந்தபின் உண்ணுங் காலை

அமரபட்சத்தில ஆருட நேரத்தில் பட்சியின் தொழிலுக்கேற்ப பலன் கூறுவது. இது பூருவ பட்சத்தினின்றும் சிற்சில வகையில் வேறாக உள்ளது காண்க.

(இ-ள்) ஆருடப்பட்சி அமரத்தில் ஊண் தொழில் செய்யுமாகில் கெடுதி உடனே நேராது. காலம் தாழ்ந்து நேரலாம். உறவினரும் தானும் நன்கு வாழ வகையுண்டாம். கடுமையான நோயும் தீரும். கலக்கம் துயரம் கொஞ்சமும் இராது. நல்ல மழை பொழியும். வீட்டில் மகிழ்ச்சி உண்டாகும். ஆனால் பயணம் நேராது (மேற்கொள்ளக் கூடாது) என்பதாம்.

### 2. நடை காலத் தொழிற் பலன்

#### அறுசீர் ஆசிரிய விருத்தம்

316. வெற்றியும் சுகமும் உண்டாம் வியாதியும் மாறும் பின்பு
பற்றிய கருமம் தானும் பயமில்லை அகமும் தாழார்
உற்றவர் கெடுதி காணார் உறமழை உண்டு தூரத்
துற்றவர் வரவும் கூடச் சொல்லும்பின் நடையே தோன்றின்

(இ-ள்) ஆருடத்தில் தோன்றும் பட்சி நடை தொழில் செய்தால் வெற்றி சுகம் உண்டாகும். செய்யும் காரியம் கூடும் பயமில்லை. வீடு விளங்கும். தாழ்வு வராது. உறவினர்க்குக் கெடுதி எதுவும் நேராது. நல்ல மழை உண்டு. வெகு தொலைப் பயணம் சென்றவரும் திரும்பி வந்துவிடுவர் என்பதாம்.

### 3. அரசுகாலத் தொழிற்பலன்

#### (யாப்பு அதுவே)

317 செயமுண்டு சுகமும் உண்டு சிறந்ததோர் பயணம் தன்னில்
புயலிடும் மழையும் அற்பம் புவிதனில் கலக்கமில்லை
இயல்பினால் பெறலாம் வெற்றி இலாபமும் நீடு மாடும்
பயம்விளை யாது தானும் அரசுதாம் பறவை யாகில்

(இ-ள்) ஆருடப்பட்சி அரசு தொழிலில் இருந்தால் காரியம் செயமாகும் சுகம் உண்டு. சிறந்த பயணத்தில் சுகமும் உண்டு. ஆனால் மழை அற்பமே பெய்யும். கலக்கம் கவலை எதுவும் இராது. வாணிபத்தில் ஆதாயம் பெருகும். மாடு மனை கிட்டும். பயம் எதுவும் இராது என்பதாம்.

## 4 துயில் காலத் தொழில்ற்பயன்

யாப்பு இதுவுமது

318 உன்னுடற் பிணியு மல்லால் ஒருபிணி அதிக மாகும
மன்னிய மலழயே இல்லை வைத்தன கெடுதி காணும்
துன்னிய நெஞ்சில் தோடம் தோன்றிடும் கருமம் செய்யும்
மன்னியே உதிக்கும் பட்சி பயமுடன்உறங்கும் மாகில்

(இ-ள்) ஆருடத்தில் துயில் பட்சி தோன்றுமாகில் உனக்கு ஏற்பட்ட நோயுடன் வேறு புதிய நோயும் ஏற்பட்டு எந்த நோயும்தீராது. மழை இராது. வைத்த பொருள் களவு போகும். நெஞ்சில் நோய் தோன்றும் செய்யும் கருமமும் (தொழிலும்) கெடும். எந்த விதத்திலும்இது பயன்தராது என்பதாம்

## 5. மரண காலத் தொழில் பலன்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

319 காவலில் பயமும் உண்டு கலகமாம் கருமம் எல்லாம்
தீவினைப் படுமற் றன்றி செய்யும்நல் வினைகள் ஆகா
சாவினில் விழுந்த பட்சி தனித்துவந் துதித்த தாலே
பூவினில் சிறந்த மாதே புகன்றனர் நூலே

(இ–ள்) ஆருடத்தில் சாவுப்பட்சிதோன்றுமாகில் காவல் செய்வதில் பயன் உண்டு (களவு போம்) கலகம் உண்டாகும். எல்லா முயற்சிகளும் தீய பலனே தரும் நல்ல காரியம் எதுவும் நடக்காது என்ற பூவில் அதாவது தாமரையில் இருக்கும் இலக்குமி போன்ற மாதே! புள்நூல் தெரிந்தவர் இப்படிச் சொன்னார்கள் என்பதாம்.

குறிப்பு: பூர்வபட்சத்திற்கு நடைக்குக் கெட்டபலனும் அமரத்தில் நல்லபலனும் கூறப்பட்டது- அதேபோன்று துயில் மரணங்களுக்கு பூர்வ பட்சத்தில் சொன்னது போல அவ்வளவு கெட்டபலன் கூறப்படவில்லை என்பதை உற்று அறியவும்.

# 5-6 இரண்டாம் பகுதி

ஆருட தொழிற் பலன் இரு பட்சங்களுக்கும் ஒவ்வொரு தொழிலுக்கும் 5 வினாடிகளுக்கும் ஒவ்வொரு வினாடிக்கும் தனித்தனிப் பலன்.

(இவை போகர் பஞ்சபட்சி சாத்திரத்திலிருந்து இப்பொழு புதிதாக எடுத்தெழுதப்பட்டுள்ளது).

## ஆருடத் தொழிற்பலன்

### பூர்வ பட்சம்

320. ஊணாகிற் பதிவாழுங் கலக்கமில்லை
உறவினர்க ளூர்சென்றார் வந்துசேர்வர்
தானாகமழை பொழியுங் களவுமில்லை
தன்புலத்திற் கதிர்விளையுந் தழைத்துவோங்கி
மானான மடமங்கைப் பேறதாகும்
வன்பிணியுந் தீரும்பெண் பெறுவள்பாரு
ஆனாலும் வாணிபம்பொன் பொருளுஞ்சேரும்
அரசரையும் வென்றிடுவ ரவனிமீதே.

ஆருடங் கேட்க வந்தவர் ஊண் பட்சியிற் கேட்கில் வினவினவன் பதியானது வாழ்வுமிகும். கலக்கமென்பதொன்றுமில்லை. உறவின் முறையார் வெளியூரிற் சென்றவர்கள் வந்து சேர்வர். மழையானது பெய்யும் களவென்பதெதுவுமில்லை. தனது பலந் தழைத்துக் கதிர் விளையும். பிணியானது ஓர் பெண்ணைக் குறித்த பிரச்சனையாகும்.?முற்றுந் தீரும். தன்குலஸ்திரீ பெண்ணைப் பெறுவர். வாணிபம் செழிக்கும், பொன்பணிதி சேரும் அரசர்களையும் வென்றிடுவர்.

### 1-ம் வினாடி ஊணிலூண் பலன்

321. சொல்லலே யூணதனி லூணுமாகில்
தொகுத்திடுவாய் நினைத்த பொருள் சிவந்தலோ
நல்லரத் தினவகையே நஷ்டங்காண்பாப்
நாட்டினிலே தன்னிடமோ ரிடத்தி லுண்டு
செல்லவே கீழ்திக்கிற் கிரகத்தண்டை
சிக்குமே மனுஷரால் மாத மொன்றில்
அல்லதோர் வாரத்திற் பலர்சம் பந்தத்
தகப்படுமே தப்பாதென் றறிந்து கூறே.

ஒன்றாம் வினாடி ஊணில் ஊண் பலனாவது நினைத்த பொருள் சிவந்தலோகம் நவரத்தின மயமானவை நஷ்டமானது. அது தனது வீட்டில் கீழ்த்திசையில் ஓரிடத்திலிருக்கின்றது. அது மனிதனால் ஒரு மாதத்தில் அல்லது ஓர் வாரத்தில் பலர் சம்பந்தத்தால் தப்பாமல் அகப்படுமென்று அவர்கட்குச் சொல்லுவாய்.

## 2-ம் விநாடி ஊணில் நடை

322. கூறவே யூணதனில் நடையுமாகில்
கொடுபகைஞர் சேரார்பெண் வழியைச்சார்ந்தோர
நேரவே பொதுநிறமா முயர்ந்தோன் வெள்ளி
லிபியுளது வெண்மைசிவப் புடையவஸ்து
சேரவே தென்கிழக்கிற் சென்று மேற்குத்
திசையிலே யுள்ளபொருள் பக்ஷமொன்றில்
தேறவே யோர்பெண்ணாற் சலமுமண்ணும்
சேரிடத்திற் சிக்குமெனச் செப்புவாயே

இரண்டாம் வினாடி ஊணில் நடைபலனாவது தனது பெண் அல்லது மனைவியின் வழியைச் சார்ந்தவராகியப் பகைவர் சோரனானவன் மாநிறமுடையவன் உயர்ந்தவன். அபகரித்ததை அது வெள்ளியிலிபியுடைய பெண் சிவப்பாகிய வஸ்து அவை தென்கிழக்கிற் சென்று மேற்கு திசையிலுள்ள பொருள் பட்சமொன்றில் ஓர் பெண்ணாற் சலமு மண்ணுமுள்ள சேரிடத்திற் சிக்குமெனச் செப்புவாய்.

## 3 ம் வினாடி ஊணில் அரசுபலன்

323. பார்க்கவே யூணதனி லரசுமாகிற்
பணிதியது தங்கம்பிணி வஸ்துவாகும்
சேர்க்கவே வவ்வழியில்பல வஸ்துபோக்கு
திரிக்குநூல் தரிநீச்சர் மறையோரானோர்
ஆர்க்கவே யெடுத்துவட பாரிசத்தில்
அங்ஙனே யொருமரத்தின் கீழ்கோயி லண்டை
ஏர்க்கவே புதைத்ததுமுத் தினம தற்குள்
இதிற்கிடைக்குந் தடையில்லை யென்ன லாமே.

மூன்றாம் வினாடி ஊணில் அரசு பலனாவது கைசேர்ந்தது தங்கமாகிய நகை வஸ்துவாகும். அது வழியில் சில பொருள்கள் நஷ்டமடைந்தது. அதை பூணூல் தரித்தவர் அல்லது மறையோர் நீச்சர் ஈனர்களிலொருவருணத்தவரெடுத்தது. அதை வடபாரிசத்தில் அங்கொரு கோயிலண்டை மரத்தின் கீழ் புதைத்து வைத்திருப்பவை. இது மூன்றுதினம் அல்லது மூன்று பட்சத்தில் யாதொரு தடையின்றிக் கிடைக்கும்.

## 4-ம் வினாடி ஊணில் துயில் பலன்

324. செப்பவே யூணதனிற் துயிலுமாகில்
சேர்பூமி மண்ணது சம்பந்தமாகும்
ஒப்பவே சக்கிரா கிருதி மத்தி
யுளத்துவசா மக்கினியிற் பட்ட வஸ்து
துப்பறவே பொன்செம்பு பாத்தி ரங்கள்
தொடவிதனை யெடுத்தொருவன் கைய ளிக்க
அப்பொழுது வடமேற்கில் சென்ற பேர்க்கு
யத்திக்கிற் போனதுவுமகப் படாதே.

நான்காம் விநாடி ஊணிற் றுயிற் பலனாவது நினைத்துக் கேட்டது சேர்பூமி மண்ணின் சப்பந்தமானது அது சக்கிராதிருதியாய் அதன் மத்தியில் துவாரமுள்ள நெருப்பில் படப்பட்ட வஸ்து பொன் செம்பு பாத்திரமானவைகள் இவைகளை ஒருவனெடுத்து மற்றொருவனது கையில் கொடுத்தது வடமேற்கில் செல்லும்போது போன போக்கானது மறுபடியும் அகப்படுவது கடினமாம்.

## 5-ம் வினாடி ஊணில் மரண பலன்

325. அகப்பட்ட தூணதிலே மரண மாகின்
ஆடையா பரணமுடன் சொன்ன வஸ்து
புகைப்படா தேவர்பொருள் தரணி யாதி
போக்குதன் விரோதிகுலத் துதித்தோ ராலே
சுகப்படா யெடுத்தசொத்து கொடுக்க மாட்டார்
தொல்லையாங் கேடாலூந் திங்கே யாகும்
பகைப்படாச் சந்தேகங் கேட்கத் தோன்றும்
பலிதமில்லைப் போனபொருள் பார்க்கொணாதே.

ஐந்தாம் வினாடி ஊணில் மரணபலனாவது சென்றுவிட்டது ஆடையாபரணம் சொர்ணவஸ்து தேவாலயப் பொருள் தானியாதிகள் தனது விரோதியின் குலத்துதித் தோரால் எடுத்த சொத்து அவர் அதைக் கொடுக்கவுமாட்டார்கள். அது தொல்லை யாலும் கேடாலும் நீங்கினாலும் பகைவரால் சந்தேகங் கேட்கத் தெரியும். போன பொருள் திரும்பியும் பார்க்கப் பலிதப்படாவாம்

## நடையின் பலன்

326. தடையாகி நிலைகுலைவ ரொன்னார் வெல்வர்
தவிலவே யுள்ளநிதி நஷ்ட மாகும்
திடமில்லாக் கதிர்விளையுஞ் சேத மாகும்
சேயிழையாள் வாழ்க்கையது தினமும் குன்றும்
இடையவே சுற்றம்போம் பொருளுஞ் சேரா
தின்பமாய் மனங்கூடா வேட்கை செல்லா
தடையாகுந் தொடுத்ததெல்லாஞ் கண்ணு மங்கே
தாரையே வார்த்திடுவன் சாற்றுங் காலே.

நடைப்பட்சியிற் கேட்கில் தனது நிலைகுலையும் பகைவர் வெல்வர். தனநஷ்டம் கதிர் சாவியாய்ப் பயிர்ச்சேதமாகும். மனைவியர் வாழ்வு குன்றும். உறவினர் அகன் றிடுவர் பொருள்சென்றிடும் மனமானது கூடாது வேட்கை செல்லாது தான் தொடுத்த காரியங்கள் தடையாகும் சகலமுந் தாரைவார்த்திடுவன்.

## 1-ம் வினாடி நடையில் நடை பலன்

327. என்னவே நடையதனில் நடையுமாகில்
எடுத்தது பெண்ணணியும் நகைவெள்ளி பொன்னில்
சொன்னது பூமியில் வெளியில்விழுந்த போது
தொட்டெடுத்தோன் சிவ்லையான் கடையில் விற்க
முன்னமே வரும்போது மூல மாக
முறையாகக் கிடைக்குமக் கினியின் றிக்கில்
சொன்னபடி சமீபம்நீர் பொதுவி லுண்டு
சொத்துவரு மிருமாத மிருவா ரத்தே.

ஒன்றாம் வினாடி நடையில் நடைபலனானது பெண்களணியும் வெள்ளி பொன்னிற் செய்த நகையானது வெளியில் பூமியில் விழுந்தபோது சிவந்த நிறமுடையவன் எடுத்துத் தான் போய் கடையில் விற்கும்போது அங்கே வருகையில் அம் மூலமாகக் கிடைக்கும். அது அக்கினியின் திக்கில் சலத்தின் சமீபம் பொதுவிலுள்ளது. இரண்டு மாதம் அல்லது இரண்டு வாரத்திற் சொத்தானது கிடைக்கும்.

## 2-ம் வினாடி நடையிலரசு பலன்

328. வினவுவே நடையதனி லரசு மாகில்
மேவுமுயர் காலிசெம்மை, கறுப்பு வஸ்து
மனமகிழ நிருதி மூலையி லிருந்து
வாயுவின் றிக்கினிலே வருங்கா லத்தில்
தனதுகை தவறியது கிடைக்கும் பாரு
தனித்தொருவ ரெடுத்துதலை கீழே வீழ்தல்
கனத்ததண்ட மபராதம் பிரயா சத்தாற்
கைக்கிட்டும் போனபொருள் கண்டு சொல்லே

இரண்டாம் வினாடி நடையிலரசு பலனாவது: சென்றது காலி களவு சிவப்பு கறுப்பு வஸ்துதான். நிருதி மூலையிலிருந்து வாயுவின்றிக்கில் வருங்காலத்தில் தனது கைசோர்ந்துவிட்ட பொருளானது கீழே விழுந்ததன்றி ஒருவரெடுத்தல். இவை தண்டனை அபராதம் பிரயாசத்தாற் போய்விட்ட பொருளானது கைக்குக் கிட்டும்.

## 3-ம் வினாடி நடையிற் றுயில் பலன்

329 வாரதுவும் நடையதனிற் றுயிலு மாகின்
வளர்சீவ னிருப்பெந்திரன் கருவி தோலில்
சேரவே யுடையவன்கை களவு போதல்
கிரம்பாது சூத்திரர்கீழ் குலத்தோர் கள்வர்
ஊரிலே முன்னிஷ்டன் பின்வி ரோதன்
ஒரிடத்தி லுள்ளவன் கருவ னாவன்
மீறியே திருடியது கிடைக்கா தங்கே
விவரமாய்ச் சொல்லிவிடு வினவுங் காலே.

மூன்றாம் வினாடி நடையிற்றுயில் பலனாவது: வளர்க்கும் படியான சீவனது போற்செய்த எந்திரக் கருவி அதற்குடையவனாற் களவு போனதை சூத்திரனான கீழ்குலத்தோன் கள்ளனானவன் முன்னிஷ்டனாயிருந்து பின் விரோதியானவன் கருவலாயுள்ளவன் திருடியது மீண்டுங் கிடைக்காதென்று விவரமாய்ச் சொல்லிவிடவும்

## 4-ம் வினாடி நடையில் மரண பலன்

330 பகரவே நடையதனில் மரணமாகிற்
பலமுயற்சி விகிதபத் திரமும் போக்கு
நிகரமே விரோதியுமுன் நேரஞ்செய்து
நேராக வெடுத்தது தென் றிசையி லுண்டு
அகலவே போனபொருள் கிடைப் பதற்கு
அதிகபிரயாசை என்மே லாக வேண்டும்
சகலருக்கு முரைப்பதிலு மத்தி பந்தான்
சந்தேக மாகவிதைச் சாற்றுவாயே

நான்காம் வினாடி நடையில் மரண பலனாவது: பல விஷயத்தா லெழுதப்பட்ட பத்திரமானது. போக்குள்ளவை விரோதியானவன் உளவாக நேசஞ்செய்து எடுத்தது. அது தென்றிசையிலுண்டு. போனபொருள் கிடைப்பதற்கு அதிகப் பிரயாசைப்பட்ட போதிலும் கிடைப்பது மத்திபமெனச் சந்தேகமாகவே சொல்லுவாய்,

## 5-ம் வினாடி நடையிலூண் பலன்

331 செல்லவே நடையதனி லூணுமாகிச்
சூழ்பஞ்ச லோகவஸ்து வெந்திரம்போல்
நல்லவட்டத் துள்ளதுவும நீளமான
நற்கயிறுள் ளதுகொலுசு நகையும் போக்கு
இல்லறத்தி லூழியக் காரப கரித்து
எடுத்திருக்கும் பொருள் வாரமொன்றி னிற்குள்
அல்லைறக் கிடைக்கும்பார் தவறில் லாமல்
அதுதப்பி லொருமாத மாகுந்தானே.

ஐந்தாம் வினாடி நடையிலூண் பலனாவது கேட்ட பொருள் பஞ்ச லோகத்தில் எந்திரம் போல் வட்டமுள்ளது, நீளமானது, கயிறாகிய கொலுசு நகையானது களவாடியது அது தனது வீட்டில் வேலைக்காரன் அபகரித்து எடுத்திருக்குஞ் சொத்தானது வாரம் ஒன்று அல்லது மாதமொன்றில் தவறின்றிக் கிடைக்கும்.

232. அரசாகிற் புவிபேரா மரச ராலே
அனந்தபொருள் சன்மான மதிக முண்டாம்
திரமான வரிசையுடன் செயமும் தோன்றும்
தீ வினைகள் தான்விலகும் தீங்கொன் றில்லை
பரம்பெற்ற பெரியோர்கள் வந்து சேர்வர்
வழக்கு வெல்லும் பயமில்லை மகிழ்ச்சி யெய்தும்
புரைபோகும் கனவில்லை பொல்லாங்கி யாவும்
போக்குவிக்கும் கிர்த்தியுடன் புகழு மாமே

அரசு பட்சியிற் கேட்கில் மணமனை வாழ்வைப்பற்றியது. அரசர்களால் அனந்த பொருள் சேரும். அரசர்கள் மானமும் அதிகரிக்கும் பணைவரிசை சுபகாரியம் நேரும். மகத்தான செயம் வாய்க்கும். தீவினையனைத்தும் விலகும். தீங்கான விஷய மொன்றேனும் சேராது. மவுனயோக ஞானிகள் பெரியோர்கள் வந்தடுப்பார். வழக்கானது வெல்லும். மகிழ்ச்சியுண்டாகும். புரை கனவுகாணாது. பொல்லாங்குயாவும் போக்குவிக்கும், கிர்த்தியும் புகழும் கிட்டிடச் செய்விக்கும் கெம்பிரயாகயாவற்றும் முடித்திடுவன்.

## 1-ம் வினாடி அரசிலரசு பலன்

334. ஆகவே வரசுதனி லரசு மாகிற்
அதுகோயில் நகைவெண்மை செம்மை மஞ்சள்
லோகத்தில் ரத்தினங்கள் பதிந்த வஸ்து
நோக்கிடுவர் கள்வருட னிராசாங் கத்தார்
ஊகிக்கப் பெருந்தொகைதான் வடகி ழக்கில்
உள்ளதுவும் பூமிக்குள் வடக்கே தூரம்
பாகமா யோராண்டில் லர சராலே
படைத்திடவுங் கிடைக்குமெனப் பகர லாமே

ஒன்றாம் வினாடி அரசிலரசு பலனாவது: களவு போய்விட்டது. கோயில்நகை அச்சொத்தானது வெண்மை செம்மை மஞ்சள் நிறங்களையுடையது. பல லோகங்களில் இரத்தினங்கள் பதிந்த வஸ்துக்கள். இதை இருவர்களுடன் அரசாங்கத் தொழிலாளி களுஞ் சேர்ந்து யெடுத்தபெருந்தொகையை வடகிழக்கிற்சென்று அங்குள்ளபூமிக்குள் வட பாரிசத்தில் வெகுதூரத்தில் அடக்கஞ்செய்திருப்பது அரசராலே ஓராண்டில் வாங்கிக் கொடுக்கவுங் கிடைக்குமெனப் பகர்வாய்.

## 2-ம்வினாடி அரசின் துயில் பலன்

334 சாற்றவே யரசுதனிற் றுயிலுமாயின்
சதிபுருஷ ரணிபணிதி யோடு தூரம்
தோற்றவே செல்லுகையிற் காலை தன்னிற்
றொடர்ந்துமே சோரவிரோ திகளுங் கூடி
ஏற்றவே கொலைசெய்ய வெத்த னித்தார்
இனிமேற்குத் திசைபோனார் கிழக்கிவ் வாறு
ஆற்றவோர் கம்மியனோர் கிழ்து லத்தான்
அபகரித்தோன் பொருள்கிடைக்கப் படமாட் டாதே

## 2-ம் வினாடி அரசில் துயில் பலன்

334. சாற்றவே யரசுதனித் துயிலுமாயின்
சதிபுருஷ ரணிபணிதி யோடு தூரம்
தோற்றவே செல்லுகையிற் காலை தன்னிற்
றொடர்ந்துமே சோரவிரோ திகளுங் கூடி
ஏற்றவே கொலைசெய்ய வெத்த னித்தார்
இனிமேற்குத் திசைபோனார் கீழகு லத்தான்
ஆற்றவோர் கம்மியனோர் கிழக்கிவில் வாறு
அபகரித்தோன் பொருள்கிடைக்கப் படமாட் டாதே.

இரண்டாம் வினாடி அரசில் துயில் பலனாவது: சதி புருஷர்கள், அணியும்படியான பணிதியோடு தூரதேசஞ் செல்லுகையில் காலையில் இவர்களைத் தொடர்ந்து சோரரோடு தன் விரோதிகளுங்கூடி இவர்களைக் கொலை செய்ய வெத்தனித்திருக்கையில் இவர் மேற்குத் திசையிற் சென்றனர். கிழக்குத் திசையிலிவ்வாறு நடக்க ஓர் கம்மியனாகிய கீழ் குலத்தோன் அபகரித்த பொருளானவை மீண்டுங் கிடைக்கமாட்டாது.

## 3-ம் வினாடி அரசில் மரண பலன்

335. கிடைக்கவே யரசதனில் மரண மாயின்
கெம்பீர மானபொரு ளுயர்ந்த தாகும்
படைக்கவே செம்மை வெண்மை ரத்தி னங்கள்
பாக்கியதோ ராபரண மென்று பேராம்
தொடைக்கவே வஸ்நானத்தில் சகல சம்பத்
துள்ளதனில் விழ்ந்தபொருள் கிழக்கு திக்கில்
புடைக்கவே யெப்பொழுதுங் கிடைக்க மாட்டா
பொல்லாது பலனில்லைப் புவியிற் றானே.

மூன்றாம் வினாடி அரசில் மரணபலனாது: கேட்டது கம்பீரமானபொருள் விலையுயர்ந்தவை. செம்மை வெண்மை ரத்தினங்களிழைத்த ஓராபரணமானது. தான் ஸ்நானஞ்செய்கையில் சகல சம்பந்தமாம். அதனுள் விழ்ந்த பொருள் கிழக்கிலென்று சொல்லலாம். அது எப்பொழுதுங் கிடைக்கமாட்டாது. பொல்லாங்கைத் தரும் பயனில்லை.

## 4-ம் வினாடி அரசிலூண் பலன்

336. புவியினி லரசதனி லூணு மாயின்
போனபொரு ளரசனின் சொத்து மாகும்
கவியவே லோகமதி விலைய தாகும்
காணவோர் பெண்வழியாற் போன தங்கே
தவிரவே வடமேற்கி லிருப்ப துண்டு
தனிக்கடிகை பத்துநல்ல தினமும் பத்தில்
குவிக்கவே கிடைக்குமென் றுறுதி யாக
கூறுவா யெவர்க்கும்தீ குணமாய்த்தானே.

நான்காம் வினாடி அரசிலுண் பலனாவது: போன பொருளானது அரசர்களணியும் சொத்து. விலையுயர்ந்த லோகமானவை. அது ஓர் பெண் வழியிற் போன களவு, அங்கு வடமேற்கிலிருப்பதுண்டு. அவை கடிகை பத்து அல்லது தினம் பத்தில் கிடைக்குமென்று யாவருக்கும் சொல்லுவாய்.

### 5-ம் வினாடி அரசில் நடை பலன்

337. குணமாக வரசதனில் நடையு மாயின்
கொள்ளிடி ரசாயன வஸ்து வோடு
மணமான விகிதபத்திரமும் ரொக்கம்
வற்பபொருள் போனதுவுங் கிடைக்கும் பாரு
சணமாகுந் திருடர்தால் வர்க்கு மேலாய்ச்
சந்திக்கச் சிலசாமான் மாத மாதில்
கணமேனுந் தப்பாது கிடைக்கு மென்று
காணவே யுரைத்திடுவாய்க் கணக்காய்த் தானே

ஐந்தாம் வினாடி அரசில் நடை பலனாவது: சென்ற பொருள் இரசாயன வஸ்துவோடு சிலவிகிதப் பத்திரமும் ரொக்கமும் களவு போனது, மறுபடியும் திருடர் நால்வருக்குள் கணமுண்டாகிச் சந்திக்கச் சில சாமான்கள் மாதமாறில் தப்பாது கிடைக்குமென்று கணக்காக எல்லவர்க்கு முரைத்திடுவாய்.

### துயிலின் பலன்

338. மிடித்திடிலே சாவதுவும் வந்து சேரும்
வன்பிணியுந் துலையாது வதிக ரிக்கும்
தரித்திடிலே பொருள்கூடா நிதியுங் காணார்
சங்கடத்தில் நிலைகுலைவார் தானு மோங்கார்
விரித்திடிலே மனைவியவள் வெறுப்ப தாவான்
மென்மேலுந் துக்கமுட னலைவார் பாரு
பரித்திடிலே சகலபொருள் நஷ்ட மாகும்
பதங்குலைவ ரக்காலிற் பண்ணுங் காலே.

மரணபக்ஷியிற் கேட்கில் சாவானது நேரும் பிணியானது வதைக்கும் பொருளானது சேராது. நிதியானது கிட்டாது. சங்கடமானதில் நிலைகுலைவார் தாங்களும் ஓங்கமாட்டார் மனையாளும் வெறுப்பாள். மென்மேலும் துக்கத்தை யனுபவிப்பார் சகல பொருளையுந் தாரை வசர்ப்பார் சந்ததமும் பதங்குலைவர்.

## 1-ம் வினாடி துயிலிற் றுயில்பலன்

339 திறமாகுந் துயிலதனிற் றுயிலு மாயின்
செப்புவே யெவ்வனமாய் புருஷ னாவான்
உறமாக வோர்பெண்ணின் கைத னத்தை
யுறவாடி யபகரித்துத் தூர தேசம்
தெரியாமற் றலைமறையச் சென்றபோக்குச்
சேரவரு மவன்மூன்று வார மப்பால்
அறியவே யதுமீதில் மாத மூன்றில்
அவன்போவான் வடகிழக்கி லகப் படாதே.

ஒன்றாம்வினாடி துயிலிற் றுயில் பலனாவது: எவ்வனமாகிய வாலிபனொருவன் ஓர் பெண்ணின் கையிலுள்ள தனத்தை உறவாடி ஏமாற்றி அபகரித்துத் தூரதேசம் போய்த் தலை மறையச் சென்ற போக்கு அது சேரவருவது மூன்று வாரம். மீறிடின் மூன்று மாதத்தில் அவன் இருவரோடு சேர்ந்து வடகிழக்கிலிருந்து தென்மேற்கு திக்கிற் போவான். அப்பொழுதும் அப்பொருளானது கைக்குட் கிட்டாதென்றும் கூறுவாய்.

## 2-ம் வினாடி துயிலில்மரண பலன்

330 சூட்டவே துயிலதனில் மரண மாயின்
சூழவே சிவன்மூலப் பொருளு மாகும்
காட்டவே காணமற் போன வஸ்து
கழறவே விரோதியா லெடுத்த தாகும்
பூட்டவே யதைப்பற்றிப் பார்க்குங் காலில்
பொருள்போக்குச் சமாச்சாரங் கிடைப்ப தல்லால்
நீட்டவே கைகொடுப்பா ரொருவ ரில்லை
நிச்சயமாய்ச் சொல்லிவிடு நேரிற் றானே,

இரண்டாம் வினாடி துயிலின் மரணபலனாவது: சென்றது சிவபெருமானது மூலப்பொருள். காணாமற் போய்விட்ட வஸ்து விரோதியானெடுத்த களவாகும். அதைப்பற்றிப் பார்க்குங்கால் பொருள் போக்குச் சமாச்சாரம் கிடைக்குமேயன்றி கையிற் கொடுப்பவர் ஒருவரேனு மில்லையென நிச்சயமாய் சொல்லிவிடுவாய்.

## 3-ம் வினாடி துயிலிலூண் பலன்

341 சாற்றவே துயிலதனி லூணுமாகிற்
சரிகைதுணி பொன்வெள்ளி பொருளும் போக்காம்
நாற்றிசையி லிருக்குமிடங் குடும்பத் துள்ளே
நங்கையவள் கையினாற் போன சொத்து
ஏற்றவே நாலுதினத் துள்வீட் டிற்குள்
வந்துவிடு மவர்களால் வரிசை யாக
ஏற்றவே யீசான்யம் வடக்குத் திக்கில்
இருந்தகப் படுமென்றே யியம்ப லாமே.

மூன்றாம் வினாடி துயிலிலுன் பலனாவது:போன சொத்து சரிகைதுணி பொன் வெள்ளி பொருள் போக்கு அது தன் குடும்பத்துள்ளே பெண்பிள்ளை கையிற் சேர்ந்து விட்டது. அவை நாலு தினத்துள் வீட்டிற்குள் ஈசானியம் வடக்கு திக்கிலிருந்து அகப்படுவது நிச்சயம் என்றுரைப்பாய்.

### 4-ம் வினாடி துயிலில் நடைபலன்

342 இயம்பவே துயிலதனில் நலடயு மாயின்
எழில்வாக னாதியுட னுழவு வஸ்து
சுயம்படவே யேந்திராதி கருவி யொன்றை
தொட்டெடுத்துப் போனதுதான் களவு மாகும்
நயம்படவே யக்கினியின் றிக் கிருந்து
நல்குமே யதிசுலப மாகத் தானும்
வயம்படவே பொருள்வருந் துள்ளே சிக்கும்
வழியதனை யுலகோர்க்கு வகுத்துச் சொல்லே

நான்காம் வினாடியில் நடைபலனாவது: சென்ற பொருள் வாகனாதியாகிய உழவு வஸ்து எந்திரக்கருவியொன்றை எடுத்துப் போனதுதான் களவாடியது. அது அக்கினியின் திக்கிலிருந்து அதிசுலபமாய் பொருள் வந்து வீட்டினுட்சிக்கும் என்பதாய் உலகிலுள்ளவர்க்கு வகுத்துச் சொல்லுவாய்.

### 5-ம் வினாடி துயிலி லரசுபலன்

343 நடையறவே துயிலதனி லரசுமாயின்
கார்குழலா ளணிந்திருக்கும் போதே போக்கு
இடையிலே யயல்மனுஷன் வசத்தி லுண்டு
இப்பொழுது வடகிழக்கிற் றூரதேசம்
நடையிலே சுயசாதி சமமா னோரால்
நகையிருப்புத் தன்கைக்குப் பக்ஷ மொன்றில்
அடையவே சமாச்சாரத் துடன்கி டைக்கும்
அல்லலறப் பொருள்வந்து மாகுந் தானே.

ஐந்தாம் வினாடி துயிலி லரசுபலனாவது: அச்சொத்து பெண் பிள்ளையானவ ளாணிந்திருக்கும் போதே போக்கானவை. அது இடையில் அயல்மனுஷன் வசத்தி லிருப்பது. இப்பொழுது வடகிழக்கில் தூர தேசத்தில் சுயசாதி சம்மாயிருக்கப் பட்டவரால் அந்நகையானது தன் கைக்குப் பக்ஷமொன்றில் அதன் சமாச்சாரம் கிடைப் பதோடு அப்பொருளும் வந்து சேரும்.

## மரணத்தின் பலன்

344 மரித்திடிலே சாவதுவும் வந்து சேரும்
வன்பிணியுந் துலையாது வதிக ரிக்கும்
தரித்திடிலே பொருள்கூடா நிதியுங் காணார்
சங்கடத்தில் நிலைகுலைவார் தாநு மோங்கார்
விரித்திடிலே மனைவியவள் வெறுப்ப தாவாள்
மென்மேலுந் துக்கமுட னலைவார் பாரும்
பரித்திடவே சகலபொருள் நஷ்ட மாகும்
பதங்குலைவ ரக்காலிற் பன்னுங் காலே.

மரணபக்ஷியிற் கேட்கில்: சாவானது நேரும், பிணியானது வதைக்கும், பொருளானது சேராது. நிதியானது கிட்டாது. சங்கடமானதில் நிலைகுலைவார், தாங்களும் ஓங்கமாட்டார், மனையாளும் வெறுப்பாவாள் மென்மேலுந் துக்கத்தை யனுபவிப்பார். சகல பொருளையுந் தாரை வார்ப்பார், சந்ததமும் பதங்குலைவார்.

## 1-ம் வினாடி மரணத்தில் மரணபலன்

345 கொண்டுமே மரணத்தில் மரணமாயின்
கூறிடவும் பெண்ணொருத்திக் குடும்பந் தன்னில்
விண்டுமே விரோதமாய்ச் சேலைரெண் டோடு
வெளிப்பட்டார் கஷ்டமதாய்த் தண்ணீர் தன்னில்
கண்டிடவே யிவ்வஸ்துத் தோன்றும் பாரு
கடல்கிழக்குத் தெற்கினிலே பதினோர் நாளில்
அண்டிடவே யிதைக்குறித்த விந்தை தன்னை
அறியலா மென்றுநீ யையமறச் செப்பே.

ஒன்றாம் வினாடிமரணத்தில் மரணபலானவது சொல்லுங்கால் தன் குடும்பத்தில் ஓர் பெண்ணானவள் விரோதமாய் இரண்டு சேலையுடன் கஷ்டந் தாளாமல் வெளிப் பட்ட சேதியானது தண்ணீரிற் காணும்படியாய் அவ்வஸ்தானது தெசியும். இது கடல் கிழக்கு தெற்கில் பதினொருநாளில்இதைக் குறித்த விந்தையானது சந்தேகமற அறியலாமென்று நீ அமைவாய்ச் சொல்லுவாய்.

## 2-ம் வினாடி மரணத்திலூண் பலன்

346. பண்பாக மரணத்தி லூணு மாயின்
பகர்மிருகத் தூதுமா முறிவு பட்டு
வண்மையா யவ்வஸ்து சமீபத் துள்ள
வவனாலே யபகரித்து வீட்டபால் சென்று
தண்மையாய்த் தென்பாலிற் போயி ருக்கும்
உள்ளபொருள் வடபாலிற் கிட்டுங் காலம்
தண்மையாய் வாமோ நடலது மாதம்
தன்னினுட் கிடைப்பதுவுந் தடை யாகாதே.

இரண்டாம் வினாடி மரணத்திலுண் பலனாவது: சென்றது மிருகம் தாதுமரம் முறிபட்டுள்ள வஸ்து அது சமீபத்துள்ளவனாலே அபகரித்து வடபால் சென்று அங்கிருந்து தென்பாலிற் போயிருக்கும். அப்பொருளானது மீண்டும் வடபாலிற் கிட்டுங் காலமானது வாரம் ஆறு அல்லது மாதம்ஆறில் தடையில்லாது கிடைக்கும்.

## 3-ம் வினாடி மரணத்தில் நடை பலன்

347. வகுக்கவே மரணத்தில் நடையுமாயின்
வஸ்துமூவறிவுடைய சீவனாகும்
மிகுக்கவே யிருவரா லபக ரித்து
மேற்கிருந்து கீழ்த்திசையிற் போன தாகும்
தொகுக்கவவ் விடத்தனக் குறித்தோன் சூத்திரவ்
சூழ்ந்துளான் றினம்பதினொன் றதுவ யீறில்
பகுக்கவே மூவாரம் பொருளி ரைத்தால்
பற்றிவரு மவ்வுடைமை பண்பாய்த் தானே

மூன்றாம் வினாடி மரணத்தில் நடைபலானானது: போன வஸ்து மூவறிவுடைய சீவனான இருவரால் அபகரித்து மேற்கிலிருந்து கிழக்குத் திசையிற்போனது அவ்விடத்தில் தனக்குரியோனான சூத்திரன் சூழ்ந்துள்ளவனால் பதினொருதினத்தில் அப்பொருள்கள் கிட்டும். மீறின் மூன்று வாரத்தில் பொருட்செலவு செய்யவும் அவ் வுடைமைகள் தன் கையிற்சேரும்.

## 4-ம் வினாடி மரணத்தி லரசுபலன்

348. நேரிலே மரணத்தி லரசு மாயின்
நிலையான ரொக்கதனம் பொன்னாம் வஸ்து
சேரவே போனதுவுங் கிராமத் தண்டை
சொல்லுவேன் றனக்கறிந்த சிறியோ ராலே
கோரவே யபகரித்த பொருளு மாகும்
குணமாக விரைவினிலே கிடைக்கும் பாரு
தீரமாய்ப் பொருளுந் தடையி ரமற்
சிக்குமென வுரைத்திடுவாய்ச் சிறப்பாய்த் தானே.

நான்காம் வினாடி மரணத்தி லரசு பலனாவது: போய்விட்டது ரொக்கதனம் பொன்னாகிய வஸ்து. அது கிராமத்தண்டை கைசோர்ந்து தனக்கறிந்த சிறியோரால் அபகரித்த பொருளாதலால் விரைவில் தடையில்லாது கிடைக்குமென்பதாய் யாவருக்குந் தெளியச் சொல்லுவாய்.

### 5-ம் வினாடி மரணத்தில் துயில் பலன்

349. அமையவே மரணத்திற் றுயிலுமாயின்
அனேகராற் சங்க மூலத்தற்ப ராலே
சமயத்தாற் சிலபூமி சம்பந் தத்தாற்
றர்க்கத்தாள் சுபவஸ்தான் சொர்ண ரத்தினம்
இமைய சம்பந்தத்தாற் பாலி யர்க்கு
ஏற்கவே நஷ்டஞ்செய் பொருள்பி ரித்து
திமயவே சிசுக்களைவு மரணஹேது
செய்ததனாற் போனபொருள் சிக்கா தென்னே.

ஐந்தாம் வினாடி மரணத்திற் றுயில் பலனாவது: அனேக வற்பராலும் சங்கமூலச் சமயத்தாலும் சில பூமி சம்பத்தாலும் தர்க்க குதர்க்கத்தாலும் சுயஸ்தான சொர்ண ரத்தினத்தாலும் இமையா நாட்டத்தோர் சம்பந்தத்தாலும் பாலியற்கு நஷ்டஞ்செய் பொருளினாலும் சிசுக்களை மரண ஹேது செய்வதினாலும் போன பொருளானது சிக்காதென்பதாம்.

## ஆரூட தொழிற் பலன்

### அமர பட்சம்

### ஊணின் பலன்

350. பகை கெடுதி புரைகளவு போக்குங் காணார்
பலகாலும் வாழ்வுபெரும் மக்க ளுண்டாம்
தகைமையுடன் வழிபயணஞ் செல்ல நன்று
தர்க்கம்போர் கலக்கமோ சற்று மில்லை
திகைத்திடவே மழையுண்டாம் பயிர்க ளோங்கிச்
செந்நெல்விளைந் திடுமகமுஞ் செழிக்கு மேலாய்
துகைபெருகுஞ் சம்பத்து வதிக ரிக்கும்
துன்பவினை யற்றிடும்புன் ளுண்ணுங் காலே

(இ-ள்) அமரபக்ஷத்தினால் ஊண்பக்ஷியின் பலனாவது: பகை கெடுதி புரை களவு போக்கென்பதொன்றும் நேராது. எக்காலும் வாழ்வானது பெருகி புத்திர சம்பத்துண்டாகும். வழிப்பயணஞ் செல்ல நன்மையைத் தரும். தர்க்கம் போர் கலகங் கிஞ்சிற்றேனுமில்லை. மழையானது பொழிந்து பயிர்களோங்கி செந்நெல் விளைந்து செழிப்பாகும் எண்ணற்ற துகை பெருகி சம்பத்ததிகரித்திடும். துன்ப வினையாவது அற்றுவிடும். என்றவாறு.

## ஊணி லூண் பலன்

351. சாற்றவே யூணதனி லூணு மாகில்
சஞ்சயத் தனேகவித பணீதீ வெள்ளி
போற்றவே சொர்ணங்கள் தவால் போக்கு
போனதுவும் வடக்கு திவ்ய ஸ்தல சஞ்சாரத்
தேற்கவே கடலருகி லுள்ள தாகும்
இதுபக்ஷம் நான்கவது மரதம் நான்கில்
மடிரவே சிலதுவகை கிடைக்கும் ரெண்டு
மனுஷரா ற் பயமுண்டாம் வசனிப் பாயே.

(இ-ள்) ஊனில் ஊன் பலனாவது: பலவித ஆபரணங்களும் வெள்ளி பொன் நாணயங்களும் சஞ்சாரஞ் செய்யுமிடத்தில் கைசோர்ந்து போய்விட்டது. அதற்கு வடக்கிலுள்ள திவ்விய ஸ்தலத்தினருகில் கடற்கரையில் பதனஞ் செய்திருப்பவை. பக்ஷம் நான்கு அல்லது மாதம் நான்கில் சில சொத்துக்கள் இரண்டு மனிதர்களாற் கிடைக்கு மென்பாய் என்றவாறு.

## ஊணில் நடை பலன்

352. சிக்கவே யூணதனில் நடையுமாகின்
சொல்விகிதப் பத்திரங்கள் தஸ்தாவேசு
முக்கியமா யரசர்களினுடம் படிக்கை
முற்றுமே கயஸ்தான மறதிபோக்கு
அக்கரை வாகவழலது பாத சாரி
யாறுவூத்த மனித மவை களுண்டு
தக்கபடி யீவனுக்கெவ் விதமுங் கிட்டும்
தாட்டியா யீதையெடுத்துச் சாற்று வாவே.

(இ-ள்) ஊணில் நடை பலனாவது: விகிதப் பத்திரங்கள் தஸ்தாவேசுகள் அரசர்களினுடம் படிக்கை முதலியன கயஸ்தானமாகிய தனது வீட்டினுள் மறந்து போக்கடித்த வஸ்துக்களானது வாகனமேறியோ அல்லது பாதசாரியாயோ அயலிருந்து வந்த மனிதரிடம் அவைகள் அடங்கியிருக்கின்றன. அவ்வ இவனுக் கெவ்விதத்தி லேனும் கிட்டுமென்பதாகச் சொல்லவும் என்றவாறு.

## ஊணி லரசின் பலன்

353. வசனிக்க வூணதனி லரசு மாயின்
வாகாக நாணயங்க ளுயர்ந்த வஸ்து
விசனிக்க வெள்ளி சொர்ண மணியும் லோகம்
வித்துவிரை சம்பந்த மான போக்கு
அசனிக்க வுத்தரத்திற் செல்ல நஷ்டம்
ஆனதுவுங் கீழோனே யபக ரித்தோன்
துசனிக்க மூவாரம் யயன மூன்றா
குதிக்குமே சில சொத்து மன்ன ராலே.

(இ-ள்) ஊணிலரசு பலனாவது: உயர்ந்த வஸ்துவாகிய நாணயங்கள், அது வெள்ளி பொன்னா லணியப்பட்டலோகம். இன்னும் வித்து விரை சம்பந்தமான போக்கு. அவை உத்தர பாரிசஞ் செல்லுகையில் காணாமற்போன நஷ்டம். அங்கொரு கீழ்சாதியோர் மூவரால் அபகரித்தவை. அதில் சில சொத்துக்கள் அயனமூன்று அல்லது ஆண்டு மூன்றில் அரசரால் கிடைக்கு மென்பாய் என்றவாறு.

### ஊணிற் றுயில் பலன்

354 சுருக்கமா யூணதனிற் றுயிலு மாயின்
சுயமான வுயர்ந்தகல் நகையாம வஸது
உருக்கொணாச் சிலாவகைசிற் பந்து வந்தோர்க்
குள்ளதுதான் பகைஞர் விரோ தத்தாற் போக்கு
பெருக்கமா யிதைக் காப்பாற் றுவனெ டுத்து
பின்னுமேற் கினில்கோயில் வடபால் பூமி
வருக்கமாய்ப் புதைத்துசில கற்கள் மேலே
வடையானம் வைத்திருக்கு மண்ணிற் றானே.

(இ-ள்) ஊணிற்றுயில் பலனாவது சுயமாகிய: வுயர்ந்த கல்பதித்த நகையான வஸ்து. அது சிற்பனால் உருக்கி வார்க்கொணாத தெய்வ வுருவாய் வந்து வந்தவ னெடுத்து அதின் மேற்கிலுள்ள கோயிலுக்கு வடபாரிசத்துள்ள பூமியிற் புதைத்து வைத்து அங்கு சில கற்களை அடையாளமாக வைத்து மண்ணினால் மூடியிருப்பனவாம். என்றவாறு.

### ஊணில்மரண பலன்

354 சிதறாமல் ஊணதனில் மரண மாயின்
சேர்வெள்ளி சொர்ணவகை வஸ்து போக்கு
பதறாமற் குடும்பத்தி லொருத்தி கையிற்
பற்றியது விருவர்சம் பந்த மாகும்
கதருமற் றன்வேலைக் கார னாலே
கண்டுபிடி பட்டதிது கையிற் சேர
வதறாம லெப்பிரயத் தினஞ்செய் தாலும்
வாராது போனபொருள் வகையாய்ச் சொல்லே.

(இ-ள்) ஊணில் மரண பலனாவது: வெள்ளி சொர்ணத்தாற் செய்த நகையாகிய வஸ்துகள் போக்கு. அது குடும்பத்திலொருத்தி கையிற் சிக்கியது. மீண்டும் இருவர் சம்பந்தமாகி தனது வேலைக்காரனாலே கண்டு பிடிக்கப்பட்டது. இது கையிற் சேர எவ்விதப் பிரயத்தினம் செய்தபோதிலும் போனபொருளானது திரும்பவும் அகப்படாது என்றவாறு.

## நடையின் பலன்

356 தொல்லையற வெற்றியுடன் சுகமுண் டாகும்
சூழ்வினைக ளற்றுவிடும் தோடந் தீரும்
எல்லையினிற் செய்கருமம் நன்மை யாகும்
இன்பமுடன் மணமுண்டா மகமுந் தாழார்
இல்லையே கெதியொன்றுந்தூர முன்னோர்
இடமின்றி வந்திடுவர் மழையு முண்டாம்
கொல்லையிலே பயிர்விளையுங் குறித்த தெல்லாம்
கூடிவரும் பக்ஷியது நடக்கி லென்னே

(இ-ள்) நடைப்பக்ஷியின் பலனாவது: பிணியானது நீங்கும். தோஷமானது தீரும். செய்த கருமமானது பலிக்கும். மணமானது கூடும். அகமானது தழைக்கும் இருப்பிடத்திலுள்ள எலிகளிட மகப்பட்டு அவைகள் இழுத்துக் கொண்டுபோய் கீழே போட்டுவிட அது பூமியில் புதைந்து மறைந்திருக்கின்றது அல்லது இருபத்தேழாம் நாளுக்குள் கைபிற் சிக்கும்,ஆனாலவை அகப்படாமற் போகாது என்றவாறு.

## நடையில் நடைப் பலன்

357 என்னவே நடையதனில் நடையுமாயின்
எழிலோடு மாடுவெண்மை கறுப்பு மாகும
அன்னதோர் பந்தனத்துட் கட்டுப் பட்டு
ஆனதால் தென்பக்கத் திருக்கு தங்கே
முன்னமே கொஞ்சம் பொருட் செலவு செய்ய
முயற்சியாற் போனபொருள் முழுதுஞ் சேரும்
சொன்னசொற் றவறாது வருந்து வோர்க்குத்
துரையாகச் சொல்லிவிடுஞ் சுருக்கிற் றானே.

(இ-ள்) நடையில் நடைபலனாவது: வெண்மை கருப்பு நிறமாகிய ஆடுமாடுகள் களவுபோய் அது பந்தன கட்டுப்பட்டு தென் பக்கத்தில் அடக்கஞ் செய்திருப்பது சில திரவியச் செலவு செய்திடுங்கால் சென்று போன காலிசீவன்கள் யாவும் பழுதின்றி கிடைக்குமென்று சொன்னசொற் றவறாது கேட்பவர்க்கு விரைவிற் கூறுவாய் என்றவாறு.

## நடையி லரசு பலன்

353 மண்ணி னில் நடையதனி லரசு மாயின்
வளமாண சொர்ண நகை லோக மாகும்
பண்ணியது வெண்மை செம்மை மஞ்சள் நீலம்
பர்சையுடன் பஞ்சவர்ண மாயி ருக்கும்
அன்னதுதா னிருப்பிடத்திற் பூமிக் குள்ளே
அகப்பட்டு யெலிகளால் மறைந்தி ருக்கும்
திண்ணமா யிருபத்தேழு நாளிற் குள்ளே
சிக்குமே யப்பொருளுஞ் சிதறி டாதே

(இ-ள்) நடையிலரசு பலனாவது: சொர்ண நகையானது லோகத்தில் வெண்மை, செம்மை, மஞ்சள், நீலம், பச்சையாகிய பஞ்சவர்ணமாகியிருக்கும். அது தன்னிருப்பிடத்திலுள்ள எலிகளிடம் அகப்பட்டு அவைகளிழுத்துக் கொண்டுபோய்க் கீழே போட்டுவிட அது பூமியில் புதைந்து மறைந்திருக்கின்றது. அங்கது இருபத்தேழ் நாளிற்குள் கையிற் சிக்கும். ஆனாலவை அகப்படாமற் பேர்காது என்றவாறு.

## நடையிற் றுயில் பலன்

359 சலிப் பறவே நடையதனிற் றுயிலு மாயின்
தாம்பிரங்கல் லுயர்பொருளும் லோக வர்க்கம
ஒலிக்கவே பணித் தரமக் கினியிற் காச்சி
யுள்ளதவை பூமிக்குள் சலசம்பந்தம்
வலிக்குமிவ் விடங்களிலே யிருப்ப துண்டு
வாகாகக் கிடைக்காது மத்தி பந்தான்
கெலிக்கவே பொருள்சேரா பணிதி கிட்டா
கேடாகு நட்டமாங் கேட்கொ ணாதே.

(இ-ள்) நடையிற்றுயில் பலனாவது: தாம்பிரத்தில் கல் பதித்த உயர்ந்த பொருளாகிய லோகவர்க்கம். அவை அக்கினியிற் காச்சிப் பணித்தரமாய்ச் செய்தவை. அவை பூமிக்கும் சலசம்பந்தமான விடத்தில் இருப்பதுண்டு. அப்பொருள் கிடைக்காது. பணிதி சேராது மத்திபமாம் என்றவாறு.

## நடையில் மரண பலன்

360 பகைபறவே நடையதனில் மரண மாயின்
போனபொரு ளுளவால யபக ரித்தல்
சிறையாகத் தன் னில்லத் தென்கிழக்கில்
சேருவோர் ஸ்திரி மூல மிருக்கு தங்கே
விறைவாக வோர்தாழ்ந்த சாதி யான
மெல்லியர்பா லில்விஷயம் வெளியாய்ப் பின்னும்
அறையவே யப்பொருளுஞ் சுவாதீ னத்தில்
ஆகாது மத்திபந்தா னடுத்துச் சொல்லே

(இ-ள்) நடையில் மரண பலவனாவது: போனபொருள் உளவாளியால் அபகரித்துத் தனது வீட்டில் தென்கிழக்கில் ஓர் ஸ்திரீ மூலமாயிருப்பது. அங்கோர் தாழ்ந்த சாதியான ஓர் பெண் பிள்ளை மூலமாய் அச்சேதியானது வெளிப்பட்டுப் பின் அப்பொருள் தன் சுவாதினத்தில் வரமாட்டாது. மத்திபமெனச் சொல்லுவாய் என்றவாறு.

## நடையில் ஊண் பலன்

363 வகையாக நடையதனி லூண மாயின்
வாழ்சீவ வஸ்தாகு மாடு நாற்கால்
திகையாது போக்குவெண் சிவப்பு வர்ணம்
திசைகிழக்கு வடக்கினிலே கட்டு பட்டு
பகையாது இருவரால் கிரகத் துள்ளே
பதுங்கவும் வைத்ததுதென் மேற்குத் திக்கில்
புகையாது பிரயாசை மனிதர் மூலம்
பொன்பொருள் கிட்டுமது புரையி லாதே.

(இ-ள்) நடையிலூண் பலனாவது: தானனு பவிக்கப்பட்ட சீவவஸ்தாகிய ஆடு மாடுகள் நாற்கால் மிருக போக்குள்ளவை. வெண்மை சிவப்புள்ளவை. அவைகள் கிழக்கு வடக்கினிலே கட்டுப்பட்டு அக்கிரகத்துள்ள இருவரால் தென்மேற்கில் பதுக்கி வைத்ததுண்டு. அதற்குத் திக்கப் பிரயாசைப்படுவதில் சிலர் மனிதர் மூலமாய்ப் போன உருப்படிகள் மறுபடியும் புரையின்றிக் கிட்டும் என்றவாறு.

## அரசின் பலன்

362. உற்றதோர் செயமுண்டாஞ் சுகமுந் தோன்றும்
ஊர்ப்பயணஞ் செல்லுங்கா லின்ப மெய்தும்
பற்றவே மழையதிகங் கலக்க மேகும்
பற்பொருளுங் கைகூடும் பணிதி சேரும்
சுற்ற மடுத்திடுவர் வெற்றி யுண்டாம்
சுகித்திடவே லாபமுடன் சுபமுங் கூடும்
தற்றரமாய் சுகசௌக் கியமும் நல்கும்
தலிலவும் பட்சியது வரசி னுக்கே.

(இ-ள்) அரசு பட்சியின் பலனாவது: செயமானது உண்டாகும். சுகமானது தோன்றும் ஊர் பயணஞ் செல்லுகையி லின்பமுதிக்கும் மழைக் கொஞ்சமாய்ப் பெய்யும். கலக்கமானதகலும். பலபொருளுங் கைகூடும். பணிதியானது சேரும். சுற்றமாகிய உறவினர்கள் அடுத்திடுவர். வெற்றியானது விளங்கும். இலாபமானது பெருகும். சுபமானது நிறைவேறும். சுகசௌக்கியமமையும் என்றவாறு.

## அரசி லரசு பலன்

363. வைப்பாக வரசதனி லரசு மாயின்
மாரசதஞ் சொர்ண பொருன் கருவி போக்கு
இப்பாரில் மதித்துவனை வினோத மான
இது தெய்வ மனுஷ்யனுயிர்க் கருவி யாகும்
ஒப்பவே வுயர்குலத்தோ னிதைக்கைப்பற்றி
யோசித்தோர் பெண்ணின்கை யளித்த தாகும்
தப்பாமும் மாதத்துட் பிறராற் கிட்டும்
தடையில்லை யரசராற் சாருந் தானே.

(இ-ள்) அரசிலரசு பலனாவது: வெள்ளியினாலும், சொர்ணத்தினாலும், செய்த கருவியாகிய பொருள்போக்கு அதன் மத்தியில் வினோதமாகிய துளையொன்றுண்டு. அது தெய்வமனுஷ்ய வுயிர்க்கருவி யென்பதாம். அதனை உயர்குலத் தோனொருவன் கைப்பற்றிப் பின்னும் யோசித்து ஓர் பெண்ணின் கையிற் கொடுத்துள்ளது. இது மூன்று மாதத்தினுள் பிறரால் தடையின்றி இராசாங்க மூலமாய் தன் கைகிட்டும் என்றவாறு.

## அரசிற் றுயில் பலன்

364. சாரவே யரசதனிற் றுயிலு மாயின்
தங்கவெள்ளி பொருளலங் கார வஸ்து
நேரவே வெண்மைதிறம் போக்க தாகும்
தினைத் தொன்னார் சில நாளா யுத்தே சித்தே
கோறவே கிரகிக்கப் பட்ட தாகும்
கூறுவேன் பரதேசஞ் சலத்தின் மீது
ஏறவுஞ் செல்விக்கும் பொருளுஞ் சிக்கா
தென்றிடவு மத்தியமா யியம்பு வாயே.

(இ-ள்) அரசிற்றுயில் பலனாவது; தங்கம் வெள்ளியினாற் செய்த பொருளானது அலங்கார வஸ்து. அது வெண்மை திறமுள்ளது. போக்கானவை அதைப் பகைவர் சிலநாளாயுத் தேசித்து கிரகிக்கப்பட்டது. அவை பரதேசஞ் சலத்தின் மீது சென்ற போக்கு அப்பொருளானது கைக்குச் சிக்காது மத்திபமென்பாய் என்றவாறு.

## அரசில் மரண பலன்

365 விளம்பவே யரசதனில் மரண மாயின்
விரைய நஷ்டம் பொருள் வெளுப்பு கறுப்பு மாகும்
வளம்படவே நீளமுள லோகத் தாலும்
வைத்தபணி சித்திராதி லிகித முண்டாம்
கிளம்பிடவே கிடைக்காவாம் பலவஸ் துக்குள்
கேடுறுமே நஷ்டமாய்க் கேடு நேரும்
உளம்படவே யப்பொருளுங் கைக்குட் கிட்டா
தோதுங்காற் பொருணட்ட முண்டாம் பாரே

(இ-ள்) அரசில் மரணபலனாவது: விரையமாகிய கஷ்டப் பொருள் வெளுப்புங் கறுப்புமாயுள்ள நீளமுடைய லோகத்தாற் செய்த பணிதியாது சித்திரமுள்ள லிகிதப் பதிப்புடைய, வஸ்து போக்கானத்தில் அது மறுபடியுங் கிடைக்கலாம். இன்னும் அதோடு பல பொருள் கெட்டு நஷ்டமாய் கேடுண்டாகுமேயன்றி சென்ற பொருள் கைக்குக்கிட்டாது என்றவாறு.

## அரசி லூண் பலன்

366, அடுத்துமே யரசதனி லூணுமாயின்
அதூமுல விருட்சாதி பணிதி பத்திரம்
எடுத்துநி லஞ்செமமை வெண்மை தண்ணில்
இழைத்ததுவுங் காய்ந்தசம் பந்த மாகும்
தொடுத்தது சவாரியிற் சொத்து போக்கு
சூத்திரனும் நீச்சன்கை கிடைத்த தங்கே
தடுத்தரசன் பட்சமொன்றில் மாத மொன்றில்
தான் கொடுப்பான் வடகிழக்கிற் றங்கி டாதே.

(இ-ள்) அரசிலூண் பலனாவது மூல விருட்சப்பணி பத்திரமானது நீலம் செம்மை வெண்மை நிறத்தில் இழைத்தது காய்ந்த சம்பந்தமான வஸ்து. தான் சவாரியிற் போகையில் அச்சொத்து போக்கானது. சூத்திரனும், நீச்சனும் கூடிச் செல்கையில் அவர்கள் கையில் கிடைத்தது. அது இராசாங்க மூலமாய் பட்சமொன்று அல்லது மாதமொன்றில் தன் கையிற் கொடுப்பர். அவை வடக்கிழக்கிற் றங்கியிருந்து வந்து சேரும் என்றவாறு.

## அரசில் நடை பலன்

367. தங்கவே யரசதனில் நடையுமாயின்
தவறியது வஸ்திரக்கடி தாசி வெளுமை
அங்ஙனமே மூலவஸ் துக்க ளாலே
யமைந்த பொருள் கைமறதி யாலே போக்கு
பொங்கவே வியாபாரச் சொத்து மங்கே
புகலவே கிழக்கதனி லிருந்தெ டுத்தல்
சங்கவே யிவைகளாற் கிடைக்கும் பாரு
நடையறவே யுத்தமமாஞ் சலிப்பி ராநே.

(இ-ள்) அரசில் நடைபலனாவது: தவறியது வெண்மை நிறமாகிய வஸ்திர கடிதாசி. அது மூலவஸ்துக்களாலே யமைக்கப்பட்டது. மறதியாய் விழுந்த பேர்க்கு அவை வியாபாரச் சொத்துமாகும். அதைக் கிழக்கிலிருந் தெடுத்தவன் மறுபடியும் அப்பொருள் இவராற் றடையின்றி கிடைக்கும் என்றவாறு.

## துயிலின் பலன்

368 உதித்திடும் பிணியதுவு மதிக ரிக்கும்
உள்ளதீ வினைமூண்டு வொடுங்கச் செய்யும்
சதைத்திடும் மழையின்றி விளைவு குன்றும்
தான்படைத்த தனமெல்லாம் தாரை வார்க்கும்
கதித்திடவே நெஞ்சதனிற் றோஷ மீறும்
கவலையுடன் கருமகாரியஞ் செய் விக்கும்
விதித்திடும் பலதுன்ப மிடியுண் டாகும்
விரையமது செய்யுமே துயிலித் றானே.

(இ-ள்) துயில் பட்சியின் பலனாவது: பிணியான ததிகரிக்கும். அதோடு வினைமூண்டு ஒடுங்கச் செய்யவும் மழையான தில்லாது பயிரானது சாவியாய்விடுந் தீ தான் சேகரித்த தனங்களைத் தாரைவார்க்கச் செய்யும். நெஞ்சில் நினைத்த நினை. வைத் தடுமாறச் செய்விக்கும் கவலையுண்டாகும்படி சூதக கருமகாரியங்களை முடிப் பிக்கும், பல துன்பமாகிய மிடியுண்டாக்கி யாவும் விரையஞ் செய்விக்கும் என்றவாறு.

## துயிலிற் றுயில் பலன்

369 வருகவே துயிலதனிற் றுயிலுமான
வாகாக யிரும்புமுதல் தோல்க ளாகும்
கருமையாம் வஸ்துவோர் கருவி யங்கே
கையாடித் தொழில் முடிப்பர் கவனிப் பாக
பெருகவே போனபொருள் வந்து சேரா
பேசுங்கா லெடுத்தவனும் பிறதே சத்தே
உருகவே சென்றுவிட்டா னங்கு மில்லை
ஒருக்காலும் கிட்டாது வுறுதி தானே.

(இ-ள்) துயிலிற்றுயில் பலனாவது: சென்ற பொருள் இரும்பு முதலிய தோலில் கருமை நிறத்திற் செய்த கருவியாகிய வஸ்துவாம். அது என்னேரமும் கையாடி தொழிலை முடிப்பிக்கும் கவனமுள்ளது. அங்கே போனபொருள் திரும்பியும் வந்து அதைக் குறித்து பேசுங்கால் எடுத்தவன் பரதேசஞ் சென்றுவிட்டாலும் அவனங்கு இல்லாமையினாலும் ஒருக்காலும் அப்பொருள் கிட்டாது என்றவாறு.

## துயிலில் மரண பலன்

370 கனிவாகத் துயிலதனில் மரண மாயின்
கழறுவேன் பரஸ்தலசஞ் சாரந் தன்னில்
தனியாக வாகன ரூட னாகித்
தான் செல்லும் வழியினிலே தவறி வீழ்தல்
முனிவாகப் பொருளும் லோக மான
வுயிர்க்குயிரே யுதவுநல்ல வஸ்து வாகும்
இனியந்தப் பொருள்வந்து கைக்குட் சிக்கா
தினதப்பற்றி யோசிப்ப திழிவாம் பாரே.

(இ-ள்) துயிலில் மரணப் பலனாவது: பரஸ்தல சஞ்சாரத்தில் தான் தனியாக வாகனருடனாகிச் செல்லுகையில் வழியில் தவறி விழ்ந்த பொருளானது லோகமனவை. அது வுயிருக்குயிராயுதவுகின்ற நல்ல வஸ்துவான தாம். அந்தப் பொருளானது தன் கைக்குக் கிட்டாது. அதைப் பற்றி யோசிக்கில் இழிவைத் தரும் என்றவாறு.

## துயிலூண் பலன்

371 உண்டாகுந் துயில்தனி லூணு மாயின்
உயர்செம்மை கற்கள் சம்பந்த மாகும்
விண்டார்க்கு வரைவட்ட வளைவு மூலம்
விருட்சத்தா லுண்டாகும் பொருள்தான் போக்கு
கண்டார்க்கு விரும்புசெம்பு கருவி யாகும்
காணில்லம் பின்பக்கங் கால்வாய்ப் பள்ளம்
கொண்டார்க்கு வதினின்று கிடைக்கும் பாரு
கோதறவே யிப்பலனைக் கூறு வாயே.

(இ-ள்) துயிலூண் பலனாவது: உயர்வாகிய சிவந்த கற்கள் சம்பந்தமானவை, அது அரைவட்டம் வளைவாகிய மூலவஸ்து. விருட்சத்தாலுண்டாகிய பொருள் போக்காம். பார்ப்பவர்க்கு இரும்பு செம்பினாற் செய்த கருவியாகும். அவை தன் வீட்டின் பின்பக்கத்துள்ள கால்வாய் பள்ளத்திலிருந்து அப்பொருளானது தடையின்றிக் கிடைக்கும் என்றவாறு.

## துயிலின் நடைப் பலன்

372 இயங்கவே துயிலதனில் நடையு மாயின்
எந்திராதி கருவிகளின் சாமா னாகும்
தியங்கவே ஸ்திரியவளுஞ் சோரஞ் செய்த
திவன்கிரகத் தின்மேற்கில் பொருளு முண்டு
மயங்கவே நாற்பகலுங் கருமவஸ்து
வந்தடைந்த திக்கென்றும் வகுக்க லாகும்
வியங்கவே பொருட்செல் விட்டாலே கிட்டும்
வியவகார முண்டென்றும் விளம்ப லாமே.

(இ-ள்) துயிலில் நடைபலனாவது: போக்காகிய வஸ்து எந்திராதி கருவிகளின் சாமானெனப்படும். அதை ஒரு ஸ்திரீயானவள் சோரஞ்செய்து அவள் கிரகத்தின் மேற்குத்திக்கில் அப்பொருளை அடக்கஞ் செய்து இருப்பனவாம். அது நாற்பக்கத்திலும் கறுப்பு நிறமுள்ள வஸ்து. அத்திக்கிலேயே யிருக்கின்றது. தான் பொருட் செலவு செய்தால் மாத்திரம் அவ்வளவு கிடைக்கும் படியான வியவ காரமுண்டென்றும் விளம்புவாம் என்றவாறு.

## துயிலரசு பலன்

373 இழிவரவ துமிலதனி லரசு மாயின்
இவ்வஸ்து பொன் வெள்ளி நகையின் மேலே
அழியாது துணிமூடிப் பந்த னித்த
கதை மூவர் தெரிந்தப கரித்த போக்கு
வழியாகப் பூணுநூற் றரித்தோன் சொல்ல
வளர்சிறுவர் முயன்றார்கள் மாத மூன்று
கழியும் வரை கஷ்டபட நஷ்ட மாக
கைக்கிடைக்குஞ் சிலதுமே கண்டு சொல்லே.

(இ-ள்) துயிலரசு பலனாவது: சென்ற வஸ்துவானது, பொன் வெள்ளி நகையின் மீது அது கெடாதபடி துணியால் மூடிப் பந்தனஞ் செய்துள்ளதை நபர்கள் தெரிந்திருந்து அபகரித்துக் களவானவை அவை, பூணுநூல் தரித்தவராய்ச் சொல்ல சிறுவராய் முயன்றதாகும். அது மாத மூன்று கழியும் வரையில் கஷ்டப்பட நஷ்ட மாகாது. அதிற் சிலது தன் கைக்குட்சிக்கும் என்றவாறு.

## மரணத்தின் பலன்

374 பொல்லாது கைப்பொருளைப் போக்கு விக்கும்
பொருந்தவே கருமமது புகச்செய் விக்கும்
சொல்லாது நல்வினை தீவினையைத் தாக்கும்
செய்யுநற் கருமமெல்லாம் தீங்கே யாகும்
நில்லாது சாவினில் மரித்த புள்ளு
நீடித்து ஜனித்துவந் துதிப் பதாலே
வெல்லாது யாதொன்றை மேலா கத்தான்
விவரமாய்ப் போகர் சொன்ன விதிபி தாமே

(இ-ள்) மரணபட்சியின் ஊனானது: இது பொல்லாததாகையால் கைப் பொருளைப் போக்குவிக்கும். கரும சூதகத்தில் கலக்கச் செய்யும். நல்வினையானதை தீவினையால் நடத்தும். நற்காரியங்களைத் தீங்காக முடிப்பிக்கும். இப்பட்சியானது சாவினில் மரித்து மறுபடியும் நீடித்து ஜனிப்பதனால் இவை யாதொன்றையும் வெல்ல மாட்டாவாம் என்பதாய் போகரானவர் விவரமாய்ச் சொன்ன விதி என்றவாறு.

## மரணத்தின் மரண பலன்

375 நெறியாக மரணத்தில் மரண மாயின்
நீளமுங் குறுகியதோர் லோக மாகும்

விரிவாக மண்முதலாய்ச் சீவ ராசி
மேலிருந் தெடுத்தபொருள் செங்க றுப்பு

குறியாகுஞ் சதுரத்தில் நடுத்து வாரம்
கொண்டுளது பள்ளமங் குடைய தாகும்

சரியாகக் கருவி பரஸ் தலத்தி லேயே
தங்கியது நட்டமாந் தான்கிட் டாதே

(இ-ள்) மரணத்தில் மரணபலனாவது: சென்று போன வஸ்து நீளமுள்ளதுங் குறுகியதுமான லோகமானவை. அவை மண் முதலாகிய சீவராசியாம். அது மேலிருந்த பொருள் சிவப்புங் கறுப்பு முள்ளவை. சதுரத்தில் நடுத்துவாரமாய்ப் பள்ளமுடையது. அக்கருவியானது பரஸ்தலத்தில், தவறி தங்கிவிட்ட நஷ்டமடைந்தவை. அது தன் கைக்கிட்டாது என்றவாறு.

## மரணத்தி லூண் பலன்

376. தேரவே மரணத்தி லூணு மாயின்
செம்பு பொன் பளிங்குப்பிர காச வஸ்து

சேரவே சக்கிராதி யெந்திர பிம்பம்
சிறுதுளை போட்டணி யலங் கார வஸ்து

ஆரவே தன்னடிமை நூத னத்தான்
அக்காலஞ் சேர்த்தவனாற் கவர்ந்த துண்டு

நேரவே பலகஷ்ட நிர்பந் தத்தால்
நிகர்பட்ச மிரண்டினுட் கிடைக்கும் பாரே.

(இ-ள்) மரணத்தி லூண் பலனாவது: செம்பு பொன்னாலமைந்த பளிங்குள்ள பிரகாசமான வஸ்து. அது சக்கிரமாய் எந்திரமமைந்த பிம்பம். அதற்கிருதுளை போட்டணியப்படும் அலங்கார வஸ்து. அதை தன்னிடம் நூதனமாய்ச் சேர்ந்த அடிமைத் தொழிலாளியால் கவர்ந்துள்ளவை. பல கஷ்ட நிர்ப்பந்தத்தால் பட்சம் இரண்டினுள் கிடைக்கும் என்றவாறு.

### மரணத்தில் நடைபலன்

377 கிடைக்கவே மரணத்தில் நடையு மாயின்
கேட்பதுவும் வெண்மை நிறப் பளிங்கு வஸ்திரம்
படைக்கவே வெள்ளிவஸ்து நஷ்டப் போக்கு
பகரவே சலாதார விடத்தி லுண்டு
புடைக்கவோ புண்பட்டா னிடத்திற் சிக்கி
போனபொருள் தாசமத்தன் மேலே யங்கே
கடக்கவோ கிடைத்துவிடு மெளிதிற் றானும்
கஷ்டமில்லை நஷ்டமில்லை காணுங்காலே.

(இ-ள்) மரணத்தில் நடை பலனாவது: கேட்கப்பட்டது வெண்மை நிறமுடைய பளிங்கான வஸ்திரம். அது வெள்ளியாலமைத்த வஸ்து நஷ்டப் போக்கு. அவை சலாதார விடத்திலிருந்து தன்னோடு சேர்ந்தவனிடஞ் சிக்கியுள்ளது, பொன் பொருள் தாமதத்தின் மேலே எளிதிற் கிடைக்கும். கஷ்டமின்றி வந்து சேரும் என்றவாறு.

### மரணத்தி லரசு பலன்

378. கூட்டவே மரணத்தி லரசு மாயின்
கூறுங்கால் சொர்ணக் கல் நகையும் வெள்ளி
நீட்டவே யந்திரங்கள் வெண்மை சேர்த்து
நேர் போக்குக் குடும்பத்தோ னன்னி யனாவோன்
பூட்டவே சுயசாதி யிருவர் பால்யர்
பொருந்தவே யபகரித்த சொத்துத் தானும்
காட்டவே சில துவோர் பட்சத் துள்ளே
கைக்குவந் துதவுமெனக் கனிவாய்ச் சொல்லே.

(இ-ள்) மரணத்தி லரசுபலனாவது: சொர்ணத்தில் கல்லிழைத்த நகையால் வெள்ளியிற் செய்த எந்திரம். அது வெண்மை நிறமுடைய சொத்து போக்கானது தன் குடும்பத்தோனும் அன்னியச் சாதியோனகிய சுய ஜாதியார் இருவர் பாலியர்களால் அபகரித்த சொத்தானது ஓர் பட்சத்துள்ளே சில துகைக்குக் கிட்டிவிடும் என்றவாறு.

### மரணத்திற் றுயில் பலன்

379. வம்பரக மரணத்திற் றுயிலு மாயின்
வளர்மூல விருட்சாதி கொம்பு சர்மம்
தெம்பாகக் கூடியதோர் பொருளும் போக்குச்
சீவனிடத் திருந்தெடுக்கப் பட்டா தேனும்
சூம்பாக முறிபட்ட தேனும் வஸ்து
கூறுங்கால் சூத்திரர்கைப் பற்ற லாச்சு
நம்பாதே யப்பொருளுங் கிடைக்க மாட்டா
நஷ்டமா மறந்துவிடு நாளுந் தானே.

(இ-ள்) மரணத்திற் றுயில் பலனாவது: வளரப் படாநின்ற மூல விருட்சத்தி னுடைய கொம்பு அல்லது சர்மமாகிய பொருள் போக்கு. அது ஓர் சீவனிடத்திருந் தெடுக்கப்பட்டது. அல்லது முறிப்பட்ட வஸ்து, அதைப் பற்றிச் சொல்லுங்கால் அவை சூத்திரர் கையிற் சிக்கினதாயிற்று இனி நம்புவதில் பலனில்லை. அப்பொருளானவை கிடைக்கமாட்டாது. என்றவாறு.

# 7. கைமறதியாய் வைத்தபொருள் இருக்குமிடம் அறிதல் பட்சியின் படியும் அவற்றின் தொழிற்படியும் கூறுவது

## 1. தொழிற்படி

### ஆறுசீர் ஆசிரியச் சந்த விருத்தம்

380. போசன மாகில் தன்விட்டில் போக்கே யாகில் தாமெனக்
கர்சினி யாளும் அரசாகில் காணா தயல்விட் டிருக்குமெனத்
தூசில் உறக்கம் பொன்பொருளும் தூதன் கைக்கே வசமாகும்
நாச மாகில் பொன்பொருளும் நட்டம் திட்டம் சொன்னோமே.

(இ-ள்) கைமறதியாய் வைத்த பொருள் (நகை முதலியன) இருக்குமிடம் பற்றி ஒருவர் ஆருடம் கேட்கின் அப்போது உதிக்கும் பட்சி உண்டியில் இருந்தால் அது தன் விட்டிலேயே உள்ளது. நடையானால் வெகு தொலைவில் எடுத்துச் செல்லப்பட்டு விட்டதென அறியவேண்டும். அரசு நடந்தால் அயல் வீட்டில் உள்ளது என்றும், உறக்கம் நடந்தால் வீட்டுக்கு செய்தி கொண்டு வந்த தூதன் ஒருவன் எடுத்துச் சென்றான் என்றும், மரணம் நடந்தால் பொன் பொருள் போனது தான், நட்டம் தான் என்று திட்டமாக அறியவேண்டும் என்பதாம்,

குறிப்பு: எடுத்தவன் பால், உருவம், வயது நிறம், சாதி, முதலியவை பட்சி ளுக்குச் சொல்லிய காரக செய்திகளிலிருந்து தெரிந்து கொள்ளவும்.

## 2. பட்சிகளின் தொழில் அரசாக மட்டும் இருந்தால் பொன் பொருள் இருக்கும் இடம்

### ஆறுசீர் ஆசிரிய விருத்தம்

381. மன்னனே வல்லூ றாகில் மனிதர்கை பட்டதென்ன
முன்னிய ஆந்தை யாகில் முகிற்குழல் எடுத்தா ளென்ன
பொன்னென்றும் காகம் மாணி புனல்கரை பாலாம் கோழி
மின்னும்பொன் மயில்தானாகில் மேதினி தனில்என் றோதே

(இ-ள்) ஆருட காலத்தில் வல்லூறு அரசாகில் மனிதர் கையில் அகப்பட்டது கிடைத்து விடும் என்க ஆந்தை அரசானால் மேகம் போன்ற கூந்தலுள்ள இளம்பெண் எடுத்தாள் என்வும். காகமானரல் அது ஒரு மணமாகா இளைஞன் கைப்பட்டது என்றும், மயிலானால் தரையில் மண்ணில் புதைக்கப்பட்டது என்றும் அறிக. எடுத்தவர் தன்மை முதலியன பட்சியின் காரகங்களில் இருந்து தெரிந்து கொள்ளவும்.

## 7. பட்சிகளின்படி தேடும் பொருளறிய

### அறுசீர் ஆசிரியச்சந்த விருத்தம்

332. வல்லூறாகில் ஆணாகும் வாகார் ஆந்தை பெண்ணினமாம்
சொல்லார் காகம் நீர்கரையாம் ஒத்த கோழி பூமிபுனல்
வல்ல மயில்தான் அலி எடுத்து வைக்கும் புனத்தில்
அல்லும் பகலும் தேடாமல் அறியச் சொன்னோம் உண்மையிதே

(இ-ள்) ஆரூட பட்சி வல்லூறாகில் ஆண் எடுத்தனன் எனவும், ஆந்தையானால் பெண் எடுத்தாள் என்றும், காகமானால் நீர்க்கரையில் எடுத்து வைக்கப்பட்டது. என்றும், கோழியானல் பூமிபுனலில் அதாவது கிணற்றில் என்றும், மயில் ஆனால் அலி ஒருவன் எடுத்துத் தோட்டத்தில் அல்லது வீட்டில் தரையில் புதைத்து வைத்துள்ளான் என்றும் வீணுக்குத் தேடாமல் சொன்ன தடயங்களின் படி தேடிக்கண்டு பிடிக்கவும் என்பதாம்.

## 8. பிள்ளைப்பேறு ஆணா பெண்ணா என்றறிய

### நேரிசை வெண்பா

333 ஆண் ஊண் அரசாம் அசதி நடையுறக்கம்
பேணுமிவை பெண்ணெனவே பேசுமே வாணுதலிர்
பூவேந்தர் கேட்டகுறி பொய்யா துரைக்குமே
சாவே அலியாய்ச் சமை

(இ-ள்) ஆரூடப்பட்சி ஊண் அரசு தொழில் செய்தால், பிறப்பது ஆணாகும், நடை உறக்கம் ஆகிய தொழில்களாயின் பெண் குழந்தை என்க. மற்றபடி அழகிய நெற்றி உடைய பெண்ணே! குறிகேட்கும்போது உதிக்கும் பட்சி சாவு தொழிலில் இருந்தால் பிறப்பது சொன்னபடி பட்சிகளைக் கொண்டும் ஆண் பெண்ணறியலாம் என்க.

## 9 தொழிலின் தன்மைக் கேற்ப காரியத் தன்மை

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

334 போசனம் மிகவே நன்று புகல்நடை ஆள்வ ரத்து
மாசறும் அரசு செம்பொன் வரத்துடன் மகிழ்ச்சியாகும்
நேசமே துயில தாகில் நெடும்பிணி கெடுதி வார்த்தை
மோசமாய் மரிக்குமென்று மொழிந்திடு மரணம் தானே

(இ-ள்) ஆருட காலத்தில் உதிக்கும் பட்சி உண்டித் தொழிலில் இருந்தால் கேட்ட விஷயம் நல்லபடி நடக்கும். நடை நடந்தால் யாராவது வெளியூரிலிருந்து வருவார். அரசு நடந்தால் காரியம் கைகூடும். பொன் பொருள் கிடைக்கும்.மகிழ்ச்சி உண்டாகும். நடந்தால் நீடித்த பிணி தீராது. கெட்ட செய்தி கிடைக்கும். மரணம் நடந்தால் விஷயம் கைகூடாது. முக்கியப்பட்டவருக்கு இறப்பு நேரும் என்பதாம்.

## 10-1. காலமறிதல்

### ஒரு செய்தி நடப்பு முக்காலத்தில் எது என்று அறிய

### நேரிசை வெண்பா

385. ஆந்தைமயில் முற்காலம் ஆன தொருகோழி
சேர்ந்த நிகழ்காலம் தெரிக்குமே - வாய்ந்தசீர்
வல்லூறு காகம் வருங்காலம் காட்டுமே
எல்லாப் பொருட்கு மிது.

(இ-ள்) ஆருட காலத்தில் செய்தி நடப்பு எக்காலம் என்று அறிய வேண்டின் ஆந்தை மயில் உதித்தால் செய்தி இறந்த காலம் என்றும் முடிந்துவிட்டது என்றும், கோழி நிகழ்காலம் என்றும், வல்லூறு, காகம் வருங்காலத்தைக் குறிக்கும் என்றும் உணர்ந்து கொள்ள வேண்டும்.

## 10-2. ஆருடப் போக்குவரத்து

### நேரிசை வெண்பா

336. வல்லூறே வருகின்றான் மாமறையோன் ஊர்வந்தான்
நில்லாக் கருங்காகம் நிற்கின்றான் - மெல்லிதல்லாய்
கோழியே மீண்டான் குலவுமயில் அரையாகும்
நாழிகையின் மீள்வான் நவில்.

(இ-ள்) பயணம் சென்றவன், அல்லது வீட்டைவிட்டுப் போனவன் எப்படி வருவான் என்ற கேள்விக்கு, ஆருடகாலத்தில் உதிக்கும் பட்சி வல்லூறாகில் வந்து கொண்டிருக்கின்றான். ஆந்தை உதித்தால் ஊருக்குள் வந்து சேர்ந்துவிட்டான் என்றும், காகம் உதித்தால் வந்து இப்பொழுது நின்று கொண்டிருக்கின்றான் என்றும், கோழி உதித்தால் இன்னும் அரை நாழிகையில் வந்துவிடுவான் என்றும் சொல்லுக என்பதாம்.

## 11. கெடு பட்சி

ஒரு காரியம் ஆகும் காலத்தின் கெடுவைக் குறிக்கும்
நேரிசை வெண்பா

387. தோழிக்கு நாலுநாள் ஆகும் குவலயத்தில்
வாழுமுயர் வல்லூறுக் கைந்துநாள்-தோழிகேள்
காகம் இரண்டுநாள் கண்ணாந்தை மூன்றுநாள்
தோகைமயில் ஒன்றென்றே சொல்

(இ-ள்) இது ஒரு காரியம் நடக்கும் காலக்கெடுவைக் கூறுவது ஆருட காலத்தில் கோழி உதித்தால் நாலுநாள் என்றும், வல்லூறு உதித்தால் ஐந்து நாள் செல்லும், காகம் கோழி உதித்தால் இரண்டு நாளிலும், ஆந்தை உதித்தால் மூன்று நாளிலும் என்று கெடுவைக் கூறுக.

## 12. உலோகப் பட்சி

இன்ன பறவை இன்ன உலோகத்தைக் குறிக்கும் என்பதைக் கூறுவது. இது களவு போனது இன்ன உலோகம் என்பது போன்றவற்றை அறிய உதவுவதாகும்.

நேரிசை வெண்பா

388 அரிந்தபொன் வல்லூறு வெண்கலமாம் ஆந்தை
செரிந்தமைந்தன் காரண்டம் செம்பாம் - சுரிகுழலாய்
வெள்ளியாம் கோழி விரும்பு மயிலிரும்பு
தெள்ளுசெந் தேன்மொழியாய்ச் செப்பு.

(இ-ள்) தெளிந்த தேன் போன்ற இனிய மழலை பேசுபவளும் சுருண்ட கூந்தலுடையவளுமான அழகிய பெண்ணே! (மகடூஉ முன்னிலை) வல்லூறுக்கு உரிய உலோகம் பொன்னாகும். ஆந்தைக்கு வெண்கலமும், காகத்திற்குச் செம்பும், கோழிக்கு வெள்ளியும், மயிலுக்கு இரும்பும் உலோகமாம் என்பதாம்.

## 13. காயம் பட்டவகை

போரில் அல்லது தற்காலத்தில் மோதல் முதலியவற்றில் எந்த இடத்தில் காயம் ஏற்பட்டிருக்கும் என்ற விபரத்தைக் கூறுவது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

389. ஊணாகும் சிரசில் காயம் உறக்கத்தில் தலைமு கத்தில்
பேணிய அரசு நெஞ்சில் பிழையாம் நடைக்கும் காலில்
காணுமே சாவு தன்னில் அறையினில் காயமாகும்
தோணவே தெரியச் சொன்னார் தோற்றிய கருமம் தானே.

(இ-ள்) ஆருடபட்சி ஊண் பட்சியாகில், காயம் சிரசில் என்பதாம். துயிலில் இருந்தால் தலை அல்லது முகத்திலும், அரசு தொழிலாகில் நெஞ்சிலும், நடை தொழிலாகில் இடுப்பிலும் காயம் ஏற்பட்டதென அறியவேண்டும்.

## 14. பூர்வ பட்ச விற்படு குறி

### வளர்பிறைக்குக் காயம் ஏற்பட்டதன் தன்மை கூறுவது

### நேரிசை வெண்பா

390. ஊணரசு காயமே ஒருக்காலு மில்லையாம்
காணுநடை காயம் கனமாகும் பேணியதோர்
தூக்கத்தில் போக்கில்லை துஞ்சுவதும் சாவெனவே
தூக்குமுற் பக்கமெனச் சாற்று

(இ-ள்) இருவருக்கு மோதல் ஏற்படும் போது பட்சியின் தொழிலின் தன்மைக் கேற்ப வில் அல்லது கத்தி போன்ற ஆயுதங்களால் தாக்கப்பட்டு ஏற்படும் காயத்தின் தன்மையாவது: ஆருடப்பட்சி ஊண் அல்லது அரசில் இருந்தால், காயம் ஒருக்காலும் ஏற்படாது. தொழில், நடையானால் கனத்த காயம் ஏற்படும். தூக்கம் நடக்கும் தொழிலானால் காயம் கனமாகப்படும். இருந்தாலும் மரணம் ஏற்படாது ஆறிவிடும். தொழில் சாவானால் காயம் கனமாக ஏற்பட்டு இறக்க நேரிடும். இது பூர்வபட்சத் திற்குப் பொருந்தும் என்பதாம்.

## 15. அமர பட்ச விற்படுகுறி

### தேய் பிறைக்கு மேற்படி காயம் ஏற்படும் தன்மை கூறுவது

### நேரிசை வெண்பா

391. சாத்துநடை பின்பக்கம் சாவதுதான் முன்பக்கம்
ஏத்தரசு பொல்லா திலையாகும் காத்திருந்த
ஊணாகில் சாவில்லா தூக்கம் – நொய்க் காயமாம்
காணா மரணம் கனம்.

(இ-ள்) அமரச பட்சத்தில் சண்டை மோதல் ஏற்பட்டால் அப்போது உதிக்கும் பட்சி நடையானால் பின்பக்கம் காயம் ஏற்படும். அதே நடையில் முன்பக்கம் காயம் ஏற்பட்டால் இறப்பும் நேரலாம். அரசு தொழில் நடந்தால் கெடுதி எதுவும் இராது. ஊண் காலமாகில் காயம் ஏற்பட்டாலும் சாவு ஏற்படாது, துயில் காலத்தில் நொய்க் காயமாகும். அதாவது ஊமைக்காயம் ஏற்பட்டு மிகவும் சிரமம் ஏற்படும். சாவு தொழில் காலத்தில் காயம் படுமானால் சம்பவிக்கும் காயம் தன்கண் காண முடியாத இடத்தில் ஏற்பட்டு மரணம் சம்பவிக்கும் என்பதாம்.

## 16. ஆயுதப் பட்சி

### மோதல் ஏற்படும்போது எந்தவகை ஆயுதத்தால் தாக்கப் பட்டது என்று கூறுவது

### நேரிசை வெண்பா

392 வல்லூறு வாளாகும் வல்லாந்தை வில்லாகும்
கொல்லுகருங் காகம் குறுந்தடியாம்-நல்லாய்கேள்
கோழி கருங்குந்தம் கோல மயிலுந்தான்
ஆழியெனச் சொன்னார் அறிந்து.

(இ-ள்) இருவர் மோதும்போது நடக்கும் தொழில் பட்சி வல்லூறானால் வாள் கொண்டு தாக்கினர் என்றும், பட்சி ஆந்தை உதித்தால் வில்லால் தாக்கினர் என்றும், கொடிய காகம் உதித்தால் குறுந்தடியால் தாக்கினர் என்றும், கோழி உதித்தால் குந்தம் என்ற ஆயுதத்தால் தாக்கியது என்றும், மயில் உதித்தால் சுழலும் சக்கரத்தால் தாக்கினர் என்றும் அறியவும்.

## 17. நிலப் பட்சி

### பட்சிகளுக்குரிய நிலவகை கூறுவது

### நேரிசை வெண்பா

393 வல்லூறு பாகல வனராந்தை வண்குறிஞ்சி
நல்லதோர் காகம் நவில்மருதம் சொல்லக்கேள்
வாரணமே முல்லை வளருமயில் நெய்தலென்று
நேரவே சொன்னார் நெரிந்து.

ஒரு செயல் நடந்த இடம், ஒருவன் ஊர் முதலியவற்றின் விவரம் அறிய உதவும் வகையில் பட்சிகளின் நிலவகைக் கூறுகிறது.

வல்லூறு பாலை நிலைத்தைக் குறிக்கும். அதேபோல் ஆந்தை குறிஞ்சி நிலத்தையும், காகம் மருதத்தையும், கோழி முல்லை நிலத்தையும், மயில் நெய்தல் நிலத்தையும் குறிக்கும் என்றறியவும்.

குறிப்பு: மலையும் மலை சார்ந்த இடம் குறிஞ்சி, வயலும் வயல் சார்ந்த இடம் மருதம். கடல் சார்ந்த இடம் நெய்தல் எல்லாம் கலந்த வரட்சிப்பாங்கானது பாலை அல்லது பாலை வனம் என்றறிக,

## 18. கோணப்பட்சி

394 வல்லூறு நீள்வட்டம் வல்லஈந்தை ஐங்கோணம்
அல்லாகும் காகம் அறுகோணம் - நல்லாய் கேள்
கோழி சதுரம் குலவுமயில் முக்கோணம்
ஆழியார் சொன்னரர் அறிந்து.

பட்சிகளுக்குரிய கோணவகைக் கூறுவது: வல்லூறு நீள்வட்டம். ஆந்தை ஐங் கோணம், காகம் அறுகோணம், கோழி சதுரம், மயில் முக்கோணம். இது பெரியோர் சொன்ன வாசகமாகும் என்பதாம். இது களவு போனபொருள் வடிவம் முதலியவை அறிய உதவுவது.

## 19. முடுகு பட்சி

395 காகம் முழுமுடுகு வல்லூறு முக்காலம
ஆகுமுறும் ஆந்தை அரைமுடுகாம் - வேகமுறும்
கோழிக்குக் கால்முடுக்காம் கோல மயிலரைக்கால்
வாழ முடுகறிந்து வை.

(இ-ள்) களவு புரிந்தவன் வெகுதொலைவில் சென்றானா குறைந்த வேகத்துடன் அருகில் சென்றுள்ளானா? போன்ற வகையை அறிய உதவுவது. இவ்வகையில் காகம் முழு முடுகு உள்ளது. ஆதேபோல் ஆந்தை அரைமுடுகும், கோழி கால் முடுகும், மயில் அரைக்கால் முடுகும் வல்லூறு முக்கால் முடுகும் உள்ளவையாம் என்றறியவும். இங்கு முடுகு என்பது வலுவு அல்லது வேகத்தைக் குறிக்கும், முடுகு வேகம் என்க,

## 20. தொகைப்பட்சி

களவுபோன தொகை அல்லது பொருளின் மதிப்பு முதலியவற்றை அறிய உதவுவது.

### நேரிசை வெண்பா

396 வல்லூறு பத்தாம் வள்ராந்தை நூறாகும்
நல்ல கருங்காகம் நவில்இலக்கம் - புல்லவே
கோழியது ஆயிரமாம் கூறு மயிலொன்றும்
ஊழியான் சொன்ன உரை

(இ-ள்) வல்லூறு பத்து என்ற எண்ணையும் (மதிப்பு-இது எண் அல்ல) அதாவது 10 நபர்கள், என்ற தன்மையில் கொள்வது. அதேபோல் ஆந்தை நூறாகும் காகம் இலக்கம், நூறாயிரம் ஆகும். மயில் ஒன்று - என்பவற்றைக் குறிக்கும் என்று அறியவும்.

## 21. உணவுப் பட்சி

ஆருடத்தில் உண்ட உணவு வகை, அல்லது உண்ண விருக்கும் வகை இவற்றைக் குறிப்பது.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

397. பார்க்கவே வல்லூறுக்குப் பலகாரம் தானு மாகும்
ஏர்க்கவே ஆந்தை கூழாம் இயம்பிடும் காகம் சோறாம்
கோர்க்கவே கோழிக் கேதான் கூறுக நொய்யின் கஞ்சி
வேர்க்கவே மயிலுக் கேதான் வெகுபசி யுள்ளோனாமே.

(இ-ள்) ஆருடத்தில் உதிக்கும்பட்சி வல்லூறாயின் பலகாரம் உணவாம், ஆந்தையாயின் கூழென்றும், காகமாயின் சோறு உணவென்றும், கோழி நொய்க்கஞ்சி என்றும், மயில் உணவில்லை வெகுபசி என்றும் அறியவும்.

## 22. காய்கறிப் பக்ஷி

ஆருடத்தில் இன்னபட்சி இன்ன காய்கறி, சமையல் உண்டது போன்றவற்றை அறிய உதவுவது.

### அறுசீர்ஆசிரிய விருத்தம்

398 ஆமெனும் வல்லூ றுக்கே அறைந்திடும் தண்டு மாகும்
காமெனும் ஆந்தை க்ரை காகமும் கிழங்க தாகும்
போமெனக் கோழி காய்கள் புகன்றிடும் மயிலும் பூவாம்
வாமமவர் காய்க றிக்கே லகுத்தனர் பட்சி நூலோர்

(இ-ள்) வல்லூறு–தண்டு வகையாம் (கீரைத்தண்டு, வாழைத்தண்டு முதலிய வற்றையும்) ஆந்தை-கீரை வகையையும், காகம்-கிழங்கு வகையையும், கோழி-பொதுவான காய்கறி வகையையும், மயில் பூவையும்(வாழைப் பூ போன்றவற்றையும்) குறிக்கும் என்றறியவும்.

முந்தைய பாடல், இப்பாடல் இனி வரும் பாடல்கள் சிலவற்றில் சொற்கள் பாட்டு அடிகள் முதலில் சொற்கள் பெரும் பகுதியையும், எதுகையை முக்கியமாகக் கொண்டு, பல இடங்களில் பொருள் கொள்ள வகையின்றி இருப்பதாம்.

## 23. ஆள்குறிப்பட்சி

ஆருடத்தில் சம்பந்தப்பட்ட மனிதர்கள் அடையாளம் அறிய உதவுவதாம். நேரிசை வெண்பா

399. வல்லூறு நற்பெரியோன் வல்லாந்தை நல்லிளையோன்
நல்ல கருங்காகம் நீண்டவனாம்-நல்லாய்! கேள்
குள்ளனும் கோழியுடன் கோல மயிலிருவர்
கள்ளமிலா இப்பலனைக் காண்.

(இ-ள்) ஆருடத்தில் உதிக்கும் பட்சி வல்லூறாயின் வயதில் பெரியோன், ஆந்தை இளையவன், காகம் - நெட்டையன், கோழி - குள்ளன், மயில்-இருவர் என்றறியவும்,

## 24. தெய்வப் பட்சி

எப்பட்சி எத்தெய்வத்தைக் குறிக்கும் என்பதைக் குறிப்பது. இது பஞ்ச கர்த்தாக்கள் எனவும்படும்.

### நேரிசை வெண்பா

400. பிரமனாம் வல்லூறு பின்னாந்தை மாலாம்
திரமாம் உருத்திரன்சீர் காகம்-உரமாம்
மகேசன் கோழி சதாசிவம்தான் மஞ்ஞை
தகவோர் உரைத்தார் தனி.

(இ-ள்) வல்லூறு-பிரம்மாவாம், ஆந்தை திருமாலைக் குறிக்கும், காகம் ருத்திரனாகும், கோழி-கேசன், மயில் சதாசிவன் ஆகிய தெய்வங்களைக் குறிக்கும் என்றறியவும்.

எப்பட்சி எத்தெய்வத்தைக் குறிப்பது என்பதைக் குறிப்பதுடன் ஒருவன் நட்சத்திரப் பட்சிக்கேற்ப எத்தெய்வ வழிபாடு சிறக்கலாம் என்பதையும் இது குறிப்பால் உணர்த்தும்.

## 24. அங்கப் பட்சி-பூர்வ பட்சம்

ஆருடத்தில் இன்ன அங்கத்தில் நோய், காயம், மச்சம், இன்ன இடத்தைத் தொட்டால் இன்னபட்சி, இன்னும் இதுபோன்ற சூழ்நிலைக்கேற்பப் பல விஷயங்களையும் தெரிந்து கொள்ள உதவுவது. இவை வளர் பிறைக்காம்.

### நேரிசை வெண்பா

401. கழுத்தின் மேல் வல்லூறு கையிரண் டாந்தை
முழுத்தஉடல் காரண்டம் முன்பா-கொழுத்த
முதுகாகும் கோழி மொய்குழலாய் தோகை
சதிரிந காலெனவே சாற்று.

(இ-ள் கழுத்தின் மேற்பக்கமாகிய முகம் வல்லூறு ஆந்தை இரண்டு கையையும், மீதி,முழு உடலையும் குறிப்பது காகம், முதுகு கோழியையும், மயில் இருகால்களையும், குறிக்கும்.

## இதுவுமது
### நேரிசை வெண்பா

402. கூந்தல் மயிலாகும் கோழிநெற்றி தானாகும்
வாய்ந்தகண் மூக்கு வளர்காகம் - ஏந்திழையீர்
வாயாகும் ஆந்தை மணிக்கழுத்து வல்லூறு
தாயாகச் சொன்னார் சரி.

(இ-ள்) மயில்-கூந்தலை, தலை மயிரைக் குறிக்கும். கோழி நெற்றியையும், காகம் கண் மூக்கு இவற்றையும், ஆந்தை வாயையும், வல்லூறு-கழுத்தினையும், தாய்போல் கருணையுடன் பெரியோர் சொன்னார் என்பதாம்.

குறிப்பு: முன்பாடலில் கழுத்தின் மேல் பாகத்தை வல்லூறு-இங்கு கழுத்து முழுவதையும் வல்லூறு என்றதால் முரணில்லை என்றறிக.

## இதுவுமது
### நேரிசை வெண்பா

403. மணிக்கட்டு வல்லூறு முன்கையாம் ஆந்தை
கணிக்குமுளம் கையாகும் காகம்-இணைந்துநில்
வாரணமாம் கொண்டை மயில்தோள் இவையென்று
பூரணமாய்ச் சொன்னார் புரிந்து.

(இ-ள்) வல்லூறு மணிக்கட்டையும், ஆந்தை முன்கையையும், காகம் உள்ளங் கையையும், கோழி அடிக்கையையும், மயில் தோள்களையும் குறிக்கும் என்பதாம்.

## இதுவுமது
### நேரிசை வெண்பா

404, வல்லூ றிடுப்பு நடுமுதுகாந் தைகாலாம்
ஒல்லுமே லாம்முதுகு காகந்தான்-நல்லாய் கேள்!
கோழி பிடரி கோலமயில் வார்கச்சு
சூழுமுலை நீஇனியாய்! சொல்

(இ-ள்) வல்லூறு இடுப்பையும், ஆந்தை-நடுமுதுகையும் காலையும், காகம் முதுகையும், பிடரி என்னும் பின்னங் கழுத்தைக் கோழியும், கச்சு வீக்கிப் பிணைத்த முலைகள் மயிலையும் குறிக்கும் என்று இனியவளே கூறுவாயாக என்றவாறு.

## இதுவுமது
### நேரிசை வெண்பா

404. வல்லூறாம் உத்தி மணிவயிறும் ஆந்தையாம்
அல்லாமல் கோழிமுலை ஆகுமே-நல்லாய்! கேள்
கான மயிலென்றும் கல்வி உடையீரே!
சூழும் வலமுலைதான் சொல்.

குறிப்பு: இப்பாட்டில் காகத்திற்கு உறுப்பு சொல்லப்படவில்லை. கோழிக்கு முலை என்றும், மயிலுக்கு வலது முலை என்றும் சொன்னது கொண்டு கோழி சொல்லப்படாத இடது முலையைக் குறிக்கும் என்றறிய வேண்டும். சுவடியில் செய்யுள் கண்ணழிந்துள்ளதால் இதற்கு மேல் செப்பம் செய்யக்கூடவில்லை.

(இ-ள்) கோழி இடது ஸ்தனத்தையும், மயில் வலது ஸ்தனத்தையும்' வல்லூறு கொப்பூழையும், ஆந்தை வயிற்றையும் குறிக்கும்.

### இதுவுமது
### விரல் பட்சி
### நேரிசை வெண்பா

496, முட்டுவிரல் வல்லூறு கட்டைவிரல் ஆந்தையாம்
நெட்டைவிரல் நேரிழையீர் காகமே - கட்டாணி
மோதிரமாம் கோழி முனைசுண்டு தோகையாம்
ஈதினிதே சொன்னார் இசைந்து.

(இ-ள்) விரல்களுக்குரிய பட்சியைத் தனித்தனி கூறுவது. இதன்படி சுட்டுவிரல் வல்லூறு, கட்டை விரல்-ஆந்தை, நடுவான நெட்டை விரல்-காகம், மோதிர விரல் கோழியாம். சுண்டுவிரல் மயிலென்றும் சொல்லுவர் என்பதாம்.

## உ௫. அங்கப் பட்சி-அமர பட்சம்

### ஆரூடத்தில் தேய்பிறைக்குரிய பட்சிகளைக் குறிக்கும் உறுப்புகளைக் கூறுவது
### நேரிசை வெண்பா

செய்யதலை வல்லூறு சீர்முதுகு தானாந்தை
கையிரண்டும் காரண்டக் காகமாம் மொய்குழலாய்
கோலவுந்திக் கோழி நடக்கும் இருகாலும்
நீலமயில் என்றே நினை.

(இ-ள்) தலை-வல்லூறு, முதுகு-ஆந்தை, இருகையும் காகமாம், தொப்பூழ் கோழியாம். இரண்டு கால்களும் மயில் என்று வண்டு மொய்க்கும் கூந்தல் உள்ளவளே அறிவாயாக என்றபடி "

### இதுவுமது
### நேரிசை வெண்பா

498. கூந்தலது வல்லூறு கோல நெற்றி ஆந்தையாம்
வாய்ந்தகண் மூக்கு வளர்காகம் ஆய்ந்ததொரு
வாய்வயிறு கோழி மணிக்கழுத்து வண்ணமயில்
தேயுமதிப் பக்கமெனத் தேர்.

(இ-ள்) கூந்தல்-வல்லூறு நெற்றி-ஆந்தை, கண் மூக்கு இவை காகம், வாயும், வயிறும் கோழி, கழுத்து-மயில் இவை தேய்பிறைக்கு எனக் கொள்வாயாக என்பதாம்.

## இதுவுமது
### நேரிசை வெண்பா

409 செப்புதோள் வல்லூறு செங்கெண்டை ஆந்தையாம்
தப்பில் முழங்கைதான் காகமாம் இப்புவியில்
முன்கையாம் கோழிமணிக் கட்டுமயில் தானாகும்
சங்கையின்றிச் சொன்னார் தனித்து.

(இ-ள்) தோள் வல்லூறு. அடிக்கை ஆந்தை, முழுங்கை - காகம், முன்னங்கை கோழி, மணிக்கட்டு - மயில் இப்படிச் சந்தேகமின்றிப் புள்ளறிந்தோர் சொன்னார் என்றறியவும்.

## இதுவுமது
### நேரிசை வெண்பா

410 தானென்ற மார்புவல் லூறு தனமாந்தை
தானென்ற தன்வயிறு காகமாம் - ஏனென்ற
கொப்பூழாம் கோழி குழவுமயில் தானறையாம்
இப்புவியில் நிற்கும் இடம்.

(இ-ள்) மார்பு - வல்லூறு, இருமுலை - ஆந்தை, வயிறு, - காகம், தொப்பூழ் கோழி. மயில், இடுப்பு என்று அறிவாயாக என்பதாம்.

## இதுவுமது
### நேரிசை வெண்பா

411 வாய்ந்தசந்து வல்லூறு சேர்ந்ததொடை தானாந்தை
சேந்த முழங்கால் சிறுகாகம் - ஏந்திழையீர்
கால்கெண்டை கோழியாம் கணைக்காலும் தானுமயில்
காலமிருட் பக்கத் திடம்.

(இ-ள்) இரண்டு தொடைகள் இடைவெளி - வல்லூறு, தொடை, ஆந்தை, முழங்கால், காகம், கெண்டைக்கால், கோழி கணுக்கால் - மயில் என்றறியவும.

## இதுவுமது
### விரல்பட்சி
### நேரிசை வெண்பா

412 சுண்டுவிரல் வல்லூறு சொல்மோ திரமாந்தை
கண்ட நடுவிரலே காகமாம் - மிண்டுசெயும்
தூண்டுவிரல் கோழி சொல்லும் பெருவிரலே
தூண்டுமயில் என்றே நவில்.

இ-ள் சுண்டு விரல் வல்லூறு, மோதிரவிரல் - ஆந்தை, நெடிய நடு விரல் - காகம். சுட்டுவிரல் கோழி, கட்டைவிரல் மயில் என்றும் அறிவாயாக என்பதாம்.

## 6. தொடுகுறிப்பட்சி

ஒருவன் ஆருடம் கேட்க வரும்போது சொல்லும் வாய்மொழியின் முதல் சொல்லின் முதல் எழுத்தைப் பட்சியாக்கி அவர்கள் அந்த நிலையில் தொடும் அங்கங் களையும் பட்சிகளாக்கி இரண்டையும் இணைத்துப் பதில் சொல்லுவது.

### அ காரச்சத்தம்

### நேரிசை வெண்பா

413 காணும் அகாரப்பேர் ஆளுடைய கண்டமுதல்
காணும் சிரசாந்தைம்கைகாகம் – பேணு
கோழி உடம்புமயில் முன்பின் வலியனாம்
தாழாம் இருசரணம் தான் "இ உ எ ஒ அ"

(இ-ள்) 'அ' என்ற எழுத்தைப் பெயராக உடையவன் வந்து தன்னுடைய அங்கங்களில் கழுத்துக்குமேல் தொட்டால் அப்போது பட்சி ஆந்தை என்று முடிவு செய்து அதன் அப்போதைய தொழிலின் நிலைக்கேற்ப பதில் சொல்லவும். அவன் வாயில் இருந்து வரும் முதல் ஒலி 'அ' காரமாக இருந்தாலும் இப்படியே கொள்க. இனி வரும் பாடல்களுக்கும் இதுவே பொருந்தும். இனி அவன் கைகளைத் தொட்டால் காகமாகும். உடலினைத் தொட்டால் கோழியாம். முன் அல்லது பின் பக்கம் தொட்டால் அது மயில் ஆகும். இரு கால்களைத் தொட்டால் வல்லூறாகும் என்றறியவும்.

### இதுவுமது (இ காரச்சத்தம்)

414 தானாம் இகாரப்பேர் ஆளுடைய கண்டமுதல்
தானார் தலைகாகம் கைகோழி – மானாய்
உடல்மயில்முன் பின்வலியன் காலிரண்டும் ஆந்தை
மடலே புரிவாய் வகு ('உ ஏ ஒ அ இ')

(இ-ள்) இ-என்ற எழுத்து பெயராக உடையவனோ அல்லது அவன் வாய்ச்சொல் முதல் சத்தம் 'இ' காரமானாலும், அவன் கழுத்துக்கு மேல் தொட்டால் அது காகமாகும், கை - கோழியாம், உடல் - மயிலாகும், முன்பின் பக்கங்கள் வல்லூறு, இருகால்களும் ஆந்தை என அறியவும்.

### இதுவுமது (உ காரச்சத்தம்)

415 அண்டும் உகாரப்பேர் ஆகுநாள் சென்னிமுதல்
கண்டமாம் கோழி கைமயிலாம் - உண்பதாம்
வல்லூ றுடல்முன்பின் வாழுமே ஆந்தையது
நல்லகால் காகமாய் நாட்டு 'எ ஒ அ இ உ'

(இ-ள்) மேற்சொன்னது போல் ஆரூடத்தில் முதலில் 'உ'காரச்சத்தம் உதித்தால், அவன் (வினவுவோன்) கழுத்துக்கு மேல் தொட்டால் அது கோழி. கை - மயிலாகும், உடல் வல்லூறு ஆகும். ஆந்தை உடலின் முன்பின் பக்கங்களைக் குறிக்கும். இவ் வகையில் இரு கால்களும் காகமாகும்.

### இதுவுமது எ காரச் சத்தம்

### நேரிசை வெண்பா

416. நாட்டும் எகாரப்பேர் ஆளுடைய கண்டமயில்
ஊட்டும்கை வல்லூறாம் ஆந்தையுடல் – நாட்டுமுன்
பின்னாகும் காகம பெருத்ததோர் கோழிக்கால்
நந்தா வலரே நவில் ஒ அ இ உ எ

(இ-ள்) 'எ' என்ற எழுத்தைப் பெயராக உடையவன் அல்லது அவன் கூறும் முதல் வாக்கியம் முதல் எழுத்து 'எ' வாக இருந்தால், அவன் தலையைத் தொட்டால் அது கழுத்து வரை மயிலாம், கைகள் வல்லூறு ஆகும். உடல் ஆந்தை, முன்பின் பக்கங்கள் காகமாகும், கோழி இரு கால்களாகும்.

### இதுவுமது (ஒ காரச் சத்தம்)

### நேரிசை வெண்பா

417. நாவிலும் ஒகாரப்பேர் தான்வலியன் சென்னி
கவலுங்கை ஆந்தையுடல் காகம் – புவியிலுயர்
தேனேமுன் பின்கோழி தேருங்கால் காலிணைதான்
மானே மயில்தான் மதி.

(இ-ள்) ஒ என்ற எழுத்தைப் பெயராக உடையவன் அல்லது அவ்வெழுத்தை முதலில் கூறுபவன் தலை வரைத் தொட்டால் (கழுத்து வரை) அது வல்லூறு ஆகும். கை ஆந்தையாம், உடல் காகமாம், முன்பின் பக்கங்கள் கோழியாம். இரு கால்களும் மயிலைக் குறிக்கும் என்று மான் போன்ற இளம் பெண்ணே அறிவாயாக என்பதாம்.

# 27. சில்லறை விஷயங்கள்

இதுவரை கூறப்பட்டவை தவிர விட்டுப்போன பஞ்சபக்ஷி தொடர்பான சில விஷயங்களைப் பெரியோர் ஆசிரியர்பால் கேட்டவை சிலவற்றை மற்ற நூல்களிலும் சுவடிகளிலும் இல்லையாயினும் முழுமை கருதி இங்கு உரைநடையாக எழுதப்படுகிறது.

## 1. வரவு செலவு செய்ய :-

புதன் சனிக்கிழமைகளில் துயில் சாவு நேரத்தில் பணம் செலவு செய்தால் இருக்கும் பணத்திற்கு செலவு வந்து விடும்.

## 2. கடன் கொடுக்கப் பத்திரம் எழுத:-

வாங்குவோனின் தூக்க மரண நேரத்தில் கடன் பத்திரம் எழுதினால் கடன் உரிய நேரத்தில் திரும்பி விடும். ஆனால் கொடுப்போனுக்கு அப்போது ஊண், அல்லது அரசு நேரயாக இருக்க வேண்டும்.

## 3. மாங்கல்ய தாரணம் :-

தன்பக்ஷி ஊணாகில் மாங்கல்ய தாரணம் செய்ய நன்று, அப்போது அவளுக்கும் அரசு ஊண் அந்தரங்களாவது இருந்தால் மிக நல்லது.

## 4. தன் குழந்தையை (புதிதாகப் பிறந்ததை) முதல் முதல் பார்க்க :-

நன்றாக உண்டு நிறைந்த வயிற்றுடன் தன்பட்சி அரசாக இருக்கும்போது தன் குழந்தையைத் தகப்பன் கண்டால், தந்தை ஆயுள் மட்டும் மரியாதையுடன் தந்தையிடம் நடந்து கொள்வான்.

## 5. முதல் முதல் குழந்தையைப் பள்ளியில் வைக்க :-

புதன் அட்ட வர்க்கத்தில் (குழந்தை ஜாதகத்தில்) அதிகப் பலன்கள் உள்ள ராசிக்கு சுபர் நோக்கமும் உள்ளதாக அந்த ராசியில் சந்திரன் வரும்போது குழந்தைக்கு அதன் பட்சி அரசு நேரத்தில் பள்ளியில் வைத்தால் கீர்த்தியும் நேர்த்தியு மாக உயர் படிப்பு பகுப்பான். ஊண் நேரத்தில் வைத்தாலும் நிதானமாக ஆனால் முழுமையாக நன்றாகப் படித்து முடிப்பான். உறக்க நேரத்தில் வைத்தால் இவனுக்கு படிக்கும் காலம் தூங்குவதற்கே சரியாகப் போகும் தொழிலுக்கு ஏற்புடையான் ஆகான். படிப்பும் முற்றுப் பெறாது.

## 6 மனைவியுடன் முதல் முதல் சேர :

மூன்றாம் சாமம் தன்பட்சி அரசாக இருக்கும்போது, தன் சரமான மூச்சுக் காற்று சுழிமுனையாகிய சூனியத்தில் இல்லாமல் வலம் ஓடும்போது சேர்ந்தால் ஆயுள் உள்ள மட்டும் சுக சௌக்ய போக்யங்களுடன் இருப்பான்.

## 7 இருவர் பட்சியும் அதாவது நட்சத்திரப் பட்சியும் ஒன்றாக இருந்தால்

எதிராளி வயதில் இளையவனாகில் ஊண் நேரத்தில் விவகாரம் பண்ண வெற்றி.

எதிராளி அங்க ஈனனாகில் நடை நேரத்தில் விவகாரம் பண்ண வெற்றி.

எதிராளி வயதில் மூத்தவனாகில் அரசு நேரத்தில் விவகாரம் பண்ணினால் வெற்றி.

எதிராளி தன்னைவிட பஷ்டி குறைந்த இளைத்தவனாகில் தூக்க நேரம் பார்த்து விவகாரம் பண்ண வெற்றி.

எதிராளி பெயரைவிட உன்பெயர் எழுத்து எண்ணிக்கை அதிகமாகி இருந்தால் சாவு நேரம் பார்த்து விவகாரம் பண்ண வெற்றி.

## 28 பட்சிகளின் கணித லக்ஷணம்

இது மகாதசை ஆண்டு கணிக்கவும் ஆரூடத்தில் காலநிர்ணயத்திலும் ஆக இரண்டுக்கு மட்டும் பயன்படுவது. மற்றபடி பட்சிகளின் தொழில் சாமத்தின் சூக்கும அந்தரங்களுக்குக் கணிதம் வேறு. வளர்பிறை (பூருவபட்ச) அமரபட்ச படலங்களில் அவை தனியே தரப்பட்டுள்ளன. சூக்கும அந்தரப்பொழுதுகளும் அதன் படி பூருவ, அமர பட்சப்படலங்களின் விரிவாகக் கணித்துத் தரப்பட்டுள்ளன. இதைத் தெளிவாக மனதில் வைத்துக் கொள்ளவும், (குழம்பவேண்டிய அவசியமில்லை).

பட்சிகளின் தொழில் 5க்கும் ஒவ்வொரு தொழிலுக்கும் 6 நாழிகை அல்லது 2 மணி 24 நிமிடம் கொண்ட ஜாமம் உண்டு என்பது தெரிந்ததே. ஒவ்வொரு ஜாமத்திற்கும் ஒவ்வொரு தொழிலுக்கும் 5 தொழில்களைக் கணக்கிட்டு சூக்கும அந்தரம் பிரிக்கு வகை சொல்லப்பட்டுள்ளது. இவை மூன்று விதமாகும்.

1. முதலாவது ஒருவன் பிறக்கும் சூக்கும அந்தரத் தொழிலின் அடிப்படையில் அவன் பட்சியை நிர்ணயம் செய்வது. இது வளர்பிறை தேய்பிறை இரண்டுக்கும் இந்த சூக்கும அந்தரங்களைச் சக்கரங்களாக அமைத்து நுதலிப்புகு படலத்தில் காட்டியுள்ளோம். இது ஒருவன் பிறப்புப் பட்சியை நிர்ணயம் செய்து ஜாதகம்போல் பலன் உரைர ஏதுவாவது. இது ஜாதகப்படலத்திலும் இன்னும் பயன்படும் பிற இடங்களிலும் சுட்டிக்காட்டி விளக்கப்பட்டுள்ளன.

2. இரண்டாவது ஒருவன் பிறந்த ஜென்ம நட்சத்திரப்படி வளர்பிறை தேய்பிறைகளுக்குத் தனித்தனி பட்சி நிர்ணயம் செய்து அன்றாட நடவடிக்கைகள் முதலியவற்றில் பயன்படுத்துவது. இதையே இப்பகுதி முகப்பில் நகவளைவில் சுட்டிக் காட்டியுள்ளோம். பொதுவாக இந்த முறையில் வளர்பிறை தேய்பிறைகளில் பகல் இரவுகளுக்குப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பட்சத்திற்கு 50 பதகங்கள் வீதம் 100 பதங்களில் மொத்தம் 2500 கணித சூக்கும அந்தரங்கள் கணிக்கப்பட்டு பூர்வபட்ச அமரபட்ச படலங்கள் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளன.

3. மூன்றாவது தசாபுத்தி கணிக்க உதவுவது ஒருவன் பிறந்த ஜென்ம நட்சத்திரத்தின் அடிப்படையில் தசாபுத்தி கணிப்பது அதே ஜென்ம நட்சத்திர அடிப்படையில் நட்சத்திரத்திற்குரிய பட்சியின் தொழில்களின் தசையின் புத்தி அந்தரங்களைக் கணிக்க ஏற்புடையது. இது தசை புத்தி கணிக்க மட்டும் பயன் படுத்தப்படும். தொழில்களின் பிற இடத்தில் சொல்லப்பட்ட முறையில் வரிசையில் அல்லாமல் தனியாக வேறு முறையில் சொல்லப்படுவது. இதில் சொல்லப்படும் தொழில்களின் சூக்கும அந்தரங்கணக்குப்படி விகிதாசாரப்படி ஒவ்வொரு பட்சியின் தொழில் புத்தி அந்தரங்களும் பிரிக்கப்படும். இதுவே இங்கு பட்சிகளின் கணித இலக்ஷணம் என்று சொல்லப்படுவது. இது எல்லா பட்சிகளுக்கும் ஒன்றாக இல்லாமல் ஒவ்வொன்றுக்கும் வேறுபடுவதாகும். இக்கணிதமே ஜாதகப் படலத்தில் பகுதி 2 இந்நூலின் 119ம் பாடலில் ''மகா தசையாண்டு'' என்ற தலைப்பிட்டு, உதாரணம் ஜாதகங்கள் இரண்டிற்குத் தசைபுத்தி அந்தரங்களும் கணித்துக் காட்டப்பட்டுள்ளன. அச்சிட்ட ''பஞ்சபட்சி ரத்தினம்'' அகத்தியர் பஞ்சபட்சி சாத்திரம்" மற்றும் எம் கை குறிப்பு இவற்றில் உள்ள இது பற்றிய பாடல்களை எழுதி இப்பொழுது விளக்குவோம்.

## 1. வல்லூறின் கணித இலக்கணம்
### நேரிசை வெண்பா

418. பேதையாம் வல்லூறு பேசாது மூன்றரையும்
ஓதிய ஒன்றரையில் உண்டேகும்-மாதேகேள்!
துஞ்சல் துயிலலரை ஒன்றரை ஒன்றரசாம்
செஞ்சொல் துணிவால் தெளி

(இ-ள்) வல்லூறு நாழிகை ஆறுக்கு நித்திரை - $1\frac{1}{2}$ நாழிகை. உணடி 1 நாழிகை, நடை $1\frac{1}{2}$ நாழிகை, மரணம் $\frac{1}{2}$ நாழிகை, அரசு 1 நாழிகையாம்.

குறிப்பு: முதலடியில் பேசாது மூன்று அரை எனப்பிரித்து $3\times\frac{1}{2}=1\frac{1}{2}$ நாழிகை என்றும் இரண்டாம் அடியில் ஒன்றரையில் என்பதை அடுத்து வைத்து இருமுறை $\frac{1}{2}$ என்றும் சொன்னதை உண்டு, நடை என்ற இரு தொழிலுக்கும் முறையே $1\frac{1}{2}$ நாழிகை தனித்தனிப் பொருள் கொள்க. அடுத்து மூன்றாம் அடியில் துஞ்சல்-அதாவது சாவு துயிலல் - உறக்கம் இரண்டுக்கும் முறையே அரை $= \frac{1}{2}$ ஒன்றரை $= 1\frac{1}{2} = \frac{1}{2}$ என்று நிரல் நிறையாக சாவு $\frac{1}{2}$ நாழிகை என்றும் உறக்கம் $1\frac{1}{2}$ நாழிகை என்றும் கொள்க. கடையில் ஒன்றரசு என்றது அரசு 1 நாழிகை என்றும் கொள்க, அச்சிட்ட நூல்களிலும் எம் கைக் குறிப்பிலும் மிகவும் யாப்புப்பிழை உள்ள வடிவை ஒருவாறு திருத்தி அமைத்துள்ளோம். மற்ற இடங்களிலும் பாடல்களுக்கு இங்ஙனம் கொண்டு கூட்டிப் பொருள் கொள்க.

## 2. ஆந்தையின் கணித இலக்கணம்
### இதுவுமது

419. துணைபிரிந் தோடும் துணைசெயல் முப் பாதி
உணவறிந் தொன்றரையில் உண்ணும்-பிணியாலே
கூர்துயில் தானிரண்டு கோறவிழல் தானரையாம்
ஆந்தை அரசாம் அரை.

(இ-ள்) ஆந்தை சாம நாழிகை 6க்கு நடை $\frac{1}{2}$ ஊண் $\frac{1}{2}$ துயில் 2, மரணம் $2\frac{1}{2}$ அரசு $\frac{1}{2}$ ஆகும்.

## 3. காகத்தின் கணித இலக்கணம்
### இதுவுமது

420. துஞ்சும்போ தொன்றரையாம் துய்ய நடையிரண்டு
விஞ்சி அரசாகுமாம் ஒன்றதனில் - வஞ்சியரே
சேக்கையோ பாதி சிறுபோ சனமொன்றாம்
காக்கைக்கே சொன்னார் கணித்து.

(இ-ள்) காகம் நாழிகை 6க்கு மரணம் 1 ½, நடை - 2, அரசு -1, உண்டி 1, தூக்கம் ¼ ஆக நாழிகை 6 ஆகும்.

## 4. கோழியின் கணித இலக்கணம்

### இதுவுமது

421. குற்றமிலா ஒன்றரையில் கோழி துணை தேடும்
மற்றைய ஒன்றரையில் வாயுண்ணும் - வெற்றி
அரசாளும் ஒன்றும் அழியுமொன் றாம்நித்
திரையாவ தொன்றாம் நினை

(இ-ள்) கோழி நாழிகை 6க்கு நடை 1 ½, ஊண் 1 ½, அரசு - 1, மரணம் 1, துயில் - 1 ஆக 6 நாழிகையாம்.

## 5. மயிலின் கணித இலக்கணம்

### இதுவுமது

422. எடுக்கும் கடிகை இரண்டரையு மாக
நடக்கும் அரைகடிகை வல்லூண் - அடுக்கும்
அரசாளும் ஒன்றினில் நித்திரை ஒன்றில்
நரைசாவொன் றேன்றே நவில்.

(இ-ள்) மயில் நாழிகை 6க்கு நடை 2 ½, உண்டி ½, அரசு - 1, நித்திரை 1, சாவு - 1 ஆக 6 நாழிகை என்றறிக.

# 18. அமுத நிலைப்படலம்

## தோற்றுவாய்

ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரை உலகில் பெறும் இன்பங்கள் எல்லாவற்றிலும் சிற்றின்பமே தலையானதாகக் கருதப்படுகிறது. இவ்வகையில் தமிழன் அக இலக்கணம் வகுத்து காதல் சுவையை நாகரிக நயத்துடன் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தே நுகர்ந்து வந்துள்ளான். இந்த நிலையில் பெண்ணிடம் ஆண் வேண்டி வரும்போது தி பின்றித் தன்னியல்பால் அவள் ஒத்துழைப்பாளாயின் அதுவே பெரும் பேறாகும். இது அவள் உடல்நிலை மனநிலை, மற்றும் சந்திரன் இயக்கத்தையும் பொறுத்தது. சந்திரன் செவ்வாய் சேர்க்கை பார்வை, பெண்ணின் பிறப்பு ராசிக்கு இவற்றின் தொடர்பு இவற்றை அனுசரித்து அவள் ஒவ்வொரு மாதமும் சந்திர இயக்கத்தால் பாதிக்கப்பட்டுப் பூப்பு அடைகிறாள். இந்த நிலையில் வளர்பிறை தேய்பிறைகளில் ஒவ்வொரு திதியிலும் பெண்ணின் உடலின் உணர்ச்சி வேகங்கள், எதிர்மறை உணர்வுகள், குறிப்பிட்ட ஒவ்வொரு உறுப்பிலும் மையங்கொண்டு இயங்குவதை ஆன்றோரான நம் சித்தர்கள் கண்டுணர்ந்தனர். இதுவும் ஐம்பூத தத்துவத்தின் அடிப்படையில் இயங்குவதால் இந்த பஞ்சபட்சி அமைப்புக்கும் பெண்ணின் மேற் குறித்த இயல்புக்கும் தொடர்பிருப்பதையும் நம் ஆன்றோர்கள் கண்டனர்,

பெண்ணைத் தன்பால் தானே விரும்பி இணையச் செய்வதற்கு, ஒவ்வொரு திதியிலும் குறிப்பிட்ட உணர்ச்சி மையங்கொண்ட அவளுடைய உறுப்பைத் தீண்டிப் பழகி கிளர்ச்சி அடையச் செய்தால் 'அது' கைகூடுவது எளிது எனவும் கண்டனர். இப்படி ஒவ்வொரு நாளும் அவள் உணர்ச்சி வேகம் மையம் கொண்டுள்ள இடத்தை "அமுதநிலை" என்றும் அதாவது அமுதம் போன்று இனியது தன் முயற்சியால் சோர்வு இன்றி இன்பம் தருவது என்று கண்டு வரையறுத்து வைத்தனர். இதேபோல் மாறான இயக்கமுள்ள எதிர்மறை உணர்ச்சி மையங்கள் "நச்சுநிலை" (Negative and Poisonous points) என்றும் அறிந்து கொண்டனர். இப்படி நச்சு நிலை உறுப்பைக் கிளர்ச்சி அடையச் செய்து கூடினால் ஆண்களுக்குச் சோர்வும் உடல்நலம் குறைவதும் இவை இயல்பாக ஏற்படுவதையும் தம் ஆன்றோர் ஆய்ந்தறிந்தனர்.

இந்த அமுத நிலைகளில் பூத தத்துவப்படி பட்சிகளின் தொழில்கள் பொருந்துவதைப் பட்சி நூல் புலவரும் கண்டுணர்ந்தனர் இந்த வகையில் பூர்வ அமர பட்சங்களில் ஒவ்வொரு திதியிலும் தன்பட்சி அரசு ஊணில் இருக்கும்போதும், பெண்ணின் பட்சி தாழ்ந்த தொழிலில் இருக்கும்போதும் அந்த நிலையில் அப் பெண்ணின் எந்த உறுப்பின் பட்சி தாழ்ந்த தொழிலில் இருக்குமோ, அப்போது சூழ்நிலை ஏற்புடையதாக இருக்குமானால், அப்போது குறிப்பிட்ட அந்த உறுப்பின் மூலம் அவளைக் கிளர்ச்சி அடையச்செய்து காம இன்பத்தின் முழுமையையும் ஒருவனால் அடைய முடியும். திதிகளுக்கு அமுத நிலைகளைக் குறிப்பது காமநூல் பாற்பட்டதே (அதிவீரமா பாண்டியன் சொக்கோகம் முதலியன) ஆனால் அதற்கேற்றபட்சி நிலை உணர்ந்து அமுத நிலைகளைப் பயன்படுத்துவது ஒருபடிமேல் உயர்ந்த பட்சி நூலின் பெருமையே ஆகும். இதுவே முறையாய் இங்கு விளக்கப்படுகிறது.

பெண்ணின் பால் தன் வயத்தில் அவளாகவே முன்வந்து வயமிழந்த நிலையில் அவனிடம் சுகம் பெறுவதும் மேலானதொன்றாகும் இதையே.

"வலிய அணைத்த சுகம்போலே - ஒரு
மலடி பெற்ற மகன் போலே" என்றும்
"தாம் வீழ்வார் மென்தோள் துயிலின் இனிது சொல்
தாமரைக் கண்ணான் உலகு"

என்ற குறளிலும் அறியக்கிடக்கிறது. குறளில் - "தாம் வீழ்வார்" இங்கே வீழ்வார்" என்பது மென்தோள் என்ற அடைமொழியால் மகளிரையே குறிக்கும். தாம் தாமே வீழ்தல் வயமிழந்த ஆணிடம் பணிந்து விழுதல் வயப்படல் ஆணுக்கு வயப்படல் இப்படிப்பட்ட பெண்ணின் மென்தோளை இணைந்து பெறும் சுகத்தைவிட தாமரைக் கண்ணான் வைகுந்த சுகமும் இனிதல்ல பெரிதுமல்ல" என்று வள்ளுவர் கூறுவார் ஆண் பெண் உடற்கூறியல். மனஇயல், சிற்றின்ப இயல் (Psychology of women's mind and Psychology of sex) எல்லாம் அறிந்தவர் நம் ஆன்றோர். ஏன் என்றால் ஆண் விரைவில் கிளர்ச்சி அடைகிறான். (Active or Subjective instinct) பெண் இப்படி விருப்புடையவள் அல்ல. அவள்நிலை செயலற்ற நிலை (inactive passive instinct) இது அவள் உடற்கூறு இயலாகும். இதனாலேயே அவளைக்கிளர்ச்சி அடையச் செய்ய வேண்டியதாகிறது. பஞ்சபட்சி இந்த வகையில் பேருதவி புரிகிறது.

தன் மனைவியல்லால் வேற்றுமுறை மீறிய பெண்சேர்க்கைக்கு இது பொருந்தாது. ஆதலின் இந்த பஞ்சபட்சி நூலை அந்தவகையில் பயன்படுத்துவதை விலக்குக. நெறியற்றதில் இந்த புள்நூல் பயனும் தராது. "பிறனில் விழையேல்" என்றும் "பிறனில் விழையாத பேராண்மை சான்றோர்க் கறனன்றோ ஆன்ற ஒழுக்கு" என்ற முது மொழிகளும் இதனாலேயே ஏற்பட்டன.

இதில் மற்றோர் நுட்பமும் உண்டு. ஒத்த தன்மை உடைய கணவன் மனைவியர் உடலில் கூறுபாடுகளின் அடிப்படையில் இணைவிழைச்சின்போது இருவருடைய ஆக்கவகை அதிர்வுகளும் (Positive Vibrations) ஒன்றுச்கொன்று இடம் மாறி நிறைவு பெற்று ஏற்றம் பெறுகின்றன. ஆனால் இப்படிக்கின்றி ஒருவன் மற்ற பெண்ணை அடையும்போது இவனுடைய ஆக்க அதிர்வுகளை (Negative Vibrations) ஆண் ஏற்றுக் கொள்கிறான். இதனாலேயே ஆணின் உடல் நலம் கெடுகின்றது. எனவே உடற்கூற்று முறைப்படியும், அறன் வலியுறுத்தற்படியும் இது ஏற்புடைய தன்று. அறன் சாராச் சிலர் இதைத் தவறான முறையில் பயன்படுத்திச் சில பல நல்ல பெண்ணை ஏமாற்றி ஊறு செய்யக் கூடுமாகையால் இவ்வளவு விளக்கமாக இது இங்கு கூறப்பட்டது.

இப்போது கூறப்பட்ட அமுத நிலைகள் வளர்பிறைக்கு (பாதாதி கேசமாகவும்) அடிமுதல் முடிவரையாகவும் ஏறுமுகத்தில் இருப்பது. அமரபக்கத்தில் (கேசாதி பாதமாக) தலைமுதல் அடிவரை குறிப்பிட்ட ஒவ்வொரு உறுப்பிலும் இறங்குமுகமாகவும் மறுபட்சத்தில் ஏறுமுகமாகவும் இருபட்சங்களிலும் நிலைகொண்டிருக்கும்.

இவ்வமுதநிலைகளை மருத்துவத்திற்கும் குறிப்பிட்ட திதியில் அமுதநிலை இருக்கும் சமயம் பார்த்து பட்சி அரசு ஊண் வேளையில் பயன்படுத்தினால் விரைவில் நோயும் தீரும். மாறாக நச்சு நிலைகள் தீங்குடையவையாகும். இதுகாறும கூறிய தமிழனின் அகவாழ்க்கை முறையே அறத்தின் வழி பயன் பெற்றும் எல்லோரும் நலம் பெறுக.

இங்கு தரப்படும் 423 முதல் 437 பாடல் வரையில் உள்ள பாடல்கள் மூலச் சுவடிகள் எவற்றிலுமி இல்லாமையால் நூல் முழுமையாக இருக்கவேண்டும் என்ற கருத்தால் அச்சிட்ட பஞ்சபட்சி சாஸ்திரம். பஞ்சபட்சி ரத்தினம் மற்றும் எமது கைக் குறிப்பு இவற்றிலிருந்து எடுத்து எழுதப்பட்டன.

## அமுத நிலைகள்

### 1. பூர்வபக்ஷம் - பிரதமை - பாதம்

நேரிசை வெண்பா

423 காலடிவல் லூறு கணைக்காலும் ஆந்தையாம்
மேலெழுந் தாளதுதான் காகமாம் - மாலார்
படிக்குறங்கு கோழியாம் பணவல்குல் மாதே
முடிக்கு மயிலென் றறி.

(இ-ள்) வளர்பிறை பிரதமையில் அமுத நிலை பாதத்தில் இருக்கும். இருப்பினும் அன்று வல்லூறு அவன் உள்ளங்காலில் தொழில் செய்யும், கணைக்கால் வல்லூறாகும். கெண்டைக்கால் (ஆடுசதைப்பகுதி) ஆந்தையாகும். முழந்தாள் காகமாகும். கணைக்குப்படித் திரண்ட தொடை கோழியாகும். மயில் இடையைக் குறிக்கும் என்பதாம்.

குறிப்பு: ஒவ்வொரு திதியிலும் ஒவ்வொரு உறுப்பில் மட்டும் அமுதநிலை கொள்ளுவதாகும். அந்த ஒரு உறுப்பிலேயே 5 இடங்களை ஐம்புலன்களுக்கும் தொழிலிடமாக காட்டப்பட்டுள்ள நுட்பம் அறியத்தக்கது. ஆயின் இப்பாட்டில் தொழிலிடம் மயிலுக்குத் தலை என்று காட்டப்பட்டது விதிவிலுக்கு போலும்

## 2. துதியை - பரடு

### இதுவுமது

424. அறியும் பரடுவல் லூறாகும் கோழி
முறியாந்தை மேற்கொண்ட பின்னே - சரியாம்
அணிமுழந்தாள் காகமாம் தொடை இணைதான், கோழி
மணிகதுய்யம் மஞ்ஞையென வை.

(இ-ள்) வளர்பிறை துதியையன்று அமுதநிலை பெண்ணிற்குப் பரட்டில் (உள்ளங்காலில்) இருக்கும் அதில் வல்லூறு பரடாகும். ஆந்தை கெண்டைக்கால் (ஆடு சதைப்பகுதி) யாகும். காகம் முழங்காலாகும். இரு தொடையும் கோழியாகும். அழகிய பெண்குறி மயிலாகும்.

## 3. திரிதியை - கணைக்கால்

### இதுவுமது

425. கணைக்கால் வல்லூறு கால்கொண்ட ஆந்தை
பணிமுழந் தாள்காகம் பகரும் கனித்த
தொடையா கும்கோழி துய்யமயில் தானும்
இடையாகும் அறிவாய் இசைந்து.

(இ-ள்) திரிதியை தி தி ய ன் று பெண்ணிற்கு அமுதநிலை முக்கியமாகக் கணைக்காலில் இருக்கும். இதில் கணைக்கால் வல்லூறாகும். கெண்டைக்கால் (ஆடுசதைப்பகுதி) ஆந்தையாகும். முழந்தாள் காகமாகும். கணக்குப்படி திரண்ட தொடை கோழியாகும். மயில் இடையைக் குறிக்கும் என்பதாம்

## 4. சதுர்த்தி - முழந்தாள்

426. வல்லூ றிடுப்பு வளர்முதுகு தானாந்தை
கல்லாத மேன்முதுகும் காகமாம் - சொல்லரிய
கோழி பிடரி ஆகுமயில் கையிணைதான்
தோழியே நீதுணிந்து சொல்.

(இ-ள்) வளர்பிறை சதுர்த்தியில் முழந்தாள் இடையாகும். இவற்றில் அமுத நிலை பெண்ணிற்கு இருக்கும். அதில் இடுப்பு - வல்லூறாகும், முதுகு - ஆந்தையாம். மேல் முதுகு காகமாகும். பிடரி பின்னங்கழுத்து கோழியாம். இரு கைகளும் மயில் என்று தோழியே நீ துணிந்து சொல்வாயாக என்பதாம்.

அமுத நிலை படலத்துப் பாடல்கள் முழுவதும் மற்ற சுவடிகளில் செம்மையாக இல்லாமையால் ஐம்பது ஆண்டுகளுக்குமுன் அச்சிட்ட பஞ்சபட்சி என்ற நூலிலிருந்து எடுத்துச சேர்க்கப்பட்டுள்ளது.

## 5. பஞ்சமி - தொடை - உந்தி

### இதுவுமது

427. வல்லூரே உந்தி வயிறாந்தை மார்புகொடி
அல்லாடும் மென்முலை கோழியாம் -தொல்லுலகில்
வண்ணமயில் கைகீழாம் மட்டவிழும் கார்குழலாய
பண்ணவர்கள் சொன்னார் பரிந்து.

(இ-ள்) வளர்பிறை பஞ்சமியில் தொடை - தொப்பூழ் இவற்றில் பெண்ணிற்கு அமுதநிலை இருக்கும். இதில் தொப்பூழ் தொடை இரண்டும் வல்லூறு, மார்பு-காகம். வயிறு - ஆந்தை (இருளில் கணவனால் அனுபவிக்கப்படும்) மென்முலை கோழியாம் அக்குள் மயிலாகும். (மார்பு முலைப்பகுதி வயிறு இரண்டுக்கும் இடையிலுள்ள பகுதி) என்று கொள்க.

## 5. சஷ்டி நிதம்பம் கீழ்வயிறு

### இதுவுமது

428. கீழ்வயிறு வல்லூறு மேல்வயிறு மாந்தையாம்
வாழ்மார்பு காகமாம் வாணுதலாய் - சூழ
எழிலாக் கோழி இடுப்பும் மயிலாம்
வழுவின்றிச் சொன்னார் வகை.

(இ-ள்) வளர்பிறை சஷ்டியில் பெண்ணிற்கு அமுதநிலை குறியிலும் கீழ் வயிற்றிலும் இருக்கும். இதில் கீழ்வயிறும் அல்குலும் வல்லூறு. ஆந்தை மேல் வயிறாகும். மார்பு காகமாம். விலா - கோழியாகும். இடுப்பு மயிலாகும் என்று கொள்க என்பதாம்.

## 7. சப்தமி இடை கீழ் முதுகு

### இதுவுமது

42", கீழ்முதுகு வல்லூறு மேலாம் கிளராந்தை
வாழ்பிடரி காகமாம் வாணுதலாய் - கோழியோ
வல்லலார் தோகை இடையே வலமிடமாம்
சொல்லல்வார் சொன்ன வகை

(இ-ள்) வளர்பிறை சப்தமியில் பெண்ணிற்கு அமுதநிலை இடைகீழ் முதுகில் இருக்கும் இதில் கீழ் முதுகு வல்லூறு, மேல் முதுகு ஆந்தையாம். கழுத்துப் பிடரி பாகம் காகமாம். விலா பகுதி கோழியாம். இடையும் அதன் வலது இடது பக்கங்களும் மயிலாகும் என்பதாம்.

## 8. அட்டமி - உந்தி - வயிறு

### இதுவுமது

430. வல்லூறு தான்வயிறாம் வல்லாந்தை மார்பாகும்
சொல்லாகும் காகம் முதுகாகும் - மெல்லியலாய்!
கோழி விலாசம் கோலமிகு மாமயிலோ
தோழி வலவிலாவசம் சொல்லு.

(இ-ள்) வளர்பிறை அட்டமியில் அமுத நிலை தொப்பூழ் வயிறு இவற்றில் இருக்கும். இதில் வல்லூறு வயிறாகும். மார்பு - ஆந்தையாம். காகம் - முதுகாகும். கோழி இடது விலாவாகும். மயில வலது விலாவாகும். என்பதாம்.

குறிப்பு: மயில் வலது விலா என்று சொன்னதால் கோழி - விலா என்றதை இடது விலா என்று பொருள் கொள்ளப்பட்டது.

## 9. நவமி - வயிறு - மார்பு

### இதுவுமது

431. எழிலார் மார்வலியான் தோளிரண் டாந்தை
முழுதுடல்முன் காகம்பின் கோழி - பதறவே
காலாகும் மஞ்சையெனக் காதலர்க்குக் காசினியில்
மேலான நூலிதென ஓது

(இ-ள்) வளர்பிறை நவமியில் பெண்ணிற்கு அமுதநிலை மார்பு வயிறு இவற்றில் இருக்கும். இதில் மார்பு - வல்லூறு, இருதோள் - ஆந்தை, உடல் முழுவதும் முன்பக்கம் காகம் பின் பக்கம் கோழி, இரு கால்களும் மயிலாகும் என்று காதலர் மகிழும்படி உயர்ந்த புள்ளின் நூலார் சொன்னதிதுவாகும் என்பதாம்.

## 10. தசமி - கை

### இதுவுமது

432. கையிரண்டும் வல்லூறு கண்டமோர் ஆந்தையாம்
மெய்யுடல்முன் காகம்பின் கோழியாம் - பையத்
தொடைஇரண்டும் தோகையெனச் சொல்வர் மகளிர்
வடிவமென மானிடர்க்கு வை.

(இ-ள்) வளர்பிறை தசமியில் பெண்ணிற்குக் கைகளில் அமுதநிலை இருக்கும். அதில் இருகையும் வல்லூறு, கழுத்து ஆந்தையாகும். உடல் முன்பக்கம் காகமாம், பின்பக்கம் கோழியாம். இரு தொடையும் மயிலென்றும் மானிட வடிவத்தில் பட்சியை வகுத்து வைத்தனர் என்பதாம்.

## 11. ஏகாதசி - பாளி - அங்கை

### இதுவுமது

433 பாளியாம் வல்லூறு பன்பார்முன் கையாந்தை
மூளும் முழங்கைதான் காகமாம் - காளைகேள்
கெண்டையாம் கோழி கொழுந்தோள் மயிலாகும்
தண்டமிழ் வல்லாய்நீ சாற்று.

(இ-வ்) வளர்பிறை ஏகாதசியில் பெண்ணிற்கு முன்னங்கை - பாளி - உள்ளங்கை இவற்றில் அமுதநிலை இருக்கும். இதில் பாளி - புறங்கை வல்லூறாகும். முன்கை ஆந்தை, முழங்கை - காகம் கையின் ஆடு சதைப்பகுதி கெண்டைக்கை மயிலாகும் என்பதாம்.

## 12. துவாதசி - விரல்

### இதுவுமது

434. முட்டுவிரல் வல்லூறு மூதாந்தை கட்டையாம்
நெட்டைவிரல் காகம் நேரிழையீர் - சுட்டாணி
மோதிரமாம் கோழி முன்சுண்டு தோகையாம்
ஆதரவாய்ச் சொன்னார் அறி.

வளர்பிறை துவாதசியில் கையின் விரல்களில் பெண்ணிற்கு அமுநிலை இருக்கும் இதில் சுட்டுவிரல் வல்லூறு, கட்டைவிரல் - ஆந்தை, நீண்ட நடுவிரல் காகமாம், மோதிரவிரல் கோழியாம். சுண்டுவிரல் மயில் என்பதாம்.

## 13 திரயோதசி - கழுத்து

### இதுவுமது

435. வல்லூறு வன்கழுத்தாம் வல்லாந்தை வாயாகும்
மெல்லியலாய் காகம் விழிஇரண்டாம் - சொல்லரிய
கோழியது நெற்றி குல்வுமயில் தாழ்கூந்தல்
வாழியெனச் சொன்னார் வகுத்து.

(இ-ள்) வளர்பிறை திரயோதசியில் கழுத்தில் பெண்ணிற்கு அமுதநிலை இருக்கும். இதில் கழுத்து - வல்லூறு, ஆந்தை - வாயாம், காகம் - இருகண்களாம், கோழி - நெற்றியாம், மயில் இருண்டு தாழ்ந்த பெண்ணின் கூந்தல் என வகுததுக் கூறினர் பெரியோர் என்பதாம்.

## 14. சதுர்த்தசி - தலை

### இதுவுமது

436. செய்யதலை வல்லூறு சீரார் முதுகாந்தை
கையிரண்டும் காகமாம் கண்டாயே - மொய்குழலாய்!
உந்தியாம் கோழி உலவும் இணைத்தாள்கள்
அந்தமிகு தோகையே ஆம்.

(இ-ள்) வளர்பிறை சதுர்த்தசியில் பெண்ணிற்கு அமுத நிலை தலையில் இருக்கும். இதில் தலை - வல்லூறு, முதுகு ஆந்தை, இருகையும்-காகம், கோழி தொப்பூழ் எனும் உந்தியாம் நடக்கும் இருகால்களும் மயிலாகும் என்பதாம்.

## 15. பூரணை - அமாவாசை - தலை

### இதுவுமது

437. கூந்தல் மயிலாகும் கோழியே நெற்றியாம்
வாய்த்தசெவி கண்மூக்குக் காகமாம் - ஏந்திழையீர்
வாயாகும் ஆந்தை மணிக்கழுத்து வல்லூறு
வாயால் வழுத்தினார் காண்

(இ-ள்) பௌர்ணமி அன்றும் அமாவாசையன்றும் பெண்ணிற்கு அமுதநிலை தலையில் தான் இருக்கும். இதில் கூந்தல் - மயிலாகும், நெற்றி - கோழியாம், செவிகண், மூக்கு இவை-காகமாகும், வாய்- ஆந்தையாம் அழகான கழுத்து வல்லூறு என்றும் அழகிய அணிகலன்கள் அணிந்தவளே அறிவாயாக என்பதாம்.

குறிப்பு: இதுவரை வளர்பிறை பிரதமை முதல் பௌர்ணமிவரை சுக்கில பட்ச 15 திதிகளுக்கும் பெண்ணின் அமுதநிலைப் பட்சிகள் முறையே கூறப்பட்டன. கடைசி பாடல் பௌர்ணமி அமாவாசை இரண்டுக்கும் பொதுவாகும். தேய்பிறைக்கு இவற்றையே 436 பாடல் முதல் ஆரம்பித்து பிரதமை எனக் கொண்டு தலைகீழாய் அந்தந்தப் பாடல்களில் சொன்ன அங்கங்களில் அமுதநிலை இறங்கு முகமாக இடம் பெறும் என அறிக. இவ்வகையில் வளர்பிறையில் சதுர்த்தசிக்குரியது தேய்பிறை பிரதமைக் குரியதாக வரும் 437 பாடல் தேய்பிறை அமாவாசைக்கும் கொள்ளப்படும்.

தவிரவும் இவை மருத்துவத்திற்குப் பயன்படும்போதும் கூடாவொழுக்கத்தால் பெண்களுக்கு (உண்மை மனைவிகளுக்கு) வயப்படாத ஆண்களை வயப்படுத்தும் விஷயத்திலும், பெண்களுக்கு இடப்பாகம் இயல்பாகையால், இதில் சொல்லப்பட்ட

அவயவங்களின் இடப்பக்கம் அமுதநிலை பெண்களுக்கு இருக்கும் என்றும் இது தேய்பிறையில் இவர்களுக்கு வலப்பக்கம் மாறும் என்றும், வளர்பிறையில் இந்த உணர்ச்சி மையங்கள் இதே அமுத நிலைகள் ஆண்களுக்குக் குறிப்பிட்ட அவயவங்களின் வலப்பக்கம் செயல்படும் என்றும் இதுவே தேய்பிறையில் இவர்களுக்கு இடப்பக்கம் செயல்படும் என்றும் நுணுக்கமாக அறிந்து கொள்ளவேண்டும்.

மேலும் அமுத நிலைகள் உள்ளது போல் நச்சு நிலைகளும் உண்டு என்று முதலில் குறிப்பிட்டுள்ளோம். இது மந்திர மருத்துவ இயலில் பயன்படும்.

மந்திர இயலில் வழிபாடு செய்து அந்தந்த திதியில் குறிப்பிட்ட அமுத நிலைகளில் நீர் தெளித்தல், தடவி நீவி விடுதல் முதலியவை நோய் நீக்கம் காண அந்தந்த அங்கங்களில் பயனுடையனவாகக் கூறப்பட்டுள்ளன.

இதனுடன் அட்டகன்மங்களில் தீய செயல்களான மாரகம், பேதனம், வித்வேஷணம் போன்ற கெட்ட கர்மங்களுக்கு நஞ்சு நிலைகளைப் பயன்படுத்திச் செயல்படுத்தும் முறையும் மந்திர இயலில் உண்டு. இது விலக்கப்பட வேண்டியதாக இருப்பினும் பழம்பெரும் நூல்களில் உள்ளவை மறைந்துவிடல் கூடாது என்ற எண்ணத்துடன் இங்கு முதலில் அமுதநிலைகளின் விளக்கத்தை ஒரு பதகத்திலும், அடுத்து இரண்டாவது பதகத்தில் நஞ்சுநிலை அமுதநிலை இடங்கள் இரண்டும் சேர்ந்த வடிவிலும் தரப்பட்டுள்ளன. நஞ்சுநிலைகள் தமிழ் நூல்களில் கிடைக்கவில்லை.

வடமொழி மந்திர இயலில் அம்ருதேஸ்வரீ வித்தை என்ற பகுதியில் நஞ்சு நிலைகள் சொல்லப்பட்டுள்ளன. அவற்றையே எம் ஆய்வின் பயனாய் அரிதின் உழைந்து இரண்டாவது பதகமாகக் கொடுத்துள்ளோம். இதற்கான மந்திர முறைகளை ஆன்றோர்பால் கேட்டுணர்க.

மேலும் அமுத நிலைகளால் மகளிர் வயப்படுவர் என்றும் நச்சு நிலைகளைத் தொட்டுப் பழகுவதால் அவர்கள் வயப்படார் என்றும் ஏற்கனவே கூறியுள்ளோம். அதுவன்றி நச்சு நிலைகளைக் கிளர்ச்சியடையச் செய்து கூடுவதால் இன்பத்திற்குப் பதிலாகக் கடும் நோய்கள் ஏற்பட்டு மரணம் வரை ஏற்படலாம் என்பதை அறியவும், அளவும் எச்சரிக்கையும் தேவை. இனி அமுதநிலை, நஞ்சு நிலைப்பதகங்கள் முறையாகத் தரப்படுகின்றன.

பதகம் எண். 70 அமுதநிலைப்பட்சி

| வளர்பிறை திதிகள் அமுத நிலைகள் | வல்லூறு | ஆந்தை | காகம் | கோழி | மயில் | தேய்பிறை திதிகள் அமுத நிலைகள் |
|---|---|---|---|---|---|---|
| பிரதமை பாதம் | காலடி | கணைக் கால் | காலின் மேல் பாகம் | தொடை | முடி | சதுர்த்தசி பாதம் |
| துதியை பரடு | பரடு புறங்கால் | மேற்கெண்டைக்கால் (ஆடுசதை) | முழந்தாள் | தொடை | அல்குல் பெண்குறி | திரயோதசி பரடு |
| திருதியை கணைக்கால் | கணைக் கால் | கெண்டைக் கால் | முழந்தாள் | தொடை | இடை | துவாதசி கணைக்கால் |
| சதுர்த்தி முழந்தாள் இடை | இடை | முதுகு | மேல் முதுகு | பிடரியின் கழுத்து | இருகை | ஏகாதசி முழந்தாள் இடை |
| பஞ்சமி தொடை உந்தி | உந்தி | வயிறு | மார்பு | முலை | அல்குல் | தசமி தொடை உந்தி |
| சஷ்டி நிதம்பம் கீழ் வயிறு | கீழ்வயிறு நிதம்பம் (குறி) | மேல் வயிறு | மார்பு | விலா | இடை | நவமி நிதம்பம் கீழ்வயிறு |
| சத்தமி இடை கீழ்முதுகு | இடை கீழ்முதுகு | மேல் முதுகு | பிடரியின் கழுத்து | விலா | இடை வலஇடப் பக்கங்கள் | அட்டமி இடை கீழ்முதுகு |
| அட்டமி உந்தி வயிறு | தொப்பூழ் வயிறு | மார்பு | முதுகு | விலா (இடது) | விலா வலது | சத்தமி உந்தி வயிறு |
| நவமி வயிறு மார்பு | மார்பு வயிறு | தோள் | உடல் முன்பக்கம் | உடல் பின்பக்கம் | கால் | சஷ்டி வயிறு மார்பு |
| தசமி கை | இருகை | கழுத்து | உடல் பின்பக்கம் | உடல் பின்பக்கம் | தொடை (இரண்டு) | பஞ்சமி கை |
| ஏகாதசி புறங்கை உள்ளங்கை | புறங்கை உள்ளங்கை | முன்கை | முழங்கை | கெண்டைக் கை | தோள் (இரண்டு) | சதுர்த்தி புறங்கை உள்ளங்கை |
| துவாதசி விரல் | சுட்டு விரல் | கட்டை விரல் | நடு நெட்டை விரல் | மோதிர விரல் | சுண்டு விரல் | திருதியை விரல் |
| திரயோதசி கழுத்து | கழுத்து | வாய் | இரு விழிகள் | நெற்றி | கூந்தல் | துதியை கழுத்து |
| சதுர்த்தசி தலை | தலை | முதுகு | இரு கைகள் | உந்தி | இருகால்கள் | பிரதமை தலை |
| பௌர்ணமி தலை | கழுத்து | வாய் | செவி கண் மூக்கு | நெற்றி | கூந்தல் | அமாவாசை தலை |

குறிப்பு: வளர்பிறைக்கு பாதம் முதல் தலை வரை பாதாதி கேசமாகவும், மேல் இருந்து கீழ் பிரதமை முதல் பௌர்ணமி வரையிலும் தேய்பிறைக்கு அதே தலை முதல் பாதம் வரை அமாவாசை முதல் பிரதமை வரை கீழிருந்து மேலாக கேசாதி பாதமாகவும் அமுத நிலைகளை மேற்படி பதகத்தில் கண்டு தெளிக.

## அமுத நிலைகள் நஞ்சு நிலைகள்

பதகம் எண். 71

| சுக்லபட்ச திதிகள் | கிருஷ்ணபட்ச திதிகள் | அமுதநிலைகள் (கலைகள்) | நச்சுநிலைகள் (கலைகள்) |
|---|---|---|---|
| பிரதமை | சதுர்த்தசி | பாதாங்குஷ்டம் | நாபி |
| துதியை | திரயோதசி | பாதங்கள் | இதயம் |
| திருதியை | துவாதசி | கணைக்கால் | முலைகள் |
| சதுர்த்தி | ஏகாதசி | ஆடுசதை (காலின்) | கழுத்து |
| பஞ்சமி | தசமி | தொடை | மூக்கு |
| சஷ்டி | நவமி | குதம் | காது |
| சத்தமி | அட்டமி | நாபி | கட்டைவிரல் |
| அட்டமி | சத்தமி | இதயம் | பாதங்கள் |
| நவமி | சஷ்டி | முலைகள் | கணைக்கால் |
| தசமி | பஞ்சமி | கழுத்து | ஆடுசதைகள் (காலின்) |
| ஏகாதசி | சதுர்த்தி | மூக்கு | தொடை |
| துவாதசி | திருதியை | காது | தொடை |
| திரயோதசி | துதியை | கண்கள் | நாபி |
| சதுர்த்தசி | பிரதமை | நெற்றி | இதயம் |
| பௌர்ணமி | அமாவாசை | தலை | முலைகள் |

# ௨௦. சிந்தனைப்படலம்

பட்சிநூல் புலவனிடம் ஒருவர் யாதானும் ஒரு விஷயம் குறித்து கேள்வி கேட்க வருவானாயின் அப்போது பஞ்சாங்கப்படி அன்று நடக்கும் நட்சத்திரத்தைக் கண்டு தேய்பிறை வளர்பிறைக்கேற்ப அதற்குரிய நட்சத்திரத்தைக் கண்டு அப்போது கிழமை சாமக் கணக்குப்படி அப்போது உதிக்கும் பட்சி (நட்சத்திரப் பட்சி)யின் தொழிலைக் கண்டு அதே சமயம் மற்ற பட்சிகளின் தொழில் ஓங்கியும், அல்லது தாழ்ந்தும், சத்ரு, மித்துருவாக இருக்கும் நிலைகளையும் ஆய்ந்து பார்த்து, வந்தவன் சிந்தனை என்ன கேள்வி என்ன, அவன் மனதில் என்ன எண்ணியுள்ளான். அவன் எண்ணிய காரியம் கூடுமா கூடாதா என்பது போன்ற பல செய்திகளையும் 27 நட்சத்திரங்களுக்கும் கூறுவதால் இது சிந்தனைப் படலம் எனப்பட்டது. இதுவும் தஞ்சைச் சுவடி நூல்கள் ஒன்றிலேனும் இல்லை. ஆதலால் நூல் முழுமை வடிவத்தில் இருக்கவேண்டும் என்பதற்காக "உரோமரிஷி பஞ்சபட்சி" என்ற நூலிலும் மற்ற பிற நூல்களில் இதுகுறித்த "சிந்தனைப் படல" பாடல்களின் அடிப்படையில் செய்திகள் இங்கு உரையுடன் முழுவதுமாகத் தரப்பட்டுள்ளன. பூருவ பக்கத்திற்கும் அமர பக்கத்திற்கும் நட்சத்திரப் பட்சிகள் காகம் தவிர மற்றவை வேறுபடும். எனவே அதற்கேற்பப் பட்சமும் பட்சியும் தொழிலும் அறிந்து பலன் சொல்லவேண்டும்.

இங்கு நட்சத்திரத்தின் பெயரின் இடப்பக்கம் பூருவபட்ச பட்சியும் வலப்பக்கம் அமரப் பட்சியும் பூ - ப, அ - ப என்ற குறிப்பெழுத்துக்கள் மூலம் காட்டப்பட்டுள்ளன. இனி பலனை உற்றுணர்க.

## 1. அசுவினியின் பலன்

பூ - ப வல்லூறு | அ - ப மயில்

### 1. அசுவினி

438. சொல்லுவேன் அசுவினிதான் உதய மானால்
சோர்வான ஜனவரத்தும் பொருள் வரத்தாம்
வெல்வதே நினைத்த பொருள் கைவசமே சேரும்
வெல்லவரும் பகைஞருமோ உறவுவரும் பாரு
நில்லவே சோபனங்கள் கூடுவது திண்ணம்
நினைத்த தொரு சிந்தனைதான் மஞ்சள்நிற மாகும்
பல்லவே பட்சிபகை இல்லா விட்டால்
பலிக்குமடா நாள்எட்டுக் குள்ளே பாரே.

ஒருவன் கேள்வி கேட்கும் போது அசுவினி நட்சத்திரம் உதயமானால், அதிக விருந்தினர், உறவினர் தேடிவருவர். பொருள்வரத்தும் அதிகமாகும். பகை வெல்லும். உறவு பெருகும். நினைத்த சுப காரியம் கூடும். இவன் கருதிய பொருளின் நிறம் மஞ்சளாகும். நட்சத்திரப் பட்சி ஊண் அரசில் இருந்து அந்த சமயம் மற்ற பட்சிகள் வலுவின்றிப் பகையுமில்லாமல் இருந்தால் எட்டு நாட்களில் காரியம் நடக்கும.

439. உள்ளான ஊண்பகையே ஆடுங் காலம்
உத்தமனே விலைதணிந்த பொருளு மாகும்
வெள்ளான கிழங்குவகை என்று சொல்லு
மேதினியிற் பிறர்வருவார் செலவு காணும்
தள்ளான பின்னுதவி சற்றும் இல்லை
சஞ்சலங்கள் மனதிற்குத் தானே தோன்றும்
கொள்ளான இப்பலன்நாள் பதினைந் துக்குள்
குணம்ஆன நன்மைதின்மை கூடும் காணே

ஆரூட நட்சத்திரப்பட்சி தாழ்ந்து மற்ற பட்சி ஊணாகி இருந்தால் நினைத்த பொருள் விலை குறைவானது என்றும் கிழங்கு வகையைச் சேர்ந்தது என்றும் நிறம் வெள்ளை என்றும், பலர் வரவால் செலவு கூடும். பிறர் உதவி கொஞ்சமும் இராது. மனதிற்குக் காரணமில்லாமல் சஞ்சலமுண்டாகும். இதுபோன்ற அசுப பலன்கள் நடக்கும் என்று சொல்லுக.

440. காணுமே அரசுபகை ஆனால் மைந்தா
கைப்பொருளே செலவாகும் வரத்தொன் றில்லை
தோணுமேகிளை ஞர்களிற் சேதம உண்டு
சொற்பெரிய பிரபுபகை ஆகும் பாரு
வேணுமே பெண்டுபிள்ளை பகையும் ஆகும்
வினையில்லாப் பொருள்என்று சொல்லல் ஆகும்
கூணுமே இரண்டுபத்து நாளைக் குள்ளே
அணுகும்அடா இப்பலனை அறிந்த தாமே.

அதே சமயம் மற்ற பட்சிகள் அரசாகிப் பகையானால் இருக்கும் பணமும் கரையும், வரவு எதுவும் இராது. உறவினரால் பொருட்சேதம் ஏற்படும். பெரிய இடத்துப் பகையைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டிவரும். மனைவி மக்கள் பகையாவர். செய்யும் தொழில் அல்லது நினைத்த பொருளால் பயனில்லை. இருபது நாளைக்குள் இப்பலன் தெரியும் என்க.

441. அறிந்துபார் ஊண்அரசு பகையே ஆனால்
அப்பனே நினைத்தபொருள் ஒன்றும் இல்லை
தெரிந்துபார் அப்பொருள்கை வசப்ப டாது
சிக்குவது ஒன்றில்லை சேதம் ஆகும்
சரிந்துபோம் நோய் வரும்பின் பகையு முண்டு
தள்ளிவிடுபலிதம் இலலை என்று சொல்லு
தெரிந்துபோம் மூன்றுபத்து நாளைக் குள்ளே
நிலைதவிரும் நன்மைஎல்லாம் தின்மை ஆமே.

நட்சத்திரப்பட்சி தாழ்ந்து அதே சமயம் ஊணரசு செய்யும் இரண்டு பட்சிகளும் பகையானால் கேள்வி கேட்போன் முக்கியமாக எந்தப் பொருளையும் நினைக்கவில்லை. ஏதாவது வேண்டினாலும் அது வசப்படாது, சேதம் ஆகும். நோய் வரும், பகை உண்டாகும். எதுவும் பலிக்காது. எதுவும் 30 நாட்களுக்குள் இழுக்கடித்துக் காரியம் பயனற்றுப்போகும் என்று அறியவும்.

442. தின்மை ஒன்றும் இல்லையப்பா பகையில் லாவிட்டால்
தினம்ஐந்துக் குள்வரத்து மெத்த உண்டு
நன்மைஎன்றகாரியங்கள் மிகவுங் கூடும்
நடக்குமடா நினைத்ததெல்லாம் நன்றாய்த் தானே
வன்மைஎன்ற தங்கம்என்று சொல்லல் ஆகும்
மனமகிழ்ச்சி சோபனங்கள் திண்ணம் ஆகும்
மென்மைஎன்ற பிரபுஉற வாகும் பாரு
மேன்மைஎன்னால் சொல்லப்போமோ உறவு நன்றே.

அப்படி ஊணாசு பட்சிகள் பகையில்லாவிட்டால் 5 நாளைக்குள் பணம் பண்டம் வரும். சுபகாரியங்கள் நடக்கும். நினைத்ததெல்லாம் நடக்கும். நினைத்த பொருள் தங்கம் ஆகும். மேலும் பல சுபகாரியங்கள் நடக்கும். பெரிய பிரபுவின் நட்பு சேரும். இதன் மேன்மையான சுப பலன்கள் சொல்லுக்கு அடங்காத அளவுக்கு அதிகமாகக் கிடைக்கும் என்பதாம்.

## 2. பரணியின் பலன்

பூ-ப வல்லூறு அ-ப மயில்

பரணி

443. உறவான பரணிதான் உதயம் ஆனால்
உத்தமனே கரும்சிவப்பு நிறமும் ஆகும்
திறம்ஆன நிலங்கள்வரும் உறவு சேர்க்கை
செம்மையுடன் மறுதேசம் போனார் மீள்வர்
கறம்ஆன அரசர்உற வாகும் பாரு
கனத்ததொரு கொர்ப்பம் அது ஆணே ஆகும்
சிரம்ஆன சோபனங்கள் கூடும் நல்ல
செய்திடுமே கேட்கலாகும் தினம்தான் பத்தே.

பரணி உதயமானால் நினைத்த பொருள் கரும் சிவப்பு நிறமாகும். நிலபுலன் சேரும். உறவுச் சேர்க்கை உண்டு.வெளிநாடு சென்றோர் திருப்புவர்.அரசினர் உதவி உண்டு. பெண் கர்ப்பமானால் ஆண் மகவு பெறுவாள். கலியாண சுப காரியங்கள் நடக்கும். இவையெல்லாம் பத்து தினங்களுக்குள் கூடும்.

444. தினம்ஆக உண்பகை ஆகாது பாரு
சிவந்தகருப்பாம் அதுவும்விலை அதிகம் அப்பா
கனமான சோபனத்திற் குலைவுவரும் திண்ணம்
கனத்ததொரு பூமியிலே வருமானம் கொஞ்சம்
இனமாக இருந்தாலும் பகைய தாகும்
இடம்நாடிப் போனவர்கள் இடஞ்சலிலே நிற்பார்
மனமாரப் பேசிவேளைப்பசிப் படைத்தல் இல்லை
வந்திடும்பார் நாள்மூன்று அஞ்சும் ஆமே.

நட்சத்திரப்பட்சி தாழ்ந்து மற்றபட்சி ஊணாகி வலுத்துப்பகையானால் நினைத்த பொருள் செங்கருப்பு, சுப கல்லாண காரிங்களில் தடங்கல் வரும். பெரிய நிலத்தில் சொற்ப வருமானமே கிடைக்கும் உறவினர், நண்பர் பகையாவர். ஒரு காரியகமாக வெளியூர், நாடு சென்றோர் தடங்கல் பட்டு மீளார். பசித்த வேளைக்கு உணவு கிடைக்காது 15 நாளைக்குள் இவை நடக்கும்.

445. அஞ்சாத அரசுபகை யானால் கேளு
அப்பனே நினைத்த பொருள் விலையோ யில்லை
மிஞ்சாத உறவும்யில்லை பொருள்வரத் தில்லை
வேந்தன் உற ஒருநாளும் விரும்புவதில்லை
நஞ்சாகி ஊர்வழியிற் போன பேர்கள்
நன்மையாம் ஒருபோதும் வருவ தில்லை
பஞ்சாகிப் பொருட்சேதம் ஆகும் பாரு
பலன்வருவ திரண்டுபத்து நாள்இ தாமே

நட்சத்திரப்பட்சி தாழ்ந்து அதேசமயம் வேறுபட்சி அரசாகிப் பகையானால் நினைத்த பொருள் விலைக்குக் கிடைக்காது. உறவு பகையாகும்.வருமானம் இராது. அரசு உறவு முறியும். வெளியூர் சென்றவர்கள் மீளமாட்டார்கள், பொருட் சேதமாகும் இந்தப் பலன் பத்து நாளைக்குள் தெரியும்.

446. நாளான ஊண் அரசுபகை இல்லா விட்டால்
நலம்பெறலாம் விலை அதிகம் எல்லாம் சேரும்
தானான சோபனங்கள் கூடும் பின்பு
தரணிதனிற் பிறந்தபிள்ளை தரணி ஆள்வன்
வானான வினைவரு திலலை பாரு
மனமகிழ்ச்சி மெத்தவுண்டு உறவு சேர்க்கை
கோனான நாள் ஏழிற் குணமதாகும்
கூடிவரும் செல்வம் எனக்குறித்து சொல்லே.

நட்சத்திரப்பட்சி தாழ்ந்து மற்ற பட்சிகள் ஊணரசாகிப் பகை இல்லாவிட்டால் நலம் பெறலாம். தான் நினைத்த காரியம் நடக்கும். அதிக லாபத்திற்கு விற்கலாம் கல்யாண சுபகாரியங்கள் இனிது நடக்கும். பிறக்கும் மகன் உலகாள்வான். காரியம் கூடும். வெளியூர் சென்றோர் மீள்வர். மனமகிழ்ச்சியும் உறவு சேர்க்கையும் உண்டு. செல்வம் சேரும். 7 நாளைக்குள் முடிவும் பலனும் தெரியும்.

447. குறித்துநின்ற ஊண் அரசு பகையே ஆனால்
கூடிவரப் போறதில்லை பகையும் உண்டு
கறுத்துநின்ற மனம்போலே வருவ தில்லை
கனவுகண்ட காட்சியைப்போல் ஆகும் பாரு
தரித்துநின்று போனவர்கள் மீள்வ தில்லை
தான்நினைத்த காரியமும் மணம்கூ டாது
மறித்திறந்து போய்விடும்பார் பிறந்த பிள்ளை
மாளுமே நாளைந்துக் குள்ளே பாரே.

நட்சத்திரப்பட்சி தாழ்ந்து மற்ற ஊண் பட்சி அரசுபட்சிகள் இரண்டும் பகையானால் காரியம் கூடாது. பகையாகும். நினைத்தபடி எதுவும் நடக்காது. எல்லாம் வீண் கனவாகும். வெளியூர் சென்றவர்கள் திரும்பி வரமாட்டார்கள். கல்யாண சோபன காரியங்கள் நடவாது. பிரசவமாகும் சிசு இறந்து போகும். இந்த பலன்கள் 5 நாளைக்குள் தெரியும்.

## 3. கார்த்திகையின் பலன்

பூ.ப வல்லூறு அ.ப மயில்

### கார்த்திகை

448 பாரடா கார்த்திகைதான் உதயம் ஆனால்
பண்புடனே நினைத்தபொருள் கரும்பாம் பாரு
தேரடா பெண்பெறுவள் செலவு நேரும்
தேடியதோர் பொருள்வரத்து இல்லை இல்லை
காரடா உடலில்வந்த பிணி தீராது
கனிவான பிரபுஉற வாகா தையா
சேரடா நற்பாம்பு போலே மக்கள்
சிதறுமே நாள்பத்தில் சிதறும் பாரே.

கார்த்திகை நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் கருமை நிறமாகும் பிரசவம் பெண்ணாகப் பிறக்கும், செலவு அதிகமாகும், தேடியபொருள் கிடைக்காது. வந்த நோய் தீராது, பிரபு உதவி பிரதி கூலமாகும், மக்கள் பாம்பைப்போல் சிதறிப் போவார்கள், 10 நாட்களில் இப்பலன்கள் தெரியும்.

449 சிதறுமே ஊண்பகையே ஆகும் காலம்
சிந்தைதனில் நினைத்தபொருள் கல்மண் ஆகும்
பதறுமே உடல்உயிரும் கிளையும் சேதம்
பகைவரும்பார் உண்பதுவும் இல்லை இல்லை
அதிரவே பிறந்தபிள்ளை இறந்து போகும்
அகலவே போனவர்கள் மீள்வ தில்லை
கதறுமே மூவைந்து நாளைக் குள்ளே
கலங்காத மனங்கூடக் கலங்கும் பாரே.

நட்சத்திரப்பட்சி தாழ்ந்து மற்றபட்சி ஊணாகிப் பகையானால் நினைத்த பொருள் மண் ஆகும். உடலும் மனமும் பதறும். பொருள் சேதமாகும். பகைவரும், பசிக்கு உணவு கிடைக்காது. பிறந்த பிள்ளை இறந்துபோம். வெளியூர் சென்றவர்கள் திரும்பமாட்டார்கள். இப்பலன்கள் 15 நாளைக்குள் நேரும்.

450 கலங்குமே அரசுபகை ஆனால் மக்காள்
கருத்திலே நினைத்தபொருள் கரியும் ஆகும்
இலங்குமே ஊர்வழிதான் போன பேர்கள்
இனிவருவ தில்லைஎன்றே இயம்ப லாகும்
மலங்குமே நினைத்தபொருள் கைகூ டாது
மனதிலே துயரம் அல்லால் மகிழ்ச்சி யில்லை
துலங்குமே நாள்எட்டில் பலிதம் ஆகும்
துடியான அரசுபகை யொல்லா தென்னே.

நட்சத்திரப்பட்சி தாழ்ந்து மற்றபட்சி அரசாகிப் பகையானால் நினைத்த பொருள் கரிபோன்ற எரிபொருளாகும். வெளியூர் சென்றவர்கள் மீளார். நினைத்தது கைகூடாது. துயரம் கூடுமே அன்றி மகிழ்ச்சி இராது. இந்தப்பலன் 8 நாளைக்குள் தெரியும்.

451 பொல்லாத ஊண் அரசு பகையே ஆனால்
புந்திதனில் நினைத்தபொருள் பொற்க ரும்பாம்
நில்லாது சோபனங்கள் நேர்வ தில்லை
நினைத்ததொரு காரியமும் வசப்ப டாது
சொல்லாது சொல்லும் அடா உயிரைத் தானும்
கூடிவரல் ஒன்றுமில்லை செலவு மெத்த
எல்லாரும் பகையாவர் நாள்அஞ் சுக்குள்
இனிதான சொல்லும்இல்லை இவன் பிழைப்பரிதே.

நட்சத்திரப்பட்சி தாழ்ந்து மற்ற ஊண் அரசு இருபட்சிகளும் பகையானால் நினைத்த பொருள் செங்கரும்பு நிறம். கல்யாண காரியங்கள் நடவாது, நினைத்தது கூடாது. வார்த்தைக்கு மதிப்பு இராது, வீண் செலவுதான் ஏற்படும். எதுவும் கூடாது, எல்லாரும் பகையாவர். 5 நாளைக்குள் இவை தெரியும்.

452 அரிதான ஊண் அரசுபகை இல்லா விட்டால்
அப்பனே நினைந்ததுதான் விலைஉள்ள கருப்பு
நெறியாகப்போனவர்கள் வருவார் பின்பு
நேரமஇல்லை மனதிற்குத் துயரம் இல்லை
குறியான மனம்கூடும் குலைவனமும் ஆகும்
கூடியிருப்பார் பின்பு பிரிந்து போவார்
அரியான நாள்ஐந்திற் பலிதம் ஆகும்
தாம்நினைத்த படிஅவர்க்கு முடியாது பாரே.

மற்ற பட்சிகள் ஊணரசு ஆகிப் பகை இல்லாவிட்டால் நினைத்தது நல்ல கருப்பு நிறம். வெளியூர் சென்றவர் திரும்புவர். மனத்துயர் இல்லை. நினைத்தது நடக்கும், பிரிந்தவர் கூடுவர். 5 நாட்களுக்குள் இந்த நற்பலன்கள் நடக்கும்.

## 4. ரோகிணியின் பலன்

பூ.ப வல்லூறு அ.ப மயில்

ரோகிணி

453 முடியுமே உரோகணிதான் உதயம் ஆனால்
முழுமனதாய் நினைத்தபொருள் வெள்ளைப்பூவாம்
கடியான மணம்செய்ய நன்மை ஆகும்
கடைதேறப் போனவர்கள் வருவார் இப்போ
வடிவாகப் போனதுவும் கைவசமே ஆகும்
மனத்துயரம் என்னளவும் வருவ தில்லை
படிவாக நாள்ஏழில் நினைத்த தெல்லாம்
பலன்கூடும் சொல்கேட்க ஓலைவரும் பாரே.

உரோஹிணி நட்சத்திரம் உதயமானால் நினைத்தது வெள்ளைப் பூவாம். திருமணம் நன்கு முடியும். வெளியூர் சென்றவர் வருவர். களவுபோனது கிடைக்கும். மனத்துயர் தீரும். தீமை இராது ஏழு நாளில் நினைத்த பலன் நடக்கும்.

454. ஓலைவரும் ஊண்பகையாய் இருந்தால் ஐயா
உளம்நினைத்த பொருள் அதுதான் அழுக்குள் வேளை
சாலைவரும் மணம்கூடும் உறவு சேரும்
தனிவழக்கு உண்டாகும் சலனம் இல்லை
காலைவரு திரேகத்திற் பீடை யுண்டு
கரிந்தபலன் இல்லையென்று கருதலாகும்
மாலைவரும் பெண்பெறுவள் பயமும் கொஞ்சம்
மனதிற்கு சந்தோஷம் இல்லை தானே.

நட்சத்திரப்பட்சி தாழ்ந்து மற்றபட்சி ஊணாகி வலுத்த பகையானால் நினைத்த பொருள் அழுக்கு வெள்ளை நிறம். திருமணம் கூடும். உறவு சேரும். தனிவழக்கு உண்டாகும். ஆனால் பயம் இல்லை. தேகத்தில் பீடை உண்டு நினைத்த காரியம் நடவாது. கர்ப்பவதி பெண் பெறுவாள், பயம் உண்டு. சந்தோஷம் இல்லை. இதன் பலன் 7 நாளில் தெரியும்.

455. இல்லையடா அரசுபகை யிருந்தால் ஐயம்
இருதயத்தில் நினைத்தபொருள் கறுத்து வெள்ளை
தொல்லைஅடா கூடிவரப் போற தில்லை
துன்பவினை சூழ்ந்துகொண்டு துயரம் செய்யும்
கல்லைஅடா பொருட்சேதம் ஆகும் பாரு
கனிவான உறவில்லை பகைஉண் டாச்சு
சள்ளைஅடா அரசுபகை பொல்லா தப்பா
தனில்ஒன்றும் வருவதில்லை சடம தேமே.

நட்சத்திரப்பட்சி தாழ்ந்து மற்ற பட்சி அரசு மற்றும் பகையானால் நினைத்த பொருள் கரு வெள்ளை. வெளியூர் சென்றவர் மீளார். துன்பம் துயரம் உண்டாகும். பொருட்சேதமுண்டு. உறவு இராது. பகை சேரும். இதனால் துன்பமே, எதுவும் பயனில்லை என்பதாம்.

456. நோவாகும் ஊண்அரசு பகையே ஆனால்
நொய்யமனம் நினைத்தபொருள் கரியே ஆகும்
மாவாகும் பலன்ஒன்றும் இல்லை அப்பா
வந்தவினை தீராது பழியே செய்யும்
தேவாகும் மனுஉதவி சற்றும் இல்லை
ஜெடம்அலைந்து போவதல்லால் பலன் உண்டோசொல்
சாவாகும் பகைத்தபேர் வெல்லார் இப்போ
கண்டபடி நான் உரைத்தேன் கருதிக் கேளே.

நட்சத்திரப்பட்சி தாழ்ந்து மற்ற பட்சிகள் ஊண் அரசாகிப் பகையும் ஆனால் நினைத்த பொருள் கரியாகும். பயனில்லை. காரியம் கூடாது. வீண்பழி நேரும். பிறர் உதவி சற்றும் இராது, வீண் அலைச்சலே அன்றிப் பயன் இல்லை. இதனாலும் பயனில்லை என்பதாகும்.

457. கருதிக்கேள் ஊண் அரசு பகையில்லா விட்டால்
கனிவாகநினைத்தபொருள் விலைபெற்ற வெள்ளை
கருதிக்கேள் மணம் செய்ய நன்மை ஆகும்
துலைதூரம் போனவரும் வந்து சேர்வார்
பருதிக்கேள் போனபொருள் வந்துசேரும்
பகைஇல்லை உறவாகும் உட்பகையும் போச்சு
சருவிக்கேள் நாள்ஏழிற் பலிதம் ஆகும்
தான்நினைத்த படிமுடியும் தப்பா தென்னே.

நட்சத்திரப்பட்சி தாழ்ந்து மற்ற பட்சிகள் ஊண் அரசு செய்து நட்புமானால் நினைத்த பொருள் விலையுயர்ந்தது, வெள்ளையாகும் மணம் கூடும். வெளியூர் சென்றவர் மீள்வர். பொன்பொருள் கூடும். பகை இராது எல்லாம் உறவாகும். 7 நாளில் நினைத்த நல்ல பலன்கள் இனிது நடக்கும்.

## 5. மிருகசீரிடத்தின் பலன்

பூ - ப வல்லூறு | அ - ப மயில்

மிருகசீரிஷம்

458. தப்பாத மிருகசீரம் உதித்த தானால்
தான்நினைத்த பொருள்இலையின் பச்சை ஆகும்
ஒப்பாது நினைத்தபடி முடியா தப்பா
ஊர்வழிப் போனவர்கள் சஞ்சலத்தால் மாய்வர்
அப்பாலும் மணம்இல்லை ஊண்பகையே யானால்
அதனாலும் வரும்என்ற பலன்ஒன் றில்லை
செப்பாத நாள்பத்தில் தீமைவருந் திண்ணம்
ஜெயமாக மாட்டாது எல்லாம் தீதே

மிருகசீரிடம் உதயமானால் நினைத்தபொருள் பச்சை நிறமாகும். எண்ணிய எண்ணம் கூடாது. ஊர் வழிப் போனார் மீளார். சஞ்சலத்தால் அவர்களுக்கு இறப்பு நேரலாம்.

இதேசமயம் மற்றபட்சி ஊண் ஆகி,பகையானால்(நட்சத்திரப்பட்சி நடை துயில் சாவானால்) அதனால் பலன் எதுவும் இல்லை. காரியம் வெற்றியாகாது. 10 நாளில் தீமையுண்டாகும்.

459. தீதென்ற அரசுபகை இருந்த தானால்
ஜெயமாகப் போறதில்லை வரத்து இல்லை
தூதென்ற ஓலைவரும் பொருட்சே தமாகும்
தூரமுமே கூடிவிளை யாடும் பாரு
வாதென்ற இருவர்பகை இல்லா விட்டால்
மனத்துயரம் வெகுகொடுமை இல்லை இல்லை
தானென்ற நாள்பத்தில் பலனைக் காட்டும்
தப்பாது நன்மைஇல்லை தின்மை ஆமே.

நட்சத்திரப்பட்சி தாழ்ந்து மற்றபட்சி அரசாகி பகையானால் வெற்றி இல்லை. கெட்ட செய்தி வரும். பொருட் சேதமாகும்.

பகைபட்சி எதுவும் இல்லாவிட்டால் கொடுமை இல்லை. 10 நாளில் சுமுக பலன் உண்டு. நன்மை தீமை இரண்டுமற்ற நிலைதான் கடைசி பட்சப் பலனாகும்.

## 6. திருவாதிரையின் பலன்

பூ.ப ஆந்தை அ.ப கோழி

### திருவாதிரை

460 தின்மையென்ற சொல்இல்லை ஆதி ரைக்குச்
சித்தைதனில் நினைத்தபொருள் நீல வர்ணம்
வன்மையென்ற பொருளதுகை வசமே ஆகும்
மக்களே ஊண்பகைதான் இருக்கொண் ணாது
தன்மையென்ற ஊர்பயணம் போன பேர்கள்
சடுதியிலே வருவதில்லை அரசுபகை ஆனால்
உண்மையென்ற பொருட்சேதம் உறவுபகை யாகும்
உத்தமனே இருவர்பகை இருக்கொண் ணாதே.

திருவாதிரை நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் நீல நிறமாகும் எதிர் பார்த்தபொருள் கைவசமாகும்.

461 எண்ணாத ஊண்அரசு மித்துருவாய் நின்றால்
உத்தமனே வருமானம் என்ன சொல்வேன்
தன்னாலே கூடிவரும் உறவு சேரும்
தன்மைஉடன் பின்புஉப கார மாகும்
சொன்னாரே பிறதேசம் போக நன்று
கொடுத்துமணம் செய்யநன்று சோபனங்கள் கூடும்
எண்ணாதே பிடையில்லை நன்மை உண்டு
எடுத்ததொரு காரியங்கள் பலிதம் ஆமே.

நட்சத்திரப்பட்சி தாழ்ந்து மற்றபட்சி ஊண் பகையானால் ஊர்ப் பயணம் சென்றவர்கள் மீளார். இதேபோல் அரசு பட்சி பகையானால் பொருட்தேசம் உண்டு' உறவு பகையாகும். ஆனால் ஊண் அரசு பட்சிகள் மித்துரு ஆனால் வருமானம் கூடும்' நல்ல உறவுகள் பெருகும். உடன் பிறப்பால் நன்மை, பயணந்தால் அனுகூலம் திருமணம் முதலிய மங்கல காரியங்கள் நடக்கும் பீடை இல்லை. நன்மை உண்டு' எடுத்த முயற்சிகள் எல்லாம் கைகூடும என்பதாகும்.

## 7. புனர் பூசத்தின் பலன்

அ.ப ஆந்தை பூ.ப கோழி

### புனர் பூசம்

462 பலிதமடா புனர்பூசம் சேர்க்க உண்டு
பண்புடனே நினைத்தபொருள் சிவப்ப தாகும்
வலிதமடா ஊர்வழிதான் போன பேர்கள்
வருவார்கள் பொருளுடனே மணமுங் கூடி
கலிதமடா ஊண்பகையாம் இருக்கொண் ணாது
கனிவான வருமானம் கால்வரிசை குறையும்
வலிதமடா அரசுபகை ஆகும் போது
நாடிவரும் பொருள்உடைமை நஷ்டம் ஆமே.

புனர்பூச நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் சிவப்பாகும். ஊர் வழிப்போனவர்கள் வருவார்கள். பொருள் சேரும், திருமணம் கூடும். இந்தபட்சி தாழ்ந்து மற்றபட்சி ஊண் பகையானால் வருமானம் கால்பாகம் குறையும். அரசுப் பகையானால் நமக்கு வரவேண்டிய பொருள் நஷ்டமாகும்,

463 நஷ்டமஇல்லை ஊண் அரசு பகைஇல்லா விட்டால்
நலமான காரியஙகள் முடியும் பாரு
தொட்டதெல்லாம் கூடிவரும் மங்களங்கள் கூடும்
தூரத்தின்ஓலைவரும் சுக மதாக
வட்டமுலைமாதுதுணை உண்டு பாரு
மக்களே சிவ்கலையால் வந்துகூடும்
இட்டமுடன்நாள் அதுதான் இருப துக்குள்
இசைந்துவரும் நிலம்கொள்ள இனிதாம் பாரே.

ஆனால் ஊண் அரசு மற்ற பட்சிகள்பகை இல்லாவிட்டால் நல்ல காரியங்கள் கை கூடும், தொட்டதெல்லாம் பொன்னாகும், கல்யாணம் சுபகாரியங்கள் கைகூடும். தூரச் செய்தி சுபமானதாக வரும். ஸ்திரி சுகம் (புதிதாக) உண்டாகும் நல்ல ஆண் குழந்தை பிறக்கும். இருபது நாளைக்குள் நல்ல செய்தி கிடைக்கும்.

## 8 பூசம் நட்சத்திரப் பலன்

பூ.ப ஆந்தை அ ப கோழி

### பூசம்

464 இனிதான பூசம்அது உதயம் ஆனால்
இருதயத்தில் நினைத்தபொருள் கறுத்த வெள்ளை
கனிவான சல்லியமும் சிலுக்கும் உண்டு
களவாகப் போனபொருள் கைவசப் படாது
தனியான ஊண்பகைதான் மிகுந்த சல்லியம்
தன்மையுள்ள அரசுபகை ஆகா தையா
துனிவான இருவர்பகை மோசம் மோசம்
தொட்டதொன்றும் வாழ்வதில்லை துயரம் தானே

பூச நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் கறுத்த வெள்ளையாகும். சண்டையும் தொல்லையும் உண்டு. களவுபோன பொருள் மீளாது. இதேநேரம் மற்ற பட்சி ஊண் பகையானால் தனக்குப் பகை வளரவும் நேரும். தொட்ட காரியம் எதுவும் துலங்காது.

465 துயரமதுஊண் அரசுபகை இல்லா விட்டால்
சோரமாய்ப் போனபொருள் பாதி காணும்
பயிரதுவும் மணங்கூடும் அலைச்சல் ஆகும்
பகைஉறவு நெடுநாளாய் இருக்காதையா
வயிரமுடன் பிறமனுஷர் வருவார் இப்போ
வந்ததினால் பொருட்சேதம் உறவுபகை ஆகும
கயில் அதுதான் நான்ஐந்திற் பலனைக் காட்டும்
கலங்கும்அடா துயரத்தால் கலகம் ஆமே.

மற்றபட்சி ஊண் அரசாகிப் பகை இல்லாவிட்டால் களவு போனபொருள் பாதி மீளும் பயிர் விளைச்சல் அதிகமாகும். பகை உறவு இரண்டும் நீடிக்காது. எதிர் பார்த்தவர் வெளியூர் சென்றவர் திரும்பி வருவார் திரும்பி வருவர். சிறிது பொருட் சேதம் உண்டு. எந்தப்பலனும் ஐந்து நாளில் கைகூடும் ஆனால் துயரமும் உண்டாகும்.

## 9. ஆயில்யம் நட்சத்திரப் பலன்

பூ.ப ஆந்தை அ.ப கோழி

### ஆயில்யம்

466. கலகபடா ஆயிலியம் கண்ட போதே
கருத்திலே நினைத்தபொருள் கரிசல் வெள்ளை
விலகும் அடா போனவுயிர் திரும்புவதே இல்லை
மேதினியில் நோவுகொண்டார் எழுந்திருப்ப தில்லை
இலகும்ஒரு சோபனங்கள் கூடுவது போல்
இருக்கும் அடா ஒருபோது நடப்ப தில்லை
சிலகுணதாம் ஊண்பகைதான் இருந்தால் மோசம்
சிந்தித்தபடி நடப்ப தில்லை தானே.

ஆயில்ய நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் கரிசல் வெள்ளையாகும். பிணி கொண்டார் இறப்பர். வெளியூர் சென்றார் மீளார். மங்கள கல்யாண காரியங்கள் நடப்பதுபோல் தோன்றினாலும் தட்டிப் போகும் நடைபெறாது.

467. இல்லையென் றோம்ஊண் அரசு பகைஇல்லா விட்டால்
இருதயத்தில் நினைத்தபொருள் பலிக்கும் கொஞ்சம்
கொல்லையென்று பயிர்செய்தால் பலன்உண் டாகும்
கோதையரை மணம்செய்யில் வாழ்வ தில்லை
தொல்என்று ஒருபொழுதும் செயவொ ணாது
தொட்டதெல்லாம் கூடிவர மாட்டா தையா
எல்லைஎன்ற நாள்இருபத் தைந்துக் குள்ளே
இப்பலனைக் கண்டவர்தான் ஏங்கு வாரே

இதே சமயம் இப்பட்சி தாழ்ந்து மற்ற பட்சி ஓங்கி ஊண் பகையானால் மேற் சொன்ன கெட்ட பலன்கள் இன்னும் மோசமாய் நடக்கும். நினைத்த காரியம் எதுவும் கைகூடாது.

மற்றபட்சி ஊண் அரசாகிப் பகை இல்லா விட்டால் நினைத்த காரியம் அறை குறையாய் நிறைவேறும். பயிர் விளைச்சல் பயன் உண்டாகும். ஆனால் பெண்ணை மனஞ்செய்தால் அவள் வாழா வெட்டியாவாள்.

## 10. மகம் நட்சத்திரப் பலன்

பூ.ப ஆந்தை அ.ப கோழி

### மகம்

468. எங்காதே மகமதுதான் உதயம் ஆனால்
என்மகனே நினைத்தபொருள் கைவசமே ஆகும்
தப்பாமல் நீசொன்ன படியே யப்பா
தப்பாமல் போனபேர் வருவார் இப்போ
பாங்கினைத்தான் கொள்வதற்குப் பலன்உண் டாகும்
பாகமுடன் மணம்செய்ய வின்மை யாகும்
தூங்காதே ஊண்பகைதான் ஆகா தையா
சொல்லொண்ணா தரசுபகை கூடாது பாரே.

மகநட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் கைகூடும் தான் சொன்னது சொன்னபடி நடக்கும். அதேசமயம் மற்றபட்சி ஊண் அல்லது அரசு பகையானால் எல்லாக் காரியமும் கெடும்.

469. கூடாதஊண் அரசுபகை இல்லா விட்டால்
கொண்டுசெல்ல வுறவுபகை யாவ தில்லை
தேடாது நினைத்தபொருள் கைவசமே ஆகும்
தேசத்திற் போனவர்கள் ஜெயமாக வாழ்வார்
நாடாது மணம்செய்ய நன்மை யாகும்
நடத்துமொரு பிறர்வுதவி அதிக மாகும்
வாடாது நாள்பத்தில் பலன்கை கூடும்
வண்மையுள்ள மாதர்உற வாகும் பாரே.

ஊண் அரசு பகை இல்லாவிட்டால் உறவு பகையாகாது. நினைத்த பொருள் கைகூடும். காரியம் வெற்றியாகும். வெளியூர் சென்றவர் அங்கு நன்றாக வாழ்வர் திருமணம் நல்லபடி கூடும். பிறர் உதவி 10 நாட்களுக்குள் நல்லபடி கிடைக்கும் நல்ல பலன்கள் சித்திக்கும்

## 11. பூர நட்சத்திரப்பலன்

பூ.ப ஆந்தை அ.ப கோழி

### பூரம்

470. பாரடா பூரமது உதயம் ஆனால்
பண்புடனே நினைத்தபொருள் பசியா பச்சை
நேரடா ஊர்ப்பயணம் போன பேர்கள்
நேசமாய் வருவதில்லை மணமும் இல்லை
தேரடா பொருள்உடைமை சேர்வ தில்லை
திடமான சொல்இல்லை உறவும் இல்லை
ஆரடா ஊண்பகையே ஆகும் காலம்
அப்பனே கூடுவது அரிது தானே.

471 அரிதான அரசுபகை ஆகும் காலம்
அன்புடனே நினைத்தபொருள் கைகூடாது
நெறியான ஊண் அரசுபகை இல்லா விட்டால்
நினைவிலே நினைத்தபொருள் சிறிது கூடும்
வறிதான உயிர்சேதம் வருமே அப்பா
மணம்இல்லை வுறவில்லை மகிழ்ச்சி இல்லை
எரியான நாள்இதற்கு முப்ப துக்குள்
எண்ணியதோர் பீடையது விலகும் பாரே.

பூர நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் பச்சையாகும். வெளியூர் பயணம் சென்றவர்கள் யாரும் மீள்வதில்லை. திருமணச் சுபகாரியங்கள் கூடாது பொருள் சொத்து சேராது. சொல்லுக்கு நாணயம் மதிப்பு இராது. உறவும் பகையாகும்.இதே சமயம் மற்ற பட்சி ஊண் ஆகி வலுத்துப் பகையில்லாவிட்டால் நினைத்த காரியம் அறை குறையாய் முடியும். உயிர்சேதம் உண்டு, திருமணம் எதுவும் கூடாது. அரசுபட்சி பகையானால் நினைத்தது கூடாது. எந்தப் பலனும் 30 நாளைக்குள் நடக்கும், பீடை அதற்கு மேல் விலகும்.

## 12. உத்திர ட்சத்திரப் பலன்

பூ.ப காகம் அ.ப காகம்

### உத்திரம்

472 விலகுமே உத்திரம்தான் உதயம் ஆனால்
வினவுபொருள் கருஞ்சிவப்பு விரைவித் தாகும்
பலகுமே போனபொருள் அசதியிற் காணும்
பழகினபேர் வருவார்கள் பகைவுற வாகும்
இலகுமே சம்பந்தம் கூடும் பாரு
என்னசொல்வேன் ஊண்பகைதான் இருக்கொண் ணாது
அலகில்லா அரசுபகை இருந்தால் ஐயா
அப்பனே சஞ்சலத்தில் அழுந்து வானே

உத்திர நட்சத்திரம் உதயமானால் மனதில் நினைத்த பொருள் கருஞ்சிவப்பாகும். கைவிட்டுப்போன பொருள் எதிர்பாராமல் கிடைக்கும் பகை உறவாகும் திருமணம் கூடும். அரசு பட்சி பகையானாலும் ஊண்பட்சி பகையானாலும் கேள்வி கேட்டவன் சஞ்சலத்திலும் துன்பத்திலும் அழுந்திவிடுவான்.

473 அழுந்துவானோ ஊண் அரசுபகை இல்லா விட்டால்
அசதியால் போனபோருள் அடுத்தவரால் வருகும்
எழுந்துதான் ஊர்ப்பயணம் போன பேர்கள்
எண்ணிய தோர் கருமமுடன் பொருட்சே தமாக
கொழுந்தரநீ நினைந்தபடி முடியா தையா
கோதையராற் கல்லியமாய்க் கோபமுடன் வருவார்
நுழைந்தாகும் மூவைந்து நாளையிலே பலிதம்
நொந்துமனம் புண்ணாகி இடைஞ்சல் வரும்பாரே.

அப்படி மற்ற பட்சி ஊண் அரசாகிப் பகையும் இல்லாவிட்டால் கைவிட்டுப் போனபொருள் பிறர் உதவியால் மீளும் ஆனால், வெளியூர் போனவர்களுக்குச் சிரமமும் பொருட்சேதமும் உண்டாகும். நினைத்த எண்ணமும் பொருளும் கூடாது. பெண்களால் கலகமும் துக்கமும் உண்டாகும். மனம் நொந்துப் புண்ணாகும். 15 நாளைக்குள் இப்பலன் தெரியவரும்.

## 13. ஹஸ்த நட்சத்திரப் பலன்

பூ.ப காகம் அ.ப காகம்

அஸ்தம்

474 வருமான காரியங்கள் அஸ்த மாகில்
மனதிலே நினைத்தபொருள் பலனிறமும் ஆகும்
உருவானபிறசேதம் போனபேர்கள்
உண்மையுடன் கூடி வருவார் பாரு
தருவான பொருட்சேதம் களவு போகும்
தப்பாமல் ஊண்பகைய தாகும் ஆகில்
நருவான போனபொருள் வருவ தில்லை
சண்டாளர் அரசுபகை ஆகாது பாரே.

அஸ்த நட்சத்திரமுதயமானால் நினைத்த பொருள் பலவண்ணமுள்ளதாகும். வெளியூர் போனவர்கள் மகிழ்வுடன் மீள்வார்கள், திருமணம். கூடும். ஆனால் பொருட் சேதமும் களவும் நேரும் மற்றபட்சி ஊணாகிப் பகையானால் கைவிட்டுப் போன பொருள் திருப்பாது. அதேபோல் மற்றபட்சி அரசாகிப் பகையானால் மேலும் கெட்ட பலன் உண்டாகும்.

475 ஆகாதுஊண் அரசுபகை இல்லா விட்டால்
அப்பனே பொருள்கூடும் திண்ணம் ஆக
ஏகாதமனம் வாழ்வ தில்லை யப்பா
எடுத்ததொரு காரியமும் நேர்வ தில்லை
போகாதே சஞ்சலமாய் இருந்த பேர்கள்
புனிதமுடன் எழுந்திருந்து வாழ்வ தில்லை
நோகாதே எழுஞ்சி நாளைக்குள்ளே
துவலும்இந்த பலன்கள்எல்லாம் நேரும் பாரே.

ஆனால் மற்றபட்சி அரசாகிப் பகை இல்லாவிட்டால் பொருள் சேரும், ஆனால் போனவர்கள் திருப்பமாட்டார்கள். முயற்சியும் வெற்றி பெறாது. மனச்சஞ்சலம் உண்டாகும். இந்த பலன்களெல்லாம். 35 நாளைக்குள் தெரியவரும்.

## 14. சித்திரை நட்சத்திரப் பலன்

பூ.ப காகம் அ.ப காகம்

சித்திரை

476 நேர்ந்துதான் சித்திரைதான் உதய மானால்
நினைத்தபொருள் சிகப்புவெள்ளை மஞ்ச ளாகும்
கூர்ந்துபார் நினைத்தபொருள்வருவ தில்லை
கொடுத்திடுமே சிலுக்குசண்டை மனம்கூ டாது
சார்ந்துபார் ஊண் அரசு பகையே யானால்
தப்பாது பொருட்சேதம் உயிரும் சேதம்
கூர்ந்துபார் இருவ ருடப் பகைஇல்லா விட்டால்
கூடுவமும் குறைவதுவும் இல்லை தானே.

477, இல்லையே பொருளுடைமை வருவ தில்லை
எதிர்த்ததனால் ஜெயமாகப் போற தில்லை

தொல்லையே அனுசரித்து சஞ்சலங் களாகி
தொல்புவியிற் சொல்குறைச்சல் பெருண் டாகி

சள்ளையே மனுஉதவி இல்லா மல்தான்
சஞ்சலத்தால் வெகுதூரம் வந்து சேரும்

கொள்ளையே நாலுபத்து நாளைக் குள்ளே
கூடிவரப் போரதில்லை குணத்தைப் பாரே.

சித்திரை நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் சிவப்பு வெள்ளை மஞ்சள் ஆகிய நிறங்களாம். தான் எண்ணிய பொருள் வராது. சில்லறைச் சண்டைகள் தொல்லைகள் உண்டாகும் இதேசமயம் மற்ற பட்சிகள் ஊணரசாகிப் பகையானால் பொருட்சேதம் உயிர்ச்சேதம் இவை உண்டாகும். அப்படி மற்ற பட்சிகள் ஊணரசாகி பகையும் இல்லாவிட்டால் நன்மை தீமை இரண்டுமில்லாமல் நடக்கும் பொருள் போனதுவராது. மாற்றானுடன் எதிர்த்தாலும் வெற்றி பெறாது. சஞ்சலம் கூடும். வார்த்தைக்கு மதிப்பு இராது. பிறர் உதவி இராது. வெகுதூரம் அலைச்சல் உண்டாகும். 40 நாளைக்குள் இப்பலன்கள் உண்டாகும்.

## 15. சுவாதி நட்சத்திரப்பலன்

பூ.ப காகம் அ.ப காகம்

### 15. சுவாதி

478, குணத்தைப்பார் சுவாதிதான் உதய மானால்
கூடுதன்னில் நினைத்தபொருள் தங்கம் தங்கம்

மணத்தைப்பார் ஊர்வழியிற் போன பேர்கள்
மனமகிழ்ச்சி மெத்தவுண்டு மங்களம் கூடும்

இனத்தைப்பார் ஆண்குழந்தை பிறக்கும் என்றும்
எண்ணியதோர் கருமம்எல்லாம் கைவசமே யாகும்

கனத்தைப்பார் ஊண்அரசு பகைஆ காது
தான்நினைத்த படிஅங்கே முடியாது பாரே.

சுவாதி நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் தங்கம் அல்லது தங்க நிறமாகும். ஊர் வழிப்போனவர்கள் திரும்பிவிடுவார்கள். மன மகிழ்ச்சியும் சுப காரியங்களும் கூடும். கர்ப்பவதி ஆண் குழந்தை பெறுவாள். நினைத்த காரியம் முடியும். அதேசமயம் மற்ற பட்சி வலுத்து ஊணரசாகிப் பகையானால் நினைத்த காரியம் நடவாது.

479, முடியாதே ஊண்அரசு பகைஇல்லாவிட்டால்
மொய்குழலாள் பூமடந்தை கிருபை யாலே

படியாதே நினைத்ததெல்லாம் கைவசமே யாகும்
பசுமையுள்ள பொருள்கூடும் உறவு மாகும்

கடியான சோபனங்கள் கூடும் பாரு
கடல்கவிழ்ந்த பொருள்கூடும் கவலை யில்லை

வடிவான ஈரைந்து நாளைக் குள்ளே
மக்களே கூடிவரும் மகிழ்ந்து பாரே.

அப்படி ஊண் அரசில் இருக்கும் பட்சி பகை இல்லாவிட்டால் தெய்வ கிருபையால் நினைத்ததெல்லாம் கைகூடும். கிடைக்கும். பசுமை நிறமுள்ள பொருள் கைவசமாகும். பகை உறவாகும். மங்கள சுபகாரியங்கள் நடக்கும். கடலில் கவிழ்ந்த பொருளும் கிடைக்கும். கவலை இல்லை. 10 நாளைக்குள் காரியம் கூடும். பலன் தெரியும்.

## 16 விசாக நட்சத்திரப் பலன்

பூ-ப காகம் அ-ப காகம்

### விசாகம்

480. மகிழ்ந்துபார் விசாகமங்கே உதய மானால்
மனதிலே நினைத்தபொருள் கசப்புள்ள வர்க்கம்
நிகழ்ந்துபார் போனபொருள் தாமசமே யாகும்
நேரான சோபனங்கள் கூடுவதும் இல்லை
நகந்துபார் ஊண்பகையாய் இல்லா விட்டால்
நன்மை துன்மை இரண்டும்உண்டு நயந்து பாரு
தகர்ந்துபார் அரசுபகை யாக நின்றால்
தப்பாது தீமையென்று தான்சொல்வாயே.

விசாக நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் கசப்பு வகையாம். கைவிட்டுப் போனபொருள் மீளத் தாமதமாகும். மங்கள கல்யாண காரியங்கள் கூடாது.

481. சொல்லாதஊண் அரசுபகை இல்லா விட்டால்
சொன்னபடி தப்பாது நோயில் மாய்வான்
நில்லாமல் வெகுதுயரம் பட்டுத் தேறி
நேர்மையுள்ள காலன்வரும் என்று சொல்லு
பொல்லாத நேரமென்று சொல்லு வார்கள்
புதுமையுள்ள கருத்தறிந்த காலம் பாரார்
எல்லாரும் பகையாகும் நாலைந் துக்குள்
இதுபலனைக் கண்டறிந்து இயம்பு வாயே.

அதேசமயம் மற்றபட்சி ஊணாகி பகை இல்லாவிட்டால் நலம் தீங்கு இரண்டுங் கெட்ட நிலையாகும். இதுவே அரசுபட்சி பகையானால் எப்பொழுதும் தீமைதான் நேரும்.

## 17. அனுஷ நட்சத்திரப் பலன்

பூ. ப-கோழி அ-ப ஆந்தை

48 . இயம்புவாய் அனுடமங்கே உதய மானால்
யெண்ணியதோர் பொருள்வெள்ளி யென்று சொல்லு
நம்பியே ஊணதுவும் பகையே யானால்
நலமில்லை கருக்கள்வெள்ளி என்று சொல்லி
புலம்பிய ஊணரசு பகையே ஆனால்
படிகமென்ற பீங்கானும் பதிவாய்ச் சொல்லு
துயர்மியே ஊணரசு பகையில்லா விட்டால்
தூய்யவெள்ளி யென்றுசொல்லி துணிந்து பாரே.

அனுஷ - நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் வெள்ளியாகும். அதே சமயம் மற்றபட்சி ஊண் பகையானால் நினைத்த பொருள் தரம் குறைந்த வெள்ளி யாகும். ஊண் அரசு இரண்டும் பகையானால் நினைத்த பொருள் பீங்கான் அல்லது படிகம் ஆகும். ஆனால் ஊண் அரசு இருபட்சிகளும் பகை இல்லையானால் நினைத்த பொருள் தூய வெள்ளி என்றறியவும், இதனால் வரவேண்டிய நிலுவைப் பொருள் வசூலாகும்.

483. துணிந்துபார் பொருளு டைமை கூடிவரும் போது
துணையானசோபனங்கள் நடக்கும் பாரு
அணிந்துபார் பிறதேசம் போன பேர்கள்
ஆள்மோசம் வராமல் வருவார் யிப்போ
துணிந்துபார் சடலத்தில் நோயோ இல்லைதான்
நினைத்தபடி முடியும் தப்பா தப்பா
குயம்பியே மூணுபத்து நாளுக் குள்ளே
குணமாகக் கூடிவரும் அறிந்து பாரே.

சுபமங்கள கல்யாண காரியங்கள் கூடும். வெளிநாடு, ஊர் சென்றவர்கள் சுகமுடன் திரும்புவர். உடலில் நோய் இராது. எண்ணிய எண்ணம் கூடும். 30 நாளைக்குள் இப்பலன்கள் தெரியும் என்பதாம்.

## 18. கேட்டை நட்சத்திரப் பலன்

பூ - ப கோழி அ - ப ஆந்தை

### கேட்டை

484. அறிவதுதான் கேட்டைஅங்கே உதயம் ஆனால்
அப்பனே நினைத்ததுபித் தளையும் நாறல்
எரிவதுதான் ஊண்பகை ஆகும். ஆகல்
என்னசொல்வேன் அப்பிரகம் என்று சொல்லி
சரியதுதான் அரசுபகை யாக நின்றால்
தப்பாது மஞ்சள்நிற மானஒரு
முறிவதுதான் ஊண் அரசுபகை இல்லாவிட்டால்
மொழிந்தபொருள்சொன்னது போற் சொல்லுவாயே.

கேட்டை நட்சத்திரம் உதயமானால் எண்ணிய பொருள் பித்தளையாகும். அதே சமயம் வலுத்த பட்சி ஊண் பகையானால் எண்ணிய பொருள் அபிரகம் ஆகும். அரசு பட்சி பகையானால் நினைத்த பொருள் மஞ்சள் நிற ஓடு ஆகும். ஊணரசு மற்ற பட்சி பகை இல்லாவிட்டால் முன் சொன்ன பித்தளையே எண்ணிய பொருளாகும்.

485. சொல்லுவாய் நினைத்தபொருள் கூடுவது இல்லை
சுகமான வனம்இல்லை உறவும் இல்லை
மல்லதுவாய் போனபொருள் வாரா தப்பா
மறுதேசம் போனவர்கள் வந்துறவும் இல்லை
கொல்லுவது திண்ணம்என்று நின்றநிலை பார்த்து
குறிகுணங்கள் ஆராய்ந்து சொல்வாய் மைந்தா
அல்லதுகோள் நாலெட்டு நாளைக் குள்ளே
அப்பனே இதுபலனாம் அறிந்து பாரே

இதனால் எண்ணிய காரியம் கூடாது. சுகமான இடம் இல்லை. வெளியூர் சென்றவர் மீள மாட்டார்கள். அவர்களுக்குப் பிறர் ஆயுதத்தால் தீங்கு உண்டாகும். எட்டு நாளைக்குள் எந்த பலனும் தெரியும்.

## 19. மூல நட்சத்திரப் பலன்

பூ - ப கோழி அ - ப ஆந்தை

### மூலம்

486. அறிந்துபார் மூலம்அங்கே உதயம் ஆனால்
அப்பனே நினைத்தபொருள் நிலம்கறைகள் ஆகும்
நெறிந்துபார் ஊண்பகையே ஆகு மாகில்
நேரான ஆடுமா டென்று சொல்லு
தெறிந்துபார் அரசுபகை யாக நின்றால்
திடமாகச் சொல்லுவது சொற்ப லாபம்
எறிந்துபார் ஊண்அரசு பகையில்லா விட்டால்
என்னசொல்வேன் பொருளுடைமை என்று சொல்லே.

மூல நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் மண், பூமி, நீர் நிலைக் கரை முதலியவையாம். இதே சமயம் ஊண் பட்சி வலுத்துப் பகையானால் ஆடு மாடுகள் நினைத்த பொருள் ஆகும். சொற்ப லாபம்தான் கிடைக்கும். மற்ற பட்சி ஊண் அரசாகி பகை இல்லாவிட்டால் பொருள்வரத்து உண்டு என்று சொல்லலாம்.

487. என்றுசொல்லு நினைத்தபொருள் கைவசமே சேரும்
இனிதான மணம்கூடும் பிரபுஉற வாகும்
அன்றுசொல்லு ஆள்வரத்தால் பொருள் கைசிக்கும்
அன்பான சொல்கேட்டு சந்தோஷம் ஆகும்
நன்றுசொல்லு தன்கிளையின் ஆண்குழந்தை யாகும்
நலம்பெறலாம் அதனாலே மகிழ்ச்சி உண்டு
கண்டுசொல்லு ஐந்துநாளைக் குள்ளே
கனிவான சொல்கேட்கக் கருதலாமே.

நினைத்தது கைவசமாகும். திருமணம் முடிவாகும். அரசு பதவி உள்ள பிரபுக்கள் உறவாகும். ஆள் வரத்தும் பொருள் வரத்தும் உண்டாகும் சந்தோஷம் உண்டு. கர்ப்பவதி ஆண் மகவு பெறுவாள். நலமும் மகிழ்ச்சியும் உண்டாகும். ஐந்து நாளைக்குள் இந்த நல்ல பலன்கள் தெரியவரும்.

## 20. பூராட நட்சத்திரப் பலன்

பூ - ப கோழி அ - ப ஆந்தை

### பூராடம்

488. கருதலாம் பூராடம் உதய மானால்
கருத்திலே நினைத்தபொருள் கல்மண் ஆகும்
நிருகமாம் ஊண்பகையே ஆகும் ஆகில்
நேரான எருவாகும் சாமபல் ஆகும்
இருநிலமாம் அரசுபகை யாக நின்றால்
எழும்பியதோர் பறவையுட இறக தாகும்
அருமையாம் ஊண்அரசுபகை இல்லா விட்டால்
அப்பனேகல் இலையும் அறியச் சொல்லே.

பூராட நட்சத்திரம் உதயமானால் எண்ணிய பொருள் கல்லும் மண்ணும் ஆகும். மற்ற பட்சி அரசாகி வலுத்தால் நினைத்த பொருள் பறவை இறகாகும்.

489. சொல்லுவது நினைத்தபொருள் கூடுவதொன் றில்லை
சோபனங்கள்செய்தாலும் வாழ்வ தில்லை
ல்லுவது போனவர்கள் வருவ தில்லை
மனதிலே நினைத்தபடி நடப்ப தில்லை
சொல்லுவது விஷதிஷ்டி யாலே மக்கள்
கூடிவரப் போரதில்லை நினைத்த தெல்லாம்
அல்லுவது ஆறெட்டு நாளைக் குள்ளே
அப்பனே இப்பலனை அறிவாய்த் தானே

அப்படி மற்றபட்சி ஊண் அரசாகி வலுக்காவிட்டால் நினைத்த பொருள் கல்லும் இலையும் என்பதாம். இதனால் எண்ணியது கூடாது. திருமணம் நடத்தினால் அந்தப் பெண் வாழமாட்டாள். வெளியூர் சென்றவர்கள் மீளமாட்டார்கள். விஷ திருஷ்டி ஏற்படும். மக்கள் அவதிப்படுவர். 48 நாளைக்குள் எந்தப் பலனும் நடக்கும் என்பதாம்.

## 21. உத்திராடம் நட்சத்திரப் பலன்

பூ - ப கோழி அ - ப ஆந்தை

490. அறிவாயே உத்திராடம் உதய மானால்
அன்பாக நெஞ்சில்ஒன்றும் நினைத்த தில்லை
சரியான ஊண்பகைதான் இருந்தா லென்ன
தாரணியினில் அரசுபகை ஆனால் என்ன
கிருதாக நெஞ்சுதனைச் சோதிக்க எண்ணிக்
கேட்டதல்லாற் கேட்டதிலோர் பொருளும் காணேன்
இருநிலத்தில் இப்பலனை எண்ணிப் பாரு
எளிதாகத் தோணும்இதை இசைத்தி டாயே.

491. இசைத்துபார் நினைத்ததொன்றும் இல்லை இல்லை
இனிதாக சோதிப்போம் நாம்என றெண்ணி
விரைந்துதான் வினவநின்ற தல்லால் மைந்தா
வேறேதும் இல்லையடா வெளிவிட் டோம்பார்
வசைத்துதான் இப்படி யாகச்சோ தித்து
மறுபடியும் கேட்பம்என்று வந்தா யென்றும
உசத்திஇல்லை அதற்கொருநாள் ஆகும் என்றும்
உரைத்தவனை ஓட்டிவிடு உறுதி தானே.

உத்திராட நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் ஒன்றும் இல்லை. வீணுக்குப் புள் நூல் புலவனைச் சோதிக்க வேண்டும் என்றுதான் இவன் வினவினான் என்க. இவனுக்கு எந்த உத்தேசமும் இல்லை. இவன் சித்தனுடன் விஷப் பரிக்ஷை பண்ண வந்தவன் என்று அறிய வேண்டும். இதில் ஊண் அரசு பகையானாலும் உறவானாலும் (மற்ற பட்சிகள்) எந்தப் பலனும் இல்லை. மீண்டும் இவன் நம்மிடம் வந்தால் அவன் புறம்பான நோக்கத்தைச் சுட்டிக்காட்டி விரட்டிவிட வேண்டும் என்பதாம்.

## 22. திருவோண நக்ஷத்திரப் பலன்

பூ - ப மயில் அ - ப வல்லூறு

### திருவோணம்

492. உறுதியென்ற திருவோணம் உதய மானால்
உன்மனதில் நினைத்தபொருள் நெல்லும் புல்லும்
கருதுகின்ற ஊண்பகையே ஆகும் ஆகில்
கலந்துசொல்லு கண்டுமனம் தேறியே தான்
பருகியென்ற அரசுபகை யாக நின்றால்
பதறாமல் அதில் தணிந்த வகையைக் காட்டு
கருதிஎன்றஊண் அரசுபகை இல்லா விட்டால்
சொல்லுவாய் உயர்ந்ததனைச் சொல்லு வாயே.

திருவோண நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் நெல்லும் புல்லும் ஆகும் இதேசமயம் மற்ற பட்சிகள் ஊண் அரசாகிப் பகையாகி வலுத்தால் நினைத்த பொருள் நெல்லு புல்லைவிடத் தாழ்ந்ததாகும். ஊண் அரசு பகையில்லாவிட்டால் முன்னர் சொன்னதே நினைத்த பொருள் ஆகும்.

493. சொல்லுவாய் நினைத்தபொருள் மங்களங்கள் கூடும்
சோரனால் பயம்உண்டு பொருள்உடமை போகும்
அல்லுவாய் பொன்பொருள்கை வசமே ஆகும்
அப்பனே தொலைதூரம் போனார் மீள்வர்
வெல்லுவாய் பகைஉறவாய் வந்து கூடும்
மேலான ஜாதியிலே உறவு சேரும்
நல்லுவாய் எழுமூன்று நாளைக் குள்யே
நடந்துவரும் இப்பலனை நாடிப் பாரே.

இந்தச் சமயம் சுபமங்களகாரியங்கள் கைகூடும். ஆனால் சோரனால் பயமுண்டு. களவு போகும் அதே சமயம் பொன்னும் பொருளும் கூடும். பகை வெல்லும். உறவு சேரும். மேல் வகுப்பைச் சேர்ந்தவர்கள் புதுவகை உறவுகள் சேரும். இந்த நல்ல பலன்கள் 21 நாளைக்குள் தெரியவரும்.

## 23. அவிட்ட நட்சத்திரப் பலன்

பூ - ப மயில் அ - ப வல்லூறு

### அவிட்டம்

494. நாடிப்பார் அவிட்டம்அங்கே உதய மானால்
நலமாக நினைத்ததெல்லாம் விளங்கும் சோதி
தேடிப்பார் ஊண்பகையே யாகும் ஆகில்
சென்றதொரு நாணயத்தில் தணிவு சொல்லு
ஓடிப்பார் அரசுபகை யாக நின்றால்
உத்தமனே அதில்தணிந்த நாணயமே யாகும்
சூடிப்பார் ஊண்அரசு பகையில்லா விட்டால்
துகையுயர்ந்த நாணயமாய்ச் சொல்லு சொல்லே.

அவிட்ட நட்சத்திரம் உதயமானால் நினைத்தது ஒளிமயமானதாகும். இதே யம் ஊண் பட்சி வலுத்துப் பகையானால் கைவிட்டுப் போன பணம் குறையும் என்றும் அரசு பட்சி பகையாகி வலுத்தால் நாணயம் அதைவிடக் குறையும் என்றும் சொல்ல வேண்டும்.

495 சொல்லுவாய் பொருள்உடைமை கைவசமே சேரும்
சோபனங்கள் உறவின்முறையார் சொந்த மாகும்
வெல்லுவாய் பிரதேசம் போன பேர்கள்
வேணபடி செல்வர்களாய் வந்து சேர்வார்
மல்லுவாய் பிறமனிதர் உதவி யாலே
வந்திடுமே பால்பழவர்க் கங்கள் மைந்தா
வெல்லுவாய் ஆறைந்து நாளைக் குள்ளே
வேணபடி பொருள்வரத்து விளையும் பாரே.

ஊண் அரசு பகை இல்லாவிட்டால் கைவிட்டுப் போன நாணயம் அதிகத் தொகை என்றும், அது திரும்பக் கிடைத்துவிடும் என்று அறிய வேண்டும். வெளியூர் போனவர்கள் திரும்பி விடுவார்கள். கைவசம் விட்டுப்போன பொருள் கிடைத்து விடும்.

பிற மனிதர் உதவியால் பால் பழவர்க்கங்கள் பெருகக் கிடைக்கும் 30 நாளைக் குள் எல்லா நல்ல பலனும் சித்திக்கும் என்பதாம்.

## 24. சதய நட்சத்திரப் பலன்

பூ.ப மயில் அ.ப வல்லூறு

### சதயம்

496. பொருள் வருமேசதயம் அங்கே உதய மானால்
புந்திதனில் நினைத்தபொருள் பயிரு பச்சை
இருள்வருமே ஊண்பகையே யாகு மாகில்
எண்ணியதோர் வர்க்கத்தில் தணிவு மாகும்
அருளலெனும் அரசுபகை யாக நின்றால்
அதிற்குறைந்த வர்க்கவகை அறிந்து கொள்ளு
கருவுபொரு ஊண்அரசு பகையில்லா விட்டால்
தணிந்தவிலை இல்லையடா சார்ந்து பாரே

சதய நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் பயிர் பச்சையாகும், ஊண் பட்சி பகையானால் விளைச்சல் குறையும். இதேசமயம் மற்ற பட்சி அரசு பகையானால் விளைச்சல் மிகவும் குறையும் என்றறியவும்.

467 சார்ந்துபார் பொருள்வரத்தே அதிகம் இல்லல
சஞ்சலங்கள் ஒன்றும்இல்லை தணிவும் இல்லை
நேர்ந்துபார் போனவர்கள் துயரத் தாலே
நிருவகிக்க மாட்டாமற் பிணியால் நொந்து
கூர்ந்துபார் கைப்பொருளும் சேதம் ஆக
கூடியஉற வாய்இருந்தோர் பகைய தாகி
தேர்ந்துபார் ஏழஞ்சு நாளைக் குள்ளே
திரும்பிடுவார் இப்பலனைத் தெரிந்து பாரே.

ஆனால் மற்றபட்சி ஊண் அரசாகி பகையில்லா விட்டால் விளைச்சல் அதிக மாகும் விலையும் அதிகம் போகும். பொருள்வரத்து அதிகம் இராது சஞ்சலம் ஒன்றும் இல்லை. உள்ள தொல்லையும் தணியாது வெளியூர் சென்றவர்கள் நோய்க்குள்ளாகி கைப் பொருளும் இழந்து திரும்புவர். உறவும் பகையாகும். எந்தப் பலனும் 35 நாளைக்குள் தெரிந்துவிடும்.

## 25. பூரட்டாதி நட்சத்திரப் பலன்

பூ.ப மயில் அ.ப வல்லூறு

### பூரட்டாதி

498 தெளிவான பூரட்டாதி உதய மானால்
சிந்தைதனில் நினைத்தபொருள் ஊரும் பூச்சி
வழிவான ஊண்பகையே ஆகும் ஆகில்
மன்னவனே சிறுபூச்சி என்று சொல்லு
கொழுவான அரசுபகை யாக நின்றால்
கொடுமையுள்ள பூச்சிஎன்றே கூறலாகும்
தழுதாகி ஊண்அரசு பகையில்லா விட்டால்
தண்மையுள்ள பூச்சாகச் சொல்லு வாயே.

பூரட்டாதி நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் ஊர்ந்து செல்லும் பூச்சியாகும். இதேசமயம் மற்ற பட்சி ஊண் பகையானால் நினைத்த பொருள் ஊர்த்து செல்லும் சிறுபூச்சியாகும் அரசு பட்சி மற்றது பகையானால் நினைத்தது கொடுமையான விஷப்பூச்சியாகும். ஊண் அரசு பகை இல்லாவிட்டால் ஊரும் பூச்சி சாது, நஞ்சற்றது என்றறியவும.

499 சொல்லுவாய் செலவதிகம் வரவு கொஞ்சம்
தொடுத்ததொரு வியாஜ்ஜியமும் தோல்வி யாகும்
மல்லுவாய் ஊர்வழிதான் போன பேர்கள்
வழக்கிலே தோல்வியாய் இடைஞ்சல் உண்டாம்
வெல்லவே பொருளுடைமை களவு போகும்
வேந்தனால் தண்டனைகள் வருமே பாரு
அல்லவே மூணுபத்து நாளைக் குள்ளே
அப்பனே இப்பலனாம் அறிந்து கொள்ளே.

வரவு குறையும், தொடுத்த வழக்கு தோல்வி அடையும். தன் பொருள் களவு போகும். அரசானால் தண்டனை கிடைக்கும். 30 நாளைக்குள் எந்தப் பலனும் தெரியவரும்.

# 26. உத்திரட்டாதி நட்சத்திரப் பலன்

பூ-ப மயில் வல்லூறு அ. ப

## உத்திரட்டாதி

500 கொள்ளுவது உத்திரட்டாதி உதய மானால்
கூடுதனில் நினைத்தபொருள் குளிர்ந்த பச்சை
எள்ளுவது ஊண்பகையே யாகு மாகில்
எண்ணியதோர் அழுக்குள்ள பச்சை யாகும்
துள்ளுவது அரசுபகை யாக நின்றால்
துடியான கனிப்புள்ள பச்சை யாகும்
தள்ளுவது ஊண்அரசுபகை இல்லா விட்டால்
சாற்றியதோர் குளிர்ந்தபச்சை ஆகும் தானே.

உத்திரட்டாதி நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் குறைந்த பக்ஷம் குளிர்ந்த பச்சை நிறமாகும். அதேசமயம் மற்ற ஊண் பட்சி வலுத்துப் பகையானால் அழுக்குள்ள பச்சையே நினைத்ததாகும். அரசுபட்சி வலுத்தால் கனிப்புத் தன்மையுள்ள பச்சை நிறப் பொருளே நினைத்ததாகும்.

501. காணுமே சிலுகுசண்டை களவு போகும்
கள்ளரால் பயம்உண்டு கனிந்த உறவில்லை
வேணுமொருசம்பந்தம் பகைய தாகும்
மேலான பிரபுவினால் சல்லியங்கள் உண்டு
ஆணுமே போனஉயிர் திரும்பா தையா
அப்பனே ஆனதாலே பொருளுடைமை தோல்வி
தோணுமே எண்ணஞ்சு நாளைக் குள்ளே
தொடுத்திடுங்கால் இப்பலனைச் சொல்லு வாயே.

பட்சி ஊண் அரசு பகை இல்லா விட்டால் குளிர்ந்த பச்சையே நினைத்ததாகும் என்க.

சில்லறைச் சண்டை உண்டாகும். களவு போகும் கள்ளரால் பயம் உண்டு. உறவு பகையாகும். மேல் நிலையில் உள்ள பிரபுக்கள் தொல்லையும் நோவும் உண்டு. நோய் வாய்ப்பட்டவர் தேரமாட்டார்கள். உடைமை பொருள் போகும். தோல்வி உண்டாகும். 40 நாளைக்குள் இப்பலன்கள் தெரியும்.

# 27. ரேவதி நட்சத்திரப்பலன்

மயில் பு.ப. வல்லூறு அ.ப

## ரேவதி

502. சொல்லுவாய் ரேவதிதான் உதயம் ஆனால்
தொடுத்தபொருள் முத்துவகை என்று சொல்லு
வெல்லுவாய் ஊண்பகையே ஆகும் ஆகில்
விலைதணிந்த ரத்னவகை ஆக வேண்டும்
மல்லுவாய் அரசுபகை யாக நின்றால்
வசம்இல்லை சொட்டையென்று வகுத்துச் சொல்லு
சொல்லுவாய் ஊண்அரசு பகை இல்லா விட்டால்
தொகை உயர்ந்த வர்க்கம்என்று தொகுத்திடாயே.

ரேவதி நட்சத்திரம் உதயமானால் நினைத்த பொருள் முத்துவகையாகும். மற்றபட்சி ஊண் ஆகி வலுத்தால் நினைத்த பொருள் விலை குறைந்த ரத்தினவகை என்றறிய வேண்டும். மற்றபட்சி அரசு பகையானால் எண்ணிய பொருள் இரத்தின வகையானாலும் அது உண்மையில்லை. சொட்டை சொள்ளை விழுந்த தோஷமுள்ளது என்று கொள்ளவேண்டும். மற்றபட்சி அரசு ஊண் நட்பானால் எண்ணிய பொருள் விலையுயர்ந்த இரத்தினமாகும் என்று கொள்ளவேண்டும்.

503. தொகுத்திடுவாய் பொருள்வரத்தோ மெத்தவுண்டு
சோபனங்கள் கூடும் அப்பா சொல்லக்கூடா
வகுத்திடுவாய்போனவர்கள் மணமாய்வந்து
வாழ்ந்திருப்பார் இனத்துடனே மகிட்சியாக
அகத்திடுவாய் இரண்டுபிள்ளை மிகுந்தசெல்வம்
அவன்கிளையும்பெருகிவளர்ந் தோங்கும்பாரு
நிகழ்த்திடுவாய்நினைத்ததெல்லாம் கைவசமே சேரும்
நேரானஅறுமூன்று நாள் தான்பாரே.

நிறைய பண வரவு உண்டு. சுபமங்கள காரியங்கள் கைகூடும். வெளியூர் சென்றவர் திருமணம் புரிந்து கோஷ்டியாய்த் திரும்பி வருவார். தன் இனமுடன் மகிழ்ச்சியாய் வாழ்ந்திருப்பார். கேட்போனுக்கு நிறைந்த செல்வமும் இரண்டு ஆண் மக்களும் உண்டு, இவன் உறவு முறையுடன் பெருகி வாழ்வான். நினைத்த பொருள் கைவசமாகும். இதில் சொன்ன பலன்கள் எல்லாம் 18 நாளைக்குள் நடக்கும் தெரியவரும் என்பதாம்.

# நட்சத்திரங்களைக் கொண்டு கேள்விகளுக்குப் பதில் சொல்லும் விதம் வருமாறு

1) ஒருவன் பட்சிநூல் புலவனிடம் ஒரு கேள்வி கேட்டு வருவானாயின் அன்று பஞ்சாங்கப்படி என்ன நட்சத்திரம் நடக்கிறது என்று பார்த்து நிர்ணயம் செய்து கொள்ளவேண்டும்.

2) வளர்பிறையா தேய்பிறையா என்பதை அறிந்து அதற்கேற்ப நட்சத்திரப் பட்சியை முடிவு செய்யவேண்டும் (வளர்பிறைக்கு நட்சத்திரங்களுக்கு உரியபட்சி வேறு, தேய்பிறைக்கு வேறு இதை மறந்துவிடக் கூடாது. இதை இடது வலது பக்கங்களில் நட்சத்திரப் பலன் தலைப்புகளில் தனியாகவும் குறிப்பிட்டுள்ளோம்.)

3) உதாரணத்திற்கு ஒருவன் தான் செய்யும் வியாபாரம் செழிக்குமா என்று கேட்டதாகக் கொள்வோம். அப்பொழுது சுக்லபட்சமாகக் கொண்டு அன்று சதய நட்சத்திரமாகக் கொண்டால் பட்சி மயிலாகும்.

4) இந்தப் பட்சி அப்பொழுது என்ன தொழில் செய்கிறது என்றும் கிழமை என்ன என்றும் காணவேண்டும். கேட்டபோது சுக்லபட்ச திங்கள் கிழமை பிற்பகல் 4 மணி என்றும் கொண்டால் இதன்படி மயிலுக்குக் கடைசி ஜாமத்தில் அரசு தொழில் நடக்கிறது.

5) இப்போது இவன் சதய நட்சத்திரம் உதயமாகும்போது கேள்வி கேட்டதால் பச்சைநிறப் பொருள் நினைத்து வந்தான் என்று சொல்லலாம் (சதய நட்சத்திரப் பலன் காணலாம்) பச்சைப் பயிரைக் குறிப்பதால் தானிய வியாபாரம் அறிந்து கேட்டிருப்பான். என்றும் கொள்ளலாம். மற்ற எந்த வியாபாரம் ஆனாலும் அப்போது எல்லாவற்றையும் விட வலுத்த அரசு தொழில் நடந்து கொண்டிருந்தால் பலன் வெற்றி லாபமுண்டு என்று கொள்ளலாம். ஆனால் சதய நட்சத்திரத்திற்கு நல்லது கெட்டது இரண்டு மற்ற பலன் சொல்லி இருப்பதால் வியாபாரம் அதிக லாபமும் இல்லாமல் நஷ்டமும் இல்லாமல் முதலும் குறையாமல் சரிக்கட்டிக் கொண்டுபோகும் என்று சொல்லலாம். அதுவே அந்தப்பட்சி மயிலுக்குப் படுபட்சி நாளாக இருந்தால் வியாபாரம் முதலே ஓங்காது என்று தான் சொல்ல வேண்டும். வளர்பிறை புதன்கிழமை தான் மயிலுக்குப் படுபட்சி நாளாகும்.

இதே அன்று அந்த நாளில் காலை 8½ மணிக்குக் கேள்வி கேட்டிருந்தால் அதே மயிலுக்கு இரண்டாம் சாமம் சாவு தொழில் நடக்கும் இது எல்லாவற்றையும் விட மட்டமான தொழிலாகையால் வியாபாரம் நஷ்டமாகும். ஓங்காது என்று சொல்ல வேண்டும். அதுவுமன்றி அதே நேரத்தில் வல்லூறு ஊண் தொழிலிலும் காகம் அரசு தொழிலிலும் இருக்கிறது. மயிலுக்கு வல்லூறு நட்பு - காகம் பகையாகும் எனவே ஊண் நட்பு ஆகி அரசு பகையாயிற்று. வலுத்த தொழில்பட்சி பகையானதால், தொழில் சாவு நடப்பதால் எந்த விதத்திலும் வியாபாரம் அழியும் என்று சொல்லவேண்டும். மற்ற கேள்விகளுக்கும் இதை அனுசரித்தே நல்லது, கெட்டது, நடக்கும், நடக்காது, வெற்றி, தோல்வி, நோய் தீரும் தீராது, போனவர் வருவர், வரமாட்டார் இன்னும், இதுபோன்ற எல்லாவற்றிற்கும் 'ஆம்' அல்லது 'இல்லை' என சூழ்நிலை சந்தர்ப்பம் அறிந்து சொல்ல வேண்டும்.

6) இதுவே அன்று மிருகசீரிஷம் நடந்து அதே நேரம் பிற்பகல் 4 மணிக்குக் கேள்வி கேட்பதாகக் கொண்டால் வல்லூறு பட்சியாகித் துயில் நடக்கும். துயில் தாழ்ந்த தொழில் எனவே வியாபாரம் நஷ்டம் என்று சொல்லவேண்டும். நட்சத்திரப் பலனும் நன்றாகச் சொல்லப்படாததால் நஷ்டம் தான் என்று சொல்லவேண்டும். இதேசமயம் மற்ற பட்சிகளில் காகத்திற்கு ஊண் நடப்பு வல்லூறுக்குக் காகம் வலுத்துப் பகையாயிற்று. ஆகையால் பெருநஷ்டம் என்று சொல்லவேண்டும். இதே சமயம் மயிலுக்கு அரசு நட்பு, வல்லூறுக்கு மயில் நட்பு, ஆகையால் அரசு துயில் ஊணை விட வலுத்தது. இதனால் பெருநஷ்டம் தவிர்க்கப்பட்டு சாதாரண நஷ்டம் என்று சொல்ல வேண்டும்.

இரண்டும் பகையானால் பெருநஷ்டம் என்றும், இரண்டும் நட்பானால் லாபமும் நஷ்டமும் இல்லை என்று சொல்லவேண்டும்

ஆனால் நட்சத்திரப்பலனும் நல்லதாக இருந்து பட்சியின் தொழிலும் அரசாகி மற்ற ஊண்பட்சி பகையில்லாமல் இருந்தால் பெருத்த லாபம் ஏற்படும் என்று சொல்லவேண்டும்.

7, இன்னும் பூர்வ அமரபட்சப் படலங்களில் சொல்லியுள்ள பட்சி நடத்தும் தொழிலின் சூக்கும அந்தரத் தொழிலையும் கண்டு அதேசமயம் மற்ற பட்சிகள் நடத்தும் சூக்கும அந்தரங்களையும் கண்டு மேற்கண்ட தாரதம்யப்படி பலன் சொல்ல வேண்டும். இன்னும் இதுபோன்ற மற்ற கேள்விகளுக்கும் இப்படியே பலன் சொல்ல வேண்டும்.

# 21. ஜாதகப்பட்சி பொருத்தப் படலம்

ஒரு ஜாதகத்தில் அதன் பல்வேறு அம்சங்களுக்கும் உரிய பட்சிகள் (முக்கியமாக நட்சத்திரப்பட்சி) ஒன்றாக இருந்து, அவை ஊண் அரசு தொழிலில் ஓங்கி அந்த நேரத்தில் பிறந்தவன் உயர்ந்த அரசயோக முள்ளவனாகவும், பூமானும் சீமானுமாக இருப்பான். நீடித்து வாழ்வான் என்பது பஞ்சபட்சி நூலோர் கொள்கையும் உண்மையும் ஆகும்.

அதாவது ஜாதகனின் ஜென்ம நட்சத்திரப்பட்சி, பிறப்புப்பட்சி, ராசிப்பட்சி திதிப்பட்சி, லக்னப்பட்சி இவை ஒன்றாக வந்து ஜனனகால சமயத்தில் ஊண் அரசு உயர் தொழிலில் இருந்தால் மேற்கண்ட நற்பலன்கள் உண்டாகும். இதை ஒரு உதாரணம் கொண்டு விளக்குவோம். "சாதகப் படலத்தில்" கடைசியில் கொடுத்து உள்ள நமது முன்னாள் பாரதப் பிரதமர் திரு ராஜீவ் காந்தி ஜாதகத்தையே பார்ப்போம். விவரம் வருமாறு:

(1) பிறப்பு தாரண ஆவணி 5 ஞாயிறு சுக்ல துதியை (20—8—1944) பூர நட்சத்திரம் காலை Wartime 9-50க்குப் பிறப்பு. இண்டியன் ஸ்டாண்டர்ட் டைம் 8-50 ஆகும். இதற்கு சுதேசமணி (LMT) 8-12 ஆகும். அன்று சூரியோதயம் பாம்பேயில் 8-16 ஆகும. எனவே முதல் ஜாமம் 2-24 நிமிஷம் கூட்ட பிறப்பு அன்று வளர்பிறை ஞாயிறு பூரத்திற்குரிய ஆந்தை அரசு ஜாமத்தில் அரசு சூக்கும அந்தரத்தில் பிறப்பு (நட்சத்திரப்பட்சி) இனி மற்ற விவரம் காண்போம். ஜாதகம் வருமாறு.

| | | | |
|---|---|---|---|
| | | | சனி |
| | 20—8—1944,<br>9.50 AM. wartime<br>8 50 AM I.S.T.<br>8.12 A.M. LMT<br>SUN RISE<br>5.46 A.M. LMT. | | ராகு |
| | | | |
| கேது | | | சூரி<br>சந்தி<br>சுக்ரன்<br>புதன்<br>குரு |
| | | | ல<br>செவ் |

3. இப்பொழுது பிறப்புப் பட்சியைப் பார்ப்போம். "நுதலிப்புகு" படலத்தில் 7-வது அட்டவணை ஞாயிற்றுக்கிழமைக் குரியதைக் காண்க. 8.10 வரை முதல் ஜாமம் சென்றது.

| | |
|---|---|
| சூரியோதயம் | 5.46 |
| முதல் ஜாம மணி | 2.24 |
| | 8.10 A.M |

எனவே முதல் ஜாமம் காலை 8.10 உடன் முடிவு. இரண்டாம் ஜாமத்தில் 2 நிமிடம் கடந்து பிறப்பு. அட்டவணையில் 2-ம் ஜாமத்திற்குநேர் முதல் அந்தரத்தில் அதற்கு நேர் வல்லூறு என்று உள்ளது, தொழில் நடை என்று உள்ளது எனவே வல்லூறு பிறப்புப்பட்சி தொழில் - நடை.

3. அன்று வளர்பிறை துதியை இதற்குப்பட்சி ஆந்தை (பூர்வபட்சப் படலம் காண்க. பாடல் 30)

4, ராசிப்பட்சி, ராசி சிம்மம் அதற்குரிய பட்சி வல்லூறு (பூர்வபட்சப் படலம் பாடல் 31 காண்க)

5. லக்னப்பட்சி லக்னம் கன்னி - அதற் குரியபட்சி ஆந்தை - மேற்படி பாடல் காண்க.

3. இப்பொழுது இவரது ஜாதகத்திற்குரிய பட்சிகள் கீழ்க்கண்டபடி வந்தன.

1. நட்சத்திரப்பட்சி - ஆந்தை - அரசு - அதில் - அரசு அந்தரம் - உத்தமம்
2. ஜென்மப்பட்சி - வல்லூறு நடை - மத்திமம்
3. ஜென்ம லக்னப்பட்சி - ஆந்தை
4. ஜென்ம ராசிப்பட்சி - வல்லூறு

5. ஜென்ம திதிப்பட்சி — ஆந்தை

6. எனவே இதில் இரண்டே பட்சிகள் உள்ளன. இதில் 3 அம்சங்களுக்கு ஆந்தை பட்சியாயிற்று. அதுவும் நட்சத்திரப்பட்சி ஆந்தை அரசில் அரசு அந்தரத்தில் இருப்பது அரசயோகத்தை தலைமைப் பதவியையும் குறிக்கிறது தன் நட்சத்திரப்பட்சி அரசு தொழிலில் அரசு அந்தரத்தில் பிறந்ததே ஜாதகத்தின் மிக உயர்ந்த அம்சமாகும்.

2. அம்சங்களுக்கு வல்லூறு அதற்குத்தொழில் நடை அமைந்தது.

தாழ்ந்த தொழிலான சாவு துயிலில் எந்தப் பட்சியும் இல்லை.

எனவே மேலான யோக அரச பதவியுள்ள ஜாதகனாகவே இவர் இருப்பார் என்பதில் ஐயமில்லை. அதிலும் மகாதிசைப்படி இவருக்கு இப்போது அரசு தொழில் நடப்பு (ஜதகப்படலம் பார்க்க)

எனவே பட்சி சாஸ்திரப்படி இவர் ஜாதகம் மிக மேன்மையாக இருப்பது தெளிவு. அவர் அவர் ஜாதகங்களுக்கும் இப்படியே கணிதம் பண்ணிக் கொள்ளலாம். இந்த ஆராய்ச்சியும் எம் உரிமையே.

குறிப்பு: தற்போது இவர் பிரதமராக இல்லாததால் இவர் மேன்மை குறைந்தது என்று கொள்ள முடியாது. ஏனென்றால் நாடாளுமன்றத்தில் இவருக்கே பெரும்பான்மை உறுப்பினர்கள் உள்ளனர். அதற்கு இவரே தலைவர் ஆனதால் பட்சி நோக்குப்படி ஜாதகம் வலுவானதே என்று கொள்ளவேண்டும். ஆனதால் இவர் 21—5—1990-ல் மனித குண்டால் இறந்தது இவர் ஆயுர் பாவக் குறைவு என்று கொள்க. மேலும் விளக்கம் 7-வது படல இறுதியில் காண்க.

# 22: ஞான சுருக்கப் படலம்

இந்த பகுதி உரோமரிஷி வினாடி பஞ்சபட்சியிலிருந்து எடுத்து எழுதப்படுகிறது இது பஞ்சபட்சி சாந்திரத்தைத் தகுதியற்றவர்களுக்கு உபதேசிக்கக் கூடாது என்றும் ஞான, வழிபாட்டு உபசார முறைகள் பழகிக் குருமூலம் கற்று நெறி நிற்பவர்களுக் குத்தான் பட்சி வித்தை பலிக்கும் என்று பட்சி வித்தைப் பயில்வோருக்கு ஞானோப தேசம் செய்வதால் இப்பெயர் பெற்றது. இதன் அருமை பெருமைகள் பேசப் பட்டுள்ளன. எனவே கடைசியாக இது வைக்கப்பட்டது.

505 தானென்ற கன்னிநூல் தலைச்சன் ஆகும்
சண்டாளக் கருவல்லோ இணங்க லாகும்
தேனென்ற சக்கரங்கள் உடல தாகும்
திறமான அட்டசரமும் காரணமாய் முடியும்
வானென்ற மூலிகையைப் பிடுங்கொ ணாது
மக்களே மற்றதெல்லாம் செய்து பாராய்
ஏனென்று பேசுமடா மித்துருஉன் செயலால் அங்கே
என்மகனே சேர்ந்துபோனால் பட்சி வித்தை பலியாதே.

இதன்பொருள் அட்டகன்மங்களுக்குக் காப்பு கட்டுதலுக்குக் தலைச்சனாகப் பிறந்த கன்னிப் பெண் நூற்ற நூலால் தான் காப்பு கட்டவேண்டும். கரு முதலிய வற்றைத் தொட்டுச் செய்கிற அட்டகன்ம காரியங்கள் பிசாசுத்தன்மையை வளர்க்கும். ஆகையால் அவற்றை விலக்கவேண்டும். இதற்காக அட்ட கன்மத்திற்கு பட்சிகளுக் குரிய மூலிகைகளைப் பிடுங்கிச் செய்யும் காரியங்கள் விலக்கத் தக்கவையே.

எனவே இவற்றை விலக்கவேண்டும். நமது உடலிலிலேயே ஆறாதாரச் சக்கரங்கள் உள்ளன. அவை ஒவ்வொன்றுக்கும் பஞ்சாட்சரத்தின் மூல எழுத்து ஒவ் வொன்று உண்டு. நெடுங்கணக்கின் எழுத்துக்கள் இவை, இவை என்றும் அவற் றுக்கும் உண்டு. ஒவ்வொரு சக்கரத்திற்கும் தனி பீஜாட்சரம் உண்டு. இவற்றைக்கூடி அங்கங்கே நினைவை நிறுத்தி சிவசக்தி தியானம் பூசை செய்து (அரை காரணத்தால் முடியும் இதை செய்து) தன் தவமான செயலைத் தொடர்ந்து. பட்சியை மித்துருவாக் கிக்கொண்டு செய்கிற வாசி, குண்டலினி யோகிக்கே பட்சி வித்தை பலிக்கும். மேலே சொன்ன தீய நெறியும் இங்கு சொன்ன தவநெறியும் சேர்த்து செய்தால் அழிவுவருமே அன்றி பட்சி வித்தை பலியாது என்பது பொருளாகும். எனவே தீயதை நீக்கி குண்ட லியோகம் கைவரப் பெற்றவனுக்கே பட்சி வித்தை பலிக்கும். உணர்வாயாக என்று கூறப்படுகிறது,

506 பட்சி வித்தை பலிப்பவர்கள் குணத்தைக் கேளு
பார்தனிலே பொய்சொல்லான் குருவார்த்தை மறவான்
கொச்சென்ற கோபகுணம் மனதில் வையான்
கொடுமையுள்ள சினமில்லான் வஞ்சம் பேசான்
மெச்சுஎன்ற எவ்வுயிர்க்கும் இரங்கு வானாம்
மேதினியில் வெகு ஜனங்கள் 'நல்லார்' என்பர்
பட்சிவித்தை பலியாமல் போற தில்லை
பாருலகில் அரிதான வித்தை தானே.

இதன்பொருள் பட்சிவித்தை தெரிந்தவன் குணங்களைக் கேட்டால் சொல்லுகிறேன் கேள்:

இவன் பொய் சொல்லமாட்டான். குருவார்த்தையை மறக்கமட்டான். கோபம் சினம் இல்லாதவன். வஞ்சம் பேச மாட்டான். எல்லா உயிர்களிடத்திலும் இரக்கம் உள்ளவன். இவனை உலகினர் "நல்லவன்" என்று போற்றுவார்கள். இப்படிப் பட்டவனுக்குப் பட்சி வித்தை பலிக்காமல் போகாது என்பதாகும். மேற்சொன்ன குண்டலி யோகமும் மனித நேயம் உள்ளவனும் கட்ட மற்றவனுமாக இருந்தால்தான் பட்சி வித்தை பலிக்கும் என்று கொள்ளவேண்டும்.

507 வித்தையிலே அதிகவித்தை பட்சி வித்தை
மேலான சித்தர்களும் மறைந்து வைப்பார்
கொத்தாக நரன்வெளியாய் புலம்பி வைத்தேன்
குருபதத்தைப் பணிந்தோர்க்கும் பலிக்கும் பாரு
சத்தான எறும்புதலை யானைத்தலை முழுதும்
தானயனாய் நின்றபடி வித்தை யப்பா
மற்றதெல்லாம் பால்போலே ஆகும் சாஸ்த்ரம்
மணயென்ற பஞ்சபட்சி நெய்யும் ஆச்சே.

(இ-ள்) எல்லா வித்தைகளிலும் மேலானது சித்தர்கள் வெளிப்படையாகப் பேசாத பஞ்சபட்சி வித்தையேயாகும். உரோமரிஷியான சாதாரண மனிதனான நான் எனக்குத் தெரிந்த வரையில் இந்த சாத்திரத்தைச் சொல்லியுள்ளேன். சித்தரான குரு வாய்த்து அவர் பாதம் போற்றிப்பழகி வந்தால் பட்சி வித்தை அறிந்து கொள்ளலாம். அதுவும் பலிக்கும். எறும்பு முதல் யானைவரை உள்ளும் புறமும் இயக்கி வைக்கும் பரம்பொருள் நிலையில் உள்ளவன்தான் இவ்வித்தையை அறிய முடியும். உலகில் உள்ள மற்ற சாத்திரமெல்லாம் பால் என்று கொண்டால் இந்த பட்சி வித்தை அந்த பாலின் வெண்ணையிலிருந்து பெறப்பட்ட நெய் போன்ற சாரமான வித்தையாகும் என்றபடி

508 நெய்யென்ற சாஸ்திரத்தை உரோமன் நன்றாய்
நிச்சயமாய்க் குருபதத்தைப் பணிந்து போற்றி
மெய்யென்ற வாசிநிலை அறியச் சொன்னேன்
மேலான தொழில்களுக்கு இதுவே வேணும்
பொய்யென்று நினைத்தவர்க்குப் பலிதம் ஆகா
புத்தியில்லா பாவிகளிதைப் பாரா விட்டால்
கையென்ற கையெதுவும் ஆத்து மாவைக்
கடாச்சித்த கதையதுபோல் ஆகும் தானே.

(இ-ள்) நெய்போன்ற இந்த சாஸ்திரத்தை உரோம ரிஷியாகிய நான் குரு பாதம் போற்றி அவர் திருவருளால் சொல்லி வைத்திருக்கிறேன். இதை நன்கு பயன்படுத்த வேண்டுமானால் பிராணாயாமம் என்ற வாசியோகம் அறிந்து கொள்ள வேண்டும். இது செய்தவர்க்கு இந்த பட்சி வித்தை பொய்யாகவே தோன்றும். இவர்கள் புத்தியில்லாப் பாவிகளே ஆவர். கையான நமக்கு உடலானதையே இவர்கள் அதை இயக்கும் ஆத்துமாகவே எண்ணுவதுபோல் 'பட்சி வித்தையின் உயிர்நிலையை இவர்கள் அறிய மாட்டார்கள் என்பதாம்.

509. ஆருமே மாட்சியுட சாஸ்திரத்தைப் பார்த்து
அப்பனே பெரியோரைப் பணிந்து போற்றி
கோருமே அவர்குணம்போல் நடந்தா யானால்
கொண்டுசெல்லும் வெகுகாலம் வாழ லாம்பார்
காருமே வேணுமொரு சாஸ்திரம் பார்த்து
கலங்குவது மெய்யாகும் தெளிவும் இல்லை
பாருமே பட்சியுட சாஸ்தி ரத்தைப்
பண்பான படியென்றும் பணிந்து பாரே.

யாரானாலும் மேற்சொன்ன வாசியொழுக்கம் தெரிந்து பெரியோரைப் பணிந்து போற்றி அவர் சொன்ன நெறிமில் நடந்தால் வெகுகாலம் வெற்றியுடன் வாழுடியும். இருள்போன்ற மற்ற சாஸ்திரத்தைப் பார்த்தால் மனக்கலக்கம் குழப்பம் ஏற்படுமே அன்றித் தெளிவு ஏற்படாது.ஆகவே பட்கி சாஸ்திரத்தை அதற்குரிய தகுதியைத் தேடி அடைந்து அதன்பின்புதான் பயிலவேண்டும் என்பதாம்.

510. பணிந்துபார் மற்றவகை சாஸ்த்ர மெல்லாம்
பாண்டமே அல்லாமல் வழியோ இல்லை
துணிந்துபார் பட்சிதனில் எவ்வள வேணும்
சொல்குறைச்சல் வாராது பழுதொன் றில்லை
கணித்துப்பார் அதனுடைய சூட்சம் தன்னை
கண்டவர்கள் பலிதனென்று சொல்லொ ணாது
தணித்துப்பார் அவர்பதத்தைப் பணிந்து போற்றி
தன்மையுள்ள பொருளெல்லாம் அறிந்து கொள்ளே

நன்றாக மெனக்கெட்டு எல்லா சாஸ்திரங்களிலெல்லாம் வெறும் காலிப் பாண்டம் போல்வனவே. இந்தப் பட்சி வித்தையில் எந்தப் பழுதும் கிடையாது' இதன் சூக்கும அந்தரத் தொழில்களையெல்லாம் கணிந்தும்பார். மற்றவர்கள் பட்சி வித்தை பலிதமுள்ளவர் ஆகமாட்டார்கள். உள்ளடங்கி குருபாதம் போற்றி இதன் உண்மை பொருள்கள் எல்லாவற்றையும் தெரிந்து கொள்வாயாக என்பதாம்.

511, அறிந்துகொண்டு உலகமதில் தணிந்து பேசி
அப்பனே கற்றோரைத் தொண்டு பண்ணி
தெரிந்துகொண்டு பூமிதனில் நடக்கும் காட்சி
சீஷரைப்போல் வெருவணக்கம் செய்து போற்றி
தெரித்து கொண்ட உபயமதுபோல் உலக வாழ்க்கை
துன்பம் அணுகாமல் திருநீற்று சுழல் போல
வரிந்துகொண்டு ஞானத்தின் பன்மை கண்டு
மக்களே காயசித்தி வணக்கம் செய்யே!

இதை அறிந்துகொண்டு உலகில் வெளியில் பட்சிவித்தை உட்பொருளை வெளியிடாமல் வணக்கத்துடன் பேசிப்பழகு, இப்பட்சி வித்தை கற்றுத் தெரிந்தோர்க்கு தொண்டு செய்து அவர்கள் சீடராகி நீ நடக்க வேண்டும். இந்த உலகம் நீரின் மேல் சுழல்போல் நம்மைச் சிக்கவைப்பது என்பதைத்தெரிந்து கொண்டு நீ எச்சரிக்கையுடன்

நடந்து கொள்ளவேண்டும். துன்பத்திலிருந்து தப்பித்துக் கொள்ளவேண்டும். நன்றாகத் துணிந்து மெய்ஞானத்தின் உண்மையை அறிந்துகொண்டு மேற்சொன்ன வாசியோகத்தையும் பழகினால் நீ உலக வாழ்க்கையில் காய சித்தியையும் பெறுவாய் என்பதாம்.

512. செய்திடுவாய் ஞானசித்தி யோகசித்தி
சொல்லுவது சிவயோகி பிரம யோகி
வைத்திடும்பார் இவ்வுலக லாழ்க்கை தன்னில்
மக்களே மனுக்கள் எல்லாம் வணங்க லாச்சு
செய்திடும் பார் உலகத்தி உள்ள பேர்கள்
திசையாளும் மன்னரெல்லாம் வணங்க லாச்சு
மொய்த்திடுவார் உலகத்தவர் உறவெண் ணாதே
மொய்குழலாள் வாலையவள் உறவு நன்றே

இப்படிக் குருவைப்போற்றி அவர்களின் வழி நடந்து ஞான சித்தி, யோக சித்தி இவற்றையெல்லாம் அடைந்து நீ தகுதி பெற்றால் உலகில் உள்ள மக்களெல்லாம் வணங்கிடுவர். திசையாலும் மன்னனெல்லாம் உன் தரிசனத்திற்குக் காத்திருப்பார். அவர்கள் உன்னை மொய்த்து சூழ்ந்து கொள்வார்கள். அவர்களையெல்லாம் சட்டை செய்யாமல் வாலைத் தாயைப்பாதம் போற்றி அவள் உறவு கொள்வாயாக என்பதாம்

513. நானென்ற பட்சியும் வித்தை தன்னை
நலமாக உலகத்தில் வணக்கம் செயதால்
உண்டென்ற தொழிலை அங்கே பிரிவிப் பார்கள்
உத்தமனை மனதறிந்து உரைக்க வேணும்
கண்டகண்ட பேர்களுக்கு உரைத்தா யானால்
கழுதையென்ற ஜென்மமது பிறக்க லாகும்
வண்டென்ற வாலையின்மேல் ஆணை ஆணை
மக்களே! சாஸ்திரத்தின் வகைசொல் லாதே.

இ-ள்) பட்சி சாஸ்திரத்தைத் தெய்வமாகவே மதித்துப் பழகினால் அதன் தொழில்கள் கட்டாயம் உண்டென்று பிரதிபலிக்கும். பிறருடைய உட்பக்குவம் அறிந்து தான் இந்த வித்தை பலனைச் சொல்லவேண்டும். அப்படியின்றி கண்டகண்ட தகுதி யற்றவர்களுக்கு நீ இதை உபதேசித்தால், உனக்கு அடுத்த பிறவி கழுதைதான் ஏற்படும். இதை வண்டுபோன்ற உள்ளொளி நாதம் எழுப்பும் தாய்க்கடவுள் ஆணை ஆணை ஆகையால் பொய்யர்களுக்கு இந்த சாத்திரத்தின் வகையைச் சொல்லாதே என்பதாம்.

514. சொல்லாதே உலகிலுள்ள மாந்தர் கையால்
திரமான காயசித்தி செய்து கொண்டால்
பொல்லாத பலயோகி ஞான யோகி
புகழ்பெற்ற சடலத்தை அறியா யோகி
நில்லாத வாசியைத்தான் நிறுத்தும் யோகி
நிகரொருவர் இல்லையென்றே நினைக்கும் யோகி
கொள்ளாத உயிருடலை நிலைத்தி னோர்க்கு
கூறுவாய் பாவிகளைக் குறித்துத் தன்னே.

இந்த பட்சி வித்தை தன்னைத் தரமறியாமல் எல்லாருக்கும் சொல்லிவிடாதே. இதைத் தெரிந்து கொண்டவர்கள் முதுமையடையாத காய சித்தி பெற்றவராக இருக்க வேண்டும். ஞானம் தெரிந்த யோகியாகவும் இந்த உடலில் நினைப்பே இல்லாத யோகியாக இருக்க வேண்டும். நிலைக்காத வெளியாகிக் கொண்டே இருக்கும் வாசி என்ற பிராண ஜீவ சக்தியைத் தன் உடலில் நிலைத்திருக்கச் செய்யும் சூட்சுமம் அறிந்திருக்க வேண்டும். இவருக்கு நிகர் வேறு யாருமில்லை என்ற அளவு அதனை உள்ளவனாக வேண்டும். இப்படிப்பட்ட மெய்யான யோகிகளுக்கு மட்டும் தான் பட்சி வித்தையை உபதேசித்தலாகும். மற்றவர்களைப் பொய்யர்கள் என்பதறிந்து அவர்களுக்கு இந்த சாஸ்திரத்தைச் சொல்லக் கூடாது என்பதாம்.

515. தள்ளுவது சீஷருட மனதைக் கண்டு
தயங்காமல் ஒருமனதாய் நிற்பா னாகில்
உள்ளபொருள் உள்ளதெல்லாம் உனக்கே தருவேன்
உரைத்திட்டேன் உண்மை ஆணை உண்மை உண்மை
தெள்ளுமணி பஞ்சபட்சி வித்தை யப்பா
ஜெகந்தன்னில் ஒருவருக்கும் சொல்ல வேண்டாம்
தள்ளிவிடும் வாலையுட சாபம் வந்து
தலைதெரித்துப் போகும் என்று மனதில எண்ணே!

வந்த சீடன் எவனேனும் தயக்கமின்றி மேற்கண்ட தகுதி உள்ளவனானல் இந்த பட்சி வித்தையின் பொருளையெல்லாம் ''உனக்கே ஈவேன்'' என்று அவனுக்கு உபதேசம் செய்யலாம். பஞ்சபட்சி வித்தை ஒளிபெற்ற ஓர் உயர்ந்த ரத்தினம் ஆகும். உலகில் மற்ற யாருக்கும் இதைச் சொல்ல வேண்டாம். அப்படி நீ சொன்னாயானால் சித்தர்களின் வாலைத்தாய் சாபமிடுவாள். அதனால் உபதேசம் பண்ணியவன் தலை சுக்கலாகத் தெறித்துப்போகும் என்று அறிவாயாக என்பதாம்.

51[illegible] மனதிலெண்ணி சத்தியமாய் இருந்தா யானால்
வாக்கினால் சொன்னதெல்லாம் பலிக்கும் பாரு
கனிவுகொண்டு சாஸ்திரத்தில் வினையம் வைத்து
கைப்பாகம் செய்பாகம் குருவாக் கால்கற்று
தனமென்ற பொருள்தேடி ஈந்தா லுந்தான்
தக்கனவே ஆக்கினையாம் தோஷம் தோஷம்
தணிவுகொண்டு உலகத்தில் வணக்கம் செய்து
தனித்திருந்து அறிவதுதான் பொருளாம் பாரே.

மேற்படி யோக நெறி நின்று இந்த பட்சி வித்தையைப் பழகினால் நீ சொன்னதெல்லாம் நன்றாகப் பலிக்கும். குருவை அடுத்து அட்ட கர்மம் முதலியவற்றைக் கைபாகம், செய்பாகம் மூலம் அறிந்து, தான் தேடும் பொருளை, பிறருக்கும் கொடுத்து வாழ்ந்தால் நீ இட்ட ஆணையெல்லாம் நடக்கும். இல்லாவிட்டால் உனக்கு பட்சியால் தோஷம் கட்டாயம் ஏற்படும். மனத்தில் தணிந்த அருள் வாழ்க்கையை மேற்கொண்டு வணக்கத்துடன் நடந்து தனித்திருந்து தவம் செய்தால் உன் அறிவு மேலும் தெளிவு பெற்று சிறந்திருக்கும் என்பதாம்.

517. பெரிதான பஞ்சபட்சி சாத்தி ரத்தை
பேருலகில் சொன்னதனால் வருவ தேது
அறிதான பதினெண்பேர் சாபம்தானும்
அப்பனே பதினெண்பேர் சாபம்தானும்
குறியாக வந்துவிடும் சொன்னேன் அப்பா
குருவான சாஸ்திரதைர் கொடுக்கொண்ணாது
தெரியாது இதனுடைய சாஸ்த்திரம் தானும்
செய்யவில்லை தான் வெளியாய் செப்பினேனே.

பஞ்சபட்சி சாஸ்திரம் பெரியதானது. இதை வெளிப்படையாக யாருக்கும் சொல்லக்கூடாது. இதை வெளியில் சொல்லாதே. அப்படிச் சொன்னால் அதன் கர்த்தாக்களால் பதினெண் சித்தர்களாலும் உனக்கு சாபம் ஏற்படும். இதன் மகத்துவம் வலிமை எல்லாம் நல்ல வெளி (என்ற மனோதியான நிலையில் இருந்து கொண்டு உபதேசம் சொல்லியுள்ளேன்) என்பதாம்.

518. செப்பினதோர் சாஸ்திரத்தை உலக மீதில்
ஜெகமறியா மாந்தருக்குச் சொன்னா யானால்
தப்பில்லை பதினெண்மர் சாபம் தானும்
தன்குலத்தை நாசமது செய்யும் பாரு
கொம்புகளில் சரித்துவிளை யாடும் சென்மம்
குரங்குபோல் ஆகுமப்பா சொன்னேன் யானும்
இப்புவியில் வாலையுட சாபம் அப்பா
ஈடாவ தொருபோதும் இல்லை தானே.

நான் சொன்ன இந்த சாத்திரத்தை உலகின் தரும நெறி உதாரண மனிதர்களுக்கு நீ சொல்லிக் கொடுத்தாயானால், சித்தர்கள் பதினெட்டுப் பேர்களின் சாபமும் உன்குலத்தை அழித்து விடும். பிளவுகளில் விளையாடும் குரங்குகள் அப்பிளவுகளில் சிக்கித் தவிப்பது போல் உன் பிறவி துன்பமுடையதாகிவிடும். இதோடு வாலைத் தாயின் தெய்வ சாபமும் உன்னை வந்து சேரும் என்பதாம்.

519. இல்லைஎன்ற சொல்லதுவும் உண்மை உண்மை
என்மகனே சாத்திரத்தைக் கொடுக்கொணாது
தொல்லைவரும் உமையவள்மேல் ஆணை ஆணை
சொன்னதொரு வர்த்தைதன்னைத் தட்ட வேண்டாம்
சள்ளைஎன்ற தாய்தந்தைமேல் ஆணை ஆணை
வெல்லுவதும் உன்குலத்தைக் காக்கும் தெய்வம்
மேலான உன் மனைவி மக்கள் மீதாணை
என்மகனே சொல்லவேண்டாம் தொழில்பொல் லாதே.

நான் உங்களுக்குச் சொன்னதெல்லாம் அதாவது பட்சி வித்தைக்கு நிகரானது என்பது உண்மையே. இதை வெளியார்க்குச் சொன்னால் தொல்லைகள் உண்டாகும். இது உமையம்மையின் மேலாணை. நான் சொன்ன வார்த்தைகளைத் தட்டவேண்டாம். நம் தாய்தந்தை மேல் ஆணை ஆணை என்று சொல்லுவேன். தனக்கு வாய்த்த மனைவி, மக்கள் மேல் ஆணை ஆணை. உன்னைக் காக்கும் உன் குலதெய்வம் கூட உன்னைக் காக்க முடியாமல் போகும். ஆகையால் இதைத் தகுதியில்லாதவர்களுக்குச் சொல்லாதே.

620 தொழில் செய்யும் ஜோசியங்கள் சொல்லும் போது
தொடுத்திடுவாய் விநாயகரைப் பூசை பண்ணி
சுழிவு சொல்லித் தள்ளாதே பாவம் பாவம்
கண்டபடி குறிகுணங்கள் நன்றாய்ச் சொல்லு
வழிசொல்லி உறுதியதாய்க் கொண்டு விட்டால்
வந்ததோர் பீடையெல்லாம் விலகிப் போகும்
தெளிவு சொல்லி நன்மைதுன்மை திடமாய்ச் சொல்லி
செய்திடுவாய் வாலையுட பூசை தானே.

நீ ஜோசியத்தைத் தொழிலாகக் கொண்டால் விநாயகப் பெருமானை வணங்கி விட்டுச சொல்வாயாக. வீண் சாக்கு சொல்லி வந்தவர்களை திரும்பிப் போகச் சொல்லாதே. நீ காணும் குறிகுணங்கள் இவற்றை அன்றிப் பார்த்து வந்தவர்களுக்கு இதமானவற்றை ஆனால் உண்மையானவற்றைச் சொன்னாயானால் அவர்கள் பீடையெல்லாம் விலகிவிடும். தெளிவாக உண்மையான முடிவுகளைச் சொல்வாயாக. எப்பொழுதும் வாலைத்தாயை வழிபாடு செய்வாயாக.

521 பூசைதனை மறவாதே ஞானமற வாதே
பொல்லாத பஞ்சாக்கரம்தான் அஞ்சு பேரை
நீசம்வைத்து மனதுருகி ஆகக் கொண்டு
நிலைத்ததொரு சக்திசிவம் பூசை பண்ணி
பாசம்வைத்து உன்னுயிர்க்கும் பழிதே டாதே
பழிகார சிவயோகம் பாதை காணும்
ஆசைவைத்துப் பெண்மேலே மோகம் கொண்ட
அன்பதுபோல் இருந்தக்கால் பலிக்கும் பாரே.

இந்த வித்தை பலிக்க வேண்டுமென்றால் பூசையை மறக்கக்கூடாது. பஞ்சாட்சரம் சாதிக்கக் கஷ்டமானது. அதை ஒலித்து மனதுருகி நிலையான சிவத்தையும் சக்தியையும் பூசை செய்வாயாக. உலகத்தில் அதிக பாசம் வையாதே. அதனால் பூசை பலியாமல் பழிதான் ஏற்படும். இதனால் இந்த சிவயோகம் பழிகார யோகம் எனப்படும். ஒரு இளம் பெண்ணின் மேல் இளம் வயதுக்காரன் எவ்வளவு அன்பு பாசம் வைப்பானோ அவ்வளவு உள்ளன்புடன் சிவயோகம் பழகினால் இந்த பட்சி வித்தை நன்றாகப் பலிக்கும்

522 பலிக்குமடா பட்சியிலே தொழிலைச் செய்தால்
பழிசெய்யாத் தானிருந்தால் நிவர்த்தி கேளு
கெலிக்குமடா எக் கியங்கள் செய்ய வேணும்
கேள்மகனே பச்சிலையும் தழைய வேணும்
சொலிக்குமடா வாலையுட பூசை வேணும்
சொர்னமது வஸ்திரங்கள் காண வேணும்
அளிக்குமடா மணமகிழ கொடுக்க வேணும்
அப்போதே கன்மமங்கே தொலையும் பாரே!

பலிதமான பட்சியின் தொழிலைச் செய்யும்போது இதன் சாபப் பழியானது உனைச் சாராதிருக்க நிவர்த்தி விமோசன யாக யக்ஞங்கள் அந்தந்த பட்சிகளின் மூலிகைத் தழை சமித்துக்களால் செய்யவேணும். வாலை பூசை செய்யவேணும். அப்படிச் செய்தால் பட்சி வித்தையால் பொன் மணி ஆடை ஆபராணிதைகள் பொருள் இவை சேரும். அதைப் பெரும் பகுதியும் ஏழைகளுக்குத் தானமாக அளிக்கவேணும். அப்போதுதான் உன் கர்மங்கள் எல்லாம் தொலைந்து போகும்.

523 தொலையுமே செலவுசெய்ய மனது நொந்தால்
கொடுத்திடுமே கன்மமது தொலைக் கொணாது
அலையுமே உன்சடலம் அழிந்து போகும்
அப்பனே ஆராலே திருப்பக் கூடும்
வலையிலே அகப்பட்ட மானைப் போல
வளர்ந்திடுமே கன்மமென்ற பீடை தானும்
சிலையதுபோல் இருக்காமல் செலவு செய்து
திரும்புவதும் அரிதான வித்தை தானே.

இப்படி வந்த பொருளைத் தானம் செய்ய செலவு செய்ய மனம் இன்றி இருந்தால் கர்மவினையானது நிலைத்து உன் உடலும் அழியும் அளவுக்குக் கஷ்டமும் நோயும் காணும். இந்த நிலையை யாராலும் சரிசெய்ய முடியாது. வலையிலே அகப் பட்ட மான்போல கர்மவினை என்னும் வலையிலே அகப்பட்டு உன் பீடை வளரும். எனவே வந்த பொருளைச் சிலைபோல அசையாமல் வைத்துக் கொள்ளாமல் செலவு செய்வாய் இதுதான் அரிய வித்தையாகும். வினையும் தொலையும்.

524 அரிதாகும் திரும்புவதற்கு வெளியாய்ச் சொன்னேன்
அப்பனே திருப்பினவன் அவனே சித்தன்
குறியான தேவிபூசை மறவா தேகேள்
கொடுமையான பச்சிலையும் தலையும் வேணும்
வழியான தருமமது செய்ய வேணும்
மக்களே வினயம்வைத்துப் பார்க்க வேணும்
நெறியான நிலையறிந்து ஞான மார்க்கம்
நிலைக்குமடா பட்சியுட கருத்து தோணும் பாரே.

இப்படிப் பட்சி சாபத்தைப் பாதிக்காமல் திருப்புவது அரிதாகும். யார் இதைச் சாதிக்கின்றானோ அவனே சித்தனாவான். இதனால் தேவி பூசையை மறவாதே. பட்சி மூலிகைகளின் முதல் ஆரம்பம் மூலம் எனும் வேரை அறிந்து அதன் மூலமாக அட்ட கருமமும், நிவர்த்தியும் செய்யவேணும். முன்சொன்னதுபோல் வகையாத் தருமம் செய்யவேண்டும். வழிபாட்டில் நம்பிக்கை அடக்கம் வினயம் வேண்டும். இந்த நிலையான ஞானமார்க்கத்தைப் பின்பற்றவேணும். அப்போது பட்சிகளின் கருத்து உனக்குத் தோன்றும். (பஞ்சபூத உயிர் சக்தியால் எல்லாம் உனக்குத் தோன்றும். அதை உனைப் பின்பற்றினோர்க்குச் சொல்லும்போது அவை பொய்யாமல் பலிக்கும்) என்பதாம்.

525 தோணுமே உலகிலுள்ள மாந்தர்க் கையா
தோணுவது கோடியிலே ஒருவன் உண்டு
காணுமே கருக்குருவும் காணாது பாரு
கடினமடா அவன்மனது கலங்கும் போது
பேணுமே சாஸ்திரத்தைப் பேணார் பாரு
புல்லறவு கொண்டசென்மம் கொண்டோர் மெத்த
நாணுமே வீணாகப் புலம்பிச் சொன்னேன்
நலமான சாஸ்த்திரம்தான் சொலிக்கும் பாரே

இப்படி சாதிப்போர் கோடி பேர்களில் ஒருவன்தான். அவனுக்கு மட்டும் இந்த வித்தையின் கருவான சாரமும் அதை உபதேசிக்கும் குருவும் தானாக ஏற்படும், இதைத் தெரியாதவர் தெரியாமல் ஈடுபடுபவர். சாஸ்த்திரம் சொன்ன இந்தவழியைப் பின்பற்றாததால் அவர்கள் மனம் மிகவும் கலங்கும். இப்படி வினையில் மட்டும் மோகம் கொண்ட புல்லறிவாளர் சென்மம் கொண்டவர்கள் மெத்த உண்டு. அவர்கள் அழியக்கூடாது என்ற இரக்கத்தால் தான் நான் பலமுறையும் புலம்பிச் சொன்னேன். இது வீண் போகாது. இந்த சாஸ்த்திரம் மிகவும் உயர்ந்தது நலமானது. இதை உரிய வழியில் பின்பற்றினால் நன்றாகப் பலிக்கும் என்று அறியவேண்டும் என்பதாம்.

526 வெளிக்கிடாய் சொன்னதொரு சாப மெல்லாம்
வீணாகப் போகாது அனுபவிக்க வேணும்
துலிக்குமடா உன்குலமே அழிந்து போகும்
சொல்லாத பிடையது தொலையும் பாரே
வழியான மனதுடனே கண்டு சொல்லு
வகையான பாழ்நரகில் விழாதே சொன்னேன்
கனிவிடால் தள்ளிவரும் சித்திமுத்தி நிலை உண்டு
கற்போலே நீஇருந்து சாதிப்பாயே.

நான் முன்னே சொன்ன சாபமெல்லாம் தவநெறிப்படி நிவர்த்தி செய்யா விட்டால் பட்சி சாபம் சித்தர் சாபம் வீண் போகாது. பலித்துப்போகும், உன், குலமே அழிந்து போகும். ஆதலால் தவமுறை வழிபட்டு நெறியான உள்மனதுடனே உண்மையைக் கண்டு பலனைப் பிறருக்குச் சொல்லுவாயாக. இல்லை என்றால் மறுமையில் நீ பாழும் நரகில் விழுந்துவிடுவாய். எனவே எச்சரிக்கையாக இதை நான் மீண்டும் மீண்டும் சொல்லுகிறேன் சொன்னேன். இதை நெறிப்படிச் செய்தால் உன்னைக் கனிய வைக்கும். களிப்பைத் தரும். உன் விடாய் தீரும். சித்தியும் ஏற்படும். கல்லைப்போல் நிலையாக இருந்து நீ இதைச் சாதிப்பாயே.

527 சாதிப்பாய் அதனாலே மோட்ச முண்டு
தள்ளிவிடு கன்மிகளை நோக்க வேண்டாம்
சோதிப்பாய் அவன்மனதை நெடுநாள் கொண்டு
சொல்லாத சூட்சமெல்லாம் மறைத்து வைத்து
போதிப்பாய் ஞானமெல்லாம் பூண்ட பின்பு
பொல்லாத பட்சிவித்தை சொல்லி வைநீ
சாதிப்பாய் கருகுருவும் வெளியாய்ச் சொன்னேன்
அறிவதுதான் வெகுநினைவாய் பட்சி அறிவது தானே.

நான் சொன்னபடி சாதித்தால் மோட்சமுண்டு. கர்மிகளான வீண்மக்களை இந்த உலகில் உள்ள சுயநலக்காரர்களை அண்டவிடாதே தள்ளிவிடு. எந்தச் சீடன் வந்தாலும் அவனை அதிக நாள் சோதித்துப்பார். சூட்சுமத்தை மட்டும் மறைத்து வைத்து, மற்றதையெல்லாம் தகுதி உள்ளவர்களுக்குச் சொல்லுவாயாக. அவன் தகுதியான சீடன், முழுஞானமும் தகுதியும் பெற்ற பின்பு உண்மையான சூட்சுமத்தை அவனுக்குப் போதிப்பாயாக. ஆதி காலமுதல் இதன் கருவை, அதாவது மூல உண்மையை அறிந்த குருவான நான் உனக்கு இதை வெளிப்படையாக, சொன்னேன்.

எனவே வெகு கவனத்துடன் பட்சி வித்தையை அறியவும். பிறருக்கு ஞானத் தகுதிஅறிந்து உபதேசிக்கவும் வேணும் என்பதாம்,

# பிற்சேர்க்கை

## விடுபட்ட விளக்கங்கள்

I இந்த நூலில் 25 மற்றும் 26-ம் எண்ணுள்ள பாடல்கள் வடிவம் யாப்பமைதிப் படி அச்சாகவில்லை. அவற்றைக் கீழே கொடுத்துள்ள சரியான வடிவில் படித்துக் கொள்ளவும்.

பக்கம் 52ல் 25ம் பாடல்:

இந்து அழற் பகலில் இயல்பான பஞ்சபட்சி
சேயிர விக்கு வல்லூ றாந்தை காகம் கோழி மயில்
புத்திமதி இரண்டிற்கும் ஆந்தை காகம்
கோழி மயில் ல்லூறாகும்
பொன்ன னுக்குக் கோழிமயில் வவல்லூ றாந்தை
அந்தமுள்ள புகர்தனக்குக் கோழிமயில் வல்லூறாந்தை காகம்
அரிசனிக்கு மயில் வல்லூ றாந்தை காகம் கோழி என்றறிந்து
தந்தவகை உண்டுநடந் துலகாண் டுறங்கி
இறந்திட சாமம் தோறும
ஒன்றோ டொன்றுநேர் வலமே வையே

பக்கம் 55ல் 26ம் பாடல்:

இந்துநுதல் இரவில் இன்பமுள்ள பஞ்சபட்சி
சேய்இர விக்குக் காகம் மயிலாந்தை
கோழிவல் லூறு
புந்திமதி இரண்டிற்கு கோழிவல் லூறு
காகம் மயிலாந்தை
பொன்னதுக்கு மயிலாந்தை கோழிவல்
லூறே காகம்
அந்தமுள்ள புகர்பதனக்கு வல்லூறு காகம்
மயிலாந் தைகோழி வல்லூறு
அரிசனிக்கும் ஆந்தை கோழி வல்லூறு
காகமயில் தானறிந்தே
இந்தவகை உண்டுநடந்து உலகாண்டு
உறங்கி இருந்திடச் சாமம் தோறும்
ஒன்றோ டொன்றுநேர் இடமே வையே.

II நூலினுள் சொல்லப்படாத சில விஷயங்கள் மீண்டு விளங்கியதால் இங்கு எழுதப்பட்டுள்ளன. வாசகர்கள் பயன்பெறுக.

## பெயரெழுத்தால் பிறப்புப் பட்சி

1. ஒருவன் நட்சத்திரப்படி பட்சி அறிய முடியாதபோது அவன் பெயரெழுத்தைக் கொண்டு பட்சி இன்னதென ''தூலபஞ்சபட்சி கண்ணாடி'' என்ற தலைப்பில் 69-ம் பக்கத்தில் சொல்லி இருந்தாலும் முழு விளக்கம் கீழே தரப்படுகிறது. 10-ம் பக்கத்தைப் பார்க்கவும். ''அட்சரப்பட்சி'' சக்கரம் என்ற பதகத்தில் இரண்டு பட்சத்திற்கும் பட்சிகளின் எழுத்துக்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

ஒருவன் பெயர் 'கதிர்வேலு' என்று வைத்துக் கொள்வோம். இவனோடு நாம் வளர்பிறையில் விவகாரம் பண்ணவேணும் என்று கொண்டாலும் இவன் பட்சி அறிய விரும்பினாலும் சக்கரத்தில் பூர்வபட்சத்தின் கீழ் அ.ஆ.ஐ, ஔ என்ற எழுத்துக்களும் இந்த உயிரெழுத்துக்கள் ஏறிய உயிர்மெய் எழுத்துக்களும் வல்லூறு என்று அறிகின்றோம். இப்பொழுது பெயரின் முதல் எழுத்து 'க'வை க்+அ என்று பிரித்தால் இது'அ'என்ற உயிரெழுத்தில் ஆரம்பித்துள்ளது புரியும். எனவே வளர்பிறையில் இவன் பட்சி வல்லூறு என்று ஆகிறது. இதுவே தேய்பிறையானால் இதே கந்தசாமிக்குப் பட்சி கோழியாகும். இப்படியே ஆனந்தன். இங்கர்சால் போன்றவை முறையே வளர்பிறையில் வல்லூறு, ஆந்தையாகவும், தேய்பிறையில் கோழி, வல்லூறாகவும் மாறும்.

'இப்படியே மற்ற எல்லாப் பெயர்களையும் அவற்றின் முதலெழுத்து நேர் உயிர் எழுத்தாக வந்தால் அதற்குரிய பட்சியையும், உயிர்மெய் எழுத்தாக வந்தால் வந்தால் மெய்யெத்தைப் பிரித்து உயிரெழுத்து ஒலிக்கு ஏற்பப் பட்சிகளைப் பட்சங்களுக்கு ஏற்றபடி முடிவு செய்து கொள்ளவும்.

## பட்சிகளின் இயல்பான வலுவைப்பற்றி

2 பட்சிகள் ஒவ்வொன்றும் பகல், இரவுகளில் ஊண், அரசு, நடை, துயில், சாவு என்ற தொழில்களைத் தனித்தனி செய்கின்றன. பட்சி ஒரு தொழிலைச் செய்யும் போது. அதே தொழிலை, மற்ற எந்தப் ஒரு பட்சியும் அதே நேரத்தில் செய்யாது.

இந்த 5 தொழில்களில் சாவைவிடத் துயிலும், துயிலைவிட நடையும், நடையை விட ஊணும் ஊணைவிட அரசும் ஒன்றுக்கொன்று வலு உள்ளவை ஆகும். இதுதான் பட்சி நூலின் அடிப்படையான கொள்கையாகும். அரசு தான் எல்லாவற்றையும்விட வலியதாகும். ஊண், அரசு இந்த இரண்டு தொழில் காலங்கள் எப்போதும் நன்மை தரும். தேய்பிறையில் மட்டும் ஊணைவிட நடைக்கு வலிமை அதிகம் என்றது பஞ்சபட்சி நூல் கொள்கையாகும். பொதுவாக சாவு, துயில், நடை. ஊண், அரசு இந்த வரிசைதான் ஒன்றுக்கொன்று வலுவுள்ளவை. இதை ''உரோமரிஷி வினாடி பஞ்சபட்சி'' நூலில் கீழ்வரும் பாடலில் கூறப்படுகிறது.

## பட்சம் இரண்டுக்கும் பட்சிகளின் வலு

528. பாரப்பா பஞ்சபட்சி வலுவைச் சொல்வேன்
பண்பான ஊண்பட்சி வலுவோ முக்கால்
சேரப்பா நடைப்பட்சி ஊணிற் பாதி
செல்லுமோர் அரசின்வலு செப்பொ ணாது
நேரப்பா தூங்குகின்ற பட்சி தானும்
நேரப்பா நடைவலுவிற் பாதி யாகும்
ஆரப்பா அறிவார்கள் மரணப் பட்சி
அதற்குவலு தூக்கத்திற் பாதி யாமே!

இதன்படி ஊண்பட்சி வலு முக்கால், அதிற்பாது நடை, அதிற்பாதி துயில், அதிற்பாதி சாவு, அரசு பட்சிக்கு எல்லாவற்றையும் விட வலு அதிகமாகும். அதாவது முழு வலிமையாகும். இதன் இரண்டு பட்சத்திற்கும் பொதுவான பட்சி வலு அளவு மேற்கண்ட பாட்டின்படி ஊண் - 3/4, நடை 3/8, துயில் 3/16, சாவு 3/32, அரசு -1 (ஒன்று) ஒனவே சாவு, துயில், நடை, ஊண், அரசு என்றவை ஒன்றை விட மற்றது வலுவுள்ளது. அரசு எல்லாவற்றையும் விட வலுவானது என்பதை மறக்கக்கூடாது. இது பொதுவான விதியாகும்.

ஆனால் 65-ம் பக்கம் 36-ம் பாடலிலும், 202, 203-ம் பக்கம் 65, 66-ம் பாடல்களிலும் இது வேறு விதமாக மாறுபட்டுக் கூறப்பட்டுள்ளது தெரியவரும். இதை சிறப்பு விதியாகக் கொள்ளவும். பொது விதியே எப்பொழுதும் அனுசரிக்க வேண்டும். இதை மறக்க வேண்டாம். குழப்பம் கொள்ள வேண்டிய அவசியமும் இல்லை.

## ஒரே தொழிலின் பட்சிகளுக்குள் தாரதம்யம்

3 இப்படி இருக்கும் போது 5 பட்சிகளுக்கும் உள்ள ஒரே தொழிலின் தாராதம்யத்தைச் சித்தர்கள் பல விதமாகக் கூறியுள்ளார்கள். உரோமரிஷியார் கூறும் பின்வரும் பாடல்கள் கவனத்திற்குரியவை.

529. பாதிஎன்று சொல்லுவது வலுவே கொஞ்சம்
பண்பான அரசினுடை வலுதான் மிச்சம்
சோதிஎன்ற அரசுவலு ஒன்றும் இல்லை
சொல்லரிது ஊண்பட்சி சுயம்பாகி யாகும்
வாதிஎன்ற நடைப்பட்சி வேட்டைக் காரன்
மற்றபட்சி எண்ணவன் ஆகும் பாரு
சேதியென்ற அரசனுக்கு இணைவே றுண்டோ
செல்லிடமெல் லாம்செல்லும் திண்ணம் தானே.

மேலும் ஒரு தொழில் வலுவில் மற்றது பாதி என்று சொன்னது வெறும் உபசார வழக்குத்தான் அரசு என்ற தொழிலுக்கு வலு ஒன்று என்பதில்லை. அது மிகவும் அதிகமாகும். ஊண் தொழிலையுடையவன் சுயம்பாகி அல்லது சமையற்காரன் போன்ற ஊழியம் செய்பவன். நடைத்தொழில் உடையவன் வேட்டைக்காரன்.

அதாவது சுற்றித்திரியும் வேலைக்காரன் போன்றவன். மற்ற துயில், சாவு தொழில் குறிப்பவை எல்லாம் உதவா. அவற்றால் பயனில்லை. அரசு தொழில் உடையவன் தான் செல்வாக்கு மிக்கவன். எல்லாரையும் அடக்கி ஆளுபவன்.

530. திண்ணமான அரசுக்குப் பகையோ யில்லை
செயமான மித்துருவே ஆகு மெல்லாம்
வணங்குமடா உலகமெல்லா மரச னுக்குள்
வணங்குமடா மிஞ்சாது வார்த்தைக் கேட்டு
எண்ணமடா அரசனையே பகைத்த பேர்கள்
ஈடேறி உலகதனில் வாழ்வ தில்லை
சொன்னோமடா அரசதுவே மிச்சம் மிச்சம்
தொல்புவியில் அரசனுக்கோர் இணையு மின்றே.

அரசு தொழில் உள்ளவனுக்கு எப்பட்சியும் தொழிலும் பகையே கிடையாது. எல்லாரும் இவனுக்கு நட்புதான். இவன் சொல்லை யாரும் மிஞ்சமாட்டார்கள். இவனே எல்லாரையும் விஞ்சுவான். இவனைப் பகைத்தவர்கள் வாழ்வதில்லை. இவனுக்கு இணை இவனே தான்.

### பட்சிகளின் அரசுவலுவில் தாரதம்யம்

4. இப்படி அரசு தொழில் எல்லாவற்றையும்விட வலுவானது என்று சொல்லப் பட்டாலும் எல்லாப் பட்சிகளின் அரசு தொழிலும் சம வலுவு உள்ளவர்களாக இருப்ப தில்லை. அவற்றில் தாரதம்யம் உண்டு. அதைக் கீழ்வரும் பாடலில் விளக்குகின்றார் உரோமரிஷியார்.

531. இணையில்லா ஊண்பட்சி ஆந்தை யாகும்
என்மகனே நடைபட்சி வல்லூ றாகும்
கணையுள்ள அரசதுவே காக மாகும்
கனமான உறக்கமது கோழி யாகும்
கணை இல்லா மரணமிது மயல தாகும்
சொன்னோமே பூருவமும் அமரம் தானும்
துணையுள்ள இதனுடைய சூட்சம் கண்டால்
தொல்புவியில் அவனைவெல்வார் இல்லை தானே.

காகத்திற்குத்தான் அரசு தொழில் முழுவலிமையுள்ளது. ஆந்தையின் அரசு தொழில் வலிவு ஊண் தொழிலுக்குத்தான் சமமானது. வல்லூறு பட்சியின் அரசு தொழில் நடை தொழில் வலுவளவுதான் உள்ளது. கோழியின் அரசு தொழில் உறக்கத் தொழில் அளவுதான் வலுவுள்ளது. மயிலின் அரசுதொழில் சாவுத் தொழிலின் அளவுதான் வலு உள்ளது. இதுதான் மேற்பாட்டின் தெளிந்த பொருளாகும். எனவே காகத்தைத் தன் பட்சியாகப் பிறந்தவன் எல்லாரையும் விட உயர்வாக விளங்குவான். மேற்கண்ட கொள்கை பெரும்பாலும் இந்நூல் 22-ம் பக்கத்தில் சொல்லியுள்ள பிறப்பு பட்சியுள்ளதற்கே பொருந்தும். இதன் பலன் சாதகப் படலத்தில் விளக்கப்பட்டுள்ளது.

தவிரவும் மேற்கண்ட தாரதம்ய வலுவின் அளவை 141-ம் பக்கத்தில் பதகத்தூடன் விளக்கியுள்ளோம். பஞ்சபட்சி சாஸ்த்திரத்திற்கே இது சாவி போன்றது. சிந்தைத் தெளிவுள்ளவர் அறவழி நின்று ஏற்கும் இடமெல்லாம் பயன்படுத்திக் கொள்க. இதனாலேயே இதன் உயர்வைக் குறித்து இதன் உண்மையை அறிந்தவனை வெல்வார் யாருமில்லை என்று செய்யுள் தலைக்கட்டி முடிகிறது. சித்தர்கள் சூக்குமம் ஆதலால் இதற்குமேல் விளக்குவதற்கில்லை.

## உவக்கால திசைப்பட்சி

பூர்வபட்சம் அமரபட்சம் இரண்டுக்கும் திசைப்பட்சிகள் (பட்சிகளுக்குரிய திசைகள்) தனித்தனியே கூறப்பட்டுள்ளன. பக்கம் 64, 136ல் கவனிக்கவும், ஆனால் பௌர்ணமி அமாவாசைகளில் பட்சிகளுக்குத் திசை தனியாகக் கொடுக்கப்பட்டுள்ளது. அகத்தியர் இது விஷயமாகக் கூறுவது:

532 மத்திபத்தில் வல்லூறு வாழாந்தை தெற்காகும்
உற்ற நிதிகிழக்கே ஒண்காகம — சற்றிடமே
தெற்காகும் கோழி சிறந்தமயில் மேற்காகும்
எக்காலும் சாற்றுதற்காம் ஈடு.

வல்லூறும் நடுவாகும், ஆந்தை தெற்காகும். காகத்திற்குக் கிழக்கு திக்காகும். கோழிக்கு வடக்கு திக்காகும் (சற்றிடமே தெற்காகும் கோழி என்று கோழிக்கு மீண்டும் தெற்கு கூறினால் சற்றிடமே தெற்கு என்றதால் இடம் என்றது மாறானது என்று பொருள் கொண்டு இதில் சொல்லாத தெற்குக்கு மாறான வடக்கு என்று கொள்ளப்பட்டது) மயிலுக்கு மேற்குத் திக்காகும் என்றறியவும், ஏற்ற இடங்களில் இதைப் பயன்படுத்திக் கொள்ளலாம்

## பொதுப்படலம்

5 195-ம் பக்கம் பொதுப் படலத்தில் இருபட்சத்துக்கும் பட்சிகளின் நிறம், இடம், காலம், பூதம் போன்ற பல காரகங்கள் கூறப்படுகின்றன. அதில் பொதுவாக உறவு, சத்ரு மித்ரு பட்சிகள், அவற்றின் வேகம் என்ற முடுகு பட்சி என்ற தன்மையும் கூறப்படுகின்றன. இதில் ஒரு பட்சி மற்றொரு பட்சியை மாய்க்கும் சாக அடிக்கும் வலிமையும் பெற்றுள்ளது உண்டு என்று மற்றவர் சொல்லாததை அகத்தியர் கூறுகின்றார் அப் பாடல் வருமாறு.

533 மயிலுக்கு மாற்றான் வலிதாந்தை கோழியாம்
இயல்வலிதாம் கோழி இரண்டும் — கயவாகும்
முன்வலிது வல்லூறு நான்கினுக்கும் காக்கை
பின்வலி தாகுங்காண் பெயர்த்து.

எப்பொழுதும் மயிலைவிடக்கோழி ஆந்தை வலிவுள்ளவை. ஆகையால் அதனைக் கோழி ஆந்தை இவை வென்று மாய்க்கும். கோழி இயல்பாகவே வலிதானாலும்

அவற்றை மீனாகவே எண்ணி வல்லூறு அவற்றோடு மயிலையும் சேர்த்து, இம் மூன்றையும் வென்று (மாய்த்து) விடும். இது 'முன்வலிது' என்ற பூர்வபட்சத்தில் அதிக வலிமையுள்ளதாக வல்லூறு விளங்கும். பொதுவாக மற்ற மயில், கோழி, ஆந்தை ஆக மூன்றையும்விட வல்லூறு வலிவு உள்ளதாகும். அடுத்து மேற்சொன்ன நான்கையும் விட காகமே வலிவுள்ளதாகையால் அவற்றைக் காகம் வென்று மாய்த்து விடும் அதுவும். 'பின்வலிது' என்ற அமா பட்சத்தில் காக்கை இன்னும் அதிக வலிவுள்ளதாக இருக்கும் என்றறிய வேண்டும்.

## அட்டகன்மப்படலம்

6 பட்சிப் பொருத்தம் பட்சிகளை வைத்து மந்திரமுறையில் அட்ட கன்மம் செய்தல் அட்ட கன்மப்படலத்தில் 330-ம் பக்கத்தில் கூறப்பட்டுள்ளது. எதிராளி அல்லது அட்ட கன்மத்தில் ஈடுபட வேண்டிய பட்சியின் வலுவுக்குப்பட்சிப் பொருத்தம் என்று தனியாக அகத்தியர் பஞ்சபட்சி கூறுகின்றது. அதன் செய்யுட்களின் சுருக்கம் உரைநடை வருமாறு:

1 அட்டகன்மம் ஈடுபடுபவர் இருவராகத்தான் எப்போதும் இருப்பர் தான் மற்றும் மாற்றான் இப்படிப்பட்ட நிலையில் இருவர் பட்சிகள் யாருக்கும் வல்லூறும் ஆந்தையாக வந்தால் வல்லூறுக்குத்தான் வலுவு உண்டாம். இது ஆந்தைக்கு ஆகாது, ஆந்தைக்கு ஊண் அரசு இருந்தால் ஆந்தை ஒருவாறு சமாளிக்கும். உறக்கம் சாவானால் கட்டாயம் ஆந்தைக்குத் தோல்வியே எனவே மாற்நான் பட்சி வல்லூறாக வந்தால் தான் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்பதாம்.

2 மேற்படி நிலையில் காகமும் கோழியும் பட்சிகளானால், இங்கு காகம் எத்தொழிலைச் செய்தாலும் அதற்கு வல்லூறு தோற்றுப்போகும். கோழி ஊணர சானால் ஒருவாறு சமாளிக்கும் மற்ற பட்சிகள் இதன் இடத்தில் இரண்டாம் பட்சம் தான்.

3 ஒருபட்சி மயிலானால் அதனிடத்தில், மயில் சாவு உறக்கத்தில் இருந்தாலும், மற்ற பட்சிகள் வலுத்திருந்தாலும் அதனிடத்தில் எல்லாம் தோற்றுப் போகும். இது தப்பாது என்று கூறுகின்றான்.

இது அட்ட கன்மத்திங்கு மட்டும் தான் பொருந்தும். மற்ற இடங்களில் மயில் எல்லாவற்றினையும்விட வலுக்குறைந்த பட்சியாகவே கூறப்படுகிறது. அட்ட கன்மம் எதிர்மறையாக (Negative) செயல் ஆகையால் எல்லாவற்றையும் விடப் பலவீனமான மயில் மாறாக எல்லாவற்றிலும் வலு உள்ளதாக மாறிவிடுகிறது.

அட்ட கன்மம் செய்யும் காலத்தில் தொழில்களின் வலிமையைச் சீர்தூக்கிப் பார்த்து தன் பட்சி வலுத்து மாற்றான் பட்சி தாழ்ந்துள்ளபோது (330-ம் பக்கம் அட்ட கன்மப் படலம் பார்க்கவும்) ஈடுபட வெற்றி இந்நிலையில் பட்சிகளின்

தொழிலுக்கும் பருவம் பேசப்படுகின்றது. அதைக் கூறும் அகத்தியர் பஞ்சபட்சிப் பாடல் வருமாறு. இது அங்கி பலன் என்றழைக்கப்படுகிறது.

534. உண்கின்றான் பாலன் உயர்நடையா னேகுமரன்
பண்பா னரசனே பாராள்வான் – நண்புபெரு
மூற்றும் துயில்கிழவன் மோனமுடிந் தோன்சாவோன்
பற்றும் தவத்தின் பலன்.

ஊண் தொழிலுக்குப் பருவம் பாலிய பருவமாகும். நடை தொழிலுக்குப் பருவம் இளைஞனாகிய குமரப் பருவமாகும்.

அரசுத் தொழிலுக்கு நன்கு வளர்ந்த ஆளும் மனிதப் பருவமாகும் (Matured Man)

துயில் தொழிலுக்குச் செயலிழந்த கிழப்பருவமாகும்.

சாவுத் தொழிலுக்கு எல்லாம் முடிந்த இறப்பே பருவமாகும்.

இதில் பட்சியின் வலுத்தன்மை கூறப்பட்டுள்ளது. அதுவுமின்றி அட்ட கன் மத்தில் மாற்றான் பட்சியின் தொழிலுக்கேற்ப அவன் எந்தப் பருவத்தில் உள்ளானோ அதைவிட வலுவான பருவத்தில் அல்லது அத்தொழிலின் திசையில் தானிருந்து கொண்டு செய்தால் தனக்கு வெற்றி என்ற நுணுக்கமும் இதில் கூறப்பட்டுள்ளது.

7. ஆரூடத்திற்கு ஒரு விளக்கம் 387-ம் பக்கம் முதல் பட்சிகள் அவற்றின் தொழில்களைக் கொண்டு விளக்கப்பட்டுள்ளன. பொதுவாக ஆரூடம் சொல்லு பவனுக்குச் சித்தன் போலவே சிறந்த மதியூகம் வேண்டும் என்று ஏற்படுகிறது. இது பின்வரும் அகத்தியர் பாடலால் அறியலாகும். முனிவர் நூல்முறை

535. ஒன்று திசைக்குருவி யொன்றிவரு மோர்தூதன்
நின்றநிலை ஆரூடத்தில் தேருமே - நன்று
வழுவா துரைத்தாயும் வல்லவர்கள் சொன்ன
முழுவா கடத்தின் முறை

ஆரூடம் கேட்க வருவோன் எந்தத் திசையில் நிற்கின்றான் என்று பார்க்க வேண்டும். அத்தத் திசைக்குரிய பட்சி எந்தத் தொழில் செய்கிறது. அதன் நிலை என்ன என்று முதலில் காண வேண்டும். அடுத்து அப்போது அரசு தொழில் செய்யும் பட்சியின் திசையே அதுவாக இருந்தால் முதலில் காணவேண்டும். அடுத்து அப்போது அரசு தொழில் செய்யும் பட்சியின் திசையே அதுவாக இருந்தால் முதலில் காண வேண்டும். அடுத்து அப்போது அரசு தொழில் செய்யும் பட்சியின் திசையே அதுவாக் இருந்தால் அவன் கேட்ட காரியம் நடக்கும். அது வேறாக இருந்து, அவன் நின்ற திசையின் பட்சி அதற்கு சத்துரு ஆகித்தொழில் தாழ்ந்தால் காரியம் நடவாது. இப்படி இந்தச் செய்யுளுக்குப் பல விதத்தில் அனுபவத்தால் பொருள் கொள்ளலாம். ஆரூடம் சொல்லும்போது தக்கபடி பயன்படுத்திக் கொள்க.

# பட்சி சாபம் போக்கும் விதம்

8. பட்சி சாத்திரத்தை நாம் உபயோகப்படுத்துவதால் பட்சிகளின் சாபம் நமக்கு ஏற்படும் என்றும் அதை நீக்கும் வழிபாட்டை நாம் செய்யவேண்டும். அதனால் சாபம் நீங்கும் என்றும் அப்பொழுதுதான் பட்சிவித்தை பலிக்கும் என்றும் அகத்தியர் கூறுகின்றார் பொருள் விளங்க முடியாத அப்பாடல்களுக்கு நாம் ஒருவாறு பொருள் காண முயன்றுள்ளோம், எனவே இத்தவ நெறியில் நின்று இப்பஞ்ச பட்சி சாத்திரத்தைப் பயன்படுத்திக் கொள்க. இவற்றை ஆன்றோர் பால் கேட்டு உணர்க.

536. 1) மூலத் துதித்து முளைத்தொரு மூதண்டம்
காலத்தைக் கண்ட தறியிரோ-ஆலத்தை
உண்டா னறிய உலரா மதிநிறைத்துத்
கண்டார் இருள்நீக்கும் காண்.

மூலமாகிய குண்டலியை மேலே முளைத்து எழச் செய்து அந்த யோகத்தாலேயே காலத்தை வெல்ல வேண்டும் என்பதை அறியீரோ உலகமாயை யாகிய நஞ்சை யெல்லாம் நாம் இந்த யோகத்தால் சீரணித்துக் கொள்ளலாம். இதைத் தெரிந்தவன் தான் நஞ்சுண்ட சிவன் எனப்படுவான். இதற்கு மேல்நிலையில் சென்று குண்டலியை உச்சியில் உள்ள சஹஸ்ராரத்துடன் முட்டச் செய்து அங்குள்ள சந்திரனான உயர் நிலையை உலராமல் காயாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இந்த யோக நிலை அடைந்தவன் தான் பட்சி சாபத்தை நீக்கிப் பட்சி வித்தையைப் பலிக்கும்படி பயன் படுத்துவான் என்பது பாடலின் சாரமான பொருளாகும்.

537. 2) வல்லூறு மாந்தைக்கும் வாயகத்துக் கும்பழியே
சொல்லாத தோகைக்கும் கோழிக்கும் - தொல்லாதி
பேடைஎழுத் தேசாபம் பேர்த்துவிடும் மூலிகைக்கு
வாடைஎழுத் தன்றோ வகை

இப்பாடலில் காகம் தவிர மற்ற நான்கும கூறப்பட்டன, எனவே காகத்துக்குச் சாபம் நீக்க வேண்டுவதில்லை என்றாகிறது அல்லது காகப்பட்சியுடையார் இயல்பான சான்றாண்மை இருந்தாலே பட்சி சாபம் நீங்கும் என்று கொள்ள வேண்டும். வல்லூறு, ஆந்தை, பழி இல்லாத வாயால் தோஷமில்லாத கோழிக்கும் சாபத்தை பெண் எழுத்தான பஞ்சாட்சர அஞ்செழுத்தில் பேடை எழுத்து அதாவது பெண்பால் எழுத்து என்பவை பெண்பாற் பட்சிகளான ஆந்தை கோழிகளுக்குரிய 'ம', மற்றும் 'வ' என்ற எழுத்துக்களாகும். எனவே இவற்றில் ஒன்றை 'மசிவயந' என்றாவது அல்லது 'வயநமசி என்றாவது உருவேற்றிப் பஞ்சாட்சர வழிபாடு செய்தால் இந்த நான்கு பட்சிகளின் சாபமும் மாறிவிடும் என்று கொள்ள வேண்டும். பேடை எழுத்து என்று ஒருமையில் சொன்னதால் இவற்றில் ஏதாவது ஒன்றைக் கொள்ளலாம் என்பது பொருள் அல்லது எல்லாவற்றிற்கும் மூலமான மந்திரம் ஓம் என்ற பிரணவம். இது அ உ ம என்ற மூன்றால் ஆனது. இதில் முதல் இரண்டெழுத்தும் ஆண்பட்சிக்குரியவை' அதாவது வல்லூறு காகத்துக்குரியவை. இவற்றை நீக்கி, ம'என்ற ஆந்தைக்குரிய பெண்பட்சி எழுத்தால் பேடை எழுத்தால் ''மசிவயந'' என்று வழிபாடு செய்தால் பட்சி சாபம் நீங்கும் என்று கொள்ள வேண்டும்.

538 காகத் தெழுத்தாற் கடிதாந் தையைக்கட்டி
வாகுற்ற கோழி வழிமறிந்து — பாகுற்ற
வல்லூறைத் தொட்டு வருமயிலைப் பூசிப்பார்
எல்லாரும் ஈடேறு வார்.

பஞ்சாட்சரத்தில் காகத்தின் எழுத்து 'சி' ஆகும், இதைத் தொடங்கிச் சிவயநம என்ற உருவேற்றி ஆந்தையின் சாபத்தை நீக்க வேண்டும். 'கோழிவழி மறித்து' என்றதால் கோழி எழுத்தான 'வ' என்றாரம்பித்து 'வயநமசி' என்ற உருவேற்றிக் கோழிச் சாபத்தை நீக்க வேண்டும். 'வல்லூறு' எழுத்தான 'ந' வில் ஆரம்பித்து என்றதால் 'நமசிவாய' என்று உருவேற்றி வல்லூறு சாபத்தை நீக்க வெண்டும் 'மயிலைப்பூசிப்பார்' என்றதால் மயில் எழுத்தாகிய 'ய' என்ற எழுத்தால் 'யநமசிவ, என்று உருவேற்றி மயிலின் சாபத்தை நீக்க வேண்டும். இப்படிச் செய்தால் பஞ்ச பட்சியின் சாபம் நீங்கும் என்று கொள்க. அல்லது காகத்தெழுத்தால் ஆந்தையைக் கட்டி, கோழியை மறித்து வல்லூறைத் தொட்டு, மயிலை பூசித்து என்று ஒரு தொடர் பாகக்கொண்டு எல்லா பட்சிகளுக்கும் காகத்தின் எழுத்தான 'சி' என்று ஆரம்பித்து 'சிவாயநம' என்று உருவேற்றி எல்லாப் பட்சிகளின் சாபத்தையும் நீக்கிக்கொள்ளலாம் என்று பொருள் கொள்க.

இப்படிப் பல முடிச்சுகள் சித்தர்கள் நூலான பஞ்சபட்சி நூலில் உள்ளன இங்கே பெரும்பலும் ஏடுகளிலிருந்தே (உரோமரிஷி பாடல்கள் தவிர) எடுத்தெழுதப் பட்டன. இதற்குமேல் ஆன்றோர் பால் கேட்டுணர்க. வாய்ப்பிருந்து, திருவருள் கூட்டி வைத்தால் அடுத்த பதிப்பில் இங்கே சொன்னவை எல்லாம் நூலினுள் உரிய இடத்தில் சேர்க்கப்பட்டு மேலும் செப்பம் செய்யப்பெறும்.

சுபம

# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

**மாவட்ட ஆட்சியர்**

**தஞ்சாவூர்** **மற்றும் இயக்குநர்**

**சரசுவதி மகால் நூலகம்**